**MADRAS GOVERNMENT ORIENTAL SERIES**

**Published under the authority of**
**the Government of Madras**

*General Editor:*
T. CHANDRASEKHARAN, M.A., L.T.,
Curator, Government Oriental
Manuscripts Library, Madras.

No. V

# சோழன் பூர்வ பட்டையம்

# CŌḺAṈ PŪRVAPAṬṬAIYAM

*Critically edited with Introduction*

BY

**C. M. Ramachandra Chettiar**, B.A., B.L.,
*Advocate, Coimbatore.*



GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS LIBRARY,
MADRAS

**1950**

Price: Rs. 5-0-0

## INTRODUCTION

The Government of Madras took up for consideration the question of publication of the various manuscripts in different languages on subjects like Philosophy, Medicine, Science etc., early in May 1948. Important Manuscript Libraries in the Madras Presidency were requested to send a list of unpublished manuscripts with them for favour of being considered by the Government for publication. The Honorary Secretary of the Tanjore Maharaja Serfoji's Sarasvati Mahal Library, Tanjore, alone complied with this request. This list as well as a similar list of unpublished manuscripts in the Government Oriental Manuscripts Library, Madras, were carefully examined and a tentative selection of manuscripts suitable for publication was made. The Government in their Memorandum No. 34913/48-10, Education, dated 4-4-1949 constituted an expert Committee with the Curator of the Government Oriental Manuscripts Library, Madras, as the Secretary, for the final selection of manuscripts suitable for printing and for estimating the cost of publication. The following are the members of the Committee.

1. Sri T. M. Narayanaswamy Pillai, M.A., B.L.,
2. ,, R. P. Sethu Pillai, B.A., B.L.,
3. ,, C. M. Ramachandra Chettiar, B.A., B.L.,
4. ,, R. Krishnamoorthy, (Kalki),
5. Dr. N. Venkataramanayya, M.A., Ph.D.,
6. Sri M. Ramanuja Rao Naidu, M.A. L.T.,
7. ,, V. Prabhakara Sastri,
8. ,, N. Venkata Rao, M.A.,
9. ,, H. Sesha Ayyangar,
10. ,, Masthi Venkatesa Ayyangar, M.A.,
11. ,, M. Mariappa Bhat, M.A., L.T.,
12. Dr. C. Achyuta Menon, B.A., Ph.D.,
13. ,, C. Kunhan Raja, M.A., D. Phil.,
14. ,, A. Sankaran, M.A., Ph.D., L.T.,
15. Sri P. S. Rama Sastri,
16. ,, S. K. Ramanatha Sastri,
17. Dr. M. Abdul Haq., M.A., D. Phil, (Oxon).
18. Afzul-ul-Ulama Hakim Khadar Ahamed,
19. Sri P. D. Joshi,
20. ,, S. Gopalan, B.A., B.L.,
21. ,, T. Chandrasekharan M.A., L.T.

The members of the Committee formed into Sub-Committees for the various languages, Sanskrit, Tamil, Telugu, Kannada, Malayalam, Mahrathi and Islamic Languages. They met during the month of May 1949 at Madras and at Tanjore to examine the manuscripts and make a selection. The recommendations of the Committee were accepted by the

Government in G. O. No. Mis. 2745 Education dated 31-8-1949 and they decided to call these publications as the *Madras Government Oriental Series*, and appointed the Curator, Government Oriental Manuscripts Library, Madras, as the General Editor of the publications. The following manuscripts have been taken up for publication during the current year.

## "A" From the Government Oriental Manuscripts Library, Madras.

### TAMIL

1. Kappal Śāttiram.
2. Anubhava Vaidya Muṟai.
3. Āttānakōlāhalam.
4. Upadēśa Kāṇḍam.
5. Cōḻan Pūrva Paṭṭaiyam.
6. Koṅga Dēśa Rājākkaḷ.
7. Śivajnāna Dīpam.
8. Sadāśiva Rūpam, with commentary.

### TELUGU

1. Saṅgītaratnākaramu.
2. Auṣadha Yōgamulu.
3. Vaidya Nighaṇṭu.
4. Dhanurvidyā Vilāsamu.
5. Yōga Darśana Viṣayamu.
6. Khaḍga Lakṣaṇa Śirōmaṇi.

### SANSKRIT

1. Viṣanārāyaṇīyam.
2. Bhārgava Nāḍikā.
3. Hariharacaturangam.
4. Brahma Sūtra Vṛtti Mitākṣarā.
5. Nyāyasiddhānta Tattvāmṛtam.

### MALAYALAM

1. Garbha Cikitsā.
2. a. Vāstulakṣaṇam.
   b. Śilpaśāstram.
   c. Śilpaviṣayam.
3. Mahāsāram.
4. Kaṇakkusāram.
5. Kriyākramam.

### KANNADA

1. Lōkōpakāra.
2. Raṭṭamata.
3. Dīkṣābōdhe.
4. Aśvaśāstram.

5. a. Auṣadhagalu.
   b. Vaidyaviṣaya.
6. Sangīta Ratnākara.
7. Sūpaśāstra.

### ISLAMIC LANGUAGES

1. Jamil-al-Ashya.
2. Tibb-E-Faridi.
3. Tahqiq-Al-Buhran.
4. Safinat-Al-Najat.

## "B" From the Tanjore Maharaja Serfoji's Sarasvati Mahal Library, Tanjore.

### TAMIL

1. Sarabhēndra Vaidya Murai. (Diabetes).
2. —Do— (Eyes).
3. Agastiyar 200
4. Konkanarśarakku Vaippu.
5. Tirucciṟṟambalakkōvaiyār, with Padavurai.
6. Kālacakram.
7. Tālasamudram.
8. Bharatanāṭya.
9. a. Pāṇḍikēlī Vilāsa Nāṭakam.
   b. Purūrava Cakravarti Nāṭakam.
   c. Madana Sundara Vilāsa Nāṭakam.
   d. Percy Macqueen's Collection in the Madras University Library on Folklore.
10. Rāmayyan Ammānai.
11. Tamil Pāḍalkaḷ including Paṭṭinattār Venbā and Vannankaḷ.

### TELUGU

1. Kāmandakanītisāramu.
2. Tāladaśāprāṇapradīpikā.
3. a. Raghunātha Nāyaka Abhyudayamu.
   b. Rājagōpāla Vilāsamu.
4. Rāmāyaṇamu, by Kaṭṭa Varadarāju.

### MAHRATHI

1. Nātyaśāstra Sangraha.
2. a. Book of Knowledge.
   b. Folk Songs.
   c. Dōrā Darūn Vēṇi Paddhati.
   d. Āśvāsa Catula Dumaṇi.
3. a. Pratapasimhēndra Vijaya Prabandha.
   b. Śarabhēndra Tīrthāvaḷi.
   c. Lāvaṇi.

4. Dēvēndra Kuravanji.
5. Bhakta Vilās.
6. Ślōka Baddha Rāmāyaṇa.

## SANSKRIT

1. Aśvaśāstra with Tricolour illustrations.
2. Rājamṛgānka.
3. Cikitsāmṛtasāgara.
4. Āyurvedamahodadhi.
5. Gītagovinda Abhinaya.
6. a. Colacampū.
   b. Sahendra Vilāsa.
7. Dharmākūtam - Sundara Kāṇḍa.
8. Jātakasāra
9. Viṣṇutattvanirṇayavyākhyā.
10. Sangīta Darpaṇa.
11. Bījapallava.

It is hoped that the publication of most of the important manuscripts will be completed within the next four years.

Some of the manuscripts taken up for publication are represented by single copies in the Library and consequently the mistakes that are found in them could not be corrected by comparing them with other copies. The editors have, however, tried their best to suggest correct readings. The wrong readings are given in round brackets and correct readings have been suggested in square brackets. When different readings are found, they have been given in the foot notes except in the case of a few books in which the correct readings have been given in the foot note or incorporated in the text itself.

The Government of Madras have to be thanked for financing the entire scheme of publication although there is a drive for economy in all the departments. My thanks are due to the members of the Expert Committee who spared no pains in selecting the manuscripts for publication. I have also to thank the various editors, who are experts in their own field, for readily consenting to edit the manuscripts and see them through the Press. The various Presses that have co-operated in printing the manuscripts in the best manner possible also deserve my thanks for the patience exhibited by them in carrying out the corrections made in the proofs.

The present edition is based on the following manuscripts:

1. A palm-leaf manuscript with Government Oriental Manuscripts Library having D. No. 2981 which is 16 X 1¼ inches in size consisting of 462 pages having 7-8 lines on a page.

2. A paper manuscript with Government Oriental Manuscripts Library 10¼ X 9¼ inches in size consisting of 648 pages of 20 lines on a page restored from previous manuscript in 1945-46. It is described under R. No. 1503.

Reference is to be made to the good work done by Sri V. R. Kalyanasundaram and Srimati P. S. Sulochana, Pandits of the Library for going through the proofs.

Govt. Oriental Manuscripts Library, Madras - 5.



T. CHANDRASEKHARAN,
*Curator*
and
*General Editor, Madras Govt. Oriental Series.*



கொங்கு நாடு
மைசூர்
கொள்ளேகாலம்
சேலம் ஜில்லா
பவானி
கோபி செட்டி பாளையம்
மலைத் தொடர்
நீலகிரி ஜில்லா
சத்தியமங்கலம்
பவானி ஆறு
கோபி
தாரமங்கலம்
சேலம்
சங்ககிரி
காவிரி ஆறு
பவானிக் கூடல்
திருச்செங்கோடு
நாமக்கல்
குன்னூர்
தெங்கண் கோட்டை
வெள்ளியம்பதி
ஊதிமலை
இரும்பறை
மொக்கணீசுவரர்
அவிநாசி
ஈரோடு
திங்களூர்
விசயமங்கலம்
சென்னிமலை
சிவகிரி
கொடுமுடி
அன்னூர் (மன்னியூர்)
வெள்ளாதி
கவையன்புத்தூர்
திருமுருகன்பூண்டி
குரக்குத்தளி
இடிகரை
துடியலூர்
கோவை
திருப்பூர்
நொய்யல்
சாமளாபுரம்
சூலூர்
நடுவான்சேரி
காங்கயம்
வெள்ளிமலை
கோவன்புத்தூர்
சிங்காநல்லூர்
பல்லடம்
காஞ்சிமாநதி
பேரூர் (பேறை)
வெள்ளலூர்
கரூர்
வெஞ்சமாக்கூடல்
தென்சேரிமலை
தாராபுரம்
ஆம்ராவதி
கொச்சி
சித்தூர் தாலுக்கா
பொள்ளாச்சி
உடுமலைப்பேட்டை
ஆனைமலை
கொண்டரங்கி மலை
கீரனூர்
பழனி
அய்க்குடி
சிவகிரி
திருவாவினன்குடி
மலையாளம்
ஆனைமலைத் தொடர்
மதுரை
திருச்சி
பூம்பறை
திண்டுக்கல்
திருவாங்கூர்
வராக மலைத் தொடர்
விவரங்கள்
ஜில்லா எல்லை
தாலுக்கா எல்லை
இரயில்
36 திருப்பணி ஊர்கள் ■ கோவன்புத்தூர்
7 பாடல் தலங்கள் ⊙ அவிநாசி
ஏனைய ஊர்கள் • சேலம்
ஆறுகள்
S.V. SAMY & CO. CBE.
கொங்கு நாட்டுப் படம்
சோழன் பூர்வ பட்டயத்தில் கண்டபடி சோழன், சேரன் சமயமுதலி சென்று திருப்பணி செய்த விவரம் காட்டுவது

# சோழன் பூர்வ பட்டையம்

## 1. முகவுரை

பழைய தமிழ் நூல்களிலே சரித்திரத்தைமட்டும் தனியாக எழுதி வைத்திருக்கும் நூல்களைக் காண்பது அரிது. ஆனால் சரித்திரப் பகுதிக ளோடு கர்ணபரம்பரைக் கதைகளையும் பிணைத்துப் படிப்பதற்குச் சுவை யாக இருக்கும்படி எழுதப்பட்ட நூல்கள் பல இருக்கின்றன. செய்யுள் நூல்கள் இரண்டு பிரிவுகளாக இருக்கின்றன. பண்டைக்காலத்து நூல்களிலே சரித்திரப்பகுதிகளைக் காவியச் சுவைகளோடு இணைத்து எழுதப்பட்ட நூல்கள் ஒரு சார்பாகவும் வெறுங் கற்பனைக் கதைகள் மற்றொரு சார்பாகவும் இருக்கின்றன. சங்கத்தார் நாளில் சரித்திரப் பகுதி மிகுதியாகவும் பிந்திய காலத்தில் கற்பனைப் பகுதி மிகுதியாக வும் இருக்கின்றன. இனி, உரைநடை நூல்களிலும் நாட்டுப்பாடல்களி லும் கற்பனைக் கதைகளைக்காட்டிலும் சரித்திரப் பகுதிகள் மிகுதியாக வும் இருக்கின்றன. இவைகளிலும் தனியாகச் சரித்திரப்பகுதிகளைக் காண்பது அரிது. ஆழ்ந்த ஆராய்ச்சி செய்தால்தான் சரித்திரப்பகுதி களைக் கற்பனைகளிலிருந்து பிரித்து எடுக்க முடியும். அப்படிப்பட்ட உரைநூல்களும் பாடல்களும் குறைவுதான். இதுவரை அவைகளை ஆராய்ந்து அச்சிடுவார் இல்லை. தற்போது அவைகளில் சிலவற்றைப் பொறுக்கி அச்சில் ஏற்றுவதற்கு அரசியலார் முயன்றதே தமிழர் களுடைய பேறு என்று சொல்லவேண்டும். இனிமேல் இவைகளைப் படித்துச் சரித்திர மாணவர்கள் ஆராய்ச்சி செய்து சரித்திரப் பகுதி களைப் பிரித்து எழுதுவதற்கு நல்ல வாய்ப்பு கிடைக்கும். உரைநடை நூல்களிலே சரித்திரப் பகுதிகளும் கருத்துக்களும் கொண்ட நூல் களில் " சோழன் பூர்வ பட்டயம் " என்பது ஒன்று. இந்நூல் படிப்ப தற்கு வெறும் கட்டுக் கதையாகத் தோன்றும். ஆனால் அதனை நன்கு படித்து ஆராய்ந்தால் உள்ளே அமிழ்ந்து கிடக்கும் அரிய கருத்துக்கள் தோன்றும். நம்ப முடியாதனவும் இயற்கைக்கு மாறான வையுமான பகுதிகள் பல இருக்கின்றன. அவைகளை எடுத்தெறிந்து விட்டுப் பார்த்தால், நாட்டுப் பழக்க வழக்கங்கள் பலவும் இதில் இருக்கக் காண்போம். இந்த வகையில் இந்நூல் ஒரு சிறந்த புதை யல் ஆகும். இதில் கிடக்கும் சில சிறப்புக்களை எடுத்து இங்கே எழுது வோம்.

## 2. பட்டயம்

உரிமைகளைக் காட்டும் எழுத்து முறிக்குப் பட்டயம் என்று பெயர். தனி ஆளுக்கோ, ஒரு கூட்டத்திற்கோ, ஒரு வகுப்பிற்கோ அல்லது ஒரு நிலையத்திற்கோ உரிமைகளைத் தந்தால் அவ்வுரிமைகளை எழுதிப் பதியவைப்பது பண்டைக்கால வழக்கு அதைத்தான் வடமொழியில் 'சாசனம்' என்பார்கள். நாகரிகம் பெற்ற நாடுகளில் எங்கும் சாசனம் எழுதி வைத்தல் ஒரு இன்றியமையாத நிகழ்ச்சி ஆகும். சாசனம் அல்லது பட்டயத்தில் உரிமைகள் தெளிவாக எழுதப் படும். உரிமைகளைப் பற்றிப் பின்னாலே வழக்கு வரக்கூடாது என்பதற்காகத் தான் அவைகள் நிலைபெறும்படியாக எழுதப் பெறும். வழக்கு வரும் காலத்தில் அப்பட்டயங்களை எடுத்துப் படித்து அதிகாரிகள் இதுதான் முறை என்று தீர்ப்பு அளிப்பார்கள். அதனைப் பொது மக்களும் கட்சிக்காரர்களும் ஒத்துக்கொள்ளவேண்டும். ஒரு பட்டயம் எழுதிக்கொடுத்து வெகுகாலம் ஆகிவிட்டால் அப்பட்டயத்தில் உள்ள நிபந்தனைகள் மறந்துபோகக்கூடும். வேறு புது முறைகள் ஏற்படக்கூடும். அப்போது சிற்சில சமயங்களில் சச்சரவு நேரிடக்கூடும். அப்போது பழைய பட்டயத்தைத் தேடி எடுத்துத் தலைவர்கள் படித்துப் புதுமுறை பழைய முறைக்கு வேறுபட்டிருந்தால் புது முறையை நீக்கிப் பழைய முறையை வற்புறுத்துவது உண்டு. இதுதான் வழக்கு முறையாகும். இவ்வித வழக்கு ஒன்று முன்னாளிலே திருவெண்ணெய் நல்லூரில் நடந்ததாகச் சுந்தரமூர்த்திகள் சரிதம் கூறுகிறது. அந்தச் சரிதத்தில் கண்ட பட்டயம் ஓலைப் பட்டயம். ஆனால் இந்தச் சோழன் பூர்வபட்டயத்தில் கண்ட பட்டயம் செப்புப்பட்டயம். ஓலைப் பட்டயம் வெகுகாலம் நிற்காது; ஆனால் செப்புப் பட்டயம் நீண்ட காலம் இருக்கும். ஆகவேதான் சேரசோழபாண்டியர்களுடைய வரலாற்றைக் கூறும் இந்தப் பட்டயம் செப்பேட்டில் எழுதப்பட்டுக் காஞ்சீபுரத்தில் வெகு பத்திரமாக நிலவறையில் வைக்கப்பட்டிருந்தது என இந்நூல் கூறுகிறது.

மேலும், ஓலை, செம்பு இவை மட்டுமேயன்றி கல்லிலும் பட்டயம் பொறிப்பதுண்டு. பெரும்பாலும் ஆலயச் சுவர்களிலேதான் இந்தச் சாசனங்கள் உண்டு இவைகளுக்குத் தமிழில் 'கல்வெட்டுக்கள்' என்று பெயர். ஆலயத்தானங்கள் கல்வெட்டுக்களிலே பொறிக்கப்பட்டன. இந்த வகைக் கல்வெட்டுச் சாசனங்களாகிய பட்டயங்களைப் பற்றியும் இந்நூல் கூறுகிறது ஓலை, செம்பு, கல் இவைகளில் பொறிக்கப்படும் வழக்கம் தமிழ்நாட்டில் ஆதிமுதற் கொண்டே இருக்கின்றது. அவை

களைக் கொண்டுதான் இப்போது அறிஞர்கள் தமிழ்நாட்டு வரலாற்றுப் பகுதியை ஆராய்ந்து எழுதி வருகிறார்கள்.

## 3. நாட்டு ஆட்சி

தமிழ் நாட்டில் நாட்டு ஆட்சி இருவகைப் பட்டது. ஒன்று அரசு; இரண்டு சமூகம். இந்த இரண்டும் தனித்தனியாகவே முன்னாளிலிருந்து இருந்து வருகின்றன. அரசு மன்னனின் கீழ் அடங்கி இருந்தது. நாட்டில் மன்னன், அமைச்சர், படை, அரண், குடிகள், நீதி, போர், இறை முதலிய பல பகுப்புக்களைக் கொண்டு அரசானது நடைபெற்று வந்தது. சமூகமோ, வகுப்புத் திட்டம் சமயத் திட்டம் என்ற இரு பெரும் பகுப்புக்களைக் கொண்டிருந்தது அரசு மாறுவது உண்டு; ஆனால் சமூகமோ மாறுபடாது. பெரும்பாலும் அரசு சமூகத்தைப் பற்றிக் கவலை கொள்ளவேயில்லை. அரசு ஒருவர் கையிலிருந்து மற்றொருவர் கைக்கு மாறினாலும் சமூகம் முன்னிருந்தபடியே நடைபெற்று வந்தது. அரசு, மூவேந்தரிடமிருந்து சிறிது சிறிதாக மாறி முகம்மதியர், விஜயநகரத்தார், நாயக்கர், பாளையக்காரர்கள், ஆர்க்காட்டு நவாபுகள், வெள்ளைக்காரர்கள் இவர்கள் ஆட்சிகளிலே மாறிக் கொண்டே வந்தது. அவர்கள், இராணுவம், வரிவசூல், நீதி, நாட்டு அமைதி இவைகளையே முக்கியமாகக் கொண்டிருந்தார்கள். மற்றப் பகுதியாகிய சமூகத் திட்டத்தை அரசுகள் சிறிதும் கவனிக்கவேயில்லை. ஏனெனில் சமூகத்திற்கு ஒரு நிரந்தரமான திட்டம் பண்டைக் காலம் முதற் கொண்டே இருந்தது. அதில் வெளிநாட்டிலிருந்து வந்த அரசுகள் சிந்தை செலுத்தவே இல்லை.

முன்னமே கூறியபடி இந்தச் சமூக ஆட்சி இரண்டு திறப்பட்டது. அவற்றில் வகுப்புத் திட்டம் பழக்க வழக்க முறைகளை அனுசரித்து வந்தது. சாதித்தலைவர்கள் ஆங்காங்கு ஏற்பட்டிருந்தார்கள். அவர்கள் அந்தத் திட்டத்தைக் காத்து வந்தார்கள். அரசர்களும் அந்தச் சமூகத் தலைவர்களுடைய நீதியையே ஏற்றுக் கொண்டு வந்தார்கள். அவ்விதமான வகுப்புக் கட்டுப்பாடே நாட்டின் அமைதிக்குச் சிறந்த பொறுப்பாக இருந்தது. ஆகையால் வெளிநாட்டுப் பிற சமய அரசுகள் அத்திட்டத்தைக் கலைக்கவே இல்லை.

இரண்டாவது, சமயத் திட்டம். இதில் ஆலயம், மடம் என்பவை உண்டு. ஆலயங்களின் ஆட்சி வழக்கப்படி நிச்சயிக்கப் பட்டிருந்தது. அதனை மாற்ற எந்த அரசும் துணியவே இல்லை. முகம்மதியர் காலத்திலும் ஆலயத் திட்டங்கள் முன்னிருந்தபடியே

பிசகின்றி நடைபெற்று வந்தன. ஆலயத் திட்டத்தில் புரட்சியோ அதனால் கலகங்களோ நாட்டில் வெகுவாய் நடைபெற **வில்லை**. ஆலயத் திட்டம் வகுப்புத் திட்டம் என்ற இரண்டும் கொண்ட சமூகத்தின் வரலாற்றையே இந்தச் சோழன் பூர்வபட்டயம் விவரிக்கின்றது.

## 4. ஆலயத் திட்டம்

ஆலயங்கள் எவ்வாறு ஏற்பட்டன; அவைகளின் ஆட்சிக்கு என்ன என்ன ஏற்பாடுகள் செய்யப்பட்டன; அவ் வேற்பாடுகள் சீர்குலையாததற்கு என்ன என்ன பாதுகாப்புக்கள் வைக்கப்பட்டன என்பவைகள் இந்நூலிலிருந்து காணப்படுகின்றன. இந்த வகையில் இந்நூல் பண்டைக்கலை அறிஞர்களுக்கு மிகவும் பயன் படும்.

ஆலயங்களின் தோற்றத்தைக் காட்டிலும் அவற்றின் வரலாறுகளே சிறப்பாக எழுதப்பட்டுள்ளன. தமிழ் மக்களுடைய எண்ணப் போக்கோ, ஆலயங்கள் எப்போதும் இருந்தன என்பதே. ஆனால், அவைகளில் சில காலாவட்டத்தில் ஜீர்ணமாகி விடுகின்றன. அவைகளை மீண்டும் கண்டுபிடித்து ஜீர்ணோத்தாரணம் செய்யவேண்டும். அவ்விதம் செய்வது அரசன் கடமை. அவனுக்கு உதவியாக நாட்டுச் சமூகத் தலைவர்கள் நிற்பார்கள். இதுவே நாட்டில் நடைபெறுவது. இதனை மக்கள் நம்புவதன்றி, இந்த நூலும் கூறுகின்றது.

அரசனுக்கு நோய் வருகிறது. அதை என்ன செய்தும் நீக்க முடியவில்லை. கொங்கு நாட்டுத் தலங்களைச் ஜீர்ணோத்தாரணம் செய்தால் அந்நோய் தீரும் என்று அறிகிறான். உடனே அந்த உத்தேசத்துடன் நாட்டுத் தலைவர்களான சமய முதலி கஸ்தூரி ரங்கப்ப செட்டி சடையப்ப வள்ளல் இவர்களை அழைத்துக் கொண்டு கொங்கு தேசம் செல்லுகிறான். அந்நாட்டு அரசனாகிய சேரமானையும் அழைத்துக்கொண்டு ஒவ்வொரு தலமாகச் சென்று காடுவெட்டிப் பேட்டையும் கோட்டையும் கட்டி ஆலயங்களைக் கண்டுபிடித்து கட்டடங்களைக் கட்டி ஆட்சிக்கு உற்ற மக்களை வைத்துவிட்டுச் செல்லுகிறான். இவ்வாறு சிவாலயங்களைக் கட்டும்போது ஊர்ப்பண்டைய குடிகளை வசப்படுத்த வேண்டி ஊர்த் தேவதைகளுக்கும் கோயில்களைக் கட்டி மானியங்களை அளந்து விடுகிறான். இதுவே சோழன் செய்த திருப்பணிகள் ஆகும்.

கொங்கு நாட்டில் சோழன் மற்றவர்களோடு சென்று ஜீர்ணோத்தாரணத் திட்டம் வகுத்தது 36 பெருங் கோயில்களுக்கும் 360 சார்பு கோயில்களுக்குமே ஆகும். அவ்வாறு கோயில்களைக் கட்டுங்கால்

அவ்வவ்வூர் கிராம தேவதைகளுக்கும் கோவில்களைக் கட்டித் திட்டம் ஏற்படுத்தினன். கோயில்களுக்கு மானியங்கள் கொடுக்கப்பட்டன. கல்சாசனங்கள் வெட்டப்பட்டன. அவைகளின் பரிபாலனத்திற்காக நம்பி முதல் திருவலகு வரைக்கும் வகுப்புக் கேற்றபடி ஆட்களை நியமித்தான். கொங்கு நாட்டுத் தலங்கள் முப்பத்தாறிற்கும விவரமாகப் பெயர்கள் உட்பட எல்லாமே இந்நூலில் கூறப்பட்டுள்ளன. ஆட்பெயர்கள் நம்பத்தகாதவையாக இருக்கலாம். ஆனல் திட்டம் ஒழுங்காக இருக்கக் கூடும். விவரங்களைப் படித்தால் எவ்வாறு இக் குறிப்புக்கள் கிடைத்தன என்ற வியப்பே தோன்றும்.

## 5. வகுப்புத் திட்டம்

தமிழ் நாட்டில் உள்ள சாதிப் பிரிவினை அல்லது வகுப்புப் பிரிவினையை அறிவதற்கு இந்நூல் மிகுதியும் பயன்படும் வடமொழி நூல்களில் பிரிக்கப்பட்டுள்ள நான்கு சாதிகள் தென் நாட்டில் காணக் கிடையா. ஆனல் தொழில் முறையைப் பின்பற்றின வகுப்புப் பிரிவினை இன்றைக்கும் இருக்கின்றது. ஒவ்வொரு வகுப்பும் எப்படிப்பட்டது, அதன் உரிமைகள் கடமைகள் பிருதுகள் முதலிய விவரங்கள் எப்படிப்பட்டன என்பவைகளை எல்லாம் இந் நூலில் காணலாம். வகுப்பு வாரிக் கட்டுப்பாடுகள், அவைகளை மீறி ஞல் ஏற்படும் குற்றம், அக்குற்றம் எவ்வாறு விசாரித்துத் தண்டிககப் படும் என்பனபோன்ற விவரங்களும் இந்நூலில் உண்டு. இவ்வித மான வகுப்புத்திட்டம் வேறு நூல்களில் இத்தனை விவரத்தோடு கூறப் படவில்லை.

மேலும் கோயில்களில் எவ்வெவ்வகுப்பார் எவ்வெப்பணி யைச் செய்யவேண்டும் என்றும் குறிக்கப்பட்டுள்ளது. அக்காலத்தில் எல்லாச் சாதிகளும் இடங்கை வலங்கை என இரண்டு வகுப்புகளாகப் பிரிந்திருந்தன. இவ்விரு வகுப்பார்களுக்கும் இருந்த உரிமைகளையும் இந்நூலில் காணலாம்.

இந்நூல் சிறப்பாகக கைக்கோளர்களின் உரிமைகளை எடுத்துக் கூறுகிறது. இதனலே இந்நூலை ஒரு கைக்கோளப் புலவர் எழுதி யிருக்கவேண்டும் என்றும் கூறலாம் சில நூற்றுண்டுகளின் முன் கைக்கோளர்களுக்கு மிகுந்த செல்வாக்கு நாட்டில் இருந்தது என்று சொல்ல இந்நூல் இடந் தருகிறது. கோயில் அமைப்பு அதிகாரம் இவைகளிலும் வகுப்புப் பிரிவினை அவர்களின் உரிமைகடமைகளை விசாரித்து வழக்குகளைத் தீர்த்தல் முதலிய செயல்களிலே கைக்கோ

ளத்தலைவர்களுக்கு மிகுந்த செல்வாக்கு இருந்திருக்க வேண்டும். அரசர்களும் இவர்கள் பேச்சைக் கேட்டு அதற்கு மதிப்பு தந்திருக்கிறார்கள். அத்தலைவர்கள், விவகாரங்களை ஒழித்துச் சமாதானம், நிலைநிறுத்தத் தம் மக்களையும் தியாகம் செய்தார்கள் என்றும் இந்நூல் கூறுகிறது. அந்தத் தியாக உணர்ச்சியினால்தான் இந்த வகுப்பிற்கு அக் காலத்தில் மேன்மை கிடைத்திருக்க வேண்டும் என்று ஊகிக்க இடம் இருக்கிறது.

## 6. அரசுத் தோற்றம்

ஆலயதிட்டம், சமூகதிட்டம் இவ்விரண்டு செய்திகளுக்கும் இந்த நூலில் ஆதரவுகள் மிகுதியாக இருக்கின்றன என்று இதுவரை கூறப்பட்டது. அரசுத்திட்டத்தைப்பற்றி இதில் வேண்டிய அளவு எதிர்பார்க்க இயலாது. ஆனால் அது சொல்லப்படாமலும் இருக்கவில்லை. மூவேந்தர்களாகிய சோழ சேர பாண்டியர்கள் எவ்வாறு தோன்றினார்கள் என்ற ஒரு கதை கூறப்பட்டுள்ளது. அதனை ஒரு புராண ஐதிகமாகக் கொள்ள வேண்டுமே ஒழிய சரித்திரச் சான்றாக எடுத்துக் கொள்ள நியாயம் இல்லை. அந்தக் கதையில் காணும் செய்திகளே யன்றி காலவரையறைகளும் மிகுந்த சந்தேகத்திற்கு இடம் கொடுக்கின்றன. சுருக்கமாகச் கூறின், விக்கிரமாதித்தியர் சாலிவாகனன் கதையை ஒட்டி இந்த ஐதிகமும் பிணைக்கப்பட்டுள்ளது என்று காணலாம். விக்கிரமாதித்தியன் இறந்தவுடன் சாலிவாகனன் ஆட்சி புரிகிறான். அவன் சமண சமயமும சருவேசுர தீட்சையும் கொண்டிருந்து, வைதிகர்களைக் கொடுங்கோன்மையாக நடத்தி வந்தான். நாட்டில் அவனது ஆட்சியைக் குறித்து எங்கும் எதிர்ப்புத் தோன்றியது. இறைவனிடம் மக்கள் குறை கூறச் செல்கிறார்கள். இறைவன் குறைகளைக் கேட்டு அபயம் அருளிச் செய்கிறார். தமிழ் நாட்டில் மூவேந்தர்கள் பிறப்பார்கள். அவர்கள் சாலிவாகனனை எதிர்த்துத் தோற்கடித்து நாட்டை அரசாளுவார்கள். பிறகு செங்கோன்மை நடைபெறும் என்று வரம அளிக்கிறார். அதன்படியே நாட்டில் மூவேந்தர்கள் தோன்றுகிறார்கள். உறையூரில் சோழனும், சேரர் கொங்கு நாட்டுத் தராபுரததில் சேரனும, தென் தமிழ் நாட்டில் பாண்டியனும் பிறக்கிறார்கள். இவர்கள் மூவரும் இன்னது செய்வதென்று தெரியாமல் காசி சென்று வழி அறிந்து கொண்டு காஞ்சி அடைந்து அங்கே கச்சிவீரனால் கருமாறிக் குளத்தில் பட்டயம் இருப்பதறிந்து அப்பட்டயத்தை எடுப்பித்து அதை ஓதுவித்துப் பண்டைய வரலாறு முழுதும் அறிந்து போர்க்கோலம் கொண்டு சாலிவாகனன்

மீது படையெடுத்து வென்று அவனைக் கொல்லுகிறார்கள். பிறகு மூவேந்தரும் தமிழ் நாட்டை மூன்று பகுதிகளாகப் பிரிவினை செய்து உறையூர் மதுரை வஞ்சி இவைகளைத் தலைநகர்களாக்கி ஆளுகிறார்கள். இதுதான் இந்நூல் கூறும் வேந்தர் பிறப்பும் வெற்றியும் என்க. சரித்திரப்படி இது சரியல்ல. சாலிவாகனனுக்கு முந்தி ஆயிரக் கணக்கான ஆண்டுகளின் போதே தமிழ் மூவேந்தர்கள் இருந்திருக்கிறார்கள். ஆகவே இது வடக்கே இருந்து வந்ததொரு கட்டுக் கதை என்க. இந்தப் பகுதிக்கு நாம் மதிப்பு தரவேண்டியதில்லை. அதை ஒரு புராணக் கற்பனை என்று விட்டு விடுவோம்.

## 7. வேந்தர் ஆட்சி

ஒவ்வொரு யுகத்திலும் ஒவ்வொரு சங்காரம் ஏற்பட்டு வேந்தர்கள் செங்கோல் செலுத்தினார்கள் என்றும், அதன்படி சூரசங்காரம், இராவணசங்காரம், நூற்றுவர்சங்காரம் போல் சாலிவாகன சங்காரமும் ஏற்பட்டு சோழன் உறையூரில் ஆளத் தொடங்கினான் என்றும், அதனால் ஏற்பட்ட சாபத்தீட்டினால் சோழனுக்குச் சட்டை நோய் கண்டுக் காமாட்சியம்மை குறத்தியாக வந்து குறி சொல்லித் தோஷம் தீர்ந்து புனிதத்தலங்களைத் தரிசித்து ஏடு வாசித்து வகுப்புக்களை நிர்ணயித்து 18 மொழி, 18 சாதி, 96 பிரிவுகள் இவைகளை ஏற்படுத்திச் சோழன் ஆட்சி புரிந்தான் என்றும், கலி 1446 முதல் 3530 வரை 25 தலைமுறைகள் சோழர்கள் உறையூரில் ஆண்டார்கள் என்றும் இந்நூல் கூறுகின்றது. கைக்கோளர்களில் தலைமைக்கு கச்சி வீரனும், வலங்கையர்களுக்கு கஸ்தூரி ரங்க செட்டியும், குடியானவர்களுக்கு வெண்ணெய் நல்லூர் சடையப்ப முதலியும் தலைமை வகித்து நாட்டு வழக்கங்களைப் பாதுகாத்தார்கள் என்றும் கூறுகிறது.

இவ்வாறு 25 தலைமுறைகளுக்குப் பிறகு உறையூரில் சோழன் கலி 3530-ம், மதுரை மீனாட்சி சுந்தரப்பாண்டியன் 3537-ம், கொங்கு தாராபுரம் சேரமான் பெருமாள் 3538-ம், காஞ்சி கச்சிவீரன் 3539-ம் பட்டம் பெற்றார்களாம். அப்போது சோழன் ஒழுக்கம் தவறி நடந்ததினால் மண்மாரி பெய்ய நாடு முற்றும் அழிந்தது. சோழனும் மடிய அவனுடைய இரு தேவிமார்கள் சிங்களாம்பாள், சியாமளாம்பாள் என்ற இருவரும் கொங்கு நாடு சென்று வாழ்ந்தார்கள். பிராமணர் சேரியில் சிங்களாம்பாள் ஒரு பிள்ளையைப் பெற்றாள். சோழ நாட்டிலே அரசன் இன்றி யானையை ஏவ அது சிங்களாம்பாள் இருந்த பிராமணர் சேரிக்குச் சென்று அவளுடைய பிள்ளையை வாரி எடுத்துச் சென்றது.

அவனுக்குக் கரிகாலன் எனப் பெயரிட்டு முடி சூட்டினார்கள். அரசனும் அரசிகள் பேரால் சிங்காநல்லூர், சியாமளாபுரம் என்ற இரு ஊர்கள் கட்டி அந்தணர்களுக்குத் தானம் செய்தானும்.

இவ்வாறு கரிகாலன் ஆட்சி செய்யும் போது அவனுடைய அரசிளங்குமரன் தெருவில் தேர் உருட்டிச் செல்லுகையில் ஒரு கன்றின்மேல் சக்கரம் ஏறி அது மரித்தது. அரசன் அதற்குத் தண்டனையாகத் தன் மகனைத் தானே தேருருட்டிக் கொன்றான். இந்தக் கொலையால் அரசனுக்குப் பித்த வெறி பிடித்தது. அதைப் போக்குவதற்குக் குறத்தியைக் கேட்க அவள் கொங்கு நாட்டில் மக்களைக் குடியேற்றி ஆலயங்களைக் கட்டித திருப்பணி செய்தால் பித்தம் தொலையும் என்று கூற அதன்படி சமய முதலி முதலிய பரிவாரங்களுடன் சோழன் கொங்குநாடு சென்று கருவூர்முதல் முட்டம் வரை 36 பெரிய ஆலயங்களும் 360 சிறு ஆலயங்களும் 32 அணைகளும் கட்டித் திருப்பணி செய்து பைத்தியம் நீங்கச் செங்கோல் செலுத்தினன் என்பது நூல் வரலாறு.

## 8. சோழன் திருப்பணி

சோழன் திருப்பணி செய்யப் போனபோது உடன்சென்றவர்கள் சேரமான், சமய முதலி, கஸ்தூரி ரங்கப்ப செட்டி, சடையப்பன் என்ற நால்வர். சோழனோடு சேர்ந்து இவர்களும் சென்று கம்பளத்தவனை விட்டுக் காடுவெட்டி, நாடு ஆக்கி, பேட்டையும் கோட்டையும் கட்டிக் குடி ஏற்றிப் பஞ்ச ஆலயங்களும் துர்க்கை ஆலயமும கட்டி மானியம் தந்து கல்சாசனம் பதித்துக் கோயில் ஆட்சிக்கு ஆட்களை நியமித்துச் சென்றார்கள். இவ்வாறு குடியேற்றிக் கட்டின கோயில்களின் பெயர்கள் :—

1. கருவூர் 2. கொடுமுடி 3. வெஞ்சமாக்கூடல் 4. வானிக்கூடல்.
5. தென்பழனி (கன்னிகாவனம் திருவாவினன்குடி சிவமலைக் குமரர் கோயில்.)
6. கொண்டரங்கிமலை (ஆய்க்குடி அமரபாண்டி )
7 பூம்பறை (வராகமலை, பன்றிமலை வேலவர்.)
8. ஆனைமலை
9. தென்சேரிகிரி (மந்திரகிரி வனம்.)
10. சென்னிமலை (சென்னி மாகாளி, நரபலி, சென்னி-இருளன்.)

11. வெள்ளியம்பதி (இருமுபறை, மூதூர், கரியகாளி, முப்பலி, நாகீசர், ஒதிமலை வேலவர்.)
12. சத்திமங்கை (சத்தி மாகாளி, முப்பலி.)
13. திங்களூர் (திங்கள்வனம், கரியகாளி, பூமைமுனி.)
14. விசயமங்கை (விசயகாளி, முப்பலி, சங்கரலிங்கம்.)
15. கீரனூர் (கண்டிகாளி, கீரன்வனம்.)
16. கோனுபுரி (கோனமாகாளி, சோழீசுவரர்.)
17. நடுவாஞ்சேரி (சேவல்பூண்டி, சேவல் துர்க்கை, முப்பலி.)
18. பல்லிடம் (பல்லன்வனம், முப்பலி.)
19. தணக்கன் கோட்டை (மசனி துர்க்கை, சோமேசர்.)
20. குள்ளந்துறை (வாணித்துறை, மகாலிங்கம்.)
21. வண்டிக்கோட்டை (கோமங்கை, வண்டிகாளி, பூமீசர்.)
22. வெள்ளாதி (வெள்ளைப்பதி, சங்கரலிங்கம்.)
23. கவயன்புத்தூர் (கோவில்நகர், கவயதுர்க்கை, கரியகாலர்.)
24. சாமளாபுரம் (சோழீசர்.)
25. சிங்காநல்லூர் (பிரமதாயம்.)
26. வெள்ளலூர் (வெள்ளைப்பதி, பேச்சித்துர்க்கை, தேனீசர்.)
27. சூரனூர் (சூலூர், அத்தப்பெரியம்மன், வைத்தியலிங்கர்.)
28. இருவலூர் (இருகூர், பொன்னூர் துர்க்கை, சௌந்திர லிங்கம்.)
29. இடிகரை (இடியன்பதி, வில்லிதுர்க்கை, வில்லீசர்.)
30. துடியனூர் (துடியன்வனம், மங்கைமாகாளி, அகத்திய லிங்கம், குருவரிடிமலை.)
31. கோவன்புத்தூர் (கோயமுத்தூர், கோவன்பதி, கோன மாகாளி, கோணியம்மன், சங்கீசர்.)
32. பேரையூர் (பேரூர், பேரைப்பதி, அரசவனம், அதிமூர்க் கம்மன், சாவாரப்பலி, பட்டிலிங்கம்.)
33. அவிநாசி (ஆவன்பதி, கருப்பன், நரபலி, அவினுசிலிங்கம், திருமுருகன்பூண்டி, நாகதேவகன்னிகாபுரி.)
34. சேவூர் (சேவன்பதி, அழகு நாச்சியம்மன், முப்பலி, வாலீசர்.)
35. மன்னியூர் (அண்ணூர், மன்னிவனம், மன்னிமாகாளி, 12 நரபலி, மன்னிலிஙகம்.)
36. முட்டம் (நாகதுர்க்கை முப்பலி, நாகீசர்.)

மன்னியூரில் சோழன் இருந்துகொண்டு, கொங்கேழு (7) ஆலயம், 36 சிவாலயம் 360 இதர ஆலயம் 24 நாடு இவைகளுக்கு விசாரணை வகுத்தது.

# 9. பிந்திய வரலாறு

சோழனும் மற்றவர்களும் கொங்குநாட்டில் செய்யவேண்டிய திருப்பணிகள் முற்றும் செய்து முடித்து அக் கோயில்களுக்கு வேண்டிய நிபந்தங்கள், நிலம் முதலியவைகளை ஏற்படுத்திப் பிறகு உற்சவாதிகளுக்குச் செப்புத் திருமேனிகளை வார்த்துத் தந்தார்கள். பின்னர் திரும்புகையில் பல ஊர்களையும் தரிசித்து விட்டு அவரவர்கள் ஊர்களுக்குத் திரும்பினர்கள்.

பிறகு மீண்டும் சோழதேசம் சென்று ஆலயச் சீர்திருத்தங்களைச் செய்து அருணபுரிக்குச் செல்ல அங்கே மகிஷமாகாளிக்கு சமய முதலி நரபலி கொடுத்து அதனை இனிமேல் நடவாதபடி நிறுத்தி விட்டான். பிறகு காஞ்சி சென்று ஆலய மேற்பார்வையைக கவனித்து வந்தான். பின்னர், தொண்டை மண்டலம் சென்று 56 நாடுகளுக்கும் ஆட்சி வகுத்து நாகப்பட்டணத்தில் கப்பல் வரி விதித்துத் திருவாரூர் வழியாகப் பாண்டிய நாட்டைத் தரிசிக்கச் சென்றான். அங்கே எல்லாத் தலங்களையும் தரிசித்து நிர்வாகத்திற்குத் திட்டம் ஏற்படுத்தி மதுரையில் இருக்கையில் கொலைக்களத்து அதிமதுரமாகாளிக்கு நரபலி தர வேண்டி வந்தது அதனைத் தந்து பிறகு அது முதல் நரபலி அங்கு நிறுத்தப்பட்டது.

பிறகு விசாரணை செய்து 27 தலைமுறைகளாக அதிகாரம் வகித்துச் சோழன் ஆறில் ஒன்றும், பாண்டியன் எட்டில் ஒன்றும், சேரன் பத்தில் ஒன்றும வரி வாங்கும் திட்டத்தை ஏற்படுத்தினன். பிறகு காஞ்சி சென்று செப்பேடு எடுத்து 108 சிவாலயம் 6 திருப்பதி 6 படை வீடு வகுத்து, சோழனுக்குக கிழக்கு வாசலும், பாண்டிய னுக்குத் தெற்கு வாசலும், சேரனுக்கு மேற்கு வாசலும் ஆலய ஏற்பாடு செய்து பட்டயம் எழுதிச் சாதிக்கட்டுப்பாடு வகுத்தான். இவ்வாறு 98 சாதிக்கு முறை வகுத்த பிறகு உலகம் முழுதும் நீதி நடந்ததாம்.

பிறகு, துருக்கர் படையெடுத்து நாட்டைக் கவர்ந்த பிறகு ஆலய வழக்கங்கள் நின்று விடுமாம். வீரவசந்தராயர் தோன்றி துருக்கர்களை வென்று மீண்டும ஆலயம் திறந்து வைக்கப்படுமாம் என்று எதிர்காலம் கூறப்பட்டது.

இறுதியில் சேரமான் பெருமாளும் சுந்தரரும் திருப்பேரூர் விஜயம் செய்து அங்கே இறைவனை வழிபட்டுக் கயிலை சென்றனராம். இந்தச் செய்தியோடு நூல் முடிகிறது.

## 10. சில மாறுபாடுகள்

தமிழ் இலக்கியத்தில் காணும் வரலாறுகளுக்கும் இந்நூலில் காணும் வரலாற்றிற்கும் சிற்சில மாறுபாடுகள் உள அவற்றில் இரண்டை இங்குக் குறிப்போம். கரிகாற் சோழன், கன்றினைக் கொன்ற தன் மகனைத் தேர்க்காலுக்கு இட்டுத் தண்டித்தான் என்று இங்கே கூறப்பட்டது. ஆனால் பெரிய புராணத்தில் இது நடந்தது மனுநீதிச்சோழன் காலத்திலே என்று படிக்கிறோம்.

சுந்தரரும் சேரமானும் கயிலை சென்றது பேரூர் என்று இங்கே கூறி உள்ளது. ஆனால் பெரியபுராணமோ அச்செய்தி நடந்தது திருவஞ்சைக்களம் என்று கூறும். கொங்கேழு தலங்களிலே பேரூர் ஒன்று என இந்நூல் கூறும். ஆனால் திருமுறைகளோ பேரூரை வைப்புத் தலமாகவும் திருச்செங்கோட்டை ஏழாவது தலமாகவும் கூறும். இதற்கு இந் நூற் செய்யுள் :—

> " ஆதி கருவூர் திருவெஞ்ச மாங்கரைசேர்
> நாதர் அவிநாசி நண்ணுவூர்—ஓதுபுகழ்
> தஞ்சமாம் பேரை தருமுருகன் பூண்டியிவை
> நெஞ்சிலே நன்றாய் நினை "

என்பதே. மேலும், இந்நூலின் கடைசியில், நாட்டு எல்லைகள், நாட்டுப் பிரிவினைகள், 24 நாட்டு விருத்தம் முதலிய பல குறிப்புக்கள் உள்ளன. கொங்குநாட்டை இருபத்திநான்கு உள்நாடுகளாகப் பிரித்து வழங்கி வந்த செய்தி கோயில்களில் கண்டெடுத்த கல்வெட்டுக்களால் ஆதரிக்கப்படுகின்றது.

மேலும், சில ஊர்களின் சரியான பண்டைப் பெயர்கள் இங்கே வெகு நன்றாக விளங்குகின்றன. ஆறை நாட்டுச் செய்யுளிலே கோவைநகர், பழனை (பெருமா நல்லூர்), தொண்டமான்புத்தூர் (தொண்டாமுத்தூர்), சேவைநகர் (சேவூர்), கவசை (கோவில் பாளையம்), நம்பிபேரூர் (நம்பியூர்) முதலிய பழைய பெயர்களைக் காணலாம். அவைகளை நன்கு ஆராய்ந்தால் அவைகளின் பண்டை வரலாற்றை எளிதில் அறிந்து கொள்ளக்கூடும் அல்லவா ?

## 11. பழைய முறையும் புதிய முறையும், இணைப்பு

நாட்டு மக்களின் வரலாற்றில் ஒவ்வொரு காலத்தில் ஏற்படும் சம்பவங்களில் முக்கியமானவை சில தோன்றி பெரும் புரட்சி

அல்லது மாறுதலைச் செய்துவிடுகின்றன. அவ்விதப் புரட்சி அல்லது மாறுதல் கொங்கு நாட்டில் ஒன்று ஏற்பட்டது. அதனை இந் நூல் வெகு விரிவாகக் கூறுகின்றது. வெகுகாலம் வரை சமய நிலையிலும் சமூக வழக்கங்களிலும் ஒரு முறை இருந்து வந்தது. அதனைப் பழைய முறை என்று கூறுவோம் கரிகால்சோழனும் சமய முதலியும் கொண்டுவந்து சில மாறுதல்களைப் புகுத்தினர்கள். அதைப் புது முறை என்று கூறுவோம். பழைய முறை இருககும்போது புது முறையைப் புகுத்தினல் அப்போது எதிர்ப்புத் தோன்றுவது இயற்கை. அவ்வெதிர்ப்பை அசட்டை செய்திருந்தால் கலகம்தான் ஏற்பட்டிருக்கும். ஆனல் சமய முதலியோ அவ்வெதிர்ப்பை அசட்டை செய்யாமல் பழையவழியில் நடந்து வந்த சிலவற்றைத் தானும் எடுத்துக் கொண்டு புது முறையையும் புகுத்திவிட்டார். இதுதான் சமரச வழி. இந்த முறை செய்து வந்ததினல் இருமுறைகளும் நாட்டில் அடுத் தடுத்தே வழங்கி வருகின்றன. இன்றைக்கும் இருமுறைகளையும் நாட் டில் பார்க்கிறோம். இது அரசியல் நிபுணத்துவம் போன்றது.

சோழன் வந்த போது கொங்கு நாடு வனமாக இருந்தது. ஆங்காங்கு இருளர்கள் பதிகளைக் கட்டிக்கொண்டு வேட்டையாடிப் பிழைத்து குல தெய்வத்தை வழிபட்டு வந்தார்கள். அக் குல தெய்வமே அவனுடைய பாதுகாப்பு வன தெய்வம். அதற்கு மிருக பலி இட்டு வந்தார்கள். சிற்சில கொடிய வனங்களில் நரபலியும் இடப் பட்டன. இது பண்டை நாள் வழக்கம்.

சோழன் கொங்குநாடு புகுந்ததும் காட்டை வெட்டி ஊரைக கட்டிச் சிவாலயங்கள் கட்டத் தொடங்கினன். காட்டை வெட்டும் போதே அந்தக் காட்டைக் காத்துக்கொண்டிருந்த வனதேவதை எதிர்த்ததாம். இதற்குப் பொருள் பழையமுறையின் எதிர்ப்புத்தான். காட்டில் இருந்த பழங்குடிகள் புதுமுறைகளை எதிர்த்தார்கள் என்பதே ஆகும். தெய்வ வணக்கம், காட்டு வாழ்க்கை, காட்டு அதிகாரம் இவை களை விட்டுக் கொடுக்க அவர்களுக்கு மனமில்லை. மேலும் புதுமுறை களான சைவவழிபாடு, ஊர்க்கட்டு, அதிகாரமாற்றம் இவைகளை ஏற் றுக்கொண்டு பிறர்க்கு அடிமையாக விரும்பவில்லை. இதனைக் கண்ட சமய முதலி வெகு சாதுரியமாகப் பழைய முறைகளில் சிலவற்றைஏற் றுக்கொண்டு புதுமுறைகளைப் புகுத்திவிட்டார். பழைய முறைகளிலே வனதேவதையை ஒப்புக்கொண்டு அதற்கு மிருகபலி கொடுப்பதாக வாக்களித்தது, பழங்குடிகளைத் திருப்தி செய்ய அத்தேவதைகளுக்குக் கோயில் எழுப்பியது, அக்கோயில்களுக்குப் படித்தர மானியம்

முதலியவை வைத்தது, அதிகார வகையில் பண்டாரகளை ஏற்படுத்தியது, ஊர்களின் பெயரும் பழய இருளன் பெயரையே வைத்தது, இவ்விதமான செயல்கள் பழங்குடிகளுக்குச் சம்மதமாயின. எதிர்ப்பும் மறைந்தது.

இனி புது முறைகளிலே காடு வெட்டி, நாடு ஆக்கி, கோட்டையும் பேட்டையும் கட்டி பதினெட்டுக் குடிவகைகளையும் குடியேற்றி வைத்து, ஆலயங்களைக் கட்டி, அவைகளுக்கு நிலம் முதலிய மானியங்களை வகுத்து ஆலயங்களில் நம்பி முதல் திருவலகு வரை ஆட்களை ஏற்படுத்தி வெகு திறமாகப் புது முறைகளை உட்புகுத்திவிட்டார். இதனால் சமயமும் ஆட்சியும் கிழக்குச் சோழ நாட்டைப் போல் ஆகிவிட்டது.

இது ஓர் அருமையான சமரசவழி. இந்நாட்டிற்குப் பெயருக்கு அதிகாரியாக இருந்த சேரனிடமும் சம்மதம் வாங்கிக் கொண்டே சகல செயல்களும் குடியேற்றவகையில் செய்யப்பட்டன. ஆனால் வெளிப்படையாகச் சமயச சீர்திருத்தம் என்ற பெயரால் செய்யப்பட்டது. இவ்விதப் புரட்சி பழைய கொங்கு நாட்டில் கீழை நாட்டு மக்கள் செய்தனர் என்று இந்நூல் கூறுகிறது. சமய முதலி செய்ததாகக் கூறியது இந்த நாட்டிற்கு விஜயம் செய்த சுந்தரமூர்த்திகளாகிய சைவசமயாசாரியரால் செய்ததாகும் என்று உட்சான்றாகக் கூறலாம். சுந்தரர் சேரமான் பெருமாள் விஜயத்தை நன்கு கவனித்தால் இந்தச் செய்கையே தெரியவரும்.

## 12 சில வழக்கங்கள்

இவ்வாறு நாட்டில் குடியேற்றம் செய்த வகையில் சிலவற்றை ஏற்றுக் கொண்டும் பலவற்றைப் புகுத்திக் கொண்டும் காரியத்தை முடிவு செய்து வெற்றி பெற்ற விவரத்தில் சில முக்கியமான வழக்கங்களைக் குறிப்பது இங்கு அவசியமாகும். பழைய முறையில் ஒவ்வொரு வனத்தில் ஒவ்வொரு குலதேவதை வழிபடப்பட்டது. அதற்கு ஆண்டு விழாக்கள் நடைபெற்று வந்தன. அவ் விழாக்களில் பெரும்பாலாக ஆடு கோழி பன்றி என்ற முப்பலி இடப்பட்டன. இவ்விதமாக நெடுங்காலமாக நடைபெற்று வந்த முப்பலி வழிபாட்டைச் சோழனும் சமய முதலியும் நிறுத்திவிட முடியவில்லை. பலியிடும் வழக்கம் இல்லாத் தூயசமயங்களான சைவ வைஷ்ணவங்களில் இக் கொள்கைகள் ஏற்கப்படமாட்டா. ஆகவே இந்தப் பெருஞ்சமய நிலையங்களை ஏற்படுத்தும்போது பெருந்தடை நேரிடாதபடி பழைய குலதேவதைகளின் கோயில்களும் தனியே கட்டப்பட்டன. ஆறுதல் தருவதற்காக

அவைகளுக்கும் மானியங்கள் கொடுக்கப்பட்டன. ஆண்டு விழாக்களும் ஏற்படுத்தி ஆடு, கோழி, பன்றி, நெய்விளக்கு இவைகளும் வகுக்கப்பட்டன. ஆனால் இவைகளைச் செய்யும் பூசாரிகள் வேறு. வீட்டுக்கு ஒரு பொங்கலும் ஆணையிடப்பட்டன. ஆகவே குடிகள் எல்லாரும் சிவாலயத்திற்குச் செல்லுவதைப் போலவே துர்க்கை ஆலயத்திற்கும் சென்று வந்தார்கள். துர்க்கை அல்லது வனதேவதையின் பூசை மிகப் பழையது என்று கூறுவதற்கு மற்றொரு சான்றும் உண்டு. சிவாலயத்தில் பெருந்திருவிழா நடப்பதற்கு முந்தியநாள் கிராம தேவதைப் பூசை நடக்கும். அத்தேவதைப் பூசையே முதலில் நடந்து வருவதன் நோக்கம் இப்போது நன்கு தெரியும். வரவர கிராம தேவதைக்குச் செப்புவிக்கிரகமும் செய்யப்பட்டது. ஆனால் அது தற்போது சிவாலயத்திலேயே வைக்கப்பெறுகிறது. திருவிழாவின் போதுதான் அதன் கோயிலுக்கு அஃது எடுத்துச்செல்லப்படுகிறது. பலிகள் இதுநாள்வரை நிறுத்தப்படாமல் நடைபெற்று வந்தன அல்லவா ?

கொங்குநாட்டில் பெரிய கோயில்கள் உள்ள 36 தலங்களில் சில தலங்களில் மட்டும் நரபலி இடப்பட்டு வந்தன. முதலில் அவைகளையும் தடுக்க முடியவில்லை போலும். சமய முதலி தன் இனத்தாரிலேயே சில பாலர்களைப் பலியிட்டு அதுமுதல் நரபலி நிறுத்த வேண்டும் என்று பிரார்த்தித்து நிறுத்தி விட்டாராம். இதுவும் ஒரு சமரச வேலைதான். தியாகம் செய்தால் எந்தச் செயலும் வெற்றியடையும் அல்லவா? நரபலி நிறுத்துவதற்குத் தன் குலத்தாரிலேயும் தன் குடும்பத்திலேயும் சில பாலர்களைப் பலிகொடுத்தாராம். இந்தத் தியாகத்தினால் நாட்டில் நரபலி நின்றது. இவ்வாறு நரபலி நடந்து வந்த தலங்கள் ஆறு அவையாவன:—சென்னிமலை, பேரையூர், அவிநாசி, அண்ணூர், அருணபுரி, மதுரை என்பன சில ஆண்டுகளுக்கு முன் உரியா நாட்டில் மலைச்சாதியாரில் நரபலி நடந்து வந்த செய்தியை அறிவோம. பண்டைக் காலத்தில் எல்லா நாடுகளிலும் அது நடைபெற்றது போலும். இந்நூலில் கூறப்பட்டிருக்கிற விவரங்கள் பண்டைக்கலை ஆராய்ச்சிக்கு மிக உதவியாக இருக்கும். ஒருவிதக குற்றம் குறைவு இல்லாத 12 வயது பாலகனை மஞ்சனநீராட்டிப் புது உடை அணிவித்துப் பூமாலைசூட்டி ஊர்கோலம் செய்வித்து ஆலயத்து முன்னிலையில் கிராம தேவதைக்குப் பலி கொடுப்பார்களாம். அவ்வாறு பலியான பாலகனைப் போலக் கல்லில் உருவம் செய்து கோயிலின் முன்னால் பிரதிட்டை செய்து பூசை

செய்வார்களாம் இச்சிலைக்குச் 'சாவாரப்பலி' என்று பெயராம். இக் காலத்திலும் அப்பெயர் சில ஊர்களில் உண்டாம். வீரக்கல், மாசதிக்கல் போன்றவை சாவரப்பலிக்கல் என்று அறியவேண்டும் இவ்விதப் பழக்கங்களை ஆராய்ந்து அறிவதற்கு இந்நூல் ஓர் ஆதார நூல் ஆகும். இறுதியில் சமய முதலி இட்ட பலி மிகக் கொடியதாகும்.

ஒரே நாளில் பன்னிரு பாலகர்களை வெட்டிப் பலிகொடுத்த லோடு நரபலி நின்றது என்று காண்கிறோம்.

## 13. இடப்பெயர்கள்

இந்நூலில் அறியக்கூடிய மற்றொரு முக்கிய செய்தி இடப் பெயர்கள். கொங்கு நாட்டில் வழக்கத்தில் உள்ள இடப்பெயர்கள் எவ்வாறு தோன்றின; பின்னால் எவ்வாறு மாறின என்ற விவரம் இந் நூலில் கூறப்பட்டுள்ளன. பூமி நூலில் இடப்பெயர்களுடைய ஆராய்ச்சி ஒரு சிறந்த பகுதியாகும் ஐரோப்பிய நாடுகளில் இந்தப் பகுதி வெகு நன்றாகவும் நுணுக்கமாகவும் ஆராய்ச்சி செய்யப்பட்டு நிரம்ப நூல்கள் எழுதப்பட்டுள்ளன தமிழிலும் தமிழ் நாட்டிலும் இத்தகைய ஆராய்ச்சி மிகவும் குறைவு. அந்த ஆராய்ச்சிக்கு இந்த நூல் மிகுந்த ஆதரவு தருகின்றது. இங்கு இதற்கு ஓர் உதாரணத்தை எடுத்துக் காட்டுவோம்.

கோயமுத்தூர் என்று இப்போது வழங்கும் ஊரின் பெயரைப் பற்றிப் பல அறிஞர்கள் பலவாறாகக் கூறினார்கள். சிலப்பதிகாரத்தில் கூறியிருக்கும் கொங்கிளங் கோசர் என்ற ஒரு சொல்லை எடுத்துக் கொண்டு கோசன் என்ற ஒரு சொல் கோயன் ஆகி அது முத்து வோடு சேர்ந்து கோயமுத்தூர் ஆயிற்று என்று கூறினார்கள். ஆனால் இந்நூலோர் இங்கு ஆண்ட கோவன் என்ற இருளன் பதியாக இருந்து ஊராகக் கட்டப்பட்டபோது கோவன்புத்தூர் என்று ஆயிற்று எனக் கூறக் காண்கிறோம். இந்த வரலாறுதான் சரியெனச் சொல்லுவதற்குப் பேரூர், குமரலிங்கம் முதலிய இடங்களில் கண்ட கல்வெட்டுச் சான்றுகள் கிடைத்துள்ளன.

இதைப் போலவே மற்ற ஊர்களின் பெயர்களுக்கும் காரணம் காட்டப்பட்டுள்ளது. ஆனால் எந்த ஊரை எடுத்தாலும் அது முந்தி ஓர் இருளனுடைய ஊராக இருந்து பிறகு அது நகரம் ஆயிற்று என்று சொல்வது சிறிது சந்தேகமாகத் தோன்றலாம். அவனாசி, பல்லடம் இவைகளும் இருளப் பெயர்களா என்பது ஆராயத் தக்கது. மேற்குப் பகுதியில் உள்ள ஊர்கள் பெரும்பான்மையாக இருளர்களுடைய

ளர்கள் என்பதில் ஐயமில்லை. வெள்ளலூர் என்பது வெள்ளனூராக இருந்ததென்றும் அது வெள்ளை என்ற இருளனுடைய பதியாக இருந்ததென்பதும் சரியாக இருக்கக்கூடும். அப்படிப்பட்ட பெயர்களும் இருளரிடத்தில் வழங்குகின்றன. வெள்ளலூர் தேனீசுரர் கோயிலில் உள்ள பிற்காலத்துக் கல்வெட்டுக்களிலே அதன் பெயர் வள்ளலூர் என்றும், அஃது அன்னதான சிவபுரியாக இருந்ததென்றும் தெரிகிறது. வள்ளல், அன்னதானம் என்ற சொற்கள் பிற்காலத்தில் எழுத்து ஒற்றுமையை அனுசரித்து ஏற்பட்டிருக்கலாம் என்று தோன்றுகிறது. இடிகரை, துடியலூர், சிங்காநல்லூர், சூரனூர், சியாமளாபுரம் முதலிய பல பெயர்களும் எவ்வாறு ஏற்பட்டன என்று இந்நூல் கூறுவதை ஆராய்ந்து அறியவேண்டியது நன்மையே யாகும்.

இடப் பெயர்களே அன்றி ஆண்பெயர்களும் சிந்திக்கத்தக்கன. ஒவ்வொரு வகுப்பார்களும் எவ்வாறான பட்டங்களை வகித்திருந்தார்கள் என்று நன்கு அறியலாம். மேலும் மக்கள் அக்காலத்திலும் அடுத்த ஊரில் வீற்றிருக்கும் மூர்த்தியின் பெயரை வகித்திருந்தார்கள் எனவும் அறியலாம். மூர்த்திகளின் பெயர்களேயன்றி தலங்களின் பெயர்களையும் வைப்பது வழக்கமாக இருந்தது. தவிர, தலங்களின் சுவாமி அம்மன் இவர்களின் திருநாமங்களும் தீர்த்தங்களின் பெயர்களும் தெளிவாகத் தெரிகின்றன. பண்டைநாளில் தனித் தமிழ்ப் பெயர்களையே வெகுவாக வழங்கினார்கள் என்றும் அறியலாம். இவைகளுக்குக் கல்வெட்டுச் சான்றுகளும் திருமுறைகளின் ஆதரவுகளும் உண்டு இவைகளும் ஆராய்ச்சிக்கு ஏற்றவையாக இருப்பனவே.

## 14. பின்னுரை

இந்நூல் புராணக் கதையைப்போல் எழுதப்பட்டிருந்தாலும் இதில் கொங்கு நாட்டைப்பற்றிய செய்திகள் மிகவும் விளக்கமாக உள்ளதனால் கொங்கு நாட்டின் சரிதம் ஆராய்ச்சி செய்ய அறிஞர்களுக்கு மிகவும் பயன்படும். இதனுடைய உரை நடை சாதாரணமானது. இருநூறு ஆண்டுகளின் போது வழங்கிவந்த நடை என்று கூறலாம். பண்டை நூற் புலமை இல்லாத ஓர் அறிஞர் எழுதியிருக்கக் கூடும். அவர் காலத்தில் வழங்கி வந்த கர்ண பரம்பரைக் கதைகளைச் சேர்த்து எழுதியிருக்கக்கூடும். அவைகளை வெகு எளிதில் நீக்கிவிட்டு உண்மை வரலாறுகளை மட்டும் எடுத்துக் கொள்ள முடியும்.

இதனை எழுதிய புலவர் பெரும்பாலும் கைக்கோள மரபினராக இருக்கலாம்: அல்லது அம்மரபினர்களால் ஆதரிக்கப்பெற்ற

வராக இருக்கலாம். அக்குலத்தவருடைய பெருமைகளை மிகவுயர்த்தி வெகு விவரமாக எழுதியிருக்கிறார். நடை சாதாரணமாயிருப்பது ஒன்றல்ல; சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லும் முறை மிகுதியாக இருக்கிறது. இதனால் இந்நூலை நிம்மதியாகப் படிப்பது என்றால் வெகு சிரமமாக இருக்கும். ஆகவே இந்நூலை உல்லாசப் படிப்பிற்கு வைத்துக் கொள்ளாமல் ஆராய்ச்சிக்கும் மேற் கோள் களுக்குமே மிகுதியாக வைத்துக் கொள்ள வேண்டும்.

பல இடங்களிலும் வடமொழிச் சொற்களை எழுதும் போது வழக்கில் பேச்சு நடையில் பாமரரில் வந்துவிட்ட மருவுச் சொற்களையே ஆண்டிருக்கிறார்கள். உதாரணமாக 'விருமத்தி' என்பது 'பிரமஹத்தி' என்பதன் மருவு. 'கல்சாகரம்' என்பது 'கல் சாசனம்' என்பதன் மருவு. இவ்வகைச் சொற்கள் பல உள. அவைகளை எளிதில் கண்டு கொள்ளலாம். மேலும் இலக்கியங்களில் வழங்காமல் வெறும் பேச்சு நடையில் வழங்கும் சொற்கள் பலவும் இதில் காணலாம். உதாரணமாக. "சர்வாரப்பலிக்கல் நாட்டல்" "வேடர் கம்பளம்" "துருக்கை பலி கேட்டது" முதலியவைகளாகும். மேலும் "முஸ்தீது" முதலிய உருது மொழிகளும் வந்துள்ளன.

அக்காலத்து எண்ணப் போக்குகளிலும் பழக்க வழக்கங் களிலும் அடியிற் கண்டவைகளைக் குறிக்கலாம். கொடுங்கோன் மையால், அக்கினிமழை, மண்மாரிபெய்தல், துருக்கை பலிகேட்பது புதைத்து வைத்த பெட்டகம் எடுக்கப் பூசை போடுதல், சண்டைக்கு முன் தூது செல்லுதல், குறத்தி குறி கேட்டல், துட்டனைக் கொன் றதும் பிரமத்தியும் தோஷமும் காணுதல், அதனைப் போக்கத் திருப்பணி செய்தல், அரசனைத் தேட பட்டத்து யானையை அனுப்புதல், முப்பலி, நரபலி கொடுக்கும் விவரங்கள், பலியானவனுக்குக் கல்நட்டு பூசை செய்தல், சாதிக்கட்டுப்பாடு, விருது முதலிய உரிமைகள், ஒவ் வொரு தொழிலுக்கும் ஒவ்வொரு குலத்தானையே நியமித்தல், துருக்கை கோயில் பூசை வழக்கங்கள், தீ மிதித்துக் கும்பம் எடுத்தல், அலகு நிறுத்தி பூசை இடுதல், பேரூர், வெள்ளிமலை முதலிய பண்டை ஊர் களின் கதைகள் முதலிய பல அரிய செய்திகளை இதில் காணலாம்.

பல சொற்களுக்கு இந்நூலிலேயே விளக்கம் கிடைப்பதால் அவைகளைத் தனியாக விளக்கவில்லை. பொருட்குறிப்புக்கள் ஆங் காங்கே தலைப்புக்களாக எழுதப்பட்டன. மற்றவைகள் உள்ளபடியே ஏற்றுக் கொள்ளப்பட்டன.

**C. M. இராமச்சந்திரன்**

# பிழையும் திருத்தமும்.

| பக். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 9 | 32 | பிறந்துகிறான் | பிறந்திருக்கிறான் |
| 19 | 17 | கூடுதல் | காட்டுதல் |
| 20 | 7 | வரைக்கு | வரைக்கும் |
| 24 | 1 | வீரனாகிரவன் | வீரனாகிறவன் |
| ,, | 25 | பூசைப் | பூசை |
| ,, | 27 | கைமிலெடுத்துக் | கையிலெடுத்து |
| 26 | 17 | பொன்றும் | பொன்னும் |
| 27 | 1 | [1]துரையூர் | துரையூர் |
| ,, | 25 | சாலிவகனன் | சாலிவாகனன் |
| ,, | 27 | கெட்டது | கேட்டது |
| ,, | 39 | [1]துறை | [1]காகித |
| 28 | 23 | சேதி | [4]சேதி |
| ,, | 28 | [4]தன்னுட | [6]தன்னுட |
| 29 | 36 | முச்தி | முக்தி |
| 32 | 21 | [1]பூனையாடு | [2]பூனையாடு |
| ,, | 26 | [2]திராணி | [3]திராணி |
| ,, | 38 | [3]தூசினமான | [4]தூசினமான |
| ,, | 39 | [1]ராணுவ | [1]ராணுவ; [2]பூனை; [3]திறமை, |
| 39 | 14 | உலாராச்சேரன் | உலாச்சேரன் [[4]தூஷண |
| ,, | 24 | உலாராசச்சேரன் | ,, |
| ,, | 25 | உலாராச்சேரன் | ,, |
| 41 | 24 | ஐந்து பேருபாக | ஐந்துபேருமாக |
| 42 | 20 | பாசரணம் | பாதசரணம் |
| 43 | 1 | கசுயுகச் | கலியுக |
| ,, | 19 | 86 சாதி | 96 சாதி |
| ,, | 22 | மாதிகள் | மாதிகன். |
| 45 | 28 | உறிமை | உரிமை |
| 46 | 37 | கூர்மந்தாங்சினுப் | கூர்மந்தாங்கினுப் |
| 50 | 29 | பெயரில் | பெயரிடல் |
| 51 | 16 | ஆனையும் | ஆனையும் |
| 54 | 1-2 | சடை சடையப்பனுக்கு | சடையப்பனுக்கு |
| 55 | 35 | பொதுவனாரகிய | பொதுவனாகிய |
| 56 | 15 | காரியத்தாற் | காரியத்தார் |
| 66 | 35 | முதலாகிய தெல்லாங் | முதலாகிய தெல்லாம் |
| 71 | 37 | பத்திதில் | பத்தில் |
| 75 | 3-4 | விரைப்புஞ்சையும் | விரைப்பு நஞ்சையும் |
| 73 | 10 | கரியகாளி பலிகேட்டது | (இத்தலைப்பை நீக்கிவிட [வும்.) |
| 78 | 3 | காரியகாளி | கரியகாளி. |
| 81 | 2 | விரைப்படிப் | விரைப்புப் |
| 92 | 23 | குள்ளந்துரை | குள்ளந்துறை |
| 96 | 12 | ஒம்புச் | ஒப்புச் |
| 103 | 26 | காரிகாலச் | கரிகாலச் |
| 106 | 23 | மாணிக்கியை | (மாணிக்கியை.) |
| 107 | 14 | எல்லோருமவரைக் | எல்லோருமவரைத் |

| பக். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 117 | 23 | மேரை | பேரை |
| 119 | 7 | மரகதரத்தின் | மரகதரத்தின |
| 119 | 14 | ளந்த் | அந்த |
| 145 | 35 | முன்னூற்றதுபது | முன்னூற்றறுபது |
| 146 | 18 | வரயாறு | வரலாறு |
| 147 | 10 | மனுப்பித்து | அனுப்பித்து |
| 148 | 30 | இரேழு | ஈரேழு |
| 151 | 3 | கோதவரி | கோதாவரி |
| 161 | 1 | (அன்னாளில் | அன்னாளில் |
| ,, | 36 | (நகரை | தகரை |
| 168 | 32 | அரமணை | அரண்மனை |
| 176 | 10 | மன்னிபூர் | மன்னியூர் |
| 178 | 6 | திருவபலயங்களும் | திருவாலயங்களும் |
| 189 | 10 | காரியப்போரும் | காரியப்பேரும் |
| 198 | 21 | மினாக்ஷி | மீனாக்ஷி |
| 202 | 14 | நகரலிருந்து | நகரிலிருந்து |
| 205 | 33 | மினாக்ஷி | மீனாக்ஷி |
| 207 | 33 | அம்முன்று | அம்மூன்று |
| ,, | 14 | கர்த்ராகிய | கர்த்தராகிய |
| ,, | 29 | பச்சவடவம் | பச்சவடமும் |
| ,, | 34 | இப்புபனத்தில் | இப்புவனத்தில் |
| 209 | 20 | கைய்கொள்வருககு | கைக்கொள்வருக்கு |
| ,, | 19 | முறமைக்கு | முறைமைக்கு |
| 217 | 11 | பொட்டகம் | பெட்டகம் |
| 219 | 21 | புஷ்பமாறி | புஷ்பமாரி |
| ,, | 25 | கைய்கொண்டு | கைகொண்டு |
| 220 | 3 | முவரவர்க்கும் | மூவரவர்க்கும் |
| ,, | 15 | கச்கி | கச்சி |
| ,, | 39 | பிறனாடு | பிறநாடு |
| 221 | 16 | பள்ளளருக்கும் | பள்ளருக்கும் |
| 221 | 25 | கழுத்தறுத்துப்பிப்பார் | கழுத்தறுப்பிப்பார்கள் |
| 223 | 35 | ஸ்ரீரி [கள் | ஸ்திரீ |
| 224 | 21 | ஸ்ரீரியும் | ஸ்திரீயும் |
| 226 | 26 | ஸ்னானம் | ஸ்னானம் |
| ,, | 38 | அப்பனை | அப்பணை |
| 227 | 4 | சாயுஜ்யப்பதவி | சாயுஜ்யபதவி |

உ

# சோழன் பூர்வ பட்டையம்

## காஞ்சீபுரத்துக்கல் வெட்டுப்படி(க்கு) முற்காலம், பிற்காலம், இக்காலம் பூருவவரவு

*மூவேந்தர் தோற்ற வரலாறு*

*சாலிவாகனன் பிறப்பு*

*விக்கிரமாதித்தனை வெல்லல்*

*சகாத்தம் தொடக்கம்*

ஆதி பூருவத்தில் சதாசிவன் அருள்புரிந்தபடி பி(ர)ரும தேவன் கற்பனையால் கோவிந்தராசாமகன் விக்கிர மாதித்த ராசாவுக்கு [1]சாலிகவாகனன் கையில் மரணமென்று ஆதி பிருமதேவன் கற்பித்தபடியினாலே சாலிகவாகனனும் பூமியைத் தாங்கியிருக்கப்பட்ட ஆதி சே[2]சாதிபதி ஏவலினாலே அயோத்தி வளநாட்டில் குசவர்பாடியில் புத்திரனய்ப் பிறந்து வளர்ந்து பிரபலமாகி தனக்குத்தானே ஆதிசேஷாதிபதி மகிமையினாலே சகலவித்தைகயுங்கற்றும் சகலதொழிலுங்கற்றும் அதிவீரசூர பராக்கிரமனாகி விக்கிரமாதித்தனையும் செயித்து அயோத்தி வளநாடு சீர்மையுங் கட்டி சகத்தை வழங்கி ராச்சிய பரிவாரம் ஆண்டான். ஆண்டபடியினாலே நாள் சாலிவாகன துரை நாளென்று பெரும்பிரபலமாகி சாலிவாகன, கலிச்சகாத்தம் என்று நாளும் முத்திரையொப்பமும்...... நடந்துவருவதா[3]ச்சுது.

*சாலிவாகனன் ஆட்சி*

*கொடுங் கோன்மை*

ஆனபடி பின்பு சாலிவாகனனும் ஆயிரத்தி நானூற்றிருபத்தாறு வருஷம் ராச்சியம்[4]பரிவாரம் செய்தான். அவனும் அதிகாரத்துக்கு வந்தநாள் முதற்கொண்டு அவன்[5] வங்கிஷம் [6]பாரம் பரிதகையாய் நடந்த நாள்வரைக்கும் குடிநீதி துரைநீதி குருநீதி யில்லாமலும் குலம் இன்னார் இன்னாரென்றும் குலப்பிரிவு[7] இல்லாமலும் கடமை தந்தாயம் இன்னதென்றும் இத்தினை[8]யென்றும் நிகுதியில்லாமலும், இப்புவனமாகிய[9] அன்பத்தாறு தேச புவனத்துக்கும்[10] அச்சுக்கட்டு விரைப்பாடு [11]அணி மறவு காணமல் ராசநீதி முறைமையொழுக்கம் தவறி தெண்டம் படும்படியும் வல்லடியும் வழிபறியும் முன் துவாபர உகத்தில் துரியோதனனுள்போலை(லே)யும், திரேதாயுகத்தில் ராவணாசுரனுள்போலை[லே]யும் கிரேதாயுகம் பத்மாசுரனுள்போலை[லே]யும் நடந்தது. அந்த சாலிவாகனனுகிற

---

1 சாலிவாகனன 2 ஷா 3 ஆயிற்று 4 பரிபாலனம 5 வமசம 6 பாரமபரியமாய 7 பிரிவு 8 இததனை 9 ஐம்பத்தாறு 10 உழவு முறைகள 11 அணைமறைவு

சமணமதம் சர்வேசுவர தீக்ஷை.

னெனும் சமண மதமும் சருவேசுவர தீட்சையும் அவனும் அப்படி பாராட்டிககொண்டு இருந்தபடியினலே, இப் புவனத்தில் முன் துவாபரயுகத்தில் விக்கிரமார்க்கன் உண்டு செய்து நடத்திவந்த சிவாலயங்கள் விட்டுணு வாலயங்கள் சுப்பிரமண்ணியத் திருவாலயங்கள் மட வாலயங் குருவாலயங்கள் ஆக இந்த பஞ்சாலயம் முதலாகியதும், தண்ணீர்ப்பந்தல் அன்னசத்திரம், சாலைமரங்கள் நந்த(ா)வனங்கள் கோவில்குளங்கள் தேர்தெருவுகள் இத்தனையும் அழித்துப்போட் டான். அதுவுமல்லாமல் [1]அன்பத்தாறுதேச மனிதர்க்குமுன் விக்கிரம ராசன் விட்ட வரிசை மானியங்கள் சே(சை)னை வரிசைகள் குல வரிசைகள் அவரவர் பதிவிரதங்கள்(?) ஆகியதெல்லாம் தவி(ழ்)ர்த்து [2]இத்தினையுமழித்துப்போட்டான். அழித்துப்போட்டபின்பு அவன் நாளில் [3]ச(ம)மண மதத்துக்கும் சர்வேசுவர தீட்சைக்கும் உட்பட்ட பேரை அனுசரித்துககொள்வான். ச(ம)மண மதம் சர்வேசுவர தீட்சைககு உள்படாமல் சிவமதம் விஷ்ணுமதத்திலிருந்தபேரையெல் லாம் அடியும் அபசாரமும் தெண்டம்பெறும்படியும் அடிப்பன். அதுக கடங்கி அந்தச் சமணமதம் சருவேசுவரதீட்சைக்கு உட்பட்டால் அவர் களைக காப்பாற்றிககொள்வான். அடங்காதிருந்தால் அவர்களை [4]யாதகினை செய்விப்பன். அப்படி சாலிவாகனனுகிறவன், அத்தனை துஷ்டநிக்கிரகங்கள் செய்தபடியினுல் புவனத்தில் நிக்கிரகங்களாகி நவக்கிரகங்கள் எதிர்த்தக்கால் வக்கிரங்களாகி மழை மறுத்து விளை வில்லாமல் மகாகாலமாகிய [5]சாமகாலிங்கள் வந்து ராஜ்ஜியத்திலுள்ள ஜனங்களெல்லாம் இறந்துபோய்நாளி[ழி]கைக்கு [ஒரு காடும்] [காதத் துககு] [6](காத்தது இ) ஒரு வீடுமாகி, ராஜ்ஜியமெல்லாமழிந்து செடிவனந் திரங்கள்மூடி அன்பத்தாறு தேச புவனமும் நாடுராஜ்ஜியமெல்லாம் மெத்த [7]இருளடைஞ்சுபோச்சுது. போனபடியினலே

யோகிகள் சிவபிரானிடர் முறையிடுதல்

இப் புவனத்தில் உட்பட்ட தவயோகிகள் சிவயோகிகள் இப்படியிருக்கிற வியோகிகளெல்லாம் அந்தச் சாலி வாகனனறியாத காடு செடிவனந்திரங்களிலே அரிய திருமலைச்சார்பு குகையிலே இருந்துகொண்டு அரிய தபசுகளை செய்து சிவனுககு முறை செய்தார்கள்.

அந்தத் தவயோகிகள் சிவயோகிகள் செய்த முறைமையை விட்டுணுவும் சிவனுக்கு முறை செய்தார். செய்தபடியினலே அப்பன் ஆதியாகிய சதாசிவனும் இந்தச் சாலி(ய)வாகனனென்கிறவனுக்கு [8]இத்தினை துட்டநிக்கிரகங்கள் என்னவென்று, முன் முப்புராதிகளை யெரித்தாற்போல அக்கினியாலெறிக்கவேணுமென்று வெகுகோப

[1] ஐம்பத்தாறு [2] இத்தனை [3] சமணம-ஜைனம [4] தண்டிபபான் [5] க்ஷாமகாலங்கள [6] இழவு [7] இருளடைந்துபோயிறறு [8] இத்தனை.

மாகி ஆதிபராபர முகத்திலே அக்கினிமழையைப் பொழிவிக்கவென்ன அரியதவமாக இருந்துகொண்டு அப்ப[அப்பொழுது] ஆத்[1]தோரத்திலே இருக்கின்ற பராபரமூர்த்தியை சடாட்சரத்திருமந்திர

அக்கினிமழை

முகாந்திரத்திலே தியானித்து அந்த அக்கினி மழையை இறககிவருகிறதற்கு முன்னிலையாக, அந்த சாலிவாகன னுக்கு அந்த ஆதிசேஷன் மகிமையினலே அந்த அககினி மழைவரவு இன்னநாள் இன்னேரமென்று [2]சொர்ப்பனமாகிய தெரிசனத்திலே ஆதிசேஷனுகிறவன் சாலிவாகனனுக்குத் தோற்றஞ்செய்தார். தோற்றஞ் செய்தபடியினலே அந்தச் சாலிவாகனனும் அந்த நாள் வரவு அறிந்துகொண்டு அந்தச் சமணமதம் சருவேசுவர தீட்சைககு உட்பட்டபேருக்கு இன்னநாள் இன்னநேரத்தில் உங்க

அதற்குத் தப்பு விக்கும் முறை தெரிவித்தது

ளுககு அககினிமழை பெய்து இனி நீங்கள் கல்லினல் வீடுகட்டி அவரவர்க்கு [3]வச்சிருங்கள். இல்லாதிருந்தால் இறந்துபோ(வையள்)வீர்கள். கல்லினலே வீடுகட்ட சத்தியில்லாதபேர்கள் கங்கை, யமுனை, சரசுபதி, துங்கபத்திரை, [4]கண்ணைவேணி, காவேரி, கடல்போலேயிருக்கின்ற நதி வாசலிலே காத்திருங்கள். காத்திருந்தால் அந்த அககினிமழை பொழிந்தால் அந்த நதியினுள்ளே இறங்கிககொண்டால் அந்த அக்கினி [5]அமைந்துபோகும். கல்வீடு கட்டியிருந்தால் அந்த அககினிமழை பொழிந்தால் அந்தக் கல்வீட்டுககுள்ளே (பூ)புகுந்துகொண்டால் அந்த அக்கினியை கல் தாங்கிககொள்ளும், இப்படியாகத் தங்களுககுத் தாங்கள் பாகு[6]பதனம் செய்து இருந்தால் பிழைப்பார்கள். இல்லாதிருந்தால் எல்லோரும் இறந்துபோவார்களென்று சாலிவாகன னென்கிறவன் தன்னுடைய குடிவரிசையாகிய சமணமத சருவேசுவர தீட்சைககு உட்பட்ட [7]சனதிகளுக்கெல்லாம் நிருபம் எழுதி அன்பத்தாறு தேச புவனங்களுக்கெல்லாம் அனுப்பிவித்தான். அனுப்பிவித்தபடிககு அவரவரும் அப்படியே மண்களை மலைந்துக கல்லாக அறுத்து அடிகைவைத்துச் சுட்டு அந்தக்கல்லுகளையெடுத்து வீடுகள், மாடமாளிகை, அரண்மனை, ஆஸ்தானங்கள் கட்டுவித்து அவரவரும் [8]எச்சிறமாயிருந்தார்கள். அதுவுமல்லாதபேர்கள் கடல்போலவிருக கின்ற நதிவாசலிலே காத்திருந்தார்கள். இருந்தபின்பு ஆதிசதாசிவ னும் நெற்றிக் கண்திறந்து அக்கினி மழையைப் பொழிவித்தார். அந்த அக்கினிமழை பொழிந்தபோதே கல்வீட்டிலேயிருந்த பேர்கள் கல் வீட்டுக்குள்ளே (பூ)புகுந்துகொண்டார்கள். கல்வீடு இல்லாதபேர்கள் நதிவாசலிலே காத்திருந்தவர்கள் அந்த நதியினுள்ளே இறங்கிக் கொண்டார்கள். அப்போது அந்தச் சாலிவாகன போசனுகிறவனும் அவனுடைய சேனையாகிற சதுரங்கபலமும் காவேரிநதி வாசலிலே

---

[1] ஆற்றே [2] சொப்பன-கனவு [3] வைததிருஙகள [4] கணணைவேணி - கிருஷணைவேணி [5] அவிந்து [6] பத்திரம் [7] ஜன ஆதி [8] எச்சரிக்கை.

காத்திருந்தார்கள். காத்திருந்தபோது அக்கினிமழை பொழிவது கண்டு அந்தக் காவேரி நதியினுள்ளே கடல்போலவிருக்கின்ற [1]கசமாகிய மடுவினுள்ளே (பூ)புகுந்துகொண்டார்[கள்]. அப்போது சதாசிவன் பொழிந்த அக்கினிமழைக்குப் பிழைத்தார்கள். அப்போ(து) சதாசிவன் பார்த்து இந்த அக்கினிமழைக்குப் பிழைத்தார்களென்று அதிக கோபமாகி மயேசுவர முகத்திலே பராபரத்தை நோக்கி அஞ்சுகரமாகிய பஞ்சாட்சர முகாந்தரத்திலே தியானித்து மண்மாரியை இறக்கி மழையாகப் பொழிவித்தார். மண்மாரி பொழிந்தபோது கல்வீட்டிலிருந்தபேரெல்லாம் மண்மூடியுகந்தூர்ந்து போனார்கள். கரையினுள்ளே புகு(பூ)ந்த பேரெல்லாம் மண்கரைந்துபோக அவர்கள் பிழைத்து நீந்தி எழுந்திருந்து கரைகடந்து மேடேறிவந்தார்கள். அந்தச் சாலிவாகன போசனுகிறவனும் அவனுடைய சதுரங்கபலமும் அக்கினிமாரி மண்மாரிக்குப்பிழைத்து சமுத்திரமாகிய காவேரிக்கசம்மடுவில் நீந்தி கரைகண்டு மேடேறிவந்தார்[கள்].

மண்மாரி

வந்தபோது ஆதிசதாசிவன் இந்த [2]மூனையும் தப்பிச் செ[சே]றும் முகத்திலே வேதச்சா[வேதசாத்திர](?)முகாந்திரத்தினாலே புவனத்தைப்பார்த்து ஒருதரம் தியானிக்க வீரசோழவளநாட்டில் வேளாளபாடியில் வீரசோழன் உற்பத்தியாக இரண்டாந்தரம் தியானிக்க இலாடர் வளநாட்டில் நந்தகோபால இடையர்பாடியில்உலாச்சேரன் உற்பத்தியாக மூன்றாம்தரம்தியானிக்கப் பாண்டிவளநாட்டில்வலைய(ர)ர் பாடியில் வச்சிராங்கதப்பாண்டியன் உற்பத்தியாக இம்மூவரையும் உற்பத்தியாகக் கற்பித்தபின்பு அப்போது சதாசிவன் விஷ்ணு முகத்தில் அஷ்டாக்ஷரம் முகாந்தரத்தினாலே தியானி(ச்சு)த்து அவரவர்க்கும் வரமருள் புரிந்து வீரசோழன் கையிலே சாலிவாகனனுக்கு மரணமென்று வாக்கும்கொடுத்தார். சோழன்,சேரன், பாண்டியனிடம் மூவரும் நூற்றெட்டுச் சிவாலயபுவனமும் நம்முடைய கிருபையாலே மும்முடி மன்னராகி மும்முடியும் ஓம்முடியாகி[?] அவரவர் வமிச பாரம்பரிக்கையாகி[3] ஆறுதிருப்பதியும் ஆறுபடைவீடும் மட[4]வாலையும் [5]குருவாலையும் குடிநீதி துரைநீதி குருநீதி ஒழுக்கம்தவறாமல் வாழ்ந்து நம்முடைய கைலாசபதி [6]சேர்வைகள்[சேர்வீர்கள்] என்று வரமருள் புரிந்து வாக்குங் கொடுத்தார்.

அதற்கும தப்பினது

தியானம் சோழ சேர பாண்டியர் பிறப்பு

வரம் அருளல்

இம்மூவரும் ஆதிசதாசிவன்கையிலே வாக்கும் வரமும் அவரவர் வாங்கிக்கொண்டு அவரவருக்குச் சதாசிவன் வகுத்தவிடத்திலே உற்பத்தியாகிப் பிறந்தார்கள்.

---

[1] கசம்-கயம [2] முறை [3] பாரமபரியம் [4] மடவாலயம் [5] குரு ஆலயம [6] சேவைகள்

## [மூவேந்தர்] பிறந்த விவரம்

வீரசோழ வளநாட்டில் வேளாளர்பாடியில் வீரசோழன் பிறந்தான். இலாடவளநாட்டில் நந்தகோபாலபாடியில் [1]உலாச்சேரன் பிறந்தான். பாண்டிவளநாட்டில் மீன் வலையப்பாடியில் வச்சிராங்கதப்பாண்டியன் பிறந்தான். ஆதிசதாசிவன் முன் அமைத்தபடியால் இம்மூவரும் அவரவர் உற்பத்தியாகி பிறந்து வளர்ந்து பிரபலராகி ஆதிசிவன் மகிமையினாலே தங்களிற் தாங்களே சகல வித்தையும் தொழிலுங்கற்று, அதிவீரசூரபராக்கிரமராகி அவரவர் பெ[பே]ரும் பிறப்புங்கண்டு இம்மூவரும் ஒன்றாய்த் திருமுக்கூடல் நகரில் கூடி ஆதிசதாசிவன் முன் அமைத்தபடியினாலே மும்முடியும் ஓம் முடியாகிச் சேர்ந்து திருமுக்கூடல் நதியில் தீர்த்தமாடிச் சிவலிங்க தரிசனை செய்து திருப்பிரசாதம் வாங்கிக்கொண்டு சேரன், சோழன், பாண்டியன், மூவர் [மூன்று] ராசாக்களும் இனிச் சாலிவாகனனைச் சங்கரித்து ராச்சியபரிவாரம் செய்யவேணுமென்று மூவருங்கூடியாலோசித்து, இனி நாம் சாலிவாகனனைச் சங்கரிப்பதற்கு தனமும் பலமும் (பிலமும்) கரை பூர்வீகமும் வேணுமென்று இம்மூவரும் மெத்த விசாரமாகி ஆலோசித்துக்கொண்டு தேசத்திலே புறப்பட்டு தேசதேசமெல்லாஞ் சுற்றி காசி தேசத்திற்குப் போனார்கள். காசி தேசத்துக்குப்போய் காசி நகரத்தைப் பார்க்கும்போது அந்தக் காசிநகரமும் அழிந்து பாழாகி செடிமூடி வனாந்தரமாகி இருள் வனமாகியிருந்தது. அந்தக் காசி கங்கா நதியையும் விசுவலிங்கத்தையும் [2]பூருவீகத்த வடவால விருக்ஷத்தின் விழுதோடிப் படர்ந்து ஆலவனமாக வளர்ந்துகொண்டது. அந்த ஆலவனத்திலே (பூ)புகுந்து இம்மூவரும் [3]சோதிச்சுப் பார்க்கும்போது ஒரு நதியின் கரைகண்டது. அந்த நதியில்[ன்] கரைவழியே[4]வேதிச்சுப் பார்க்கும்போது ஒரு லிங்கக் கண்[ல்] கண்டது. அந்த லிங்கக் கண்ணை[ல்லை]த் தோண்டி வேதிச்சுப் பார்க்கும்போது ஒரு [5]ஆவுடையும் ஆதாரமும் கண்டது. அதன்கீழ் வேதிச்சுப்பார்க்க மற்றொரு ஆவுடையும் ஆதாரமுங்கண்டது. அதின் கீழ் வேதிச்சுப் பார்க்க மற்றொரு ஆவுடையும் ஆதாரமும் பிரளயமான சலமுங்கண்டது. அந்த சலத்தை நீக்கிப்பார்க்க "முன் கிரேதாயுகத்தில் தேவேந்திரமகாராயன் அதிகாரத்தில் பிரம்மப் பிரதிட்டை. இதன்

மூவேந்தர் தோற்றம் விவரம்

வித்தை கற்றது

திருமுக்கூடல் சென்றது

காசி சென்றது

---

[1] உலாச்சேரன்-திருஉலா பாடிய சேரன் [2] பூர்வீக வட ஆல [3] சோதித்து [4] வேதித்து-தோண்டி [5] ஆவுடையார்.

கீழே தொண்ணூற்றாறு ஆவுடையும் ஆதாரமும் உண்டு. இந்த லிங்கமே காசி விசுவலிங்கம். இந்நதியே சிவகங்காநதி. இவ்வாலே வடவால விருக்ஷம். இந்நகரமே காசிமாநகரம். இந்நதியில் முழுகியிருந்த காசிவிசுவலிங்கத்தையும் இவ்வடவால விருக்ஷத்தையும் தெரிசித்தால் பஞ்சபாதகமும் தீராதவல்வினையும் நவதோஷமும் தீரும். கயிலையிலே முளைத்துக் காசியிலே கொடியோடிப் படர்ந்து காஞ்சியிலே பூப்பூத்துக் காய்காய்ச்சு[1] மதுரையிலே முதிரப்பழுத்து அதிமதுரப் பழமாச்சுது. இந்தக் காசித்தலம், காஞ்சித்தலம், மதுரைத்தலம் இந்த முத்தலமும் எத்தலத்துக்கும் மெய்த்ததலம். இந்த முத்த(லு)லத்துக்கும் மெத்த தலம் இக் காஞ்சித்தலம். அந்தக் காஞ்சித் தலத்திலிந்த அன்பத்தாறு தேசபுவனத்தில் யாதாமொடு[ரு]கரை [2]பூருவீகவாள் தெரிய அறியலாமென்று," வடமொழி தேவபாஷையில் விஷ்ணு சிவன் மொழியால் பிருமதேவன் கையெழுத்து என்று....அந்தக் காசி விசுவலிங்கர் [3]மூணுவுடையில் [4]கல்சாகரம் போட்டிருந்தது. போட்டிருந்த [5]சாகரத்தை சேரன் சோழன் பாண்டியன் இம்மூவருங்கூடி வாசித்துப் பார்த்து மனது சந்தோஷப்பட்டுககொண்டு கங்காநதியிலே தீர்த்தமாடி காசி விசுவலிங்கத்தையும் வடவாலையும் தெரிசித்துக் கொண்டு இனி நாம் காஞ்சிக்குப் போகவேண்டுமென்று மூவரும்கூடி யோசித்துக்கொண்டு, காசி ஆலவனம்விட்டு அயோத்தி துவாரகாபுரி நகர் தெரிசனம் செய்து காஞ்சிக்கு வந்தார்கள்.

கல் சாசனம் படித்தது

காஞ்சிநகரத்தைப் பார்க்கும்போது எட்டி வனமாக மூடிவளர்ந்திருந்தது. அந்தக் கம்பைலிங்கத்தையும், கம்பைமாநதியையும் [6]கரிமாரிக் குளத்தையும் கச்சிவரதராயரையும் எட்டி வனமாக மூடிவளர்ந்திருந்தது. அம்மூவர் ராசாக்களும் அவ்வனத்திலே புகுந்து வேதிச்சுப்பார்க்கும்போது ஒரு நதி கண்டது. அந்த நதியின் கரைவழியே வேதிச்சுப் பார்க்கும்போது ஒரு லிங்கக்கண்[ல்] கண்டது. அந்தலிங்கக்கண்ணை[ல்லை]த் தோண்டி வேதிச்சுப் பார்க்கும்போது ஒரு ஆவுடையும் ஆதாரமுங் கண்டது. அதின் கீழே வேதிச்சுப்பார்க்கும்போது மற்றொரு (அ)ஆவுடையும் ஆதாரமுங்கண்டது. அதன் கீழே வேதிச்சுப் பார்க்கும்போது மற்றொரு (அ)ஆவுடையும் ஆதாரமும் பிரளயமான சலமுங்கண்டது. அந்த சலத்தை நீக்கிப்பார்க்கும்போது, அந்த மூணுவுடையில் வடமொழி தெய்வபாஷையில் விஷ்ணு சிவன் மொழியால் பிருமதேவன் கையெழுத்து. இந்த நதி கம்பைமாநதி இந்த லிங்கம் கம்பைலிங்கம். இந்த தலம் காஞ்சித்தலம்.

காஞ்சி சென்றது

காஞ்சிக் கல் சாசனம்

---

[1] காய்த்து [2] பூர்வீகர்கள் [3] மூனறு ஆவுடை [4] கல்சாசனம் [5] சாசனம் [6] கருமாரிக்குளம் • காமாட்சியம்மன கோயிலுககுள உள்ளது.

அதன் மகிமை

இது முத்தலத்துக்கும் மெய்த்தலம். இந்த லிங்கப் பிரதிட்டைமுன் கிரேதாயுகத்திலே தேவேந்திரமகாராயன் அதிகாரத்தில் பிரம்மப்பிரதிட்டை, அதன்கீழ் தொண்ணூற்ருறு பிரம்மப்பிரதிட்டை, ஆகிலும் உள்ளது இப்புவனத்தில் யாவர்க்கும் ஆதிகயிலே அதன்பின்பு காஞ்சித் தலம் பூருவீகமும் இதில் உட்பட்ட அன்பத்தாறு தேசபுவனத்தில் கரை பூருவீகமும் யாதாமொரு பூருவீகவாலு[1] [ள்] சுப்பிரமணியதேவர் அருள்படியால் நந்திகோத்திரம் வீரபாகு தேவவங்கிசம்[2] கைக்கொள்[3] வரில் (லாட்சம்) லட்சம்வலிவீரரில் முன்னேனுகிய கச்சி வீரனென்றும் அந்த கச்சிவீர வங்கிசத்தவராகிய கைக்கொள்வரில் கச்சிவீர காமாட்சிராயன் தன்னுல் தெரியவரும்[?]. இந்தத் தலம் பூருவீகம். இதில் உட்பட்ட அன்பத்தாறு புவனத்தின் பூருவீகமும் மற்றும் எந்த பூருவீகமும் அவரால் தெரியவறியலாமென்று கச்சி ஏகாம்பர் மூணு [மா]வு(சை)டயில் கல்ச்சாகரம்[4] போட்டுப்பின்னும், இந்தக் காஞ்சித் தலத்தைக் கண்ணிற்கண்டால் வினைதீருமென்றும் கம்பைமாநதியில் தீர்த்தமாடி கச்சி ஏகாம்பரரையும் காமாட்சியம்மனையும் தெரிசித்த தனுல் பஞ்சபாதகமும் தீராத வல்வினையும் நவதோஷமும் தீருமென்று கல்ச்சாகரம் போட்டு இருந்தது. அந்தக் கல்ச்சாகரம் போட்டிருந்ததை அம்மூவர் ராசாக்களும் வாசித்துப் பார்த்து தங்களில் தாங்களிலே மனமகிழ்ந்து சந்தோஷப்பட்டுக்கொண்டு கம்பைமாநதியிலுள்ளதீர்த்தமாடி கச்சி ஏகாம்பநாதரையும் தெரிசித்துங்கொண்டு அம்மூவர்ராசாக்களும் இனி நாம் இந்தக் கல்ச்சாகரத்திலுள்ளபடிக்கி இந்தத்தலத்தவன் இந்த வனந்தரத்திலே ஆரென்று அறிவோமென்று மூவருங்கூடி ஆலோசித்துக்கொண்டு ஆனுலுமென்ன இந்த வனத்தைக் கொஞ்சத்தில் வெட்டி (வெளி)வழி பண்ணி வீடுகட்டியிருப்போம். அதின்மேல்பட்டு இவ்விடத்துக்கு வந்தவரை கண்டு விசாரித்து அவர்களைக்கொண்டு இந்தத்தலத்து வரலாறு அறிவோம். இந்தத் தலத்து வரலாற்றையறிந்தபின்பு அவர்களைக்கொண்டு இந்தத்தலத்து பூருவீகம் அறிவோமென்று அம்மூவரும் நே[நிய]மித்துக்கொண்டு அந்த எட்டி வனத்தை வெட்டினூர்கள். வெட்டி வழிபண்ணும்போது

காடு வெட்டினது

அந்த எட்டிவனங்காத்திருக்கும் வீரமாரி என்கிற துர்க்கை பத்திரிவந்து வேட்டையாகவந்தவேடரே நீங்கள் மூவருங்கூடி என்வனத்தை வெட்டி வழிபண்ணலாமோவென்று சொல்லி வெகு கோபமாகி ரணபராக்கிரமத்துடனே சீறி சினந்துவந்து இவர்கள் முன்னே நின்றது. நின்றபோதே இம்மூவரும் மெத்தப்பயந்து வெகு ஆச்சரி

வீரமாரித் துர்க்கை தோன்றினது

---

1 பால 2 வம்சம் 3 கைக்கோளர் 4 கல் சாசனம்.

யப்பட்டுக்கொண்டு தங்களின் முன்னே நிற்கின்ற ரணவீரதுர்க்கையை ஆரென்று விசாரிப்பா[த்தா]ர்கள். விசாரித்தவுடனே அவர்கள் எதிர்நிற்கின்ற துர்க்கையும் என்பேர் உருமாரியென்றும் உதிரமாரியென்றும் ரணமாரியென்றும் கருமாரியென்றும் என் பேர். எனக்கு கிரேதா திரேதா துவாபர கலியுக ஆக இந்தச் சதுர்யுகத்துக்கும் இந்தக் காஞ்சித்தலமே எனக்குச் சென்மக் காணியாட்சியாக நான் காத்திருந்த வனத்தை எண்ணுமல் வேட்டைவந்து வேடர்வெட்டி வழி பண்ணலாமோவென்று நான் சீறி சினந்து வந்தேன். நீங்கள் என் வனத்தைவெட்டி என்னையும் எண்ணுமல் வழிபண்ணின பழிக்கு உங்கள் மூவரையும் பலிகொள்வேன் என்று சொல்லிற்று.

துர்க்கை சொன்னது

அம்மாரி சொன்னபோதே இம்மூவரும் மெத்தப்பயந்து வெகு ஆச்சரியப்பட்டுக்கொண்டு இருக்கின்ற வேளையில் அந்த எட்டி வனத்தில் ஒரு மூலைமுடக்கில் ஒரு ஊர்போலே கட்டிக்கொண்டு அதில் பலகுடியுமிருப்பார்கள். அவ்வூரிலிருப்பான் கச்சிவீரனென்கிறவன். அவன் அனவரதகாலமும் கச்சி ஏகாம்பரருக்கு கம்பைநதியில் மூழ்கிவந்து அந்த கம்பா தீர்த்தத்தை கச்சி ஏகம்பலிங்கத்தின் சிரசிலே சொரிந்து அந்த எட்டித் தழையைப் பொரி[பறி]த்து வில்வபத்திரமாகச் சாத்தி கையைக் கட்டிக்கொண்டு கச்சி ஏகாம்பரர் இந்தச் சாலிவாகனனுகிற ச(வு)மண ராசன் தன்னுள்போய் தர்ம நீதியான நாளும் தர்மகுணமான துரையும் என்றைக்கு வருவார்? இப்புவனத்துக்கு இந்த இருளும் என்றைக்கு நீங்கும். இந்த ஆலயம் என்றைக்கு விளங்கும். இந்த வனம் என்றைக்கு நக(ரு)ராகும். என் தபசு என்றைக்கு உனக்கு அரங்கேறும். நீ என்றைக்கு என்னை முகம்பார்த்து அடியேன்முதற்கொண்டு அடியேன் வமிசபாரம்பரிக்கையாய் உனதுடைய கிருபையாலே அடியே(ன்) வமிசத்தவர் இப்புவனத்தில் என்றைக்குப் பிரபலரு(ரா)க வாழ்வாரென்று, கச்சிவீரனென்கிறவன் கச்சியேகம்பரை அனவரதகாலமும் இந்தப்படி அர்ச்சனைசெய்துகொண்டு வருவான்.

கச்சி வீரன்

அந்தப்படிநடந்து வருகின்ற நாளையில் அன்னுளில் கச்சி ஏகம்பருக்கு பூசை நைவேத்தியம் செய்யவேண்டுமென்று கச்சி வீரனுகிறவன் படிக்கூடையும் எடுத்துக்கொண்டு வீடுவிட்டுப் புறப்பட்டு கச்சி ஏகாம்பரரிருக்கின்ற எட்டிவனத்துக்குவந்தான். வந்தபோது எட்டிவனத்தை வெட்டி சுத்தவழிபண்ணியிருக்குது. இஃதேது புதுமை யாச்சரியமென்று பார்க்கும்போது லிங்கக்கண்ணை[ல்லை]த் தோண்டி மூணுவுடையும் சலமும் தெரியவிட்டிருக்குது. இதேது புதுமையென்று கச்சிவீரனுகிறவன் பார்த்து மெத்த ஆச்சரியப்பட்டுக்கொண்டு கொண்டுவந்தபடி கூடையை அந்த ஏகம்பலிங்கத்திடத்திலே இறக்கிவைத்துப்போட்டு இதார்(ரு) இப்படி

வருகை

மூவருடன் சந்திப்பு

செய்தாரென்று நாலு திக்கும் ஓடிப்பார்த்தான். பார்க்கும்போது அந்த எட்டிவனத்தில் ஒரு எட்டிவனத்து நிழலில் அம்மூவருமிருந்தார்கள். அந்த ரணதுர்க்கையும் அவர்களுடனே தர்க்கம் செய்துகொண்டு நின்றது. அப்படியிருந்தபேரை கச்சிவீரனுகிறவன் . பார்த்து இவர்கள் துரைமக்கள்போலேயிருக்குதென்று தன்மனதிலே கண்டுகொண்டு கண்டவுடனே இவ்வனத்தில் இம்மூவரும் இந்த பெண்பிள்ளையும் இருக்க வந்தகாரியமேது ? என்று சொல்ல அறியவேணுமென்று இவனும் அவர்களிருக்கின்ற எட்டிமரத்திற்குப் போனு(ன்)ர் இவன் போ(கி)றபோது அந்தமாரிக்கும் ஒன்றுக்கொன்று தர்க்கமாயிருக்கிறது. அப்படி தர்க்கமாயிருக்கின்ற வேளையில் இவனும் அவர்களிருக்கின்ற மரத்தடிவந்தான். வந்தபின்பு அந்தக்கச்சிவீரனுகிறவன் அந்த [1]மூணுபேரையும் பார்த்து நீங்களிந்த வனத்துக்கு வேட்டைமார்க்கமாக வந்தால் மிருகங்களை எய்து கொன்று போகவேணுமே அல்லாதே வனத்தை வெட்டி வழிபண்ணி அழிக்கவும் லிங்கக்கண்ணைத் தோண்டி சலங்காண [2]சோதிச்சு வழிபண்ணிப் போடவும் இத்தனை[ய]நியாயம் பண்ணலாமோவென்று இவனும்சொல்ல அவர்களும் இவன் சொல்லுகிறதைப்பார்த்து இவனையும் பார்த்தால் [3]நம்மளுடனே தர்க்கம் செய்து நிற்கின்ற மாரிக்குத் துணைபோல இருக்குது. மனிதன்போலேயிருக்கவில்லையென்று அம்மூவருங்கூடி ஆலோசித்துக்கொண்டு ஆனாலுமென்ன [4]நம்மளைத் தேடிவந்தவனை ஆரென்று அறியவேணுமென்று அந்த மூவரும் அந்தக்கச்சிவீரனுகிறவனைப் பார்த்து, நீ இந்த வனத்தில்

நால்வருள் பேச்சு

வந்தவன் எங்களுடனே த(ர்)க்கஞ்செய்து நிற்கின்ற மாரிக்குத் துணையாக வந்தவனே அல்லவென்று மனிதனுக, எங்களுக்கு உதவியாகவந்தவனே வென்று கேட்டார்கள். அவர்கள் அப்படி கேட்டபோது இவனும் அவர்களைப்பார்த்து தன்மனதிலே ஆலோசித்துக்கொண்டு இவர்கள் மூவரும் வந்திருக்கிருர்கள். பிரம்மா விஷ்ணு ருத்திரர் மும்மூர்த்திகள் உண்டென்று சொல்லுவார்கள். அந்த மும்மூர்த்திகள்தானே, அதுவுமல்லாமல், சாலிவாக சங்கா(ம்மா)ரம் செய்ய வீரசோழ வளநாட்டில் வேளாளபாடியில் வீரசோழன் பிறந்திருக்கிருன் என்று சொல்லிக்கொண்டார்கள். அவனுக்குத்துணையாக லாடவளநாட்டில் நந்தகோபாலவங்கிச இடையபாடை(டி)யில் உலாச்சேரன் பிறந்திருக்கிருன் என்றும் பாண்டிவளநாட்டில் மீன்வலையர் பாடியில் வச்சிராங்க[த]பாண்டியன் பிறந்திருக்கிருனென்றும் இப்படி மூவர் ராசாக்களும் சாலிவாகனபோசன் சங்காரத்துக்குப் பிறந்திருக்

1 மூன்று 2 சோதித்து 3 நம்மவருடனே 4 நம்மை

கிருளெ(ர)ன்று உலகமெல்லாஞ் சொல்லிக்கொண்டார்கள். ஆனாலுமென்ன இவர்களைப்பார்த்தால் அப்படிக்கொத்த சத்தியவதனமான துரைமக்கள்போலே இருக்(கு)கிறது. இவர்கள் ஏதேது காரியமாய் லிங்கக்கண்ணையுந் தோண்டிச் சோதித்துப்பார்த்து எட்டிவனத்தையும்வெட்டி வழியாக்கினார்கள் தெரியாது. ஆனாலும் மெள்ள [1]நாமிள் இவர்களுக்கு வசங்கொண்டு இவர்களைக்கொண்டே இவ்விடத்தில் காரியம் முடிக்கவேணுமென்று ஆலோசித்துக்கொண்டு கச்சிவீரனாகிறவன் அம்மூவரையும் பார்த்து ஆரென்று கேட்டான் கேட்டவுடனே அவர்களும் இவனைப்பார்த்து இவனும் இந்தத்தலத்தவனை போலே இருக்குது. இவனாலே இந்தத்தலபூருவமறியலாம் என்று யோசித்துக்கொண்டு நாங்களும் சோழன் சேரன் பாண்டியனென்றும் அம்மூவரும் சொன்னார்[கள்]. அவர்கள் சொன்னவுடனே நானுமிந்தத்தலத்தவன்தான். கச்சிவீரனென்கிறவன் நானேயென்று பேருஞ்சொன்னான். சொன்னபின்பு அம்மூவரும் ஆனாலுனக்கு இந்தத்தலம் பூருவம் தெரியுமோ வென்று கேட்டார்கள். இந்தத்தல பூருவீகமும் தெரியும் உங்களுக்குச் சொல்லலாம். உங்களாலிந்தத் தலத்தில் சில காரியமாகுமென்றால் சொல்லலாம். இல்லாதிருந்தால் சொல்லிப் [2]பிரஸித்தமென்னவென்றான் கச்சிவீரனாகிறவன். அந்தக் கச்சிவீரனாகிறவன் சொல்ல அந்த மூவரும் பார்த்து எங்களால் சில காரியமாகவெண்ணித்தானே நாங்களிந்த வனத்துக்கு வந்து வனத்தையும் சோதிச்சுப்பார்க்கும்போது ஒரு நதியின் கரைகண்டு அந்த நதி(யும்)[யின்]கரைவழியே சோதிச்சுப் பார்க்கும்போது ஒரு லிங்கக் கண்கண்டது. அந்த லிங்கக்கண்ணையுந்தோண்டி சோதிச்சுப்பார்க்கும்போது மூணு ஆவுடையும் ஆதாரமும் பிரளயமான சலமுங்கண்டு அந்தசலத்தை நீக்கிப்பார்க்கும்போது மூணு(லதார)[வதான] ஆவுடையில் [3]கல்சாகரம் போட்டிருந்தது. அதை வாசித்துப்பார்க்கும்போது முன் கிரேதாயுகத்தில் தேவேந்திரமகாராயன் அதிகாரநாளில் வடமொழி தேவபாஷையில் விஷ்ணுசிவன் மொழியால் பிருமதேவன் கையெழுத்து, பிருமப்பிரதிஷ்டை, இந்தத்தலத்தவன் சுப்பிரமணிய தேவர் அருளப்படியால், நந்திகோத்திரம், வீரவாகுதேவர் (வங்கிஷம்) வமிசம் கைக்கொள்வரில் லட்சம் தளவீரர்க்கு முன்னேனாகியவன் பேர் கச்சிவீரன். அந்தக்கச்சிவீரன் தன்னால் இந்தக்காஞ்சித்தலபூருவீகமும் இதனுட்பட்ட அன்பத்தாறு தேசபுவன பூருவீகமும்அறியலாமென்று கச்சிஏகாம்பர ஆவுடையில் கல்சாகரம் போட்டிருந்தது. போட்டிருந்த கல்சாகரத்தை நாங்கள் [4]மூணுபேரும் வாசித்துப்பார்த்துக்கொண்டு ஆனால் அவனை இந்த வனாந்திரத்தில் எப்படியறியவேணுமென்று அந்த வனத்தை வெட்டி வழிபண்ணி ஊர்[5]....போம். அதின்

---

[1] நாம் [2] பிரயோசனம் [3] கல்சாசனம் [4] மூன்று [5] எடுப்போம்

மேல்பட்டு நானென்று ஒருவன் . வந்தவனைக்கொண்டு இந்தத்தல பூருவீகம் அறியலாமென்று இந்த வனத்தை வெட்டி வழிபண்ணி னோம். வெட்டிவழிபண்ணவே இந்த மாரி என்கிறவள் வந்து என் வனத்தையழிக்கலாமோவென்று சீறிச்சினந்து எங்களை பலி கொள்வேனென்று தர்க்கம் செய்தாள். அவள் தர்க்கம் செய்த வேளையில் நீயும் வந்தாய். வந்தபின்பு நானே இத்தலத்தவ னென்று சொல்லவந்தாய். சொன்னது சரியே. நீயுமிந்தமாதிரிக்கு உதாரணைசொல்லி அமைத்தால் நாங்களும் உன்னை இத்தலத்தவ னென்று காண்போமென்று அம்மூவரும் சொன்னார்[கள்]. அம்மூவ ருஞ்சொல்லக் கச்சிவீரனும் அதே[1]மெரைக்குச் சம்மதித்துக்கொண்டு அந்தமாரிக்கு இவனும் உதாரணை சொல்லவந்தான். அந்தக்கச்சி வீரனென்கிறவன் ரணவீரமாரியைப்பார்த்து நானிந்தத்தலத்தவனென்று முன்னேநிற்கும்போது நீயும் இந்தத் தலத்தவளென்று எனக்கு முன்னே இவர்களுடனே சொல்லித்தர்க்கமிட்டாய் அதுவெல்லாஞ் சரி. எனக்குமுனக்கும் சதுர்யுகத்திற்கும் இந்தக்காஞ்சித்தலமாட்சி யால் சென்மக்காணியென்றும் சிவசுப்பிரமணிய(ர்)தேவர் நமக்கு வரங்கொடுத்து இந்தத்தலத்தில் என்னையுமுன்னையும் வைத்[த]து இப் புவனத்தில் பூமிஆகாசமும் சந்திராதித்தரும் கச்சிஏகம்பரும் காமாட்சி யும் நீயுமறிவாய். அதுசரியே. இனிமேல் எனக்குமுனக்கு மெத்தகவலு மில்லாமல் இனிமேலிந்தமூவர்கள்தடம் போகாதேயென்று சொன் னான் கச்சிவீரனென்கிறவன். சொல்ல கருமாரியும் சினந்து வெகுகோப மாகி நான் இந்த வனாந்திரத்தில் சதுர்யுகந்தொட்டு அரிய தவசுகளை செய்துகொண்டு காத்திருக்கிறதலத்தையும் வனத்தையும் வெட்டி வழி பண்ணிஅழித்தபேரை பலிகொள்வேனென்று ரணவீரபராக்கிரமத்து டனேநான்வந்திருக்க அதிலே நீ வந்து என்முன்னே நின்றுகொண்டு நானே இந்தத் தலத்தவனென்று சொல்லவந்தாயே. ஆனாலும் நான் கேட்டது நீயும் கொடுப்பாயோவென்று கேட்டது. இப்படி மாரி [2]கேழ்க்க அப்படியே நல்லதென்று இவனும் சம்மதித்துக் கொண்டு கச்சிவீரனென்கி(ர)றவன் கருமாரியைப்பார்த்து உனக்குவேணு மென்னதெல்லாம் நானே தருகிறேன் நீயும் என்சொற்கேட்டு எனக் குள்ளடங்கி இம்மூவர்தடம் போகாதேயென்று சொன்னான். கச்சி வீரன் சொல்ல கருமாரி சொல்லுவாள்.— என் வனம் வெட்டினபழிக்கு ஆயிரம்பேரை பலிகேட்டது. நீ ஆயி ரம் பேரையல்லவோ கேட்டாய் நான் உனக்கு ஆயிரத் தெட்டுபேரை பலியுங்கொடுத்து என்வமிச [3]பாரம்பரிக் கையாய் வருடந்தோறும் உன்னையும் என் குலவதியாய்க்கொண்டாடி நடத்திவரக்கட்டுச் செய்து[4]தாரேன்.

கருமாரி பலிகேட்டது

[1] மெரை [2] கேக்க [3] பாரம்பரியமாய [4] தருகிறேனே

அதுவுமல்லாமலிப் புவனத்திலுள்ள பட்டமுடிமன்ன(ரா)ய் துரைமக்கள் ராசசங்காரம் செய்யும்போது, அன்னாளில் உனக்கு ரணவீரமாரியென்று பேருங்கண்டு ரணகள பலியும் அந்ததுரைமக்களைக்கொண்டு நானே கொடுப்பித்து [1]வாரேன் என்று கச்சிவீரனாகிறவன் அந்த கருமாரிக்கு அந்த கச்சி காமாட்சியைக்கூறி அபயஹஸ்தம் கொடுத்தான். கச்சிவீரன் அபயஹஸ்தம் கொடுக்க கருமாரியும் வாங்கி மனம்பொறுத்துக் கொண்டபின்பு, கச்சிவீரனாகிறவன் அந்தக் கருமாரியைப் பார்த்து நீ அன்னாளும் இன்னாளும் எங்கள் (வங்கிஷ)வமிச குலதேவதையல்லவோ உள்ளது. அது சரியே. நீயும் இனிமேல் எனக்கு இந்தக்காஞ்சித்தலம் பூருவீகக்கரை தெரியப்படுத்தித்தரவேணுமென்று கச்சிவீரன் கேட்டான்.

கச்சிவீரன் ஒப்புக்கொண்டது

கச்சிவீரன் கேட்டபடிக்கு கருமாரியும் உள்மனது சந்தோஷப்பட்டுக்கொண்டு கச்சிவீரனாகிறவனை வரவ(ழி)ழைத்துக்கொண்டு தன் கருமாரி குளத்திற்குக் கூட்டிக்கொண்டுபோய், முன் துவாபரயுகத்தில் விக்ரமார்க்கன் அதிகாரத்திற்குபதில் வந்து சாலிவாகனனாகிறவன் விக்கிரமார்க்கனைச் ச(ங்)ம்மாரம் செய்கிறநாளையில் ஐம்பத்தாறுதேச புவனத்தில் உட்பட்ட சனாதிகளெல்லாம் அந்தப்படைக்குத் திரண்டு கலைந்து ஓடும்போது அவரவர்கள் ஆடையாபரண [2]சொடுப்பு [3]முஸ்தீதுகளெல்லாம் காடுவனாந்திரங்களிலே போட்டுவிட்டு அரிய திருமலைச் சார்வு அசோகவனங்களுக்கு ஓடிப்போனார்கள். அன்னாளில் இந்தக் காஞ்சித்தலத்திலுட்பட்ட சனாதிகளெல்லாம் கலைந்து மாண்டோடும்போது அன்னாளில் இந்தக் கச்சிவீரன் வமிசத்தவராக முன்னோர் சோடுமுஸ்தேதுகளெல்லாம் ஒரு தாம்பிரப்பெட்டகத்தில் போட்டு மூடி அந்தக்கருமாரிக்குளத்தில் ஒரு ஏரியில் தவசுக்குக் குகை உண்டுசெய்து அதற்குக் கதவுநிலவு பூட்டி அதனுள்ளே அந்தப் பெட்டகத்தை வைத்து அந்தத் தவசுக் குகையைக் கதவைச் சாத்தித்தாள்பூட்டி [4]முத்திரிச்சு மண்ணரைந்து அதன்மேல் சீவுக்கல்கட்டி [5]தீந்து அவர்களும் ஓடிப்போனார்கள். அப்படியிருந்த [6]தாவு நிலையை அந்தக்கருமாரியென்பவள் இந்தக்கச்சிவீரனென்கிறவனுக்குக் காண்பித்தாள். காண்பித்தபின்பு அந்தக்கருமாரிக்குளத்தில் மூழ்கி வந்து அந்தகச்சி ஏகாம்பரகாமாட்சி[யை]யும் அந்தக்கருமாரி(யும்) அம்மனையும் அருச்சித்துக்கொண்டு அந்தக்கச்சிவீரன் என்கிறவன் அந்தக் கருமாரி காண்பித்த கருமாரிக் குளத்தேரி தவசுக் குகைக்கதவைத் தாள்திறந்து கதவை வாங்கி குகையினுள்ளே புகுந்து ஆடையாபரணச்

கருமாரிக் குளத்தில் பெட்டகம் காட்டினது

---

1 வருகிறேன் 2 சோடிப்பு-(இந்தி) 3 முஸ்திபு - (இந்தி) 4 முத்திரித்து 5 தீர்ந்து 6 தாவு - இடம் (தெலுங்கு)

*பெட்டகம் எடுத்தது*

[1]சோடு(ச) முஸ்திபு போட்டுமூடி [2]முத்திரிச்சுயிருக்கின்ற பெட்டகத்தையும் எடுத்துக்கொண்டு குகைவிட்டு வெளியேவந்து வந்தபின்பு பண்டுபோலே குகையைக் கதவுசாத்தி மூடிமுத்திரிச்சு மண்ணரைந்து அதுமேலே சீவுகலக்கட்டி தீந்துபோட்டு இப்புறம் வந்தான். வந்தபின்பு அந்தக் கச்சிவீரனுகிறவன் கருமாரி(ப்) பாதத்தில் பெட்டகத்தைவைத்து சரணம் செய்தான். சரணம்செய்த கச்சிவீரனை கருமாரி சந்தோஷப்பட்டுக்கொண்டு அவன் எடுத்துவந்த பெட்டகத்தை அவனையே எடுத்துக்கொள்ளச்சொன்னுள். சொன்னபின்பு கருமாரியென்பவள் அந்தக்கச்சிவீரனை வரவழைத்துங்கொண்டு கச்சிஏகாம்பர காமாட்சியிருக்கின்ற [3]தாவுக்கு வந்தாள். வந்தபின்பு கருமாரியென்பவள் கச்சிவீரனுக்குக் காமாட்சிப்பாதத்தில் முன் கிரேதாயுகத்தில் தேவேந்திரன் அதிகாரஞ்செய்கின்றநாளில் தேவேந்திரமகாராசன் உண்டுசெய்த பாதாளகுகை தேவேந்திரன் தபசு இருக்கின்ற தாவு தலமும் இந்தக்கச்சிவீரனுக்கு அந்தக்கருமாரியென்பவள் அடையாள நிலைகாண்பித்தாள். காண்பித்தபின்பு கருமாரியென்பவள் கச்சி வீரன் கையில் அனுப்பிவிச்சுக்கொண்டுதான் எப்போதுமிருக்கின்ற எட்டிவனத்து[த்] தன்னுடைய தாவுக்குத் தன்தலத்திற்குப் போனுள். கருமாரிபோனபின்பு கச்சிவீரனுகிறவன் கருமாரிக்குளத்தேரி தபசுக்குகையில் எடுத்துவந்த தாமிரப்பெட்டகத்தையும் எடுத்துக்கொண்டு சேரர் சோழன், பாண்டியன் இம்மூவர்ராசாக்களும் இருக்கின்ற எட்டிமர நிழலுகசு வந்தான். வந்தபின்பு கொண்டுவந்த பெட்டகத்தையும் இறக்கிவைத்துக் கச்சிவீரனுகிறவனும் மரத்தடி நிழலில் வந்தான். வந்தபின்பு கச்சிவீரனும் அம் மூவரும் இந்நால்வருமாகப் பெட்டகத்தையும் வைத்துக்கொண்டு எட்டிமரத்தடி நிழலிலிருக்கின்ற வேளையில் கச்சி ஏகம்பரும் [4]மல்லிகார்ச்சனை [5]அல்லமாப்பிரபுவுடைய ஆசவ தீட்சை ஆசான் என்கிற [6]சுவரூபங்கொண்டு அவரும் இவர்கள் நாலு பேரும் இருக்கின்ற எட்டிமரத்தடி நிழலுக்கு வந்தார்(ன்). வந்தவரை இந்நால்வரும் வரவழைத்து இருத்திக்கொண்டு இருந்தபின்பு இவர்கள் நால்வரும் அவரை ஊரும்பேரும் விசாரித்தார்கள். இவர்கள் விசாரித்தபடிக்கு அவரும் தம்மூரும்பேரும் தாமிருப்பதும் மல்லிகார்ச்சுனை பேர் அல்லமாப்பிரபுவுடைய [7]சைவாசானென்று தம்பேரும் சொன்னுர். சொன்ன பின்பு இந்நால்வரும் மெத்த சந்தோஷப்பட்டுக்

*கருமாரி சென்றது*

*மூவரிடம் பெட்டகம் காட்டினது*

*சைவாசாரியர் வருகை*

---

[1] சோடிபபு-முஸதிபு (இநதி) [2] முததிரிதது [3] தாவு-இட்ம (தெலுங்கு) [4] மலலிகாச்சுனம் - ஸ்ரீசைலம் [5] அல்லமாபபிரபு-வீரசைவகுரு (பிரபுலிங்கலீலை காண்க) [6] சொருபம [7] சிவாசசாரியாா.

கொண்டு இருந்தார்கள். இருந்தபின்பு சைவாசாரியர் நால்வரையும் பார்த்து உங்கள் ஊரும் பேரும் எனக்கு நீங்கள் உரைக்கவேணு மென்று அவரும் கேட்டார். அவர்கேட்டபடிக்கு அந்நால்வருமிருந்து அவர்கள் ஊரும்பேரும் சொன்னவிபரம். ஒருவன் வீரசோழ வள நாட்டு வீரசோழனென்றான். மற்றொருவன் லாடவளநாட்டு உலாச் சேரனென்றான். மற்றொருவன் பாண்டிவளநாட்டு வச்சிராங்கத பாண்டியனென்றான். அம்மூவருமவரவர் ஊரும்பேரும் சொன்ன பின்பு கச்சிவீரனென்கிறவன் லட்சம்தள வீரருக்கு முன்னேன் வமி சத்தவனாகிய தொண்டைவளநாட்டுக் கச்சிவீரனென்றான். (என்பேர்) ஆக இவர்கள் நால்வரும் அவரவர் ஊரும்பேரும் சொன்னபின்பு குரு சைவாசாரியர் மனது சந்தோஷப்பட்டுக்கொண்டு அம்மூவரையும் எட்டிமரத்தடி நிழலில் இருத்திப்போட்டுக் கச்சிவீரனென்கிறவனை வரவழைத்துக்கொண்டு கம்பைமாநதிக்குக கூட்டிப்போனார். குரு சைவாசாரியரும் கச்சிவீரனும் கம்பைமாநதிக்குப்போன பின்பு குரு சைவாசாரியர் கச்சிவீரனைக் கம்பைமா நதியில் குளித்துவரச்சொல்லி கம்பையாற்றங்கரையில் மல்லிகார்ச்சுனை அல்லமாப்பிரபுஉடைய குரு கச்சிவீரனென்கிறவ னுக்கு குரு உபதேசம் வைத்தார். குரு சைவாசாரியரிடத்தில் குருப தேசமும் குருப்ரசாதமும் வாங்கிக்கொண்டு குருபாதசரணமும் வாங் கிக்கொண்டான் கச்சிவீரன். குரு சைவாச்சாரியரிடத்தில் கச்சிவீர னாகிறவன் குருபதேசம் வாங்கிக்கொண்டு இருந்தபின்பு குரு சைவா சாரியாளாகிறவர் கச்சிவீரனென்கிறவனைப்பார்த்து, உனக்குச் சம்சா ரமும் மக்களும் மருமக்களும் உன் [1]மாரியபந்துஜனங்களும் உண்டோ வென்று கேட்டார். எல்லாம் உண்டென்று சொன்னான். உண்டானால் அவர்களை என்னிடத்துக்கு அழைத்துவாவென்று அனுப்பிவைத்தார். அனுப்பிவைத்தபடி கச்சிவீரனென்கிறவனும் தானிருந்த ஊருக்குப் போய் தன்மனையாளையும் தன் மக்கள் மருமக்களையும் வரவழைத்துக் கொண்டு கம்பையாற்றங்கரையில் இருக்கின்ற குருசைவாசாரியரிடத் திற்கு வந்தான். வந்தபின்பு கச்சிவீரன்மனையாளுடனே மக்கள் மருமக்களும் குரு சைவாசாரியர் பாதத்தில் சரணம் செய்துகொண் டார்[கள்]. சரணம் செய்தவரையெல்லாம் குருசைவாசாரியர் பார்த்து அவர்களை கம்பைமாநதியில் குளித்துவரச்சொல்லி குரு பதேசம் வைத்தார். வைத்த சனவிவரம். கச்சிவீரன் மனையாள் பழமுதிர்சோலையங்கிரியம்மாளுக்கும், கச்சி வீரன் மகன் கச்சிமுத்துவீரப்பனுக்கும், முத்துவீரப்பன் மனையாள் வையாபுரியம்மாளுக்கும், கச்சிவீரன் மகன் இளையவன் கச்சிக் கச்சாலையப்பனுக்கு(ம்) அவன்

குரு உபதேசம்

கச்சிவீரன் குடும்பம் குரு உபதேசம் பெறுதல்

1 மாரிபந்து

மனையாள் பழனுபுரியம்மாளுக்கும் அந்த ஐந்துபேருக்கும் குருசைவாச்சா[ரிய]ர் குருபதேசமும் வைத்துக் குருப்ரசாதமும் கொடுத்தார். கொடுத்தபடி அவர்களும் வாங்கிக்கொண்டு குருபாதசரணம் செய்துகொண்டார்[கள்]. செய்துகொண்டபிறகு குரு சைவாச்சா(ரிய)ர் கச்சிவீரனையழைத்து அவ்வனத்தில் பச்சைக் குடிசைக்கூடம் கட்டுவித்து அதனுள்ளே தாமிருந்துகொண்டு கச்சிவீரனையும் அவன் மனையாள் பழமுதிர்சோலையங்கிரி அம்மாளையும் அழைத்துக் கொண்டு அந்தப் பெட்டகத்தையெடுத்துவரச்சொல்லி

பெட்டகச் சோதனை

அந்த முத்திரையை உடைத்துப் பெட்டகத்தைத் தாழ்(ள்)திறந்து கதவை வாங்கச்சொன்னார். அப்படி வாங்கும்படி அதிலிருந்(து)[த] ஆடையாபரண சோடு

பெட்டகச் சாமான் விவரம்

முஸ்தீப்புக்கு விபரம். அதனுள் [1]ஆதோரப்பூசப்பெட்டியும்வீரக்கட்டாரி முனைப்பூசையலகும் வீரவாளும்[2]பாதாழ ..........வீகமுத்திரிக்கோலும் பாதாழ....வசுசோதிக்கும் பஞ்சமுத்திரிக்கையும் கைக்கடப்பாரைக்கூடமும் பதினையிரம்பொன் சந்தனமகராயன் கம்பட்டமுமிருந்தது. இருந்தபின்பு அதெல்லாம் எடுத்து [3]வழியை வைத்து அந்தப்பூசைப் பெட்டியைத் தாள்திறந்துபார்க்க அதிலிருந்த [4]முஸ்தேதிக்கு விபரம். விக்கினேசுரர், சுப்பிரமணியர், வள்ளியம்மன், தெய்வயானை, சிதம்பரேசுவரர், சிவகாமியம்மன் ஆக இந்த ஆறு விக்கிரமும் சிவலிங்கம் ஆலவாய்த் திருவெண்ணீற்றுப்பழம் ஏகமுக உத்திராட்சமும் வலம்புரிச்சங்கு கணுவில்லாப்பிரம்பு சிவமாலை சமயசரம் (சரச்)சமையமுத்திரை மோதிரமும் இதுமுதலாகியதெல்லாம் அந்த[5] ஆரு[ரா]தப் பூசைப்பெட்டியிலேஇருந்தது. இருந்தபடிக்கு அதெல்லாம் எடுத்து வெளி(யை)[யே] வைத்து குருசைவாச்சா[ரிய]ர் கச்சிவீரன் கைக்கொண்டு சுத்தபுண்ணியாங்கம் பண்ணுவித்து குருசைவாச்சார் ஆருதாரசிவபூசை முடித்து சீவகளை வருத்தி அனுக்கிரகம் உண்டுசெய்து கச்சிவீரன்கையில் கொடுத்தார். கச்சிவீரன் குருபாத சரணம் செய்து வாங்கிக்கொண்டு ஒருதாவில் வைத்தபின்பு குருசைவாச்சார் கச்சிவீரன் மனையாள் சோலையங்கிரியம்மாளை அந்த ஆருதாரப் பூசைப்பெட்டிக்கு நிறுத்தி குருசைவாச்சார் கச்சிவீரன் கைக்கொண்டு தேவிக்கு ஆராதனை அந்தப்பூசைப்பெட்டிக்கும் அவன் மனையாளுக்குமாக முடிக்கச்சொன்னார். அவனுமந்தப்படியே கம்பைமாநதி தீர்த்தம் பிடி [6]சொம்பில் [7]ரொப்பிவந்து கும்பக்கலசம்தாபித்து, அந்தக் கலசத்தை அந்த ஆருதாரப்பூசைப்பெட்டி எதிர்வைத்து எதிர்வைத்த கும்பகலசத்துக்கு மேல் வீரக்கட்டாரிமுனை பூசை, அலகு நிறுத்தி வீரக்கட்டாரி முனைபூசை அலகு எதிராக அவன் மனையாள் பழமுதிர் சோலையங்கிரியம்மாளை நிறுத்தி நிறுத்தின

[1] ஆதாரப்பூசைப்பெட்டி [2] பாதாள பூர்வீக [3] வெளியே [4] முஸ்தீபு [5] ஆராதனை [6] செம்பு [7] நிரப்பி

பின்பு குரு சைவார்ச்சார் கச்சிவீரன்கைக் கொண்டு வீரக்கட்டாரி மூனை பூசையலகுக்கும் அவன் மனையாள் சோலையங்கிரியம்மாளுக்கும் தேவி ஆறுதனையும் ஆறுதார பூசையும் முடிக்கச்சொன்னார். முடித்த பின்பு தேவி ஆராதனையும் ஆறுதார பூசையும் கச்சிவீரனுக்கு குரு சைவார்ச்சாரியார் கைமெய் காண்பிக்க கச்சிவீரனுக்கும் கைமெய் வந்த பின்பு குருசைவார்ச்சார் கச்சி வீரன் கைக்கொண்டு கச்சிவீரன் மகன் கச்சிமுத்து வீரப்பன் மனையாள் வையாபுரியம்மாளுக்கும் இந்தப் படிகை மெய்காண்பித்து ஆறுதாரபூசைப் பெட்டியும் ஆறுதார பூசை முஸ்தீதையும் குருசைவார்ச்சார் கச்சிவீரன் மகன் கச்சிமுத்து வீரப்பன் வசம் கச்சிவீரனை ஒப்புவிக்கச் சொன்னார். குரு சைவசார் சொன்னபடி கச்சிவீரன் தன் மகன் மூத்தவன் முத்துவீரப்பனையும் முத்துவீரப்பன் மனையாள் வையாபுரியம்மாளையும் தாமிருக்கிற பச்சைக்[1]குடிசு கூடத்திற்குள் அழைத்து முன் நடந்தபடியாய் கச்சி வீரனுகிறவன் ஆறுதாரபூசையும் தேவிக்கு ஆறு(தா)தனைப் பூசை செய்து கச்சிவீரனுகிறவன் தன்மகனுக்கும், மருமகளுக்கும் குரு சைவார்ச்சார் சொன்னபடியாய் கைமெய்க்காண்பித்துக் கொடுத்து ஆறுதாரப் பூசைப்[2]பொட்டியும் தேவி ஆறுதனை பூசைமுஸ்தீதையும் கொடுத்தான். கொடுத்தபடி கச்சிமுத்து வீரப்பனும் தாயாகிய பழமூதிர் சோலையங்கிரியம்மனையும் தகப்பனுகிற கச்சிவீரனென்கிறவனையும் குருவாகிய மல்லிகார்ச்சுனை அல்லமாப் பிரபுவுடைய குரு சைவாசாரிகளையும் பாதம் பணிந்து கொண்டு அவன் தகப்பனுகிற கச்சி வீரனென்கிறவன் கொடுத்த ஆறுதாரப் பூசைப்பெட்டியும் தேவிக்கு ஆறுதனைப்பூசை முஸ்தீதையும் வாங்கிக் கொண்டான். அவன் வாங்கிக்கொண்ட பின்பு குரு சைவார்ச்சார் கச்சிவீரனையழைத்து உன்மகன் முத்து வீரப்பன் வசத்தில் பாதா(ழ)[ள]த்திரைக் கோலும் பாதாளவிசுசோதி....கைக்கடப்பாறைக்கூடமும்சரச்சமைய் முத்திரை மோதிரமும் சமையசரமும்ஒப்பித்துவிடுமென்று சொன்னார். குருசைவார்ச்சார் சொன்னபடி கச்சிவீரனுகிறவன் தன்மகன் கச்சிமுத்துவீரப்பன்கையில் அந்தப்பெட்டகத்திலுள்ள [3]சதள முஸ்தேதியும் பெட்டகமும் ஒப்புவித்து விட்டான். ஒப்பித்த பின்பு குருசைவார்ச்சார் என்கிறவர் கச்சிவீரப்பனைப் பார்த்து உன்மனையாளுடனே மக்கள் மருமக்களையும் கூட்டிக்கொண்டு அம்மரத்தடியிலிருக்கின்ற மூவர்ராசாக்கள் இடத்திற்குப்போய் மூவரையுங்கண்டு இங்கே நடந்த பூருவீக [4]வரவெல்லாம் அவர்களுக்குத் தெரியவரச்சொல்லி அவர்களையும் அழைத்துக்கொண்டு கச்சிஏகம்பரர் காமாட்சி இருக்கின்ற தாவுநிலைக்குப்போய் தாவுநிலையிலிருக்கின்ற பாதாளகுகை தளவிசு செப்பேட்டுப்பட்டயத்தை மகன் கச்சிமுத்துவீரனைக்கொண்டு எடுப்பித்து அம்மூவர்ராசாக்களுக்கும் தெரிய வாசித்துக்கொடுத்து,

1 குடிசை  2 பெட்டி  3 சகல  4 வரலாறு

வாசித்துக் கொடுத்த பின்பு அந்தப் பட்டையத்திலுள்ள அந்த மூவர் ராஜாக்களும் இப்புவனத்தில் அவரவர் வமிசபாரம்பரிக்கையாய் நடந்துகொண்டு சுகமேவாழ்ந்திருங்கோ[1] வென்றுசொல்லிவாக்குவரங் கொடுத்து கச்சிவீரன் கையில் அனுப்பி வைத்துக்கொண்டு மல்லிகார்ச்சுனே அல்லமாப்பிரபுவுடைய குருசைவாச்சார் போனார். அவர் போன

கச்சிவீரன் மூவரைக் காணல்

பின்பு கச்சிவீரனென்கிறவன் தன் மனையாளுடனே மக்களையும் வரவழைத்துக கொண்டு அந்தப் பெட்டகத்தையும் எடுப்பித்துக் கொண்டு எட்டிமரத்தடி நிழலிலிருக்கின்ற அம்மூவர் ராசாக்களிடத்திற்கு வந்தான். வந்தபின்பு குருசைவாசாரியரிடத்தில் நடந்த சகல பூருவமும் மூவருக்கும் தெரிய வரச் சொல்லி அம்மூவரையும் வரவழைத்துக் கொண்டு அம்மூவருடனே எல்லோரும் கச்சி ஏகம்பரர் காமாக்ஷியிருக்கின்ற தாவுநிலைக்கு வந்தார்கள். வந்த பின்பு, மூவர்ராசக்கள் தோண்டி

சாசனம் வாசித்தல்

விட்ட [2]மூணுவுடையில் போட்டிருந்த கலச்சாகரத்தை கச்சிவீரனும் அவன் மகன் கச்சி முத்து வீரப்பனும் அவனுக்கிளையவன் கச்சிக் காச்சாலையப்பனும் அம்மூவருமாக வாசித்துப் பார்த்து அவரவர் மனது சந்தோஷப்பட்டுக் கொண்டு மூவர் ராசாக்கள் தோண்டிக் [3]குமித்த மண்போட்டு மூணுவுடையும் மறைத்து லிங்கக்கண் தெரிய மூடி பண்டு போலே [4]மெதிச்சுக் கெட்டிச்சுப் போட்டு, போட்ட பின்பு

இனிக் காமாக்ஷி அம்மன் என்கிற கற்சிலை விக்கிரகம் எங்கேயென்று கச்சிகம்ப லிங்கத்து இடப்பாகத்தில் அம்மூவரும் தோண்டி சோதிச்சுப் பார்க்கும்போது காமாக்ஷி என்கிற கற்சிலை விக்கிரகமும் அதை நிலைநிறுத்திப் பிரதிஷ்டை செய்த ஆடி ஆதாரமும் ஆள் [5]ஒசரம் மண்ணில் மூடி மறைந்து மண்மேடாய் குவிந்து வளர்ந்திருந்தது. அப்படி வளர்ந்திருந்த மண்மேட்டை அம்மூவரும் நாலு திக்கை மறித்து ஒரு [6]புரமாய் மண்ணெல்லாம் வாரிக் குமித்து அடி ஆதார பீடம் [7]காணமட்டும் வழி பண்ணிக்கொண்டார்கள். வழி பண்ணிக் கொண்ட பின்பு அம்மூவரும் அவ்வனத்திலுள்ள எட்டித் தழையை வெட்டி பச்சைக்குடிசை கட்டி முஸ்தேதி பண்ணி, பண்ணின பின்பு கச்சிவீர னென்கிறவன் கச்சி ஏகம்பருக்கும் காமாக்ஷியம்மனுக்கும் பூசை நைவேத்தியமும் முடித்து பாதசரணம் பண்ணி எழுந்திருந்து அர்ச்சனை செய்து நின்றுகொண்டு வலத்திருவுளவாக்கு வரம் வாங்கிக் கொண்டு வாங்கிக்கொண்ட பின்பு தன் மனசு சந்தோஷப்பட்டுக் கொண்டு கச்சிவீர னென்கிறவன் தன் மகன் கச்சிமுத்துவீரப்பனுக்கு அந்தப் பாதாள தபசுக் குகையிலிருக்கின்ற ஆதிபூருவீகம்

---

[1] இருங்கள் [2] மூன்று ஆவுடை [3] குவித்த [4] மிதித்துக கெட்டித்து [5] உயரம், [6] புறமாக [7] காணுமட்டும்

செப்பேட்டுப் பட்டையம் எடுத்துவந்து அம்மூவர் ராசாக்களுக்கும் அப்புனத்தில் முன்பின் நடந்துவந்த கரைபூருவீகம் தெரியவர வாசித்துக் காண்பித்துக் கொடுமென்று கட்டுச்செய்தார். அந்தக் கச்சி வீரனுகிறவன் கட்டுச்செய்தபடி அவன் மகன் கச்சி வீரப்ப னுகிறவனும் அதே [1]மொரைக்குச் சம்மதித்துக்கொண்டு அவன் மனையாள் வையாபுரியம்மாளும் தானுமாகப் போய்த் திருக்கம்பா நதியில் தீர்த்தமாடி பிடிசெம்பில் தீர்த்தம் [2]ரொப்பி, சத்திகும்பம் சிவகும்பம் தாபித்து தாபித்த கும்பத்தில் சிவசக்திகளை யடைத்து அந்தச் சக்தி சிவகும்பத்தை தன் மனையாள் சிரசில் வைத்து சிவசத்தி கும்பத்தைத் தன் சிரசின்மேல் வைத்துக்கொண்டு வைத்தபின்பு அந்தக் கச்சிவீரனுடனே அம்மூவர் ராசாக்களும் ரண......................... ........கும் சூழ்ந்து வீர செகண்டியுடன் வலம்புரி முழங்கிவர வீர முகமாக ரணவீரபராக்கிரமத்துடனே முப்பத்திரெண்டடி அக்கினி குண்டத்தில் மூழ்கிக்கிடந்து வந்து கச்சி ஏகாம்பரர், காமாக்ஷியிருக்கின்ற பச்சைக் குடிசைக் கூடத்துக்குள் புகுந்தார். புகுந்த பின்பு கொண்டுவந்த கும்பத்தை யிறக்கி காமாக்ஷி பாதத்தில் வைத்து, வைத்த பின்பு

*சிவபூஜை செய்தல்*

அந்தச் சிவகும்பத்தைக் காமாக்ஷி தேவிக்கு அபிஷேகம் முடித்து ஆயிரம் பொன் காமாக்ஷி தேவிக்கு கனகாபிஷேகம் முடித்துப் பூசை நைவேத்தியம் பண்ணி கரசாதீபம் பரிமாறி காமாக்ஷி தேவியை யர்ச்சனை செய்து பாத சரணம் பண்ணிக் கொண்ட பின்பு பிடி செம்பில் தாபித்த சிவசக்தி கும்பத்தை காமாக்ஷி பாதத்தில் கும்பகலசமாய்த் தாபித்து தாபித்த கும்பகலசத்துக்கு மேல் கூரிய வீரமுனைகட்டாரி பூசையலகு நிறுத்தி நிற்கின்ற அலகு முன்னே அவன் மனையாள் வையாபுரியம்மாளை நேமநிஷ்டை (நிட்டை) யுடன் நிறுத்தி அந்த அலகுக்கும் அந்த அலகு முகத்தில் நிற்கின்ற வையாபுரியம்மாளுக்கும் காமாக்ஷி தேவிக்கும் ஏற்க ஆராதனை முடித்து, தேவியை அர்ச்சித்துக் கொண்டு அர்ச்சித்துக் கொண்ட பின்பு அந்தக் கச்சி முத்து வீரப்பனென்கிறவன் வீர வாள் கையிலெடுத்து வீர கெண்டி வலம் புரிமுழங்கி வீரமுகமாக வீரமருள் எழுந்து ரணவீரபராக்கிரமத் துடனே அந்தப் பாதாள தல விசுசோதியினை கைக்கடப்பாறை கூடமும் பாதாள தலவிசுவீகமுத்திரைக்கோலும் கையிலெடுத்துக்கொண்டு நடந்து போய் அந்தப் பாதாள தலவசு இருக்கின்ற நாவுகைக் கடப்பாறை கூடத்தில் சோதித்து நிலை கண்டு, கண்ட பின்பு அந்த வீர முத்திரைக் கோலி னுல் கதவு தாள் திறந்து, கதவை வாங்கி, பாதாள தலவிசு குகை கண்டு குகையினுள்ளே போகும்போது பஞ்சமுகத் தீவெட்டிகை வீரவாள்

*ஆயுதங்களை எடுத்தல்*

---

[1] மோரைக்கு [2] ரொப்பி

வீரசெகண்டி வலம்புரியுடனே வீர குலவையிட்டு அந்தக் குகையி னுள்ளே புகுந்து அந்தக் குகையுள் காத்திருக்கின்ற திக்கு பாலகருக் கும், அஷ்ட பூதங்களுக்கும் அஷ்ட கணங்களுக்கும் அஷ்ட நாகங்களுக் கும் அஷ்ட கெஜங்களுக்கும் அஷ்ட வசுக்களுக்கும் அஷ்ட முனிவ ருக்கும் சப்தரிஷிகளுக்கும் ஒப்புத்தக்கனே சொல்லி இந்தக் குகையினுள்ளே நடந்து போய் அந்தக் குகையினுள்ளே இருக்கின்ற பாதாள தள விசுக் குகை திருக்கம்பை மாநதியில் தீர்த்த மாடி தீர்த்தமாடி வந்து அந்தப் பாதாள தலவிசு ஏகம்பர் காமக்ஷியம் மனுக்கு பூசை நிவேத்தியமும் முடித்து பாதசரணம் பண்ணிக் கொண்டு, பண்ணிக்கொண்ட பின்பு அந்த ஆதி பூருவிகச் செப்பேட் டுப் பட்டையமும், இருக்கின்ற பொற்பெட்டகத்தையும் எடுத்துக் கொண்டு பஞ்ச முகத் தீவெட்டியுடனே ரணவீரமுகத்துடனே நடந்து குகை விட்டு மேலே வந்து, பச்சைக் கூடத்தில் இருக்கின்ற காமாக்ஷி

மூவர்க்கும் பெட்டகம் கூடுதல்

பாதத்தில் இந்தப் பொற்பெட்டகத்தை வைத்து பாத சரணம் பண்ணிக் கொண்டு அந்தப் பெட்டகத்தை யெடுத்துக் கொண்டு அந்தக் குடிசை விட்டு வெளியே வந்து அந்தக் குடிசை வாசலிலிருக்கின்ற மூவர் ராசாக் கள் முன் வைத்தான். மூவர்ராசாக்களும் பா(ர்)த்து அந்தப் பெட்ட கத்தைத் திறந்து அந்த ஆதிபூருவீகம் செப்பேட்டுப் பட்டயத்தை யெடுத்து வாசித்துக் காண்பித்துக் கொடுக்கச் சொன்னார்கள். அவர் கள் சொன்னபடி இவனும் அதே முறைக்கு இவனும் தலவிசு வீக முத்திரைக் கோலினாலே பெட்டகத்தை முத்திரையுடைத்து தாள் திறந்து கதவை வாங்கி அந்தச் செப்பேட்டுப் பட்டயத்தையெடுத்து கச்சி ஏகாம்பரர் காமாக்ஷி பாதத்தில் வைத்து பாத சரணம் செய்து கொண்டு எடுத்து வந்து மூவர் ராசாக்களுக்கும் அந்தப் பட்டயத்தை

பட்டயம் வாசித்தல்

விரித்து, கிரேதாயுகத்தில் தக்கமுனி பத்மாசுரன் நாள் போன பின்பு தேவேந்திர மகாராயன் அதிகாரத்துக்கு வந்து அவர் அதிகாரம் செலுத்தி, அபிஷேகம் முடித்து கிரேதாயுகம் சென்ற பின்பு அவர் அதிகாரம் ஒப்புவித்து அம(ர)ராகிப் போன நாள்வரைக்கும் கிரேதாயுகத்தில் இரணியாசுர ராக்ஷதன் நாள் வரைக்கும் இரணியாசுர ராக்ஷதன் நாள் போன பின்பு அவன் மகன் பிரஹ்லாதன் பரசுராமன் முசுகுந்த சக்கிரவர்த்தி அரிச்சந்திரன் லோகிதாசன் நாள் வரைக்கும் இவர்கள் நாள் போனபின்பு இவர் கள் வமிசத்தில் தசரதன் நாளில் ராவணாசுரனுக்கு அதிகாரம் வந்து ராவணாசுரன் நாள் போன பின்பு ராமருக்கு அதிகாரம் வந்து ராமர் அதிகாரம் நாள் முதற் கொண்டு அவரவர் அதிகாரம் செய்து கிரேதா யுகம் செலுத்தி அபிஷேகம் முடித்து அதிகாரம் ஒப்புவித்து அமரரா கிப் போன நாள் வரைக்கும் அவர் போன பின்பு துவாபரயுகத்தில்

மாபலிவாணசுர ராக்ஷதனுக்கு அதிகாரம் வந்து அவர் அதிகாரம் நடந்து நின்ற நாள் வரைக்கும் அதன் பிறகு சந்திரகுல க்ஷத்திரிய ராசாக்களில் சந்தன மகாராயன் சித்தன் திரிதாட்டிரன் இவர்கள் நாள் வரைக்கும் அதின் பின்பு இவர்கள் வமிசத்தில் துரியோதனன் தர்மர் பதினெட்டாம் படைப் போரில் நூற்று வரைச் சங்காரம் செய்து தர்மர் அரசு செய்து தர்மர் நாள் முதற் கொண்டு அவர் அதிகாரம் செய்து அமரராகிப் போன பின்பு அவர் நாள் வரைக்கு அவர் வமிசத்தில் பரிக்ஷித்து ராசா செனமேசய ராசா விக்கிரமார்க்க ராசா இவர்கள் அதிகாரம் செய்து இவர்கள் நாள் முதற் கொண்டு அரசு புரிந்து அபிஷேகம் முடித்து அதின் பின்பு அதிகாரம் ஒப்புவித்து விக்கிரமார்க்கன் சாலிவாகனன் கையில் சங்காரமாகிப் போன நாள் வரைக்கும் இப்படிக் கிரேதா திரேதா துவாபர இந்த மூன்று யுகத்திலும் நடந்து வந்த முடி மன்னரும் அதிமூர்க்க ராக்ஷதரும் நடத்தி வந்த நீதி அநீதியும் தர்ம பாவமும் தயவு தாக்ஷிணியமும், துர்ச்சனம் சற்சனம் குடிநீதி துரைநீதி குருநீதியும் குடிமரபு துரைமரபு குருமரபு ஸ்திரீமரபு கீழ்ப்படி மேற்படி வாய்க்கால் வரப்பு அச்சுக் கட்டு அணை முறைமையும் சிவாலயம் குருவாலயம் இந்தப் பஞ்சாலயமும் முதலாகியதும் கட்டு வித்து வரிசை மான்யம் விட்டு வழுவாமல் நடத்தி வந்த ஒழுக்கமும் ராசநீதிநிலைமை குருநிலைமை குலநிலைமை தவநிலைமை குலையாமல் நடந்து வந்த ஒழுக்கமும் இப்படி மூன்று யுகத்துக்கும் நடந்து வந்த யாதொரு காரிய விபரமும் முறைமையின் ஒழுக்கமாய் கச்சிவீரன் மகன் கச்சிமுத்துவீரப்பன் மூவர் ராசாக்களுக்கும் ஆதி பூருவீகச் செப்பேட்டுப் பட்டையமும் வாசித்துக் காண்பித்துக் கொடுத்தான். காண்பித்துக் கொடுத்தபடியினாலே அம்மூவர் ராசாக்களும் மெத்த சந்தோஷப்பட்டுக் கொண்டு கச்சி வீரப்பனையும் அவன் மகன் கச்சிமுத்து வீரப்பனையும் பாதசரணம் பண்ணி வணங்கிக்கொண்டு உங்களைச் சிவசுப்பிரமணிய தேவர் அருள்ப்படியால் நந்தி கோத்திரம் வீரபாகு தேவர் வமிசம் [1]கைக்கொள்வரில் தேவர் கைக்கொள்வரென்று சொல்லலாமென்று சொல்லச்சொன்ன பின்பு அது சரியே, நாங்கள் மூன்றுபேரும் சாலிவாகன சங்காரம் செய்யவெண்ணிக் கரைபூருவம் கண்திறப்புக் காணமல் காடு தேசம் வனாந்திரமெல்லாம் சுற்றி காசிக்குப் போய் காசியில் கரை பூருவீகம் கண்டு காசியில் கண்ட கரைபூருவ வழியால் காஞ்சிக்கு வந்தோம். காஞ்சியில் மூன்று யுகத்துக்குப் பூருவீக வழியும் வாசித்துக் காண்பித்துக் [2]குடுத்தையள். யாதொரு விபரமும் அறிந்தோம். அது சரியே. இனிமேல் சாலிவாகனனை சங்காரம் செய்வதற்கு நீங்கள் எங்களுக்குத் தடமும் தாரையும் நிலையும் தலையும் சொல்லித் தர

---

[1] கைக்கோளர் [2] கொடுத்தீர்கள

சாலிவாகன னைச்சங்காரிக்கும் முறை கேட்டல்

வேணுமென்று அம்மூவரும் கேட்டார்கள். அவர்கள் கேட்டபடி கச்சிவீரன் மகன் கச்சி முத்து வீரப்பன் அந்தச் செப்பேட்டுப் பட்டையத்திலுள்ளபடி இரேதா யுகத்தில் சிவசுப்பிரமணிய தேவர் வீர மகேந்திரபுரத்தில் பத்மாசுர சங்காரம் செய்யும்போது சீரலைவாய்க் கரை திருச்செந்தூர் நகரில் [1]ராணியப்படைக் கூட்டம் கூடி சம்பளந் தீர்ந்து அரிய திருக்கம்பம் [2]பொடிவித்து ரணவீர சேவலங்கொடி நிசானி கட்டிவைத்து ரணவீர துர்க்கை பத்திரகாளிக்கு ரணப் பொங்கல் பலியூட்டி ரணவீர முகத்துடனே படையெழுப்பி வீர மகேந்திரபுரத்தில் பத்மாசுரனைச் சங்காரஞ்செய்து தேவர் சிறைமீட்டு தேவேந்திரர்க் கரசளித்தார். திரேதா யுகத்தில் ராமதேவர் ராவண சங்காரஞ்செய்து செய்யும்போது ராமேச்வரக்கரையில் தனுஷ்கோடியூர்நகரில் [3]ராணியப்படைக் கூட்டம்கூடி சம்பளந் தீர்ந்து அரிய திருக்கம்பம் [4]பொடிவித்து ரணவீர கருடக்கொடி நிசானி விருது கட்டி ரணவீர துர்க்கை பத்ரகாளிக்கு ரணப்பொங்கல் பலியூட்டி ரணவீர முகத்துடனே படையெழுப்பி லங்காபுரி ராவணசூரரைச் சங்காரம் செய்து தேவர் சிறைமீட்டு விபீடணருக்கு அளித்தார். துவாபர யுகத்தில் தர்மர் நூற்றுவர் சங்காரஞ் செய்யும்போது கிருஷ்ணவேணிக் கரை குருக்ஷேத்திரத்தில் ராணியப்படைக் கூட்டம் கூட்டி சம்பளம் தீர்ந்து அரிய திருக்கம்பம் பொடிவித்து ரணவீர முரசக்கொடி நிசானி கட்டுவித்து ரணவீர பத்ரகாளிக்கு ரணகளப் பொங்கல் பலியூட்டி ரணவீர முகத்துடனே படையெழுப்பி அத்தினபுரத்தில் நூற்றுவர் சங்காரஞ்செய்து துரோபதை சிறைகூந்தல் முடிப்பிவித்து தன் தருமராச்சிய [5]பரிபார மாண்டார்கள். கலியுகத்தில் முடிமன்னர் ராசசங்காரஞ் செய்யும்போது [6]கூடுதுரையூர் கரை சு நகரில் ராணியப் படைக்கூட்டம் கூட்டி சம்பளம் தீர்ந்து அரிய திருக்கம் பொடிவித்து ரணவீரக் கொடி விருது நிசானி கட்டி ரணவீர பத்திரகாளிக்கு ரணகளப் பொங்கல் பலி யூட்டுவித்து ரணவீர முகத்துடனே படையை எழுப்பி சாலிவாகன சங்காரஞ்செய்து ராச்சிய பரிவாரம் செய்ய வேணுமென்று சொல்லி இதுவெல்லாம் காசிக்குப் போய்வந்து,

காசிக்குப் போகவேண்டும் என்றல்

இதுகாரியம் முடிக்கவேணுமென்று மூவர் ராசாக்களுக்கும் கச்சிவீரன் மகன் கச்சி முத்து வீரப்பன் அந்தச் செப்பேட்டுப் பட்டையத்திலுள்ளபடி வாசித்துக் காண்பித்துக் கொடுத்தபடி மூவர் ராசாக்களும் கேட்டு அதே முறைக்குச் சம்மதித்துக் கொண்டு தங்கள் மனசு சந்தோஷப்பட்டிருந்தார்கள். இருந்த பின்பு கச்சிவீரன் மகன் கச்சிமுத்து வீரப்பன் அந்த ஆதிபூருவீகச் செப்பேட்டுப் பட்டையத்திலுள்ள படியாகி மூன்று

---

[1] இராணுவ [2] போடு [3] இராணுவ [4] போடு [5] பரிவார [6] துலை

யுகத்து பூருவீக [1]வரவும் [2]ஞாயம் நடவழித்தி, உள்ளதெல்லாம் மானுட்டு வெள்ளோலைப் பட்டையத்தில் எழுதிக் கொண்டு தங்கள் கைவிபரப் படியாய் தன் கையில் வைத்துக் கொண்டார். வைத்துக் கொண்ட பின்பு ஆதிபூருவீகச் செப்பேட்டுப் பட்டையத்தை அதின் முன்னிருந்த பொற்பெட்டகத்தில் போட்டு மூடிமுத்திரித்து அந்தப் பெட்டகத்தைக் கச்சிமுத்து வீரப்பன் எடுத்துப் காமாக்ஷி பாதத்தில் பெட்டகத்தை வைத்து காமாக்ஷி தேவிக்கு ஆயிரம் பொன் கனகாபிஷேகம் முடித்து ஆயிரம் பொன் பாத காணிக்கை வைத்து கற்பூர தூப தீபம் பரிமாறி பூசை நிவேத்தியமும் முடித்து காமாக்ஷி பாதம் சரணம் பண்ணிக் கொண்டு காமாக்ஷி பாதத்தில் வைத்த பொற்பெட்டகத்தை எடுத்துக் கொண்டு வீரவாள் கையில் எடுத்து வீரகுரவையிட்டு வீர செகண்டி வலம்புரி முழக்கி பஞ்ச முகத் தீவெட்டிகையுடனே அந்தப் பாதாள தளவிசுக் குகை புகுந்து அந்தப் பாதாள தளவிசுக் குகையிலிருக்கின்ற அந்தப் பாதாள தளவிசுக்கச்சி ஏகம்பர் காமாக்ஷி பாதத்தில் பெட்டகத்தை ஒப்புவித்து பூசை நிவேத்தியம் முடித்து அந்தக் குகை ஏகம்பர் காமாக்ஷியைப் பாதசரணம் பண்ணிக் கொண்டு குகை விட்டு மேலே வந்து அந்தக் குகையைக் கதவு சாத்தி வீரமுத்திரைக் கோலினாலே தாள் பூட்டி முத்திரித்துப் போட்டு பச்சைக் குடிசைக் கூடத்துக்கு வந்து பச்சைக் குடிசில் கூடத்திலிருக்கின்ற கச்சிஏகம்பர் காமாக்ஷிக்குப் பூசை நிவேத்தியம் முடித்துப் பாத சரணம் பண்ணிக் கொண்டு அந்தக் கும்ப கலசத்துக்கு மேல் நிறுத்தி நிற்கின்ற வீரக் கட்டாரிமுனை பூசையலகு, பூசையலகை யிறக்கி வைத்து அந்தக் கும்பதீர்த்தத்தைக் கச்சிவீரனுடன் கச்சிமுத்து வீரப்பன், கச்சாலையப்பன், பழமுதிர்சோலையங்கிரியம்மாளுடனே வையாபுரியம்மாள், பழனுபுரியம்மாளும், வீரசோழனுடன் உலாச்சேரன் வச்சிராங்க பாண்டியன் ஆக இந்த ஒன்பது பேரும் காமாக்ஷி பாதத்தில் தாபித்த கும்பதீர்த்தமும், கச்சிஏகாம்பரர் காமாக்ஷி தளிகை பிரசாதமும் வாங்கிக் கொண்ட பின்பு கச்சிமுத்து வீரப்பன் கருமாறிக் குளத் தேரியில் எடுத்து வந்த தாமிரப் பெட்டகத்தில் ஆரூதாரப் பூசைப் பெட்டியுடன் பிடிசெம்பு வீரவாள் வீரகட்டாரிமுனைப் பூசையலகு தளவசு சோதினை கைக்கடப்பாரைக்கூடம் வீரமுத்திரைக்கோல் வீர செகண்டி வலம்புரி, பஞ்ச முகத் தீவெட்டிகை காமாக்ஷி தேவிக்கு இந்தப் பட்டையம் பெட்டகம் எடுக்க ஆயிரம் பொன் வைக்க ஆயிரம் பொன் அபிஷேகம் முடித்துப் பாதகாணிக்கை இரண்டாயிரம் பொன் ஆக நாலாயிரம் பொன்னும் மானுட்டு வெள்ளோலையில் கைவிபரப்பட்டியும் இது முதலாகியதெல்லாம் அந்தப் பெட்டகத்தில் போட்டு மூடி முத்தரித்துக் கொண்டு அந்தப் பெட்டகத்தையும் எடுத்துக் கொண்டு

[1] வரலாறு [2] நியாயம

ஒன்பது பேருமாக கச்சி ஏகாம்பரர் காமாக்ஷியை அடிவணங்கி அவரவர் மனதில் அர்ச்சனை செய்து கொண்டு அந்த ஒன்பது பேருமாகப் புறப்பட்டு காஞ்சிவனம் விட்டுப் புறப்பட்டு காஞ்சிவனங் கடந்து காசிக்குப் போனார்கள். காசிக்குப் போய் காஞ்சிவனத்தில் மூவர் ராசாக்கள் தோண்டிவிட்ட காசி விசுவலிங்கத்தைப் பார்க்கும் போது மூறுறுவுடையும் பிரளயமான சலத்தையுங் கண்டு க்ச்சி வீரனுடன் கச்சிமுத்து வீரப்பன் கச்சாலையப்பன் அம்மூவருமாக அந்தப் பிரளயமான சலத்தை நீக்கி அந்த மூறுறுவுடையில் போட்டிருந்த [1]கலிச் சாகரத்தை அம்மூவரும் வாசித்துப் பார்த்து அவரவர் மனதில் சந்தோஷப்பட்டுக் கொண்டு அம்மூவரும் மூவர்ராசாக்கள் தோண்டிக் குமித்த மண் போட்டு மூறுறுவுடை மறைய லிங்கக் கண் தெரிய பண்டு போலே மூடிமெதிச்சுக் கெட்டிச்சுப் போட்டு இனிக் காசி விசாலாக்ஷி யென்கிற கற்சிலை விக்கிரகம் [2]எங்கை யென்று காசி விசுவலிங்கத்தின் வலது பாகத்தில் அம்மூவரும் தோண்டி வேதிச்சுப் பார்க்கும் போது விசாலாக்ஷி யென்கிற கற்சிலை விக்கிரகமும் அதை நிலை நிறுத்தி பிரதிட்டை செய்திருந்த அடி ஆதார பீடமும் ஆள் [3]ஆளொசரம் மண்ணில் மூடி மறைத்து மண்மேடாய்க் குவித்து மலை போலே வளர்ந்திருந்தது. அப்படி வளர்ந்திருக்கும் மண் மேட்டைக் கச்சி வீரனுடன் கச்சிமுத்து வீரப்பன் கச்சாலையப்பன் என்கிற அந்த மூன்று பேருங் கூடி நாலுதிக்கும் பறித்து ஒரு [4]புரமாய் மண்ணெல்லாம் வாரிக்குவித்து அடியாதாரம் மட்டும் வழி பண்ணிக் கொண்டார்கள். ஆதார பீடம் [5]காணமட்டும் வழி பண்ணிக் கொண்டு அந்தக் காசி விசாலாக்ஷி யென்கிற கற்சிலை விக்கிரகத்தை அம்மூவரும் அடிதலை கண்ட பின்பு அம்மூவரும் அவ்வனத்திலுள்ள ஆல விருக்ஷத்தையும் வெட்டி ஆலந் தழையைக் கொண்டு வந்து காசிவிசுவ லிங்க விசாலாக்ஷிக்குப் பச்சைக் குடிசைக் கட்டி முஸ்தேதி பண்ணின பின்பு கச்சிமுத்துவீரப்பனென்கிறவன் காசி விசுவலிங்கருக்கும் விசாலாக்ஷியம்மனுக்கும் பூசை நைவேத்தியம் முடித்து பாத சரணம் பண்ணி எழுந்திருந்து நின்று கொண்டு வலத்திருவளம் வாக்கு வரம் வாங்கிக் கொண்டு, வாங்கிக் கொண்ட பின்பு, தன் மனசு சந்தோஷப்பட்டுக் கொண்டு கச்சி வீரனென்கிறவன் கச்சிமுத்து வீரப்பனுக்கு அந்தப் பாதாள தளவசுக் குகையிலிருக்கின்ற வெள்ளை யானையும் நீலமேக வன்ன பஞ்சகலியாணி புரவியும். வச்சிராயுதமும் சீராச் சோடும் விக்கிர மார்க்கன் போட்டு வைத்த முக்கோடி திரவியமும் எடுத்து வந்து அம்மூவர் ராசாக்களில் வீர சோழன் வசத்திலிது முதலாகியதெல்லாம் ஒப்பியும் என்று கச்சி

காசி செல்லல்

பூசை செய்தல்

யானை குதிரை முதலியன பெறுதல்

---

[1] கல்சாசனம் [2] எங்கே [3] ஆளுயரம் [4] புறமாய் [5] காணும் மட்டும்

வீரனென்கிறவன் கட்டு செய்தபடி அவன் மகன் கச்சிமுத்து வீரப்பனென்கிற வனும் அதே முறைக்குச் சம்மதித்துக் கொண்டு ஆரூதாரப் பூசைப் பெட்டியுடன் சோடு சமுஸ்தீபுடனே அவன் மனையாள் வையாபுரி அம் மாளும் தானுமாகச் சிவகங்கா நதிக்குப் போய் சிவகங்கா நதியில் தீர்த்தமாடி ஆரூதாரப் பூசை முடித்து பிடி செம்பில் தீர்த்தம்[1] ரப்பி சத்தி கும்பம் சிவகும்பம் தாபித்து தாபித்த கும்பத்தில் சிவசக்திகளை யடைத்து அந்தச் சக்தி சிவகும்பத்தை தன் மனையாள் சிரசில் வைத்து சிவசக்தி கும்பத்தைத் தன் சிரசின் மேலே வைத்துக் கொண்டு, வைத்த பின்பு அந்தக் கச்சி வீரனுடனே மூவர் ராசாக்களும் இரண்ட........ஞ் சூழ்ந்து வீர செகண்டி வலம்புரி முழக்கி வீர முகமாக ரணவீர முகத்துடனே பதினாறடி அக்கினி குண்டத்தில் நடந்து போய் காசி விசுவலிங்கர் விசாலாக்ஷியிருக்கின்ற பச்சைக் குடிசைக் கூடத்தில் புகுந்தார்கள். புகுந்த பின்பு கொண்டு வந்த கும்பத்தை யிறக்கி விசா லாக்ஷி பாதத்தில் இறக்கி வைத்து அந்தச் சிவகும்பத்தை விசாலாக்ஷி யம்மனுக்கு அபிஷேகம் முடித்து ஆயிரம் பொன் விசாலாக்ஷியம் மனுக்குக் கனகாபிஷேகம் முடித்து ஆயிரம் பொன் பாத காணிக்கை வைத்து பூசை நிவேத்தியம் பண்ணி கற்பூர தீபம் பரிமாறி விசாலாக்ஷி தேவியே யென்று அர்ச்சனை செய்து பாத சரணம் பண்ணிக் கொண்டு, பின்பு பிடிசெம்பில் தாபித்த கும்பத்தை விசாலாக்ஷி பாதத்தில் கும்ப கலசமாய்த் தாபித்து, தாபித்த கும்பகலசத்தின் மேல் கூரிய வீரமுனைக் கட்டாரி பூசையலகு நிறுத்தி, நிற்கின்ற அலகு முன்னே அவன் மனையாள் வையாபுரியம்மாளை [2]நேமநிட்டையுடன் நிறுத்தி அந்த அலகுக்கும் அந்த அலகு எதிர் நிற்கின்ற வையாபுரியம் மாளுக்குமாக விசாலாக்ஷி தேவிக்கு ஒக்க ஆரூதனைப் பூசைப் முடித்து தேவியை அர்ச்சித்துக் கொண்டு, அர்ச்சித்துக் கொண்ட பின்பு, அந்தக் கச்சி முத்து வீரப்பனென்கிறவன் வீரவாள் கையிலெடுத்துக் வீரசெகண்டி வலம்புரி முழக்கி வீரமருள் எழுந்து ரணவீரபராக்கிரமத் துடனே அந்தப் பாதாளவசு சோதியினை கைக்கடப்பாறைக் கூடமும் பாதாள தளவிசுவீகமுத்திரைக் கோலும் கையில் எடுத்துக் கொண்டு நடந்து போய் அந்தப் பாதாள தளவசு இருக்கின்ற தாவுநிலையைக் கைக் கடப்பாரைக் கூடத்தில் சோதித்து நிலை கண்டு கண்ட பின்பு அந்த வீரமுத்திரைக் கோலினாலே கதவைத் தாள் திறந்து கதவை வாங்கி அந்தப் பாதாள தளவசு குகை கண்டு குகையினுள்ளே போகும்போது பஞ்ச முகத் தீவட்டிகை, வீரவாள் வீரசெகண்டி வலம் புரியுடனே வீர குரவையிட்டு ரணவீர முகத்துடனே அந்தக் குகையி னுள்ளே காத்திருக்கின்ற திக்கு பாலகருக்கும் அஷ்ட பூதங்களுக்கும்,

கும்பம் எடுத்து தீ மிதித்து பூசை செய்தல்

---

1 இரப்பி 2 நியம

அஷ்டகணங்களுக்கும் அஷ்ட நாகங்களுக்கும் நடந்து போய் அந்தக் குகையுள்ளே யிருக்கின்ற பாதாள தளவிசுக் குகைக்குப் போகும் போது சிவகங்கா நதியில் தீர்த்தமாடி வந்து அந்தப் பாதாள தளவிசுக் குகை விசுவமுனி பூசை செய்யும் விசுவலிங்கத்திற்கும் விசாலாக்ஷியம் மனுக்கும் பூசை நைவேத்தியம் முடித்து பாதசரணம் பண்ணிக் கொண்டு பண்ணிக் கொண்ட பின்பு முன் துவாபரயுகத்தில் விக்கிர மார்க்கன் அதிகாரஞ் செய்து அதிகாரம் ஒப்புவித்த நாளில் ஒப்புவித்த வெள்ளை யானையும் நீலமேக வன்ன பஞ்சகலியாணி புரவியும் விசுவ லிங்கர் விசாலாக்ஷி விசுவமுனி, மகிமையினாலே வெள்ளை யானையும் நீலமேக பஞ்ச கலியாணி குதிரையும் வரவழைத்துக் கொண்டு வச்சிரா யுதமும் சீராச் சோடும் கையிலெடுத்துக் கொண்டு விக்கிரமார்க்கன் போட்ட முக்கோடி திரவியமும் எடுத்து அந்த ஆனை குதிரைமேல் போட்டுக் கொண்டு விசுவலிங்கர் விசாலாக்ஷியம்மனையும் பாதசரணம் பண்ணிக் கொண்டு அந்த விசுவமுனி குகையில் அனுப்பி வித்துக் கொண்டு பஞ்ச முகத் தீவெட்டிகையுடனே ரணவீர முகத்துடனே நடந்து அந்த குகை விட்டு மேலே வந்து அந்தக் குகையைக் கதவு சாத்தி வீரமுத்திரிக்கைக் கோலினாலே தாள் பூட்டி முத்திரித்துப் போட்டு பச்சைக் குடிசைக் கூடத்திலிருக்கின்ற விசுவலிங்கர் விசா லாக்ஷி பாதத்தில் வீழ்ந்து வச்சிராயுதமும் சீராச் சோடும் வைத்து அந்த யானை குதிரையும் எதிர் நிறுத்தி பாதசரணம் பண்ணிக் கொண்டு அந்த வச்சிராயுதமும் சீராச் சோடும் கையில் எடுத்துக்கொண்டு அந்த யானை குதிரையும் வரவழைத் துக்கொண்டு அந்த குகை விட்டு வெளியே வந்து அந் தக் குடிசை வாசலிலிருக்கின்ற மூவர் ராசாக்களில் வீர சோழன் வசத்தில் அந்த வெள்ளை யானையும் நீலமேக வன்னப் பஞ்சகலியாணிக் குதிரையும் (புரவியும்) முக்கோடி திரவியமும் சீராச்சோடும் வச்சிராயுதமும் ஒப்பித்து நீ இனி இது கொண்டு சாலிவாகன சங்காரம் செய்து வெற்றிவாகை மாலைசூடி ராச்சிய [1]பரிவாரமும் முடியும். (?) ஓம்முடியாய் ஆளுவாயென் று வாக்கு வரம் கொடுத்தார். கச்சிமுத்து வீரப்பன் கொடுத்தபடி கச்சிமுத்து வீரப்பனை பாதசரணம் பண்ணிக்கொண்டு வாக்குவரமும் வாச்சிராயுதமும் சீராச்சோடும் ஆனை குதிரையும் முக் கோடி திரவியமும் கச்சிமுத்து வீரப்பன் கையில் வீரசோழன் வாங்கிக் கொண்டான். வாங்கிக்கொண்ட பின்பு கச்சிமுத்து வீரப்பன் பச்சைக் குடிசைக்குள் புகுந்து பச்சைக் கூடத்திலிருக்கின்ற காசி விசுவலிங்கர் விசாலாக்ஷிக்கும் ஆயிரம் பொன் கனகாபிஷேகம் முடித்து ஆயிரம் பொன் பாதகாணிக்கை வைத்து பூசை நிவேத்தியம் முடித்து பாத

குகையில் எடுத்த பொருளை வீர சோழனிடம் தரல்

---

[1] பரிபாலனம்

சரணம் பண்ணிக்கொண்டு அந்த நிற்கின்ற அலகுக்கும் அலகெதிர் நிற்கின்ற வையாபுரி யம்மனுக்கும் விசாலாக்ஷி யம்மனுக்கு மேற்க, தேவி ஆராதனை பூசை முடித்து அர்ச்சனை செய்துகொண்டு அந்தக் கும்பக் கலசத்துக்கு மேல் நிறுத்தி நிற்கின்ற கூரிய வீரக்கட்டாரி முனைப்பூசை யலகை யிறக்கிவைத்து அந்தக் கும்பதீர்த்தமும் தேவி யாராதனை தளிகைப் பிரசாதமும் கச்சிவீரனுடன் கச்சிமுத்து வீரப் பன் கச்சாலையப்பன் பழமுதிர்சோலையங்கிரியம்மாளுடனே வையா புரியம்மாள் பழனுபுரி யம்மாளும் வீரசோழனுடன் உலாச்சேரன் வச்சிராங்க பாண்டியன் ஆக இந்த ஒன்பது பேரும் காசிவிசுவலிங்கர் விசாலாக்ஷி பாதத்தில் நாடீத்த கும்ப தீர்த்தமும் தேவி ஆராதனைத் தளிகைப் பிரசாதமும் வாங்கிக்கொண்ட பின்பு கச்சிமுத்து வீரப்பன் தன் கைப்பெட்டகத்தில் ஆறுதாரப் பூசைப் பொட்டியுடன் பிடி செம்பு வீரக்கட்டாரிமுனைப்பூசையலகு வீரவாள் நளவிசு சோதியினைக் கைக் கடப்பாறைக் கூடம் வீகமுத்திரைக்கோல் வீர செகண்டி வலம் புரி பஞ்சமுகத் தீவட்டிகை விசாலாக்ஷி தேவிக்கு எடுக்க ஆயிரம், வைக்க ஆயிரம், கனகாபிஷேகம் முடிக்க இரண்டாயிரம் பொன்னும் பாதகாணிக்கை யிரண்டாயிரம் பொன்றும் ஆக இந்த நாலாயிரம்(?) பொன். இது முதலாகியதெல்லாம் அந்தப் பெட்டகத்தில் போட்டு மூடி முத்திரித்துக்கொண்டு அந்த ஒன்பது பேருமாகக் காசி சிவகங்கா நதியில் தீர்த்தமாடி விசுவலிங்கத்தையும் விசாலாக்ஷியும் விசுவாலயமும் தெரிசித்துக்கொண்டு ஒன்பது பேருமாக காசியால வனம் விட்டுப் புறப்பட்டு அயோத்தி துவாரபுரி கடந்து காஞ்சிக்குப் போனார்கள்.

காசி விட்டு காஞ்சி வரல்

காஞ்சிவனத்திலிருக்கின்ற கச்சியேகம்பர் காமாக்ஷி பாதத்தில் காசியிலிருந்துகொண்டு வந்த முஸ்தேதியாகியதெல்லாம் வைத்து ஒன்பது பேருமாகக் காமாக்ஷி யைப் பாதசரணம் பண்ணிக்கொண்டு, பண்ணிக்கொண்ட பின்பு கச்சி வீரனுகிறவன் தன் மனையாள் சோலையங்கிரி யம்மாளுடனே தன் மகன் இளையவனுகிய கச்சிக் கச்சாலையப்பனையும் தன் மருமக ளாகிய வையாபுரியம்மாள் பழனுபுரியம்மாளையும் ஆக இந்த நான்கு பேர்களையும் தாங்கள் எப்போதுமிருக்கின்ற தாவுதலமாகிய வூரி லிருத்திப்போட்டுக் கச்சிவீரனென்கிறவன் தன் மகன் மூத்தவனுகிய கச்சிமுத்து வீரப்பனையும் சேரன், சோழன், பாண்டியன் மூவர் ராசாக்களுடனே ஆனை குதிரை முக்கோடித் திரவியம் சீராச்சோடு வச்சிராயுதம் இது தெல்லாம் அம்மூவர் ராசாக்களைக் கொண்டு எடுப்பித்துக்கொண்டு தங்கள் கைப்பெட்டகத்தை யெடுத்துக்கொண்டு வீரசோழனைக் கொண்டு சாலிவாகனனைச் சங்கா ரம் செய்விக்கவேணுமென்று கச்சி ஏகம்பர் காமாக்ஷி யர்ச்சனை செய்துகொண்டு அந்த ஐந்து பேருமாக காஞ்சிவனம் விட்டு புறப்பட்டு

கூடு துறையில் ஐவரும்வருதல்

காஞ்சிவனம் கடந்து கூடு [1]துரையூர் நகர் வனத்துக்கு வந்தார்கள். கூடு துறையூருக்கு வந்து இவர்கள் கூடியிருந்துகொண்டு இனிச்சாலிவாகனனைச் சங்காரம்செய்வதற்கு[2] ராணியப் படைக் கூட்ட வேணு மென்று கச்சி வீரனுகிற வன் அவன் மகன் கச்சி முத்து வீரப்பன் வீர சோழன் உலாச் சேரன் வச்சிராங்க பாண்டியன் ஆக இந்த ஐந்து பேரும் கூடி யோசித்து வீர சோழன் பேருக்கு நாடு தேச புவனத்தில் காடு புல் வனுந்திரத்திலுள்ள சிவமதம் விஷ்ணு மதத்திற்கு உட்பட்ட பேருக்கும் பன்னிரு வகைச்சாதி கம்பளத்தவரும் மற்று முண்டாகிய பேரும் அவன் சமணமதம் சருவேசுவர தீக்ஷைக்கு உப்படாத பேரும் யாதொரு வராகிலும் இந்தக் [1]காங்கித நிருபங் கண்டவர்கள் கேட்ட வர்கள் யாதொருவராகிலும் சாலிவாகன சங்காரத்திற்கு [2]ராணியப் படைக் கூட்டத்திற்கு கூடுதுறையூர்நகர் வனத்துக்கு வரவு மென்று காகித நிருபம் எழுதி நாடு தேச புவனத்திலுள்ள காடு புவனத்தில் சனுதிகள் இருந்த வனத்திற் கெல்லாம் அந்தக் காடு புவனத்திலுள்ள இருளர் முடுகர் கையில் காகித நிருபங்களை கொடுத்து எட்டு திசைக்கும் அனுப்பி வைத்தார்கள். அவர்கள் அனுப்புவித்தபடி நாடு தேச புவனம் வனத்திலுள்ள

இராணுவத்துடன்கூடுதுறை சென்றது

சனுதிகளெல்லாம் ராணியப் படைக் கூட்டம் கூடி கூடுதுரையூர் நகர் வனத்திற்கு வந்தார்கள். அவர்கள் வந்தபடி சாலிவாகனனுகிறவன் வீரசோழன் உலாச் சேரன் வச்சிராங்க பாண்டியன் இம் மூவர் ராசாக் களும் வந்து கூடுதுறையூர் நகரிலிருந்துகொண்டு ராணியப் படைக் கூட்டம் கூட்டி வித்து சாலிவாகன சங்கராத்திற்கு வாரார்களென்கிற

சாலிவகனன் செய்தி கெட்டது

செய்தி சாலீவாகனன் அறிந்து கொண்டு முன் விக்கிர மார்க்கன் அதிகாரம் செய்வதற்கு வந்த நாளில் அயோத்திமா நகரத்தில் தம்முடைய மன வுறுத்திக்கு தம்முடைய பேருக்கு 'விக்கிரம கேசரி புர' மென்று ஒரு பட்டணமும் கட்டி வித்து அதில் கோட்டை கொத்தளம் பொடி வித்து அரண்மனை சமஸ்த்தானம் கட்டு வித்து அதிலிருந்து கொண்டு விக்கிரமார்க்கன் அதிகாரம் செய்து நடந்து வந்தார். அவர் அதிகாரம் செய்து நடந்து வரும் நாளில் அவர் அதிகாரத்திற்கு பதில் வந்த சாலிவாகன போசன் அந்த விக்கிரமகேசரிபுர அரண்மனை சமஸ்தானத்திலிருந்து. அதிகாரம் செய்து நடந்துவர முடி போருமல் சாலிவாகன போசனு கிறவன் தம்முடைய பேருக்கு அயோத்தி வள நாட்டில் போசராயபுர

போஜராய புரம் கட்டினது

மென்றொரு பட்டணமும் கட்டு வித்து அதில் கோட்டை கொத்தளம் பொடிவித்து அரண்மனைச் சமஸ்தானமும் கட்டுவித்து அதிலிருந்துகொண்டு சாலிவாகன போசனு

---

[1] துறை [2] ராணுவ

1442 ஆண்டு ஆண்டது

ராசாக்களும்

திருச்சிராப் பள்ளி செய்தி சாலிவாகனன் கேட்டல்

கிறவன் வமிச பாரம் பரிக்கையாய் ஆயிரத்தி நானூற்று நாற்பத்திரண்டு வருஷம் அதிகாரம் செய்து நடந்துவந் தார். அவர்களும் அப்படி நடந்துவந்த நாளில் வீரசோழன் உலாச்சேரன் வச்சிராங்கபாண்டியன் இம்மூவர் கூடுதுறையூர் நகர் வனத்திலிருந்துகொண்டு ராணியப் படைக்கூட்டம் கூடி படையெழுப்பி வந்து தன்னுடனே சமர்பொருது சங்காரம் செய்வதற்கு [1]வாரார்கள் என் கிற சேதிகேட்டு [2]நிலவரமாய்அறிந்துகொண்டு அந்தச் சாலிவாகனனென்கிறவன் இந்தப்படைமுனைக்கு எங்கே போய் மறைந்திருந்து தப்பிப்போவோமென்று சொல்லி ஆலோசித்து இருக்கும்போது அந்தச் சாலிவாகன னென்கிறவன் சோழவள நாட்டில் திருச்சிராப்பள்ளிப் பூருவீகம் கேட்டான்.

திருச்சிராப் பள்ளி பழைய வரலாறு

திருச்சிராப்பள்ளி பூருவீக [3]வரவு எப்படி யென்றால் முன்திரேதாயுகத்தில் ராவணாசுரன் தென்னிலங்கை மாநகரத்தி லிருந்து கொண்டு சத்திமுத்தி பாதாளத்திற்கும் மூன்று உலோகத்திற்கும் தனிக் கர்த்தனை எனக்கு நிகர் யாரு மில்லையென்று இராசியபாரம் பண்ணி நடந்துவரும் நாளில் அவனுக்கு மகா சத்துருவாக அந்த ராவணாசுரனைச் சங்காரம் செய்வதற்கு அயோத்தி வளநாட்டில் அயோத்திமா நகரத்தில் சூரியகுல வமிச க்ஷத்திரிய ராசாக்களில் தசரத மகாராயன், அந்தத் தசரதமகா ராயன் வீட்டில் ராமர் லட்சுமணர் இரண்டுபேரும் ராவணாசுரனுக்கும் சத்துருவாகவும் தசரத மகாராஜனுக்குப் புத்திரராகவும் பிறந் தார்கள். அவர்கள் பிறந்து வளர்ந்து பிரபல(ரா)கின்றாரென்கிற சேதி ராவணாசுரன் கேட்டுத் தனக்குச் சங்காரச் சத்துரு வாரார்களென் கிற சேதி ராவணாசுரன் கேட்டு பாதாளலோகத்தில் ஒரு பட்டணம் உண்டு செய்து அதில் கோட்டை கொத்தளம் [5]பொடிவித்து அரமனை ஆஸ்தானம் கட்டுவித்து அதிலிருந்து அதிகாரஞ் செய்து நடந்துவரத் [6]தன்னுடத்தாயாதிகராணுகிற மயிலிராவணன், அந்த மயிலிராவண(னை) அந்தப் பாதாளபுரி கோட்டைக்கு அதிகாரத்திற்கு வைத்தான், ஆகாசத்திலேயே மேகபுரியென்று ஒரு பட்டணமும் கட்டுவித்து அதில் கோட்டைக் கொத்தளம் பொடிவித்து அரமனை ஆஸ்தானந்தரமும் கட்டுவித்து அதனுளிருந்து அதிகாரஞ் செய்து வந்தான். மகன் இந் திரஜித்துக்கு அதிகாரம் கொடுத்து மேகநாத னென்கிற பேருங் கொடுத்தான். கொடுத்த பின்பு தாமிருக்கின்ற தக்ஷிணாமுகத்தில் தென் சமுத்திரக்கரைத்திடர் நடுவில் தென்னிலங்கை மாநகரமென்று ஒரு பட்டணமுங் கட்டுவித்து அதில் நக்ஷத்திர மண்டலத் தளவு நிர(று)வி நிற்கும் ஏழு சுற்றுக் கோட்டையும் [7]பொடிவித்து அதில் அரமனை

---

[1] வருகிறார்கள் [2] நிலவரம் [3] வரலாறு [4] செய்தி [5] போடு [6] தன்னுடைய [7] போடு

சமஸ்தானமும் கட்டுவித்து அதில் தாமிருந்து அதிகாரஞ் செய்து நடந்துவர அந்த தென்னிலங்கா புரிக்கு உக்குடம் மேட்டுக் காவலாகத் திருச்சிராப்பள்ளி யென்று [1]உபைய கவேரிக்கரை யருகில் சாமிமலையை வளைத்துக் கோட்டையும் [2]பொடிவித்து அந்தச் சாமிமலை யென்கிறதிற்குச் சிராமலை யென்று [3]துருக்கமும் பொடிவித்து அந்தத் துருக்கத்திலே ரஸ்து [4]போக்கி சக்[5]களிஞ்சியும் கட்டுவித்துஅந்தத் திருச்சிராப்பள்ளிக் கோட்டையில் அரமனைச் சமஸ்தானமுங் கட்டுவித்து அந்தக் கோட்டையைச் சுற்றிலும் பாதாள சலங்காண [6]அகமும் பறப்பிவித்து அந்தக் கோட்டை அரமனை ஆகாசத்திலிருந்து அதிகாரம் செலுத்தி நடந்து வருவதற்குத் தன்னுடைய மனிதராகிய ராட்சதரில் திரிசிராவென்கிற ராட்சதனுக்கு அதிகாரம் கட்டுச்செய்து அந்தக் கோட்டைக்குத் திருச்சிராப்பள்ளி யென்கிற பேரும் அதிலிருந்து அதிகாரம் செய்து வருவதற்கு திருச்சிரான் என்கிற பேரும் இந்த முப்பேரும் கண்டு அந்தத் தருகத்தில் கட்டுவித்த பொக்கிஷக் களஞ்சியத்தில் ரஸ்துப் பொக்கிஷங்களும் [7]ரம்பி இந்தக் கோட்டை கெடிமன்னருக்கல்லாமல் முடிமன்னனிருந்து, அரசாண்டால் அவர்களுக்கு முடிபொருதென்றும் இந்தக் கோட்டை தென்னிலங்கை விட்டாலும் இந்தத் திருச்சிராப்பள்ளி விடாதென்றும், இந்தத் திருச்சிராப்பள்ளியும் அந்தத் தென்னிலங்கையும் கற்பனையினால் [8]கவில் விட்டால் கவில் வாங்கவென்றால் அரிப்பிரும் மாதியாலும் தீராதென்று சிந்தாமணி வாசலில் ராவணாசுரன் கல்ச்சாகரமும் பொடிவித்து திருச்சிரான் என்கிற ராக்ஷதனை அந்தக் கோட்டையி லிருத்தித் தானும் இலங்காபுரியி லிருந்துகொண்டு சத்தி முக்தி பாதாளம் மூன்று லோகத்திற்கும் தனிக்கருத்தனாகி ஒரு குடையிலடக்கி எனக்கு யாருமெதிரியில்லை யென்றும் ராச்சிய [9]பரிவாரம் செய்து நடந்துவரும் நாளையில் ராமலட்சுமணர் பிரபலமாகி எழுபது வெள்ளம் வானர சேனையும் [10]ராணியப்படைக் கூட்டம் கூட்டி ராவண சங்காரஞ் செய்யும்போது விபீடணனை [11]வரவழித்து உட்படுத்தி விபீடணன் [12]சறுப்பினையினாலே இலங்காபுரிக் கோட்டைக் கவில் வாங்கி திரும்பவும் விபீடணர் சனுப்பினையினாலே பாதாளபுரிக் கோட்டையும் அழித்து மயிலிராவணனையும் ஜெயித்து மேகபுரிக் கோட்டையும் விபீஷணன் சனுப்பினையினாலே அழித்து, மேகநாதனென்கிற இந்திரசித்தையும் செயித்து விபீஷணன் சனுப்பினையினாலே திருச்சிராப்பள்ளிக் கோட்டையையுமழித்து திருச்சிரான் என்கிற ராட்சதனையும் செயித்து விபீடணன் சறுப்பினையினாலே இராமர் சத்தி முச்தி பாதாள மூன்று லோகத்திலுள்ள ராட்சதரையும் செயித்து இராவணனையும் செயித்து

இராவணன் திருச்சிராப் பள்ளியைக் கட்டித் திருச்சிரனை வைத்தது

[1] உபய [2] போடு [3] துருககம்-மலைகோட்டை [4] பொககிஷம் [5] களஞ்சியம் [6] அகழியும் [7] நிரப்பி
[8] கவுல்-குத்தகை [9] பரிபாலனம் [10] ராணுவ [11] வரவழைத்து [12] சறு-தயை

இராமர் விபீஷணன் சறுப்பினையினலே இராவண சங்காரம் முடித்த பின்பு இராமர் விபீடணனுக்குத் தென்னிலங்கை மாநகரத்திற்கு அதிகாரம் கட்டளையிட்டு திரும்ப வடக்கு முகமாக இராமர் இலட்சுமணர் இரண்டு பேருமாகப் புறப்பட்டு வரும்போது திருச்சிராப்பள்ளிக் கோட்டைக் குள்ளிருக்கின்ற சிராமலை நடு உச்சத்தில் உச்சிக் கணபதியை வைத்துப் பிரதிட்டையும் பண்ணுவித்து அந்தக் கோட்டை வடபாரிசத்திலிருக்கின்ற உபைய காவேரிக் கரையருகில் இராமர் தம்முடைய சிவ பூசைப் பெட்டியை வைத்து நிலைநிறுத்திப் பிரதிட்டை பண்ணுவித்து அந்தத்தலத்திற்கு 'ஸ்ரீரங்கத்தல' மென்று பேரும் பிறவுங்கண்டு கண்டபின்பு இராமர் இலட்சுமணர் இரண்டு பேருமாகப் புறப்பட்டு ஸ்ரீரங்கத்தலம் கடந்து அயோத்திவள நாட்டுக்குப் போனர். போனபின்பு அயோத்தி மாநகரத்தில் இராமர் அதிகாரஞ் செய்திருந்தார். இந்தப்படி திருச்சிராப்பள்ளி பூருவவரவெல்லாம் சாலிவாகன போசனுகிறவன் கேட்டுதன் மனது சந்தோஷப்பட்டுக்கொண்டு நாம் இனி இந்த வீரசோழன் படை முனைக்கு அந்தத் திருச்சிராப்பள்ளிக் கோட்டையிலிருந்துகொண்டு இந்த முனை தடுக்கவேணுமென்று ஆலோசித்துக்கொண்டு சாலிவாகன போசனுகிறவன் தன்னுடைய சமணமதம் சருவேசுவர தீட்சைக்குட்பட்ட சனுதிகளுக்கெல்லாம் நாடு தேசபுவனத்தில் 'அக்கினி மாரி' மண்மாரிக்குத் தப்பி பிழைத்திருந்து சனுதிகளெல்லாம் இந்த வீரசோழன் படை முனைக்கு என்னிடத்திற்கு வாவென்று காகிதம் நிருபமெழுதி நாலு திக்குக்(கிற்)கும்விட்டு ஐம்பத்தாறு தேசத்திலுள்ள தன் சனமாகிய சமணுதிகளெல்லாம் தாமிருக்கின்ற போசராயபுரத்திற்குத் தருவித்து தன் சனமெல்லாமொன்ருய்க் கூட்டி ஒரு ஒப்பந்தமாகச் சேர்த்துக்கொண்டு சம்பளசாரி..........................................தீர்ந்து [1]நிருதி செய்து கொண்டு ஆனைபரி கோலாரி வண்டி தேர் காலாள் சதுரங்க சேனை பலத்தையும் கூட்டிக் கொண்டு தாங்கள் எப்போதும் இருந்த தாவுதலமாகிய போசராசபுரிக் கோட்டை விட்டுப் புறப்பட்டு சாலிவாகன போசனுகிறவன் தன்னுடைய சதுரங்க சேனைபலத்தையும் கூட்டிக் கொண்டு அயோத்தி வளநாட்டில் போசராயபுரி நகர் கடந்து சோழ வளநாட்டில் திருச்சிராப்பள்ளி நகருக்கு வந்தான். திருச்சிராப்பள்ளி நகருக்கு வந்து திருச்சிராப்பள்ளி கோட்டை புகுந்து சிராமலை மேலேறி, உச்சத்தில் நின்றுகொண்டு நாலுதிக்கும் பார்த்தான். நாலுதிக்கும் பார்த்து அந்தத் தென்னிலங்கைக் கோட்டை விடுவித்தாலும் இந்தத் திருச்சிராப்பள்ளி விடுவிக்க ஒருவரால் தீராது. இனி எனக்காருமெதிரியில்லை யென்று மெத்த

இராமர் இராவணனைக் கொன்று திருச்சிராப் பள்ளியில் கணபதி வைத்தது

சாலிவாகனன் திருச்சிராப் பள்ளியை இராசதானி யாக்குதல்

---

1 உபய

தைரியவந்தனுகி மலை விட்டிறங்கி அரமனையாசாரத்திற்கு வந்தான். அரமனையாசாரத்திற்கு வந்து ஆசாரத்திலிருந்து கொண்டு சாலிவாகன போசனுகிறவன் சதுரங்க பலத்துடனே ராச்சிய பரிவாரம் செய்திருந்தான். அவனுமப்படியிருந்த நாளில் முன் கூடுதுரை(ற)யூர் நகரத்து வனத்தில் வீரசோழன் உல(ா)ச் சேரன் வச்சிரங்க பாண்டியன் மூவர் ராசாக்களும் நாடு தேச புவனவனம் புனத்திலுள்ள விஷ்ணு மதம் சிவமதத்திற்குட்பட்ட பன்னிரு வகைச் சாதி கம்பளத்தவரையும் பதினெண் சாதி பல குலத்தவரையும் கூடுதுரை(ற) வனத்தில் ராணியப் படைக் கூட்டங் கூட்டி 'சாலி வாகனனை'ச் சங்கரிக்கவேணுமென்று படைக் கோலம் செய்தார்கள். படைக் கோலம் செய்யும் போது கச்சி வீரனுகிறவன் வீர சோழனைப் பார்த்து சாறி கொண்ணுக்கு பளியில்லையென்று முன்னோர் சொல்லுவார்கள். நாமள் சாலிவாகன போசனிடத்துக்குத் தானுபதி(யை)ய அனுப்பிவித்து சாலிவாகனன் வசனங் கண்டறிந்து அதின் மேல்பட்டு அவன்மேல் படையெழுப்ப வேணுமென்று கச்சி வீரனுகிறவன் வீரசோழனுக்குச் சொன்னுன். கச்சி வீரன் சொல்ல வீரசோழனுங் கேட்டு அதே முறைக்குச் சம்மதித்துக் கொண்டு வீரசோழனுகிறவன் கச்சி வீரனைப் பார்த்து இவ்விடத்தில் எங்களுக்குப் பெரியவர் நீர்தான் உள்ளது. சாலீவாகன போசனிடத்துக்கு நீர் தானே தானுபதியாகப் போய் அவனிருக்கின்ற சோழவளநாடு திருச்சிராப்பள்ளிக் கோட்டையும் விட்டு அவன் பிடித்த சமணமதம் சருவேசுவர தீட்சையும் விட்டு, சிவமதம் விஷ்ணுமதத்திற்கு உட்பட்டு தான் எப்போதும் இருந்த தாவுதலமாகிய அயோத்தி வளநாட்டில் போசராயபுரத்தி லிருந்துகொண்டு எப்போதும்போலே அதிகாரம் செய்துகொண்டு எனக்குட்பட்டு பாதி [1]பவுசு கட்டிக் கொண்டு நடந்துவந்தால் சரி, அல்லாதேபோனல் தனக்கு [2]ஞாயம் அல்லவென்று சொல்லும். அதற்கு உட்பட்டால் சரி. அதற்கல்லவென்றால் உயுத்தம் இன்னுளென்று பொருந்திவாருமென்று வீர சோழனுகிறவன் கச்சி வீரனுக்குச் சிறிது இராணுவத்தையுங் கூட்டி சாலிவாகன போசனிடத்துக்கு தானுபதிக்கு அனுப்பிவித்தான். வீரசோழன் அனுப்பிவைத்தபடி கச்சி வீரனுகிறவனும் தானுபதியாகப் புறப்பட்டு சாலிவாகன னிடத்திற்கு வந்தான். சாலிவாகன னிடத்திற்கு வந்து கச்சி வீரனுகிறவன் சாலிவாகன போசனைக் கண்டு சாலிவாகன போசனிடத்தில் கச்சி வீரனுகிறவன் [3]தானுபதி முகமாயிருந்துகொண்டு தானுபதிப் பிரசங்கம் செய்தார்.

கூடுதுரை
பளம் கோலம்

செய்த விபரம்:

சாலீவாகன போசராசாவே வீரசோழன் உம்மிடத்தில் நம்மையனுப்பிவைத்தார். அனுப்பிவைத்த விபரம் நீர் கேளுமென்று கச்சி வீரனுகிறவன் அந்தச் சாலிவாகனனுக்குச் சொன்னுன்.

கச்சிவீரன்
தூது

---

[1] கப்பம் [2] நியாயம் [3] தூது

சொன்ன விபரம் :

வீர சோழன் உலாச் சேரன் வச்சிராங்க பாண்டியன் இவர் மூவர் ராசாக்களும் கூடுதுறையூர் நகர் வனத்தில் சாலிவாகன போச சங்காரம் செய்யவேணுமென்று உன்னிட நிமித்தியமாக நாடு தேச புவனவனபுனத்திலுள்ள சிவமதம் விஷ்ணுமதத்திற்குட்பட்ட சருவ சனுதிகளெல்லாம் [1]ராணியப்படைக் கூட்டங்கூடி படையெழுப்பி உன்னுடனே சமர்செய்யவானுர்கள். அவர்கள் வருகிறதற்கு முன்னிலையாக வென்னை உன்னிடத்திற்குத் தானுபதிக்கு அனுப்பிவைத்தார்கள். அனுப்பிவைத்தபடி வீரசோழன் உலாச்சேரன் வச்சிராங்க பாண்டியன் இம்மூவர் ராசாக்களும் உன்னை யிந்தச் சோழவளநாட்டுத் திருச்சிராப்பள்ளிக் கோட்டையும் தங்கள் வசம் விட்டுத்தான் பிடித்திருக்கின்ற சிவமதம் சருவேசுவர திகைஷயும் விட்டு காவேரி நதியில் தலை மூழ்கிவந்து தங்கள் சிவமதம் விஷ்ணுமதத்திற்கு உட்பட்டு நடந்துகொண்டு தான் எப்போது மிருந்த அயோத்தி வளநாட்டில் போசராயபுரத்திலிருந்து கொண்டு அதிகாரஞ் செய்து தங்களுக்குப் பாதிப் பவுசுகட்டி உட்பட்டு நடந்துவந்தால் சரி அல்லாதிருந்தால் உனக்கு ஞாயமல்லவென்று சொல்லிவரச் சொன்னுர்கள். வீர சோழன் அனுப்பிவைத்த தானுபதியாகிய கச்சிவீரன் சொல்ல

சாலிவாகனன் மறுப்பு

சாலிவாகனனென்கிறவன் கேட்டு வெகு கோபமாகி காளைகட்டி உழுது உண்ணும் எ(ன்)னை வெள்ளாளப் பயலுக்கும் [1]பூனையாடு மேய்த்துப் பிடாரியிலே குட்டி (சு)மந்து மொருவித்துண்ணும் இடைமடப் பயலுக்கும் மீன்வீசி விற்றுண்ணும் வலைஞப் பையனுக்கும் இம்மூவருக்குமாய்ப் பயந்தோ நான் திராச்சிராப்பள்ளிக் கோட்டையும் நான் பிடித்திருக்கின்ற சமணமதம் சருவேசுர தீகைஷயும் விட்டுத் தங்களுக்கு உட்படும்போது என்னமாச்சுது? ஆனுல் தங்களிடத்தில் வல்லமைத் [2]திராணி உண்டானுல் என்னுடனே சமர் பொருதி நானிருக்கின்ற கோட்டையும் நான் பிடித்த சமணமதமும் சருவேசுவர தீகைஷயும் விடுவித்து என்னையும் தங்களுக்கு ஆள்படுத்தட்டும். அல்லாதிருந்தால் தாங்கள் நம்மிடத்திற்கு வந்து நம்முடைய சமணமதம் சருவேசுவர தீட்சைக்குட்பட்டு எனக்கு அஞ்சி ஆள்படட்டும், அதுவுமல்ல வென்றுல் தங்களுக்குட்பட்ட ராணியப் படைப்பேர்களும் இன்னும் பண்டு போலே காடு புனவனத்தில் போகட்டுமென்று சாலிவாகன போசன் சொல்ல, கச்சிவீரனுகிறவன் கேட்டு, ஆனுல் அவரவர் மனதென்று சொல்லி சாலிவாகனன் கையில் சொல்லி அனுப்பி வைத்துக் கொண்டு கச்சிவீரனுகிறவன் திருச்சிராப்பள்ளி நகர் கடந்து கூடு துறையூருக்கு வந்தான். வந்த பின்பு கச்சி வீரனுகிறவன் அம் மூவர் ராசாக்களுக்கும் சாலிவாகன போசன் சொன்ன [3]தூசினமான விபரம் எல்லாம் மூவர்

[1] ராணுவ

கோடித் திரவிய பொக்கிஷத்தை வீரசோழனைக் கொண்டு உடைப்பித்து நான்கு வருஷத்திற்கெல்லாம் சம்பள சாரிக்கை (ஒ)துப்பிவித்து அவரவர்களுக்கு அம்புவில் வெடித்துப் பாக்கி [1]கதனைசா....சஞ்சாலி சக்கரம் சீனிக்குழன் பீரங்கி படைவாணம் வெடிவாணமிது முதலாகிய [2]முஸ்தீகு உள்ளதெல்லாம் முகஞ்செய்து கொண்டு சதுரங்க சேனை பலத்துடனே மூவர் ராசாக்களும் கச்சி வீரனுடன் கச்சிமுத்து வீரப்பனும் ஆக இந்த ஐந்து பேருமாக ராணுவப்படை யெழுப்பி கூடுதுறை வனம் கூந்து திருவானைக்காவல் வனத்துக்கு வந்தார்.

படைவீடு

வந்தபின்பு திருவானைக்காவல் வனத்தில் படைவீடு இறக்கி குருவாரம் அமரபக்கம் திரயோதசிநாள் அரிய திருக்கம் பொடிவித்து ரணவீரக் கொடிவிருது நிசானி கட்டி வைத்து அரிய குருக்ஷேத்திரத்து ரணவீரபத்திர மகாகாளிக்கு ரண களப் பொங்கல் பலியூட்டுவித்து கச்சிவீரன் மகன் கச்சிமுத்து வீரப்பன் கைக்கொண்டு வீரசோழனுக்கு வீரப்பட்டம் கட்டுவித்து வச்சிராயுதமும் கையில் கொடுத்து சிராச்சோடும் தொடிவித்து வீர சோழனுக்கும் ராணுவப்படைக் கூட்டங்கூட்டி அரமருள் எழுப்பிவித்து அரக் கொம்பு வீர காளம் வீர சங்கு வீர பேரிகை வீர பல்லாரி வீர முரசு முழக்கி வீர மேள வாத்தியத்துடனே வீர கேளிகையாட ரணவீர குரவை யிடிவித்து ரணவீர பராக்கிரமத்துடனே படையெழுப்பி அமர பக்கம் சதுர்த்தசி சுக்கிரவாரம் சூரிய உதயத்தில் சோழவளநாட்டுத் திருச்சிராப்பள்ளிக் கோட்டை [3]முத்திகைல்(?)கைபிடித்து முன் கிரேதா யுகத்தில் விபீஷணன் சரப்பினை(?)நடந்த விபரம் காஞ்சிபுரத்துக் கச்சி ஏகம்பரர் காமாக்ஷி தளவிசு செப்பேட்டுப் பட்டையத்தில் ராமர் எழுதிவைத்த விவரப்படியால், திருச்சிராப்பள்ளிக் கோட்டையில் விசுக் குகை வாசல் கண்டு அந்த குகை வாசலுக்குள்ளே நடந்து போய்க் கோட்டை புகுந்து சிந்தாமணி வாசல் கதவு திறந்து கவுல் வாங்கி பிரபலமாயிருக்கின்ற ராணுவமெல்லாம் உள்ளே வரவழைத்துக் கொண்டு வீரசோழன் உலாச்சேரன் வச்சிராங்கப் பாண்டியன் மூவர் ராசாக்களும் சதுரங்க சேனை பலமுமாக சாலிவாகனனையும் அவனுடைய ஜனதிபதிகளாகிய ராணுவத்தையும் சங்காரஞ் செய்யும்போது அந்தச் சமர்க் களத்தில், வீரக் கொம்பு வீரகாளம் வீரச் செகண்டி வலம்புரி முழக்க வீரபத்திரமாகாளி ரணகளம் பலி வாங்க பூத பிசாசுகள் உதிர நிணம் தின்ன. நரிகள் பிணவ பிடுங்கி நாலு திக்குகளிலும் கூட்டமிட்டு ஓரியிட கழுகு பந்தலிட்டு காப் ணம் போலிருக்க அந்தப்படி அம்மூவர் ராசாக்களும் சாலிவாகன சவ(ம)ண போசனைச் சங்காரஞ் செய்யும்போது அந்தச் மசர்க்களத்

சோழன் வெற்றி

[1] கதனை-வெடி [2] முஸதீபு [3] முற்றுகை

தில் அந்தச் சாலிவாகன போசனுக்குக் குதிரைப் பார்த்த சவுணிப் பறையன் வல்லானென்று பேர். அந்த வல்லானென்கிற பறையன் அந்தச் சமர்க்களத்திற்குத் தப்பி மிரண்டு தன் பெண்சாதியும் கூட்டிக் கொண்டு தனக்குட்பட்ட சவ(ம)ணுதிகளும் கூட்டிக் கொண்டு தான் பார்த்த சாலிவாகன போசன் குதிரை மேலே அந்த வல்லாளனென்கிற பறையனும் தன் பெண்சாதியும் இருந்து கொண்டு தங்களுக்குட்பட்ட சவ(ம)ண மதத்தருகிய ஜ(ச)னங்கள் நூறு பேரையுங் கூட்டிக் கொண்டு அந்தப் படைமுனை தப்பி மிரண்டு ஓடிப் போய்க் கீழ் சமுத்திரக் கரையில் எல்லாருக்கும் அல்லான் [1]ஆத்தில் போனுனென்று ஒரு திட்டு போய்ச் சேர்ந்தான். அவன் போன பின்பு மூவர் ராசாக்களும் சாலீவாகன போசசவு(ம)ண சங்காரம் முடித்து அதிவீர குரவையிட்டுக் கொக்கரித்து திருச்சிராப்பள்ளிக் கோட்டையும் கொள்ளையடித்து அந்த நகரத்தையும் அழித்து அந்தக் கோட்டைக் கவுல் வாங்கி வெற்றிக் [2]காளையூதி வெற்றி முரசறைந்து விருது காளையூதி வெற்றி வாகை மாலை சூடி வீரசெகண்டி வலம்புரி முழக்கி விருது ரணவீரக் கொடி நிசானியுடனே வீரகேளிக் கையாட ரணவீர மேளம் முழங்க திருச்சிராப்பள்ளிக் கோட்டை புகுந்து சோழ வளநாடு திருச்சிராப்பள்ளித் தோரணம் கட்டுவித்து குடிபலருக்குக் சர்க்கரை வழங்குவித்து ராணுவத்துக் கெல்லாம் உருகி கரை பாக்கு வெற்றிலை வெகுமானப் பவுசுகள் செய்து, இருக்கும் போது, வீரசோழனுக்குச் சாலிவாகன போச சவு(ம)ணவனைச் சங்கரித்து தசருவதோஷவிருமத்தி மூடி ரண வீரவிகார [3]வெரியெடுத்துத் தம்முடைய ராணுவத்து மேல் நாகசர்ப்பம் போலே சீறி கத்தி யெடுத்து வெட்டும்படியாகி ராணுவத்தை வெட்ட ராணுவங்களெல்லாம் மிரண்டோடிப் போக அந்த வீரசோழனுக்குச் சட்டை விடும் போல அவன் சரீரமெல்லாம் சட்டைவிட அப்படியான படியினலே அவ்விடத்திலுள்ள காரியப் பேராகிய கச்சி வீரன் அவன் மகன் கச்சி முத்து வீரப்பன் உலாச் சேரன் வச்சிராங்க பாண்டியன் இந்த நால்வருங் கூடி வீரசோழனுக்கு இது வென்ன மாய்கை மயக்கம் வந்ததென்று மெத்த ஆலோசித்திருக்கும் போது அப்பொழுது கச்சி ஏகம்பரர் சித்தமிரங்கி திருமுகம் பார்த்து வீரசோழன் அவதிப்படுவதைக் கண்டு காமாக்ஷியை யழைத்து 'வீர சோழன் மெத்த அவதிப்படுகிறுன். காமாக்ஷி! நீ போய் வீரசோழனுக்குக் கைபார்த்து கண்ட குறி சொல்லி வீரசோழன் விகார விருமத்தியைத் தணித்து வர வேணும்' என்று காமாக்ஷியை யனுப்ப பொற்பிரப்பங் கோலும் கையிற்பிடித்து கோலக் கலையுடுத்தி கார்மேகக் குழல்

சோழனுக்கு சட்டை நோய் காணல்

காமாட்சி குறத்தியாக வருதல்

[1] ஆற்றில் [2] காளம் [3] வெறி

முடித்து கூர்விழிக் கிமையெழுதி பிறைபூண்ட நெற்றிக்கு ஒரு விரலில் நீறணிந்து சோழவளநாட்டுத் திருச்சிராப்பள்ளிக் கோட்டைக்கு வந்தாள். கோட்டையுள்ளே நாலு திக்கும் சுற்றிக் குறி சொல்வேன், குறி சொல்வேனென்று குறி கூறி ஓதி வந்தாள். வந்தவளைக் கண்ட பேர்கள் குறி கேட்ட பேர்கள் அழைத்துப்போய்க் கச்சி வீரன் அவன் மகன் கச்சி வீரப்பன் உலாச் சேரன் வச்சிராங்க பாண்டியன் ஆக இந்நால்வராகிய காரியப்பேரிடத்தில் குறத்தியம்மையை யழைத்துப் போய்விட்டார்கள். இந்நால்வராகிய காரியப்பேரும் குறத்தி அம்மையைப் பார்த்து, குறத்தியம்மை 'நீயுமெங்கள் வீரசோழனுக்குக் கை பார்த்துக் கண்ட குறி சொல்ல வேணும்' என்று அந்த காரியக்காரர் சொல்ல, குறத்தி, 'அப்படியே குறி சொல்வேன்' என்று வீரசோழன் பக்கத்தில் வந்திருந்துகொண்டு நால்ச் சத்திரமாய் வழிப்பித்து விநாயகன் வைத்துப் பூ அருகு சூடி விநாயக பூசை நிவேத்தியம் செய்து நமஸ்காரம் செய்துகொண்டு வீரசோழனைக் கைநீட்டச் சொல்லி காமாக்ஷி கைபார்த்துக் குறி யோதுவாள்.

குறி சொல்லல்

இது மற்றொன்றுமல்ல(ா), சாலிவாகன போசனுகிறவன் முன் பூருவீகத்தில் ஆதிசேஷாதிபதி ஏவனுலே பிறந்த சர்ப்பத்தின் பிதராகிலும் அந்தச் சாலிவாகன போசனுகிறவன், அதிலுமோ சமணமதம் சருவேசுவர தீக்ஷைக்கு உட்பட்டவன். ஆனபடியினுலே அவனுக்கும் ச(ம)வண ராக்ஷத னென்றும் பேராயிருக்கும். அப்படி இருந்தபடி இந்த வீரசோழனுகிறவன் அந்தச் சாலிவாகன போச ச(ம)வண ராட்சதரைச் சங்கரித்தபடியினுலே வீரசோழனுக்கு சருப்ப தோஷம் ச(ம)வணர் பாவ [1]விருமத்தி மூடிக்கொண்டது. இதற்கு மற்றொரு மருந்துமில்லை. முன்னுளில் சிவசுப்ரமணியர் வீரமகேந்திரபுரத்தில் பத்மாசுர சங்காரம் செய்தபோது அவர்க்கு ராக்ஷத தோஷம் விகார விருமத்தி தொடுத்து, தொடுத்தபடி அவர் இப்புவனத்திற்கு தேவேந்திர மகாராயனுக்கு அதிகாரங் கட்டளையிட்டுத் தேவேந்திர மகாராயனைக் கொண்டு இப்புவனத்தி லாயிரங்கோடி சிவாலயமும் பதினுயிரங்கோடி விட்டுணுவாலயமும் நூறுயிரங்கோடி சுப்பிரமணியத் திருவாலயமும் பத்துநூறுயிரங்கோடி மடவாலயமும் நூறு நூறுயிரங் கோடி குருவாலயமும் ஆகவிந்தப் பஞ்சாலயம் முதலாகியதுங் கட்டுவித்து கட்டுவித்த பஞ்சாலயங்களுக்கும் வரிசை மானியம் குறைவில்லாமல் விட்டு அந்தக் கட்டுவித்த பஞ்சாலயமும் விடுவித்த வரிசை மானியமும் எந்நாளும் நழுவாமல் நடந்துவர சிவ சுப்பிரமணியதேவர் அருள்ப்

குறி சொன்ன விவரம்

சட்டைக்குக் காரணம் சர்ப்பதோஷம் என்றல்

சூரபத்மன் சங்காரம்

[1] விருமத்தி-பிரமஹத்தி.

படியால் நந்திகோத்திரம் வீரபாகுதேவர் வாங்கிர கைக்கொள்வரில் இலட்சம் தளவீரருக்கும் முன்னேறுகிய அவன் பேர்க் கச்சிவீரன். அந்தக் கச்சிவீரன் வமிசத்தில் கட்டின ஆலயமும் விட்ட மானியமும் சேர்த்து, அந்த வாலயங்களுக்கு அவனையும் அவனுக்குட்பட்ட அவன் வமிசத்திலுள்ள பேர்களையும் ஆளடிமைப்படுத்தி அந்தவாலயங்கள் மங்காமல் எந்நாளும் ஒருநாள் போல விளங்கச்செய்து நடத்திவரக் கட்டுச் செய்து தருகிறோமென்று தேவேந்திர மகாராயன் நந்திகோத்திரம் வீரபாகுதேவருக்குக் கச்சி ஏகம்பர் காமாக்ஷியைக் கூறிய அபயஹஸ்தம் கொடுத்தான். கொடுத்தபடி வீரபாகுதேவரும் சுப்பிரமணியதேவருக்கு நம்முடைய வமிசம் கைக் கொள்வருக்கும் முன்னேறுகிய கச்சி வீரன் வமிசத்தவர் வீட்டில் எரிகிற விளக்கு மிடுகிற பிச்சையும் சிவசுப்பிரமணிய தேவர்க்கென்று வீரபாகு தேவர் அதிமதுரத் தென் மதுரை மாநகரத்தில் வையை மா நதிக்கரையில் முப்பத்து முக்கோடி தேவர் சபையில் வரும் தேவன் விட்டுணு தேவர் சாட்சியென்று கச்சியேகம்பர் காமாக்ஷியைக் கூறி சிவசுப்பிரமணிய தேவருக்கு வீரவாகு தேவர் தன் வங்கிச குலத்தைத் தாரை விட்டார். தாரை விட்டபடி சிவசுப்பிரமணிய தேவரும் தாரையேற்க, ஏற்றபடி பின்பு சிவசுப்பிரமணிய தேவருக்கு அந்த ரண வீரராட்சத விகார விருமத்தி மூடின தோஷ பாபமும் தொலைந்தது. அதன் பிறகு திரேதாயுகத்தில்

இராவண சங்காரம்

இராமருக்கு இராவணு சுரரைச் சங்கரித்த ராக்ஷதர் தோஷம் பாபம் விருமத்தியாய்த் தோஷம் தொடுத்தது. தொடுத்தபடி அவரும் அந்நாளில் நூறுகோடி சிவாலயமும் ஆயிரங்கோடி விட்டுணுவாலயமும் பதினாயிரங்கோடி சுப்பிரமணியத் திருவாலயமும் நூறாயிரங்கோடி மடாலயமும் பத்து நூறாயிரங்கோடி குருவாலயமும் ஆகவிந்தப் பஞ்சாலயம் முதலாகியதும் கட்டுவித்து பஞ்சாலயங்களுக்கும் வரிசை மானியம் குறைவில்லாமல் விட்டு கட்டின வாலயங்களுக்கு விட்ட மானியம் நழுவாமல் கட்டின வாலயமும் மங்காமல் அந்த வாலயங்களை மங்காமல் விளக்குஞ் செய்து எந்நாளும் ஒருநாள்போல நடத்தி வாரோமென்று நந்திகோத்திரம் வீரபாகுதேவர் வங்கிசம் கைக்கொள்வரில் இலட்சம் தளவீரருக்கும் முன்னேறுகியவன் பேர், கச்சி வீரன் அந்தக் கச்சிவீரன் வமிசத்தவரில் முன்னேறுகியவனுக்கு இராமர் கச்சி ஏகம்பர் காமாக்ஷியைக் கூறி அபயஹஸ்தம் கொடுத்தார். அவர் கொடுத்தபடி அந்தக் கச்சி வீரன் வமிசத்தில் முன்னேறுகியவனும் இராமர் கையில் அபயஹஸ்தம் வாங்கிக்கொண்டு கச்சி ஏகம்பரரையும் காமாக்ஷியையும் பிரார்த்தனை பண்ணி இனி எது காரியத்திற்கும் நானென்று சொல்லி பூமி தொட்டுறைத்து ராமருட நெற்றியிலிட்டார். இட்டபடி ராமருக்கும் இராக்ஷததோஷ பாபம் விகாரவிருமத்தியும் தொலைந்தது.

தொலைந்தபடி இராமரும் அப்படியே முன் சொன்னபடியாய் முடிப்பித்து நடத்தி வந்தார். அதின்பின்பு துவாபர யுகத்தில் தருமர் நூற்றுவர் சங்காரம் செய்தபோது தன்மருக்கும் [1]வங்கிசத் தோச பாபவிகார விருமத்தி தொடுத்தது. தொடுத்தபடி அவரும் அப்படியே அந்நாளில் பத்துக்கோடி சிவாலயமும் நூறுகோடி விட்டுணுவாலயமும் ஆயிரங்கோடி சுப்பிரமணியத் திருவாலயமும் நூறாயிரங்கோடி குருவாலயமும் கட்டுவித்து இது முதலாகிய பஞ்சாலயங்களுக்கும் அது அதற்கு வருஷ மானியம் குறைவில்லாமல் விட்டுக் கட்டியவாலயமும் மங்காமல் விட்ட மானியமும் நழுவாமல் விளக்கஞ் செய்து எந்நாளு மொருநாள் போல நடத்தி[2]வாரோமென்று சிவ சுப்பிரமணியத்தேவர் அருட்படியால் நந்திகோத்தரம் வீரபாகுதேவர் வமிசங்கைக் கொள்வரில் இலக்ஷம் தளவீரருக்கும் முன்னேனுகியவன் பேர் கச்சி வீரன். அந்தக் கச்சி வீரன் வமிசத்தவரில் முன்னேனுகியவன் வசத்தில் கட்டின வாலயமும் விட்ட மானியமும் சேர்த்து தருமர், கச்சியேகம்பர் காமாக்ஷியைக் கூறி அபயஹஸ்தம் கொடுத்தார். தருமர் அபயஹஸ்தப்படி அந்தக் கச்சி வீரன் வமிசத்தில் முன்னேனுகியவனும் அபயஹஸ்தம் வாங்கிக் கொண்டு கச்சி ஏகம்பர் காமாக்ஷியையும் பிரார்த்தனை பண்ணிக் கொண்டு பூமியைத் தொட்டுறைத்து கச்சிவீரனுகிறவன் தருமர் நெற்றியிலிட்டார். அவரிட்டபடி தருமருக்கும் நூற்றுவர் சங்காரஞ் செய்த வமிச தோஷபாவம் விகார விருமத்தியும் தணிந்தது. தணிந்த பின்பு தன்மரும் முன் சொன்னபடியே, முடிப்பித்து நடத்தி வந்தார். அதின் பின்பு இப்போது கலியுகத்தில் சாலிவாகன போசசவண ராக்ஷதரை சர்ப்பதோஷபாவ விகாரவிருமத்தி தொடுத்திருக்கிறது. தொகுத்தபடி இனி நீங்கள் வீரசோழன் உலாச்சேரன் வச்சிராங்க பாண்டியன் இம்மூவர் ராசாக்களுங் கூடி கச்சி ஏகம்பர காமாக்ஷிபாததல விசுக்குள்ளிருக்கின்ற ஆதி பூருவிகச் செப்பேட்டுப் பட்டையம் கறை பூருவீகக்கண் திறப்பு காண்பித்தபடி இப்புவனத்தில் இந்நாளில் நீங்கள் மூவருங்கூடி கோடி சிவாலயமும் பத்துகோடி விட்டுணுவாலயமும் நூறு கோடி சுப்பிரமணியத் திருவாலயமும் ஆயிரங்கோடி மடாலயமும் பதினுயிரங் கோடி குருவாலயமும் இது முதலாகிய பஞ்சாலயங்களும் கட்டுவித்து அதற்கு வரிசை மானியம் குறைவில்லாமல் விட்டுக்கட்டின வாலயமும் விட்டமானியமும் சிவசுப்பிரமணியதேவர் அருட்படியால் நந்திகோத்திரம் வீரபாகுதேவர் வமிசங் கைக்கொள்வரில் இலக்ஷம் தள வீரருக்கும் முன்னேனுகியவனுக்குப் பேர் கச்சி வீரன். அந்தக் கச்சிவீரன் வமிசத்தில் கட்டின வாலயமும் விட்ட மானியமும் ஒப்பித்துக் கட்டின வாலயமும் மங்காமல்

சாலிவாகன சங்காரம்

[1] வம்சத்தோஷம் [2] வருகிரோம்.

தோஷம் தீரச் செய்ய வேண்டியது

விட்ட மானியமு மங்காமல் அவனையும் துரை மரியாதி கூடி யென்னாளும் ஒருநாள்போல உங்கள் வமிசம்[1]பாரம் பரிக்கையாய் நடப்பித்து வாருமென்று இம்மூவர் ராசாக்களும் அந்தக் கச்சிவீரன் வமிசத்தின் முன்னோனாகியவன் கையில் கச்சி யேகம்பரரையும் காமாக்ஷியையும் கூறி அபய ஹஸ்தம் கொடுக்க அந்த வபய ஹஸ்தம் அந்தக் கச்சிவீரன் வமிசத்தில் முன்னோனாகியவன் உங்கள் மூவர் கையிலும் வாங்கிக்கொண்டு கச்சி ஏகம்பரரையும் பிரார்த்தனை பண்ணிக்கொண்டு யாதொரு காரியத்திற்கும் நானென்று சொல்லிக்கொண்டு பூமியைத் தொட்டு உறைத்து வீரசோழன் நெற்றியிலிட்டால் வீரசோழனுக்கும் இந்தச் சாலீவாகன போசக சமவுண சங்கார சர்ப்பதோஷ விகார விருமத்தி தணியுமென்று தெய்வக்குலக் குறத்தி வீரசோழன் கைபார்த்துக் குறிகூறிக் கேட்ட குறி யோதினாள். அவள் குறி யோதும்படி கேட்டுக் கச்சிவீரனுடன் கச்சிமுத்து வீரப்பன் உலாராச்சேரன் வச்சிராங்க பாண்டியன் இந்நால்வராகிய காரியப்பேருங் கூடி மெத்த சந்தோஷப் பட்டுக்கொண்டு இந்நால்வராகிய பேர்களும் தாங்கள் குறிகேட்ட விபரமும் தெய்வகுலக் குறத்தி வீரசோழன் கைபார்த்துக் கூறி யோதிய விபரமும் தெரியவர இந்நால்வரும் வீரசோழனுக்குச் சொன்னார்கள்.

நால்வர்கள் கூடி அபய ஹஸ்தம் தந்தது

நால்வரும் சொன்ன விபரம் தெரியவர வீரசோழனுங் கேட்டு வீரசோழனுக்கும் சற்றே விருமத்தி தணிந்து தன்னுணர்வாச்சுது. விருமத்தி தணிந்து தன்னுணர்வான பின்பு வீரசோழனும் மெத்த சந்தோஷப்பட்டுக்கொண்டு உலாராசச் சேரனையும் வச்சிராங்கப் பாண்டியனும் உட்படுத்தி தெரியவரச் சொல்லி வீரசோழனுடன் உலராச்சேரன் வச்சிராங்க பாண்டியன் அம்மூவர் ராசாக்களும் ஒப்புத்தியாகித் தெய்வக்குலக் குறத்தி குறி சொன்னபடியாய் நாங்கள் மூவர் ராசாக்களும் கச்சி ஏகாம்பர காமாக்ஷி பாததலவிசுவி லிருக்கின்ற ஆதி பூருவீகம் செப்பேட்டுப் பட்டையத்தில் உள்ளபடிக்கு இப்புவனத்தில் கோடி சிவாலயமும் முப்பதுகோடி விட்டுணுவாலயமும் நூறுகோடி சுப்பிரமணியத் தலமும் திருவாலயமும் ஆயிரங்கோடி மடவாலயமும் பதினாயிரங்கோடி குருவாலயமும் இதுமுதலாகிய பஞ்சாலயங்களும் அதுவதுக்கு வருசமானியம் குறைவில்லாமல் விட்டுக் கட்டிய வாலயமும் விட்ட மானியமும் சிவ சுப்பிரமணியதேவர் அருள்ப்படியால் நந்திகோத்திரம் வீரபாகு தேவர் வமிசம் கைக் கொள்வரில் இலக்ஷம் தள வீரருக்கு முன்னோனாகியவனுக்குப் பேர் கச்சி வீரன். அந்தக் கச்சி வீரன் வமிசத்தில் முன்னோனாகியவன் பேர் கச்சிவீர காமாக்ஷிராயன். அந்தக் காமாக்ஷிராயன் மகன் கச்சி முத்து வீரக் காமாக்ஷிராயன் வசத்தில்

[1] பாரம்பரியமாக

கட்டிய வாலயமும் மங்காமல் விட்ட மானியமும் நழுவாமல் அவனையும் அரை மரியாதை கூடி ஒருநாள்போல எங்கள் வமிச பாரம்பரிக்கையாய் எங்கள் வமிச முள்ளமட்டும் நடப்பித்து வாரோமென்று அம்மூவர் ராசாக்களும் அந்தக் கச்சி வீரன் வமிசத்தில் முன்னேறிய கச்சி வீர காமாக்ஷி ராயன் மகன் கச்சிமுத்து வீரன் காமாக்ஷி ராயன் கையில் கச்சி ஏகாம்பரரையும் காமாக்ஷியம்மனையுங் கூறி அபயஹஸ்தம் கொடுத்தார்கள். அம்மூவர் ராசாக்களும் அபயஹஸ்தம் கொடுத்தபடி அந்தக் கச்சி வீரன் வமிசத்தில் முன்னேறிய கச்சிவீர காமாக்ஷி ராயன்மகன் கச்சிமுத்து வீரன் காமாக்ஷிராயன் அம் மூவர் ராசாக்கள் கையிலும் அபயஹஸ்தம் வாங்கிக்கொண்டு கச்சி ஏகாம்பரரையும் காமாக்ஷியையும் பிரார்த்தனை பண்ணிக்கொண்டு இனி யாதொரு காரியத் திற்கும் நானென்று சொல்லிக்கொண்டு பூமியைத் தொட்டுரைத்து வீர சோழனுக்கு நெற்றியிலி விட்டார். நெற்றியிலி விட்ட வீர சோழனுக்கும் அந்தச் சாலீவாகனபோச சவணராக்ஷத சங்கார சருப்பதோஷ விருமத்தியுந் தணிந்து வீர சோழனுக்கும் விருமத்தி தணிந்து வெகுதன்ம குணமான பின்பு கச்சி வீரனுடன் கச்சி முத்து வீரப்பன் வீரசோழன் உலராச் சேரன் வச்சிராங்க பாண்டியன் இந்த ஐந்துபேரும் அதில் உட்பட்ட ராணுவத்தவரும் குறித்தியம்மை மெத்த சந்தோஷப்பட்டுக் கொண் டிருந்தார்கள். இருந்தபின்பு வீரசோழனென்கிறவன் குறத்தியம்மையை யழைத்து உனக் கென்ன வேணுமென்று அளவற்ற பவுசு செய்ய வந்தான். குறத்தி யம்மையும் எனக்கேதும் வேண்டாமென்று கச்சி வீரன் கச்சி முத்து வீரப்பன் கையிலும் மூவர் ராசாக்கள் கையிலும் அனுப்பிவைத்துக்கொண்டு தெய்வக்குலக் குறத்தி திருச்சிராப்பள்ளி நகர்கடந்து காஞ்சிக்குப் போனாள். காஞ்சிக்குப் போனபின்பு திருக்கம்பை மாநதியில் தீர்த்த மாடி கச்சி ஏகம்பரிடத்திற்குப் போய் காமாக்ஷியானாள்.

விருமத்தி தணிந்தது

குறத்தி காஞ்சி திரும்புதல்

குறத்தியம்மை போனபின்பு மூவர் ராசாக்களும் கச்சி வீரன் மகன் கச்சி முத்து வீரப்பனை நாமள் சாலீவாகன போச சங்காரஞ்செய்த நாள் இன்ன நாளென்று உன் கை விபரப்பட்டியில் கண்டெழுதி வையுமென்று சொன்னார். மூவர் ராசாக்கள் சொன்னபடி கச்சி முத்து வீரப்பனும் கண்டெழுதி வைத்த பட்டி விபரம் :

நாள் குறித்தல்

கலியுக சகாத்தம் ஆயிரத்தி நானூற்றி நாற்பத்து மூன்றுக்கு மேல் செல்லாநின்ற விப(வ) வருஷம் பங்குனி மாதம் ஏழாந் தேதி அமரபக்கம் சதுர்த்தி திதி சுக்கிரவாரம் சூரியோதயத்தில் சோழவளநாட்டில் திருச்சிராப்பள்ளிக் கோட்டையில் சாலீவாகன போச ச(ம)வணவன் வீர சோழன் சங்காரஞ் செய்து சோழவளநாட்டுத் திருச்சி

சங்கார காலம் 1443 கலி என்று எழுதியது

ராப்பள்ளிச் சீர்மைத் தோரணங் கட்டுவித்த குடி பலருக்கும் சர்க்கரை வழங்கி உடுகரை வெற்றிலை பாக்கு கொடுத்து நிகுதி செய்த நாள் இன்ன நாளென்று கண்டெழுதி வைத்தார். வைத்தபின்பு வீரசோழ

பரிசு தரல்

ஞகிறவன் கச்சி வீரனுக்கும் அவன் மகன் கச்சி முத்து வீரப்பனுக்கும் உடுபறை பாக்கு வெற்றிலை கொடுத்து பரிமள களப கஸ்தூரி பூசி வெகும(ா)ன பவுசு செய்தான். உலா ராசச் சேரனுக்கும் வச்சிராங்கப் பாண்டியனுக்கும் உடுபறை பாக்கு வெற்றிலை கொடுத்து களப கஸ்தூரிகள் பூசி வெகுமான பவுசு செய்வித்தான். அமரச்சேர்வை குறிக்காரருக்கும் அவர்க்குட்பட்ட அமரச்சேர்வை குறிக்காரருக்கும் அவருக்குட்பட்ட அமரச் சேர்வை காரருக்கும் அவருக்குட்பட்ட அமரச் சேவுகருக்கும் உடுபறை பாக்கு வெற்றிலை கொடுத்து பரிமள களப கஸ்தூரிகள் பூசி வெகுமான பவுசு கள் செய்து எல்லோருக்கும் நிகுதி செய்து சோழவள நாட்டில் திருச் சிராப்பள்ளிக் கோட்டைக்கு அதிகாரத்திற்கு ஆளும் வைத்து நிகுதி செய்து வீரசோழருடன் உல(ா)ரா(ச)ச்சேரன் வச்சிராங்க பாண்டி யன் கச்சி வீரனுடன் கச்சி முத்து வீரப்பன் ஆக இந்த ஐந்துபேரும்

சிராமலை தரிசனம்

சிறிது ராணுவத்தையுங் கூட்டிக்கொண்டு அந்தத் திருச் சிராப்பள்ளிக் கோட்டையிலிருக்கின்ற சிராமலை யென் கிற சுவாமிமலைக்குப் போய் அந்தச் சுவாமிமலை யுச்சத்தி லிருக்கின்ற உச்சிக் கண்பகுதியுங் கண்டு அந்த உச்சிக் கண்பகுதிக்கு அபிஷேக தூப தீபாரு(ரா)தனை முடித்துப் பாதசரணம் பண்ணிக் கொண்டு உச்சிக்கண்(ண) பகுதியைத் தெரிசித்துக்கொண்ட பின்பு வீரசோழன் வச்சிராங்க பாண்டியன் சேரன் கச்சிவீரன் கச்சிமுத்து வீரப்பன் இந்த ஐந்துபேருபாக அந்தச் சிராமலை நடு உச்சத்தில் நின்றுகொண்டு அந்தத் திருச்சிராப்பள்ளிக் கோட்டைக்கு நாலுதிக் கும் [1]சுத்திப் பார்த்தார்கள். பார்த்து ராணுவத்துடனே மலை விட்டி றங்கி வந்து அடிவாசலில் நின்றுகொண்டு அந்தக் கோட்டைக்குக் கயிற்றளவு நாலுதிக்கும் அழைப்பித்துப் பார்த்து அந்தக் கயிற்றளவு ஆயிரத்திற்குள்ள ரகம்ரகம் சொல்லி ஏற்றி இறக்கி நூற்றுக்குள்ளாகக் குளப்பித்துப் பத்துக்குள்ளாக நிணத்தைக்கண்டு இதுவுந்தான் இராட் சதக் கோட்டையென்று சொல்லலாம். இதுவென்று க்ஷெடி(கெடி) மன்னர்க்கல்லாமல் முடிமன்னரிருந்து அரசாண்டால் முடிபோரு தென்று அந்தச் சிந்தாமணி வாசலில் [2]கலச்சாகரம் போட்டிருந்தது. அது நீலபரமேசுவரியென்று கண்டுகொண்டு மூவர் ராசாக்களும் கச்சி வீரன் கச்சி முத்துவீரப்பன் ஆக இந்த ஐந்து பேருமாக அந்தத் திருச் சிரு(ரா)ப்பள்ளிக் கோட்டையிலிருந்து ஆனைபரிகோல் வண்டி தேர் காலாள் சதுரங்க சேனை பலமும் தங்கள் சேனை பலமானதெல்லாம்

---

[1] சுற்றி [2] கல் சாசனம்

கூட்டிக்கொண்டு திருச்சிராப்பள்ளிக் கோட்டைவிட்டுச் சிந்தாமணி வாசலிலே புறப்பட்டுத் திருச்சிரு(ரா)ப்பள்ளிநகர் கடந்து உபைய காவேரிக்கரைக்கு வந்தார். உ(ை)பயகாவேரிக் கரை நதியில் மூவர் ராசாக்களும் கச்சி வீரன் கச்சி முத்து வீரப்பனும் அவர்கள் உட்பட்ட இராணுவத்தவரும் அந்த உ(ை)பய காவோரி நதியில் தீர்த்தமாடி அந்த உ(ை)பய காவேரிக்கரை யருகிலிருக்கின்ற ஸ்ரீரங்கத் தலத்திற்குப் போனார். அந்த ஸ்ரீரங்கத் தலத்திற்குப் போய் அந்த ஸ்ரீரங்கத்தலத்தில் முன் கிரேதா யுகத்தில் இராமர் பிரதிஷ்டை செய்துவைத்த ஸ்ரீரங்கரையுங் கண்டு அவர்க்கு அபிஷேக தூப தீபாரு(ரா)தனை முடிப்பித்துப் பாதசரணம் பண்ணி எல்லோரும் தெரிசித்துக் கொண்டபின்பு மூவர் ராசாக்களும் கச்சி வீரனுடன் கச்சி முத்து வீரப்பனும் தங்கள் சேனை சதுரங்க பலத்துடனே வெள்ளையானையும் பஞ்ச கலியாணிக் குதிரையும் சீராச்சோடும் வச்சிராயுதமும் தாங்கள் சாலீவாகன போசு சங்காரத்திற்குச் சமர்க்களத்திற்குக்கொண்டு வந்த முஸ்தேதி உள்ளதெல்லாம் சாகி விச்சுக்கொண்டு தங்கள் சதுரங்க பல ராணுவத்துடனே சீரங்கத்தலம் கடந்து திருக்காஞ்சித் தலத்துக்குப் போனார். போனபின்பு அந்தக் காஞ்சி வனத்திலிருக்கின்ற கச்சி ஏகாம்பர காமாக்ஷியையுங் கண்டு கண்டபின்பு அந்தக் கச்சி ஏகாம்பர காமாக்ஷிக்கு அபிஷேக தூப தீபாரு(ரா)தனை முடிப்பிவித்து பாசரணம் பண்ணிக்கொண்டு கச்சி வீரனுடன் கச்சிமுத்து வீரப்பன் மூவர் ராசாக்களும் அவர்கள் உட்பட்ட ராணுவப் பேருமாக எல்லோரும் கச்சி ஏகாம்பர காமாக்ஷி பாதசரணம் பண்ணி தெரிசித்துக்கொண்டு இருந்தார்கள். இருந்தபின்பு வீரசோழனென்கிறவன் கச்சிவீரன் மகன் கச்சி முத்துவீரப்பனை அழைத்துக் கச்சி ஏகாம்பர காமாக்ஷி பாத தலவசுவிலிருக்கின்ற ஆதிபூருவீகச் செப்பேட்டுப் பட்டையத்தில் உள்ளபடி மேனாட்டு வெள்ளையோலைப் பட்டியிலெழுதுவித்த உன் கை விபரப்பட்டி விபரம் வாசித்து இப்புவனத்தில் குல விபரமும் முடி விபரமும் குரு விபரமும் பஞ்சாலய விபரமும் கீழ்ப்படி மேற்படி வாய்க்கால் வரப்பு அச்சுக்கட்டு [1]அணிமுறைமை தெரிய வர எங்களுக்கு உன்கைப்படி விபரமும் வாசித்துக் காண்பித்துக் கொடுமென்று வீரசோழனுடனே உலாச் சேரன் வச்சிராங்கப் பாண்டியன் அம்மூவர் ராசாக்களும் கச்சிவீரன் மகன் கச்சி முத்து வீரப்பனுக்குச் சொன்னார்கள். மூவர் ராசாக்கள் சொன்னபடி கச்சி முத்து வீரனும் அதே முறைக்குச் சம்மதித்துக் கொண்டு தன் கைப்பட்டியைக் காமாக்ஷி பாதத்தில் வைத்துப் பாத சரணம் பண்ணி யெடுத்து வந்து பட்டி வாசித்தான். பட்டி வாசித்த படி மூவர் ராசாக்களும் அந்தப்பட்டி விபரங்கண்டு இப் புவனத்தில்

சீரங்க தரிசனம்

காஞ்சி தரிசனம்

ஏடு வாசித்தல்

[1] அணை

குலம்வகுத்தது 1446 கலி

குலம் வகுத்தார். குலம் வகுத்த நாள்விபரம். கசுயுகச் சகாத்தம் ஆயிரத்தி நானூற்றி நாற்பத்தி நாலுக்குமேல் செல்லா நின்ற சுக்கிர வருசம் வைகாசி மாதம் பத்தாந் தேதி சோம வாரம் பூர்வ பக்கத் தசமியினாள். காஞ்சிபுரத்துக் கச்சி ஏகாம்பர காமாக்ஷி பாத சன்னிதிவாசலில் கச்சிவீரன் மகன் கச்சி முத்து வீரப்பன் ஆதி பூருவச் செப்பேட்டுப் பட்டையத்திலுள்ளபடி தன் கைவிபரப்பட்டி வாசித்துக் காண்பிக்கக் காண்பித்தபடி வீர சோழன் உல(ர)ரா(ச)ச்சேரன் வச்சிராங்க பாண்டியன் இந்த மூவர் ராசாக்களுங் கேட்டு அந்தக் கை விபரப் பட்டியிலுள்ளபடி இப் புவனத்தில் பதினெண் சாதி குலவகுப்புங் கண்டு தொண்ணூற்றெட்டுச் சாதியாய் வகுத்தார். வகுத்தபடி விவரமாகக்காண்க. பதி

சாதி வகுத்த விபரம்

னெண் பாஷைக்கும் பதினெண் சாதியாகவும் இப் பதினெண் சாதியும் தொண்ற்(ணூற்)றாறு சாதியாய் வகுத்த விபரங்காண்க. பிருமசாதி-1 க்ஷத்திரியசாதி-1 வைசியசாதி-1 சூத்திர சாதி-1 ஆக சாதி வருணம்-4 ஒரு வருணம் நாலு சாதியாகவும் சாதி நாலுக்கும் ஒரு சாதிக்கு ஆறுசாதியாகவும் ஆக வருணத்திற்கு இருபத்திநாலுசாதியாகவும் ஆக வருணநாலுக்கும் தொண்ணூற்றாறு சாதியாகவும் இதன் கீழ்ப்படி சாதி பறையன் சாதி-1 மாதிகன் சாதி-1 ஆக சாதி தொண்ணூற்றெட்டுச்சாதியாய் வகுத்த விபரங்கண்டு வீர சோழன் உலராச் சேரன் வச்சிராங்க பாண்டின் மூவர் ராசாக்களும் இந்த ஐம்பத்தாறு தேசபுவனத்தில் கோடி சிவாலயமும் பத்துகோடி விஷ்ணுவாலயமும் நூறுகோடி சுப்பிரமணியத் திருவாலயமும் ஆயிரங்கோடி மடவாலயமும் பதினாயிரங்கோடி குருவாலயமும் இதுமுதலாகிய பஞ்சாலயங்களும் கட்டுவித்து அதற்கு வரிசை மானியம்

18 பாஷை 18 சாதி 4 சாதி-86சாதி ஆகி பறையன் மாதிகள் சேர்ந்து 98 சாதி ஆகியது

பஞ்சாலயம் கட்டுவித்தது

குறைவில்லாமல் விட்டுவிட்ட மானியத்தில் கச்சி வீரப்ப முதலிக்குப் பத்திலொன்று வரிசை மானியம் கண்டு நிகுதி செய்து மூவர் ராசாக்களும் கட்டினவாலயமும் முன்னிருந்த வாலயமும் இதுகளுக்கு விட்ட மானியமும் சிவசுப்பிரமணியதேவர் அருட்படியால் நந்திகோத்திரம் வீரபாகுதேவர் வமிசம் கைக்கொள்வரில் இலட்சம் தளவீரருக்கும் முன்னோனாகிய கச்சி வீரப்ப முதலி வசம் ஒப்புவித்து மூவர் ராசாக்களும் கச்சி யேகாம்பர காமாக்ஷியம்மன் சன்னிதியில் முன்னிலையாக வினிமேல் எங்களைக் கொண்டு காரியமில்லை யென்று கைதட்டிப் பழி சாற்றி யொப்புவித்து மூவர் ராசாக்களும் பிராமணர் அக்கிரஹாரம் மாவடி பூங்காவனம் தண்ணீர்ப் பந்தல் சாலை தோப்பு அன்னசத்திரம் பண்டிதர் மருத்துவர் வைத்தியர் சாஸ்திரி புரோகிதர் கவிவாணர் பட்டர் கூனர் குருடர் குறைக்கால் முடவர் அத்திபரதேசி ஆருமற்றவர்

இவர்கள் முதலாகிய பேருக்கெல்லாம் இவர் ராசாக்களும் வரிசை மானியம் விட்டு மனுநீதி கொண்டு ராசநீதி யொழுக்கந் தவறாமல் எந்நாளும் ஒருநாள்போல மூவர் ராசாக்கள் தங்கள் வமிசபாரம்பரிக்கையாய் வீரசோழன் முதற்கொண்டு உத்தமசோழன் உறையூர் நகரில் பட்ட முடிவுநாள் வரைக்கும், இந்தச் சோழன் தலைமுறை இருபத்தைந் துக்கும் மனுநீதி கொண்டு இராசநீதிமுறைமை ஒழுக்கந் தவறாமல் தங்களிரு(ரா)ச்சியங்களி லிருந்துகொண்டு சிவாலயமும் விஷ்ணுவாலய மும் சுப்பிரமணியத் திருவாலயமும் மடவாலயமும் குருவாலயமும் இந்தப் பஞ்சாலயங்களும் மங்காமல் ராயநீதியுடனே மனுநீதி கொண்டு இராச்சியபாரஞ் செய்துகொண்டு வந்தார்கள்.

உறையூர் 25 சோழர்கள் ஆண்டது

இப்படி சேரன் பாண்டிய னிவர்க ளிரண்டுபேரும் இவர்கள் வமிச பாரம்பரிக்கையாய் இராசநீதி முறைமை யொழுக்கந் தவறாமல் சிவாலயமும் விஷ்ணுவாலயமும் சுப்பிரமணியத் திருவாலயமும் மட வாலயமும் குருவாலயமும் இந்தப் பஞ்சாலயங்களும் மங்காமல் என் னளும் ஒருநாள்போல இராசநீதியுடனே மனுநீதிகொண்டு இராச்சிய பாரஞ் செய்துகொண்டுவந்தார்கள். சோழன் வமிசத்தில் வீரசோழன் முதற்கொண்டு உத்தமச்சோழன் வரைக்கும் [1]தலமுறை யிருபத்தைந் துக்கும் இந்த இருபத்தைந்து தலமுறை சோழன்வரைக்கும் ராசநீதி முறை யொழுக்கம் தவறாமல் சிவாலயம் விஷ்ணுவாலயம் சுப்பிரமணி யத் திருவாலயமும் மடவாலயமும் குருவாலயமும் இந்தப் பஞ்சாலயங் களும் மங்காமல் என்னளும் ஒருநாள்போலே ராசநீதியுடன் மனுநீதி கொண்டு ராச்சிய பரிபாலனஞ் செய்துகொண்டு வந்தார்கள். இருபத் தாறாந் தலமுறைச் சோழன் உத்தமச் சோழன் மகன் உறையூர்ச் சோழன் நீதிதப்பி அவன் துரைசெய்கிற விபரம்.

---

## கரிகாலச் சோழன் நாள் பூருவிகப் பட்டைய விவரம்

உத்தமச் சோழனுக்கு உறையூர் நகரில் பட்ட முடிவினுள் சென்னம் அவன் மகன் உலையூர்ச் சோழனுக்கு உறையூர் நகரில் பட்டமான நாள் கலியுக சகாத்தம் மூவாயிரத்தைந்நூற்று முப்பத்தைந்துக்கு மேல் செல்லா நின்ற சித்தாத்திரி வருஷம் ஐப்பசி மாதம் 27 சுக்கிர வாரமும் பஞ்சமியும் பெற்ற நாளில் உறையூர்ச் சோழ னுக்குப் பட்டமாகி ராச்சிய பரிவாரஞ் செய்து வரும் போது அந்நாளில் தென் மதுரைமாநகரில் சொக்கநாதப்

III கரிகாலச் சோழன் பட்டையம் உறையூர் சோழன் பட்டம் கலி 3535

---

[1] தலை

மதுரை மீனாட்சி சவுந்திர பாண்டியன் பட்டம் 3537

பாண்டியற்குப் பட்ட முடிவின் நாள் செனனம். அவன் மகன் மீனாக்ஷி சௌந்திர பாண்டியற்குப் பட்டமான நாள் கலியுக சகாத்தம் மூவாயிரத்தைந்நூற்றி முப் பத்தேழுக்கு மேல் செல்லா நின்ற துன்முகி ௵ கார்த் திகை ௴ 7-௳ புதன்கிழமையும் பஞ்சமியும் பெற்ற நாளில் தென் மதுரை மாநகரில் மீனாக்ஷி சௌந்திர பாண்டியற்குப் பட்டமாகி அவரும் இராச்சிய [1]பரிபாரம் செய்துகொண்டு வரும் போது அந்நாளில் கொங்கு தாராபுர நகரில் சங்கரநாத சேரனுக்குப் பட்ட முடிவின் நாள் செனனம். அவன் மகன் சேரமான் பெருமாள்

கொங்கு தாராபுரம்சோமான் பெருமாள் கலி 3538

என்னுஞ் சேரனுக்குப் பட்டமான நாள். கலியுக சகாத் தம் மூவாயிரத்தைந்நூற்றி முப்பத்தெட்டுக்கு மேல் செல்லா நின்ற துந்துபி ௵ ஆவணி ௴ 16-௳ சோம வாரம்பஞ்சமியும் பெற்றநாளில் கொங்குதாராபுர நகரில் பட்டமாகி அவரும் இராச்சியபரிவாரஞ் செய்துவரும்போது அந்நாளில் காஞ்சீபுரநகரில் கச்சிமுத்துவீர காமாக்ஷிராய சிரச்சிங்காதன கருத்த ராகிய சமைய முதலிக்குப் பட்டம் முடிவின் நாள் செனனம். அவன் மகன் கச்சி வீர வெங்கடாசல முதலிக்குப் பட்டமான நாள் கலியுக சகாத்தம் மூவாயிரத் தைந்நூற்று முப்பத் தொன்பதுக்கு மேல்

காஞ்சி கச்சிவீர வெங்கடாசல முதலி பட்டம் 3539

செல்லா நின்ற [2]உதிரோத்காரி ௵ வைகாசி ௴ 5-௳ சுக்கிரவாரமும் பஞ்சமியும் பெற்ற நாளில் காஞ்சிபுர நக ரில் கச்சி வீர வெங்கடாசல முதலிக்குப் பட்டமாகியபின் அவர்க்குட்பட்ட பேர் கச்சி வீர காமாக்ஷிராய சிரச்சிங் காதன கர்த்தராகிய [3]சமைய முதலியென்று பேராகியவ ரும் முன்னடந்தபடியாய் ஐம்பத்தாறுதேச புவனங்களில் உட்பட்ட அறுசமயமும் விசாரித்து நடந்து வரும்போது

முதலி வம்சத்தில் மற்ற உறிமையாளர்கள்

அந்நாளில் அவர்க்குட்பட்ட காரியப் [4]பேர் நடந்துவருவ தற்கு [5]விபரணங் காண்க. சாதி சமையப்பட்டம் முதல் நாட்டா(ண்)மைக்குக் கச்சிமுத்துவீர காமாக்ஷிராயச் சிரச்சிங்காதனக் கர்த்தராகிய சமைய முதலிக்குச் சகோ தரமாகிய கச்சிகச்சாலையப்ப முதலிஎன்றும் சாதிசமய தலவிசாரணைக் குக் கச்சி முத்துவீர காமாக்ஷிராய சிரச்சிரச்சி சிங்காதனக் கர்த்தரா கிய சமையமுதலிக்கும் கச்சிக் கச்சாலையப்ப முதலிக்கும் மைத்துனரா கிய சுந்திரமூர்த்தி முதலி மகன் சூரியமூர்த்தி முதலியென்றும் சாதி சமையப் பட்டத்துத் தல விசாரணை நாட்டுக் [6]கர்ணிகத்துக் கச்சிமுத்து வீரக் காமாக்ஷி ராயச் சிரச்சிங்காதக் கர்த்தராகிய சமைய முதலிக்கும், இவர்கள் சகோதரமாகிய கச்சிக் கச்சாலையப்ப முதலிக்கும் இவர்களுக்கு மைத்துனராகிய சூரிய மூர்த்தி முதலிக்கும்

---

[1] பரிபாலனம் [2] ருதிரோத்காரி [3] சமைய என்ற இடமெல்லாம் 'சமய' என்று வாசிக்க [4] பேறு [5] விவரணம் [6] காணிகம்-கணகு

இவர்கள் மூவருக்கும் மைத்துனன் அமராபதி பட்டத்துக் கதிபனென்றும் கர்ணிகத்துக் திருவேங்கடமுதலி மகன் வடமலையப்பமுதலி, இவன் மகன் அமராபதி முதலியென்றும் சகய சங்கதி விசாரணைக்குக் கச்சி மூத்து வீரகாமாக்ஷி ராயச் சிரச்சிங்காதன கர்த்தராகிய சமய முதலிக்கும் இவர்களுக்குச் சகோதரமாகிய கச்சிக்கச்சாலையப்ப முதலிக்கும் இவர்களிருவருக்கும் மைத்துனராகிய சூரிய மூர்த்தி முதலிக்கும் இவர்கள் மூவருக்கும் மைத்துனராகிய அமராபதி முதலிக்கும் இவர்கள் நால்வருக்கும் மைத்துனன் சோலையங்கிரி முதலி மகன் வாரண வாசி முதலியென்றும் சமைய இழந்தாரி திருத்தணி முதலி மகன் தனுக்கோடி முதலியென்றும் சாதி சமைய நாட்டுச் சோழந்தாரி [1]ஞகபாச்ச சொங்கலிங்க னென்றும் இப்படி நடந்து வரும் காரியப் பேருடனே கச்சி வீரக் காமாக்ஷிராயச் சிரச்சிங்காதனக் கருத்தாராகிய சமைய முதலியும் காஞ்சீபுர நகரிலிருந்துகொண்டு முன்னடந்தபடியாய்க் கச்சி ஏகாம்பர காமாக்ஷியம்மன் திருக்கோவில் ஊழியமும் [2]தூட்சி வராதபடி விசாரித்துக் கொண்டு ஆதிகாஞ்சிபுரம் மதுரையாதீனம் சமஸ்தானத்துக்குட்பட்ட ஐப்பத்தாறு தேசபுவனங்களில் கோவிலூழியமும் சமையமும் விசாரித்து நடத்தி வரும் போது அந்நாளில் வலங்கைக்குத் தலைவனாகிய கச்சி வீரவரதராய செட்டி வமிசத்தில் கத்தூரி ரங்கப்பச் செட்டிக்குச் செட்டிமையாகி அவரும் சின்னக் கச்சியிலிருந்து கொண்டு முன்னடந்தபடியாகி ஆதிகாஞ்சீபுரம் மதுரை சமஸ்தானத்திற்குட்பட்ட ஐம்பத்தாறு தேச புவனங்களில் கட்டிய பட்டணம் பேட்டை நகரம் அங்காடி இது முதலாகியதிலுட்பட்ட [3]சேட்டு வியாபாரம் வர்த்தகருக்கு நாணயக் குத்துப்பாடு வராதபடிக்கு எச்சத்துக்கு இல்லாமல் விசாரித்து நடந்து வரும் போது அந்நாளில் இடங்கை வலங்கை இத்த விருவற்(ருக்)கும் பொதுவனாகிய கச்சி வீரவேளாளராயன் வமிசத்தில் வெண்ணை நல்லூரில் சடையப்பன் வமிசத்தில் குமார சடையப்பன் அந்தக் குமார சடையப்பனுக்கு இந்த வலங்கையும் ஊர் கு(ட்)டியானவர்க்கு முதன்மையும் செட்டி வியாபார வர்த்தகர்க்கு முதன்மையும் இப்படியாதாமொரு ஞாயமும் அவர் முன்னிட்டுத் தீர்க்கத் தக்கதாக மூவர் ராசாக்களும் முன்னவர் வமிசத்தவர்க்குக் கட்டுச் செய்திருந்தபடியினாலே அந்த [4]........ராச சடையப்பனும் வெண்ணை நல்லூரிலிருந்து கொண்டு பூமியை ஆயிரம் பணாமுடிச் சேஷன் தாங்கினாப் போலேயும் அந்த ஆயிரம் பணாமுடிச் சேஷனை கூர்மந்தாங்கினாப் போலவும் கூர்மத்தைச் சலந்தாங்கினாப் போலவும் அத்தன்மை போலே வெண்ணை நல்லூரிலிருந்து குமர ராச சடையப்பனும் கஸ்தூரி

சிறப்பு கோவில் ஊழியம்

வலங்கைத் தலைவன் கஸ்தூரி ரங்கப்ப செட்டி

பொதுக் குடியானவர் தலைவன் வெண்ணை நல்லூர் சடையப்பன்

---

[1] நாக பாச [2] தூசி - தூஷணம் [3] செட்டி [4] குமார

ரங்கப்ப செட்டியும் கச்சிவீர வெங்கடாசல முதலியும் இப்புவியிலுட்பட்ட ஆதிகாஞ்சீபுரம் சமஸ்தானத்திற்குட்பட்ட ஐம்பத்தாறு புவனங்களிலும் முடிமன்னற்கும் நி....மந்து பாரபத்தியத்தை முட்டி யெழுப்பி நடத்திக் கொடுத்து நடந்து வரும் போது அந்நாளில் மூவர் ராசாக்களும் அவரவர் தேச ராச்சியங்களிலிருந்து கொண்டு அவரவர் ரச்சிய பரிபாரஞ் செய்து வரும் போது அந்நாளில் சேரன் பாண்டியன் இவர்கள் இரண்டு பேரும் அவர்கள் முன்னிட நடந்த படியாய் தங்கள் தங்கள் தேசங்களில் ராசநீதி முறைமை யொழுக்கந் தவறாமல் மடவாலயம் சிவாலயம் மங்காமல் விசாரித்துக் கொண்டு நடந்து வரும் போது அந்நாளில் உறையூர்ச் சோழனென்கிற

உறையூர்ச் சோழன் ஒழுக்கம் தவறியது

வன் தன் தேசங்களில் ராசநீதி முறைமை யொழுக்கந் தவறிச் சிவாலயம் குருவாலயம் விஷ்ணுவாலயம் சுப்பிரமனியத் திருவாலயம் மடவாலயங்களுக்கும் விட்ட வருஷமானியங்களுக்கும் அவனும் விகா(ர)ற வெறி கொண்டு நீதி நிலமை விசாரியாமல் அவனுந் தனக்குட்பட்ட தேச ராச்சியத்திலே அனியாயமாகி தெண்டம் முட்டுக்கொளப்படும் படியும் அடித்து வல்லடியும் வழிபறியும் பிடுங்கி முன் சாலீவாகனன் நாள் போலே அவனும் மகாந்து சிளங்கள் செய்தபடியினாலே அவனுக்குட்பட்ட தேசராச்சியத்தில் மழை விளைவற்று ராச்சியம் மெலிந்து மெத்த அவர் சாதி ஆனபடியினாலே ஆதி சதாசிவனுக்குக் கோப தேவதைகள் மானிட சென்மங்களிலும் முற்றச்செய்ய ஆதி சதாசிவனும் கோப தேவதை முறை கேட்டு முன் சாலிவாகனன் நாளில் சவு....பாண்டவ....மண்மாரி பொழிந்து பூமி பாரத்தில் முன்னாளில் மறைத்தாற்போல இந்நாளில் உறையூர்ச் சோழனையும் மண்மாரி பொழிந்து, பூமிபாரத்தில் மறைக்கவேணுமென்று மண்மாரி பொழிய ஆதி சதாசிவன் காஞ்சீபுரத்துக் க(ரு)ரிமாரிக்குக் கட்டுச் செய்தார். காஞ்சீபுரத்துக் கருமாரியும் சதாசிவனிடத்தில் மண்மாரி பொழிய வாக்குவரமும் வாங்கிக்கொண்டு வரும்நாளில் செவந்தீசுரம் வந்து

மண்மாரி பொழிந்தது

உறையூர்ச் சோழனுக்குச் சொப்பனத்தில் சொல்லவே உறையூர்ச் சோழனும் அவர் சொன்னபடி உறையூர்ச் சோழனும் மண்மாரிக்கு நாம் நம்முடைய தேசத்திலிருந்தால் இறந்துபோவோமென்று மெத்த ஆலோசித்துக்கொண்டு சேர கொங்கு நாட்டில் போய் ஒளிந்திருந்து இந்த மண்மாரிக்குத் தப்பிப் பிழைப்போமென்றும் இந்த மண்மாரி நாள் போகவிட்டு நம்முடைய நாடு தேசத்திற்கு வருவமென்று உறையூர்ச் சோழன்

அரசி கண்ட சிங்கம்மாள் சாமளாம்பாள்

யோசித்துக்கொண்டு உறையூர்ச் சோழன் பெண்சாதி பட்டத்து(க்கு) ஸ்ரீ என்கிறவள் பேர், சிங்கம்மாள் என்கிறவள், மூன்றுமாதக் கருப்பிணியா யிருப்பவள். அந்தக் கருப்பிணியா யிருக்கப்பட்ட சிங்கம்மாளையும்

அவ்வளுக்கு இளைய குடியாகிய சாம(ள)ணம்மாளையும் ஆக விந்த விரண்டு பேரையுங் கூடக்கூட்டி சேரகொங்கு நாட்டிற்கு மேற்கேமுகமாக அனுப்புவித்து உறையூர்ச் சோழனும் ஒண்டிக்குதிரை யேறிக் கொண்டு குதிரைக்காரப் பறையனும் தானுமாக துருசுவேகமாய் சேர கொங்கு நாட்டுத் திசைநோக்கி உறையூருக்கு மேற்கே வரும்போது காஞ்சீபுரத்துக் க(ரு)ரிமாரி யென்கிறவள் ஆதி சதாசிவன் தனக்கு மண்மாரி பொழிய வாக்குக் கொடுத்தபடியினாலே உறையூர்ச் சோழ னுக்கு இனி நாமள் மண்மாரி பொழிவிக்க வேணுமென்று அந்தக் கருமாரியென்கிறவள் சதாசிவனை பஞ்சாக்ஷர முகாந்திரத்தினாலே தியானித்து மண்மாரி யிறக்கி நெற்றிக்கண் திறந்து உறையூர்ச் சோழன் உறையூருக்கு மேற்கே வரும்போது சூறைக்காற்றுப் போல் வளைந்து மண்ணும் விண்ணும் தெரியாமல் மறைத்து அந்தக் கருமாரி யென்கிறவள் தன்னுடைய நெற்றிக்கண் திறந்து மண்மாரி பொழிவித் தாள். கருமாரி மண்மாரி பொழிய உறையூர்ச் சோழன் மண் மாரியில் மறைந்து உகந்தூர்ந்து போக, போனபின்பு ஆதி காஞ்சீபுரத்தில் கருமாரிக்கு உறையூர்ச் சோழனுக்குச் சதாசிவன் வாக்குப்படி நெற்றிக்கண் திறந்து மண்மாரி பொழிவித்தபடியினாலே காஞ்சீபுரத்துக் கருமாரிக்குக் கண்ணனூர் மாரியென்று [1]போராச்சுது. ஆனபின்பு உறையூர்ச் சோழனும் கருமாரி பொழிவித்த மண்மாரி யில் மறைந்து போனபின்பு அவர் பெண்சாதி சிங்கம் மாள் சாம(ள)ணம்மாள் இவர்கள் இரண்டுபேரும் சேர கொங்கு நாட் டிற்கு வந்து சேரர் கொங்கு நாட்டில் பிராமணர் பாடியில் சேர்ந்து கூலிவேலை செய்து கொண்டு இருக்கும்போது அந்தச் சிங்கம்மாள் வயிற்றிலிருந்த கரு(ப்)பம் பத்து மாதம் திகைந்து ஆண் பிள்ளையாய்ப் பிறந்தது. ஆண் பிள்ளையாய்ப் பிறந்து வளர்ந்து பிரபலமாகிப் பிரா மணர் பாடியில் சேர்ந்து அந்தப்பிள்ளையும் தனக்குள் தானே சகல வித்தையுங் கற்று வயதும் பன்னிரண்டாகி யிருக்கும்போது அந்நாளில் அந்தச் சோழமண்டலம் தொண்டை மண்டலமாகிய ராச்சியத்திற்கு அதிகாரக் கருத்தரில்லாமல் ராச்சியம் திக்கற்று மெத்தவதிப்பட்டி ருக்கும் போது அவ்விடத்திலுள்ள காரியத்தார் திருவாரூரிலே கூட்டங் கூடியிருந்துக் கொண்டு வெண்ணைநல்லூர் சடையப்பனுக்கு வரவோலை விட்டார்கள். சடையப்பனும் காரியத்தார் விட்டவோலை படி [2]திருவாலூருக்கு வந்து காரியத்தாரைக் கண்டு கூடி ஆலோசித்துக்கொண்டு சடையப்பனுகிறவன் காரியத் தானுமாக காஞ்சீபுரத்துக் கச்சிவீர காமாக்ஷிராய முதலிக்கு கவரை [3]வழிஞ்சியால் கஸ்தூரிரங்கப்ப

சோழன் மறைவு

கண்ணனூர் மாரி

சிங்கம்மாளுக்குப்பிள்ளை பிறந்தது

அரசனைத் தெரிந் தெடுக்க தலைவர்கள் அழைக்கப் படல்

1 போராயிற்று 2 திருவாரூர் (பின்னும் அப்படியே) 3 வழியில்-வகுப்பில்

செட்டிக்கும் வரவோலை விட்டார்கள். விட்ட வோலைப்படி கச்சிவீர காமாட்சிராய முதலியும் கஸ்தூரி ரங்கப்ப செட்டியும் அவர்களுக் குட்பட்ட காரியத்தாரும் தானுமாகத் திருவாலூருக்கு வந்து சடை யப்பனையும் காரியத்தாரையுங் கண்டு கூடி ஆலோசித்துக்கொண்டு கச்சிவீர காமாக்ஷிராய முதலியும் சடையப்பனும் கஸ்தூரி ரங்கப்ப செட்டியும் அவர்களுக்குட்பட்ட காரியத்தாருமாகத் திருவாரூர் நகர் கடந்து காசிக்குப் போய் காசி விசாலாக்ஷிக்கு ஆருதனை முடித்து, ஆருதனைப் பூசை முகத்தில் நின்றவள் கச்சி வீரவெங்கடாசல முதலி மனையாள் அருணகிரி அம்மாளென்று அறியவும். அந்த வாருதனைப் பூசை முகாந்திரத்தினாலே விசாலாக்ஷி பாதாள தளவிசுல் இருக்கின்ற வெள்ளை யானையைச் சமைய முதலி யிப்பால் தருவித்துக்கொண்டு பாதாள தளவிசை மூடி முத்திரித்துப் போட்டு விசாலாக்ஷி தேவிக்கு ஆருதனை முடித்துத் தரிசித்துக்கொண்டு கச்சிவீர காமாக்ஷிராய முத லியும் சடையப்பனும் கஸ்தூரி ரங்கப்ப செட்டியும் அவர்களுக்குட்பட்ட காரியத்தருமாகக் காசி நகர் கடந்து திருவரலூருக்கு வந்தார்(கள்). தியாகராயருக்கு அபிஷேகம் தூபதீபாருதனை முடிப்பித்துவித்து எல்லாரும் தியாகராயரைத் தரிசித்து அர்ச்சித்துக்கொண்ட பின்பு சமய முதலியும் தியாகராயர் கழுத்தில் ஐந்தருவின் திருமாலையும் வாங் கித் தியாகராயர் பாத திருமஞ்சனம் பொன்செம்பி [1]லிரப்பி ஆதிமுன்

அரசனைத் தெரிந்தெடுக்க யானையை ஏவுதல்

காசிதலவிசிலிருந்து வந்து பட்டத்து வெள்ளை யானையை வரவழைத்து வெள்ளை யானையும் துதிக்கையில் திருமஞ் சனமும் திருமாலையுங் கொடுத்து அந்த வானையைப் பார்த்து நீ யாரை வைத்தாலும் அவனே எங்களுக்குத் துரையென்று சமைய முதலியும் சடையப்பனும் கஸ்தூரி ரங்கப்ப செட்டியும் அவர்களுக்குட்பட்ட காரியத்தாரும் மற் றும் அரமனைவாசற் காரியத்தாரும் தொண்டைமண்டல சோழமண்ட லக் குடிவரிசையும் மற்றுமுள்ள சனங்களும் சகல சருவ சனங்களும் அந்த யானைக்கு அறிக்கை செய்து நமஸ்காரம் பண்ணித் துரையை யழைத்துவர அனுப்பினார்கள். அனுப்பினபடி அந்த ஆனையும் கூட் டத்தில் புகுந்து துரையெங்கே யென்று ஒவ்வொருவருய்த் தெரிந்து பார்த்துக் காணுமல் அந்தக் கூட்டம் விட்டு அப்பால் போய் சோழ மண்டலம் தொண்டை மண்டலமாகிய ராச்சியபாரம் தேடிப்பார்த்துக் காணுமல் சேர கொங்கு நாட்டில் திசை நோக்கி மேற்கு முகமாகப் புறப் பட்டுவந்து வெள்ளை யானைப் பட்டியில் இராத் தங்கி மேற்கு முகமாய்ப் புறப்பட்டுச் சேர கொங்குநாட்டில் திசை நோக்கி வரும்போது கொங்கர் நாட்டில் குளத்துக்குள்ளே, அந்த ராசாவின் மகன்

---

[1] இரப்பி

கொங்கு நாட்டில் வளரும் அரசகுமாரன் தெரிந்து எடுக்கப்படல்

சிறிது பிராமணப் பிள்ளைகளுடனே விளையாடும் போது அந்த யானை வந்து ராசாவின் மகனைக் கண்டு இவனே நம்முடைய ராசாவென்று அவன் சிரசில் திருமஞ்சனத்தைச் சொறி(ரி)ந்து திருமாலையைக் கழுத்தில் போட்டுத் தன் துதிக்கையினாலே ராசாவின் மகனை ஹஸ்தத்தைப் பற்றியெடுத்துத் தன் மத்தகத்தின் பேரில் வைத்துக் கொண்டு போக வேணுமென்று அந்த யானையாகிறது எடுத்தபோது அந்த ராசாவின் மகனாகிறவன் அந்த யானைக் கோட்டைப் பிடித்துத் தள்ளிவிட யானையெடுக்க அந்த ராசாவின் மகன் பூமியைப் பற்றிக் கொள்ள அந்த ராசாவின் மகன் பூமா தேவிக்கடைக்கலமென்று பூமியைப் பற்றிக் கொண்ட படியினாலே பூமா தேவியும் அந்த ராசாவின் மகனைப் பற்றிக் கொள்ள இப்படி அந்த ராசாவின் மகனும் யானையும் தர்க்கமாடும் போது அந்த ராசாவின் மகன் கூட விளையாடின பிராமணப் பிள்ளைகள் எல்லோரும் போய் அந்த ராசாவின் தாயாருடனே உன் மகனை யொரு வெள்ளை யானை யெடுத்துக் கொண்டு [1]போகுதென்று சொல்ல அவளும் அப்பவே அலறிக் கொண்டு ஓடி வந்து பார்க்கும் போது

சிங்கம்மாள் ஒத்துக் கொள்ளல்

அவளும் யானையைக் கண்டு சந்தோஷப்பட்டு அந்த யானையைப் பார்த்து இந்த யானை நம்முடைய மகனைக் கொல்ல வந்ததல்ல, அவனை ரக்ஷிக்க வந்ததென்று இது யானையல்ல நம்முடைய வமிசக் குலதெய்வ மென்று கண்டு கொண்டு இந்த யானையிடத்துக்கு வந்து இந்த வெள்ளை யானையை வலமாக வந்து அந்த யானையின் பாதத்தில் விழுந்து பணிந்து

சாந்தி கழித்தல்

நமஸ்கரித்துக் கொண்டு தன் மகனுக்குப் பூமியை உரை(ற)த்து நெற்றியிலிட்டுக் கரியை யெடுத்து வலது காலிலே அகாரமிட்டெழுதிக் கரிகாலச் சோழனென்று பேரு மிட்டு அந்த யானையைக் கையெடுத்துக் கும்பிட்டு இனி

கரிகாலச் சோழன் என்று பெயரில்

யுன் ராசாவை எடுத்துக் கொண்டு போவென்று சொன்னாள். சொல்லவே அப்ப அந்த யானையும் மெத்த சந்தோஷித்து மும்மதமாகி யந்த ராசாவை வாரியெடுத்துத் தன் மத்தகத்தின் பேரில் வைத்துக் கொண்டு மதவீரிட்டுத் தாமந்தயானை அந்த ராசாவின் மகனை வாரியெடுத்த

யானைவாரிக் குளம்

படியினாலே அந்தக் குளத்திற்குப் பேர் யானைவாரிக்குளமென்றும் [2]பேராச்சுதாம். அந்த யானைக்குளங் கடந்து கிழக்கேமுகமாக சோழதேச திசைநோக்கிப் போகும் போது அந்தச் சிங்கம்மாளும் அவளுக்கிளைய சாம(ள)ணம்மாளும் அந்த யானையைப் பற்றிப் பின்(தொ)துடர்ந்து போகும்போது அவர்களைச் [3]ச........சரித்த பிராமணரில் முதன் ஆளியரில் ராமபட்டரென்றும்

---

1 போகிறதென்று 2 பேர் ஆயிற்று 3 சம்ரக்ஷித்த

சந்திரபட்டரென்றும் அந்த இரண்டுபேரும், அந்த அம் மன்னவர்களைப் பின்தொடர்ந்து போயிருந்தப் பிராமணர், அம் மன்னவர்களுக்கு மெத்த உபசார [1]சொஸ்த்தி சொன்னார்கள். சொன்னபடி

சிங்கா நல்லூர் சியாமளா புரம் கட்டப்படல்

அந்த அம் மன்னவர்களில் சிங்காரம்மாளென்கிறவள் அந்த ராமபட்டருக்குச் சிங்கநல்லூரென்று அக்கிரஹாரம் கட்டச்சொன்னாள். சாமளம்மாள் என்கிறவள் தன் பேருக்குச் சந்திரபட்டரைக் கொண்டு சாமளாபுரமென்று அக்கிரஹாரம் கட்டுவிக்கச் சொன்னாள். இவர்கள் இரண்டுபேர் பிராமணருக்கு அக்கிரஹாரம் கட்டச்சொல்லி நிருதிசெய்து உங்களுக்கு நம்முடைய மகன் எங்கள் ராச்சியத்துக்குப் போய் ராசவதிகாரம் வாங்கிக்கொண்டு திரும்ப வந்து எல்லா நிருதியும் செய்து தாரைவிட்டுக் கலச்சாகரம் போட்டுக்கொடுப்பானென்று சொல்லி அந்தப் பிராமணரிடத்தில் அனுப்பிவித்துக்கொண்டு அந்தப் பிராமணரையும் அவரவர் [2]தாவுக்கு அனுப்பிவித்துப் போட்டு அந்த மன்னவர்களிரண்டுபேரும் தன் மக்களைப் பின்தொடர்ந்து போனார்கள். போகவே அந்த ஆனையும் அந்த ராசாவின் மகனைக் கொண்டு போய்த் திருவாரூரில் தியாகராயர் கனகசபை வாசலில் கூடி இருக்கின்ற கூட்டத்தாருகிய கச்சிவீர காமாக்ஷிராய முதலியும் சடையப்பனும் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் அவர்களுக்குள் பட்டக்காரியத்தாரும் அரமனை வாசல் காரியத்தார் கருணீகரும் தொண்டை மண்டலம் சோழமண்டலம் குடிவரிசையும் கூடி யிருக்கின்ற சபையில் இந்த யானை கொண்டுவந்த ராசாவின் மகனை யிறக்கி விட்டுத் தாம் விட்டபடி யானையைக் கண்டு எல்லோரும் நமஸ்காரஞ் செய்துகொண்டு அந்த ராசாவின் மகனையும் அவன் தாய்மார்களையுங் கண்டு தெரிசித்துக்கொண்ட பின்பு கச்சிவீர காமாக்ஷிராய முதலியும் சடையப்பனும் கஸ்தூரி ரங்கப்ப செட்டியும் மற்றுமுள்ள பேருங்கூடி ஆலோசித்துக்கொண்டு யானை கொண்டு வந்த பிள்ளைக்கு அதிகாரம் முடிசூட்டும்போது முடிமன்னரில்லாமல் நாம் சூட்டுவது நமக்கு யோக்கியமல்லவென்று எல்லோரும்

பாண்டியனும் சேரனும் அழைக்கப் படல்

கூடியாலோசித்துக்கொண்டு மீனாக்ஷி சௌந்திர பாண்டியற்கும் சேரமான் பெருமாளென்னும் சேரனுக்கும் வரவோலை யெழுதி யனுப்பிவித்தார்கள். அனுப்புவித்தபடி மீனாக்ஷி சௌந்திர பாண்டியனும் சேரமான் பெருமாளென்னும் சேரனும் இந்த ஓலை வாசகத்தைக் கண்டறிந்து கொண்டு தாங்களும் தங்கள் தங்கள் காரியத்தவரும் தங்கள் தேசக் குடிவரிசையும் கூட்டிக்கொண்டு அவரவர் தேசநகர் விட்டுப் புறப்பட்டுத் திருவாரூர் நகருக்கு வந்தார். திருவாரூர் நகருக்கு வந்து

[1] ஸ்வஸ்தி [2] இடம்

கூடியிருக்கின்ற கூட்டத்தார்களையும் கச்சிவீர காமாக்ஷிராய முதலி யும் சடையப்பனையும் கஸ்தூரி ரங்கப்ப செட்டியையும் மற்றுமுள்ள பேர்களையும் கண்டார்கள். கண்டபடி சமைய முதலியும் சடையப்ப னும் கஸ்தூரி ரங்கப்ப செட்டியும் மற்றுமுள்ள பேருமாக மீனாக்ஷி சௌந்தர பாண்டியனையும் சேரமான் பெருமாளென்னும் சேரனையுங் கண்டு தெரிசித்துக்கொண்டு சடையப்பனுமாக மீனாக்ஷி சௌந்திர பாண்டியற்கும் உறையூர் சோழன் நாள் முதற்கொண்டு அவன் மக னைக் கொங்கர் நாட்டில் குளத்தில் ஆனை யெடுத்து வந்தநாள் முதற் கொண்டு யானையெடுத்து வந்து திருவாலூர் தியாகராயர் கோவில் கனகசபை வாசலில் இறக்கி விட்டநாள் வரைக்கும் நடந்த பூருவீக வரலாறு சொல்லிப் பின்பு அந்த வெள்ளையானை யாகிறதைக் காசிக் குப் போயழைத்து வந்த வரலாறும் சொன்னார்கள்.

இவர்கள் சோல்லவே மீனாக்ஷி சௌந்தர பாண்டியனும் சேர மான் பெருமாளென்னும் சேரனும் கேட்டு மெத்த சந்தோஷப்பட்டுக் கொண்டு, அதுசரி, இனிமேல் இந்த விராச்சியத்திற்கு ராசநீதி காண வேணுமென்று மீனாக்ஷி சௌந்திர பாண்டியனும் சேரமான் பெருமா ளென்னும் சேரனும் சமைய முதலியை யழைத்துத் தங்கள் பக்கத்தில் இருத்திக் கொண்டு நீ........ணைக்குத் தென் மதுரை மீனாக்ஷிக் கனக சபையில் வீரசோழனுக்கு முடி சூட்டி மனுநீதிச் சோழனென்று பேருங் கொடுத்து இந்த விராச் சியத்தை நீதி சோழனைக் கொண்டு நீதி நிலைமையாய் நடத்தி வைத்து இரக்ஷித்தாய். இந்நாளில் இந்த ராக்சியத்திலதிகாரம் திக்கெட்டும் முன் துவாபரயுகத்தில் தன்மர் வனவாசம் போக, துரியோதனனுக் குள்ளாகி 13 வருஷம் ராச்சியம் மெத்த அவதிப்பட்டு மெலிந்து முன்னிருந் தாற் போல (?) இந்நாளில் உறையூரச் சோழன் மண்மாரியிலிறந்து போக, வவர் பெண்சாதி கர்(ப்)பிணியாகி வனவாசம்போக 13 வருஷ மிந்த ராச்சியமும் அவதிப் பட்டிருக்க இருந்தபடி சர்வத்த(திர) பேரும் கூடி உம்மையழைத்துவிட, அவர்கள் அழைத்தபடி நீர்வந்து அவர் களைக் கண்டு எல்லோரும் கூடியாலோசித்துக் கொண்டு திருவா லூருக்கு வந்து திருவாலூரில் தியாகராயர் கழுத்தில் திருமாலையும் திரு மஞ்சனமும் வாங்கி அந்த வெள்ளை யானையின் கையிற் கொடுத்து அந்த வெள்ளை யானையின் முகாந்திரத்தினாலே அந்த ராசாவின் குமார னையும் தருவித்து வைத்துக்கொண்டு எங்களுக்கு எழுதியனுப்பிவித்து எங்களையும் வரவழைத்தி யிருத்திக்கொண்டு நடந்த பூருவீக வரலாறெல் லாம்சொன்னது சரியே. அன்றைக்குத் தென்மதுரை மீனாக்ஷிக் கனக சபையில் வீர சோழனுக்கு முடி சூட்டி நீதி சோழனென்று பேரும் கொடுத்து எங்கள் வமிசத்தவரை யவர்க்குட்[1]தெதிமும்முடியாய்த்

[1] சேர்த்தி

தலே சேர்த்து நீதிச் சோழனைக் கொண்டும், நீதி பாண்டியனைக் கொண்டும் நீதி சேரனைக் கொண்டும் இப்படி மும்முடி மன்னரைக் கொண்டு இப்புவனத்தை நீதி நிலேமையாய் நடத்தி வைத்து இரட்சித்தாய். இந்நாளிலிந்தத் தொண்டை மண்டலம் சோழ மண்டலமாகிய இராச்சியம் 13 வருஷம் திக்கற்று மெத்தவவதிப்பட்டு மெலிந்திருக்கிறது. இதற்கு நீராமத்தலம் காசிதளவசலிருந்து வந்த வெள்ளே யானே முகாந்தரத்தில் தருவித்தீரல்லவா, அவனுக்கே நீர் அதிகாரம் முடிசூட்டவேணும் சூட்டிவிட்டாலவனை நாம(ள்) முன்னிருந்த மனு நீதிச் சோழனுகவும் எங்கள் வமிசத்தில் நீதிபாண்டியனுகவும் நீதி சேரனுகவும் கண்டுகொள்ளுகிறேமென்று சொல்லி மீனுக்ஷி சௌந்திர பாண்டியனும் சேரமாம் பெருமாளென்னும் சேரனும் சமைய முதலிக்குப் பாக்கு வெற்றிலே கொடுத்துக் கரிகாலச் சோழனுக்கு அதிகாரம் முடிசூட்டக் கட்டுச்செய்தார்கள். செய்தபடி சமைய முதலியும் முடிமன்னரிடத்தில் உடுபறை பாக்கு வெற்றிலேயும் கரிகாலச் சோழனுக்கு அதிகார முடி சூட்டுவதற்கு [1]அப்பனேயும் வாங்கிக்கொண்டு சடையப்பனிடத்திற்கு வந்து கத்தூரி ரங்கப்பச் செட்டியும் அழைக்கவிட்டு இம்மூவருங் கூடி யாலோசித்துக்கொண்டு மூவரும் மற்றுமுள்ள பேருமாகக் கூடி முடிமன்னரிடத்திற்குப் போய் முடிமன்னரிடத்தில் கரிகால சோழனுக்கு வேளாளர்பாடியில் வியாகத்திற்கு அப்பனே வாங்கிக்கொண்டு சடையப்பனும் சமைய முதலியும் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் மற்றுமுள்ள பேருமாகத் தொண்டைமண்டலம் சோழ மண்டலத்தி லுட்பட்ட வேளாளர்பாடியில் கலியாணமாகாத பெண்களெல்லாம் தருவித்து [2]நல்லாமையாய் சற்குணமுள்ளதாய் ராச யோக்யதைக்கும் தாயாய் இலட்சுமியைப்போல் இருக்கப்பட்ட ஒரு பெண் தெரிந்து பார்த்து நிறுத்திக்கொண்டு மற்ற பெண்களெல்லாம் வரவர தாவுதலங்களுக்கு அனுப்பிவித்துப் போட்டு அந்தப் பெண்ணேப் பெற்ற தாயார் தகப்பனே சம்மதம் பண்ணி பரியம் நிகுதி செய்து அளவற்ற பவுசுகள் கொடுத்து, அவர்கள் மனது சந்தோஷப் பட்டுக்கொண்டு அந்தப் பெண்ணேயும் பெண்ணேப் பெற்ற தாய் தகப்பனேயும் வரவழைதது க்கொண்டு சடையப்பனும் சமைய முதலியும் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் மூவருமாக முடிமன்னரிடத்தில் விட்டார்கள். முடிமன்னர் பார்த்து அந்தப் பெண்ணேக் கண்டு நம்முடைய மனுநீதிச் சோழன் அரமனேக்கு ஏற்ற பெண்ணே சரியென்று அவர்கள் ஒத்துக்கொண்டு காரிகாலச்சோழனுக்குப் பாரியையும் எங்களுக்குச் சகோதரமும் சடையப்பனுக்குப் பிள்ளேயும் மற்றுமுள்ள பேர்க்கெல்லாம் தாயுமே சரியென்று மீனுக்ஷி சௌந்திர பாண்டியரும் சேரமான்பெருமாளென்னும் சேரனும் சந்தோஷப்

[1] உரிமை [2] நம்மளமவாய

னத்திற்குட்பட்ட பதினெண் பூமியும் ஐம்பத்நாறு தேசங்களில் கட்டிய பட்டணமும் ஊர்க் கிராமம் பட்டிபாளையத்திலுட்பட்ட உழவு குடியான பதினெண்சாதிப் பலகுடிக்கும் நயம்வராமல் முதன்மையாக விசாரித்து நடந்து வரும்போது அந்நாளில் திருவாலூர் நகரிலிருக்கப்பட்ட கரிகாலச் சோழன் மகன் திருவாரூர் வீதியில் சிறு தேருருட்டி விளையாடி வரும் போது அந்நாளில் அந்தத் தேர் வண்டிக் காலில் காராம் பசுவின் கன்றுக்குட்டிச் சிக்கிச் சாவ கன்றுஞ் செத்தபடி அந்தப் பசு போய் கரிகாலச் சோழனிடத்தில் கன்றின் பழிவாங்க வேண்டுமென்று கரிகாலச் சோழன் அரமனைவாசலில் கட்டியிருந்த வாராய்ச்சிமணியைத் தன் கொம்பினுலசைத்துத் தானு மரமனைவாசலில் மூன்று நாள் ஆறு பொழுது புல் தண்ணீர் தொடாமல் [1]பாடு படு கழு(ள)ம் படுத்திருந்து தாம் படுத்திருப்பதைக் காரியக்கார் கண்டு போய்க் கரிகாலச் சோழனுக்கு முறை செய்தார்கள். முறை செய்தபடி கரிகாலச் சோழனும் காரியத்தாற் சொற்கேட்டுத் தன்னரமனையாஸ்தானத்திற்கு வந்து காரியக்காரரும் தானுமாக ஆசாரத்திலிருந்துகொண்டு கரிகாலச் சோழனென்றவன் காஞ்சிபுரத்துக் கச்சி வீர காமாக்ஷிராய சமையமுதலிக்கும் கத்தூரி ரங்கப்பச் செட்டிக்கும் வெண்ணைநல்லூர் குமார சடையப்பனுக்கும் வரவோலையெழுதி யனுப்புவித்து அவர்களையும் அனுப்புவித்துத் தன்னுசாரத்திலிருத்திக்கொண்டு அவர்களும் தானுமாக ஆசாரத்திலிருக்கும்போது கரிகாலச் சோழனென்றவன் காரியக்காரரை யழைத்து அந்தப் பசுமாடு கிடைப்பதென்ன வென்று விசாரிக்கும் போது காரியக்காரராயிருந்து உன் மகன் சிறு தேருருட்டி வீதியில் விளையாடி வரும்போது அந்தப் பசுவானது எழுந்திருந்து விலகி அப்பால் போய் நின்று கொண்டு அந்தக் கண்ணுகிறது (கன்றுகிறது) எழுந்திருக்க மாட்டா(ம)ல் அங்கே விழுந்திருந்தது. அந்த ஊர்ந்து வந்த தேர் வந்து அந்தக் கண்ணின் மேலேற அந்தக் கண்ணுகிறது தேர்வண்டிக் காலில் சிக்கிச் செத்தது. (உன் மனது (உன்னிடத்தில் முறை செய்து தன் கண்ணின் பளிதன் கண்காண) ஊர்ந்து வந்த தேர்வண்டிக் காலில் அந்தக் கன்றானது சிக்கிச் செத்தபடியினுலே அந்தக் கன்றை உன் மகன் கொன்றானென்று அந்தப் பசுவானது உன்னிடத்தில் முறை செய்து தன் கன்றின் பழி தன் கண் காண உன் கையில் வாங்க வேணுமென்று உன்னரமனை வாசலில் அந்தப் பசுவானது பாடு கிடப்பதென்று திருவாரூர் வீதியில் கரிகாலச் சோழன் மகன் சிறு தேர் உருட்டி வரும் போது கண்டிருந்த காரியக்காரர் [2]சாக்கியாக நன்று நடுச் சொன்னர். கண்டிருந்த காரியக்காரர் சாக்கி சொல்ல கரிகாலச் சோழனென்றவன் கேட்டுத் தன்

சோழன் மகன் தேருருட்டிக் கன்றுக் குட்டியைக் கொன்றது

விசாரணை

[1] பாடி காவல் [2] சாட்சி

மகன் பேரில் குற்றமென்று கச்சி வீர காமாக்ஷிராய சமைய முதலிக்கும் சடையப்பனுக்கும் கத்தூரி ரங்கப்பச் செட்டிக்கும் தன்னரமனை வாசல் காரியத்தாருக்கும் மற்றுமுள்ள பேருக்கும் தன் மகன் பேரில் குற்றமென்று ஒப்புக் கொடுத்துத் தன் மகனையழைத்து வரச் சொல்லி அவனுக்குத் திருமஞ்சனமாட்டி வைத்துத் திருவெண்ணீற்றுக் காப்பு மிட்டு அழகிய நெற்றிக்குச் செந்தூரத் திலகமிட்டு ஆடையுடுத்தி ஆபரணங்கள் பூட்டி யலங்கரித்துப் பரிமள களப கஸ்தூரி பூசி பாலசன மிடிவித்து (?) அந்தச் சிறு தேரையும் அலங்கார முஸ்தீதியாய்ச் சோடிப்பித்து அந்தத் தேரின் பேரில் கரிகாலச் சோழனுகிறவன் இருந்துகொண்டு அந்தப் பசுவையும் தேருக்கு ஓட்டிவரச் சொல்லி வீதியில் நிறுத்திக் கொண்டு திருவாரூர் வீதியில் பலபேரும் பார்த்துநின்று ஆச்சரியப்பட கச்சிவீர காமாக்ஷிராய முதலிக்கும் கத்தூரி ரங்கப்பச் செட்டிக்கும் சடையப்பனுக்கும் மற்றுமுள்ள காரியத்தாருக்கும் கரிகாலச் சோழன் மகனைப் பார்த்துக் கண்ணீர் ததும்ப கரிகாலச் சோழனுகிறவன் அந்தப் பசுவை வடக்குமுகமாய் நிறுத்தி தன் மகனைப் பசுவெதிரே தெற்கே தலையாகப் போட்டுத் தேரைவிட்டுத் தன் மகனை ஊர்ந்துகொடுத்து அந்தப் பசுவைக் கையெடுத்துக் கும்பிட்டு உன் பழி வந்தது காராவே என் தாயே என்று சொல்லி கரிகாலச் சோழன் அந்தப் பசுவை யனுப்பிவித்தார். அனுப்புவித்தபடி அந்தப் பசு தன் கன்றின் பழி வந்ததென்று கரிகாலச் சோழன் கையில் பழிவாங்கிச் சந்தோஷமாகிப் போனபின்பு கரிகாலச்சோழன் மகனுக்குப்பசுவின்கன்றைக் கொன்ற குலபாதக [1]விருமத்தி துலைந்து கரிகாலச் சோழன் கையில் கொல்வித்தது. (கரிகாலச் சோழனுக்குத்) தன் மகனைக்கொன்ற குல பாதகமும் புத்திரபாவமும் புத்திரசோகமும் பிருமத்தியாதி தோஷமும் கரிகாலச் சோழனைச் சூழ்ந்தது. சூழ்ந்து விகாரவிருமத்தி மூடி பயித்திய விகாரங்கொண்டு கண்ட பேர்களைக் கழுத்தைக் கட்டிக்கொண்டு கதறவும் அடிக்கவும் வெட்டவும் குத்தவும் அரமனையை விட்டு அர்த்தராத்திரியில் காடு செடியில் ஓடிப்போகவுமாச்சுது. அப்படி பயித்திய விகாரங் கொண்டாடினபடி கச்சிவீர காமாக்ஷிராய சமைய முதலியும் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் சடையப்பனும் மற்றுமுள்ள அரமனைவாசல் காரியத்தாரும் கரிகாலச் சோழனுக்கு இது என்ன மாயமகிமையென்று எல்லோருமா(யா)லோசித்து இருக்கும்போது கச்சி ஏகம்பரநுக்கு அறிக்கையாய் கச்சி ஏகம்பரர் சித்த மிரங்கித் திருமுகம் பார்த்து காமாக்ஷியை யழைத்து கரிகாலச் சோழன் மெத்த.......யப்படுகிருன். அவனே(னல்) இன்னம் சேரகொங்கு நாட்டில் முன்னூற்றறுபது

குற்றம் கண்டது

தேரில் ஊர்ந்து மகனைத் தண்டித்தல்

சோழனுக்குப் பைத்தியம் பிடித்தது

[1] பிருமத்தி

னத்திற்குட்பட்ட பதினெண் பூமியும் ஐம்பத்நாறு தேசங்களில் கட்டிய பட்டணமும் ஊர்க் கிராமம் பட்டிபாளையத்திலுட்பட்ட உழவு குடியான பதினெண்சாதிப் பலகுடிக்கும் நயம்வராமல் முதன்மையாக விசாரித்து நடந்து வரும்போது அந்நாளில் திருவாலூர் நகரிலிருக்கப்பட்ட கரிகாலச் சோழன் மகன் திருவாரூர் வீதியில் சிறு தேருருட்டி விளையாடி வரும் போது அந்நாளில் அந்தத் தேர் வண்டிக் காலில் காராம் பசுவின் கன்றுக்குட்டிச் சிக்கிச் சாவ கன்றுஞ் செத்தபடி அந்தப் பசு போய் கரிகாலச் சோழனிடத்தில் கன்றின் பழிவாங்க வேண்டுமென்று கரிகாலச் சோழன் அரமனைவாசலில் கட்டியிருந்த வாராய்ச்சிமணியைத் தன் கொம்பினாலசைத்துத் தானு மரமனைவாசலில் மூன்று நாள் ஆறு பொழுது புல் தண்ணீர் தொடாமல் [1]பாடு படு கழு(ள)ம் படுத்திருந்து தாம் படுத்திருப்பதைக் காரியக்கார் கண்டு போய்க் கரிகாலச் சோழனுக்கு முறை செய்தார்கள். முறை செய்தபடி கரிகாலச் சோழனும் காரியத்தாற் சொற்கேட்டுத் தன் னரமனையாஸ்தானத்திற்கு வந்து காரியக்காரரும் தானுமாக ஆசாரத் திலிருந்துகொண்டு கரிகாலச் சோழனென்றவன் காஞ்சிபுரத்துக் கச்சி வீர காமாக்ஷிராய சமையமுதலிக்கும் கத்தூரி ரங்கப்பச் செட்டிக்கும் வெண்ணைநல்லூர் குமார சடையப்பனுக்கும் வரவோலையெழுதி யனுப்பு வித்து அவர்களையும் அனுப்புவித்துத் தன்னுசாரத்திலிருத்திக்கொண்டு அவர்களும் தானுமாக ஆசாரத்திலிருக்கும்போது கரிகாலச் சோழனு கிறவன் காரியக்காரரை யழைத்து அந்தப் பசுமாடு கிடைப்பதென்ன வென்று விசாரிக்கும் போது காரியக் காரராயிருந்து உன் மகன் சிறு தேருருட்டி வீதியில் விளையாடி வரும்போது அந்தப் பசுவானது எழுந்திருந்து விலகி அப் பால் போய் நின்று கொண்டு அந்தக் கன்னுகிறது (கன்றுகிறது) எழுந்திருக்க மாட்டா(ம)ல் அங்கே விழுந்திருந்தது. அந்த ஊர்ந்து வந்த தேர் வந்து அந்தக் கன்னின் மேலேற அந்தக் கன்னுகிறது தேர்வண்டிக் காலில் சிக்கிச் செத்தது. (உன் மனது (உன்னி டத்தில் முறை செய்து தன் கன்னின் பளிதன் கண்காண) ஊர்ந்து வந்த தேர்வண்டிக் காலில் அந்தக் கன்றுனது சிக்கிச் செத்தபடி யினுலே அந்தக் கன்றை உன் மகன் கொன்றுனென்று அந்தப் பசு வானது உன்னிடத்தில் முறை செய்து தன் கன்றின் பழி தன் கண் காண உன் கையில் வாங்க வேணுமென்று உன்னரமனை வாசலில் அந்தப் பசுவானது பாடு கிடப்பதென்று திருவாரூர் வீதியில் கரி காலச் சோழன் மகன் சிறு தேர் உருட்டி வரும் போது கண்டிருந்த கார்ரியக்காரர் [2]சாக்கியாக நன்று நடுச் சொன்னர். கண்டிருந்த காரியக்காரர் சாக்கி சொல்ல கரிகாலச் சோழனுகிறவன் கேட்டுத் தன்

சோழன் மகன் தேருருட்டிக் கன்றுக் குட்டியைக் கொன்றது

விசாரணை

[1] பாடி காவல் [2] சாட்சி

மகன் பேரில் குற்றமென்று கச்சி வீர காமாக்ஷிராய சமைய முதலிக்கும் சடையப்பனுக்கும் கத்தூரி ரங்கப்பச் செட்டிக்கும் தன்னரமனை வாசல் காரியத்தாருக்கும் மற்றுமுள்ள பேருக்கும் தன் மகன் பேரில் குற்றமென்று ஒப்புக் கொடுத்துத் தன்மகனையழைத்து வரச் சொல்லி அவனுக்குத் திருமஞ்சனமாட்டி வைத்துத் திருவெண்ணீற்றுக் காப்புமிட்டு அழகிய நெற்றிக்குச் செந்தூரத் திலகமிட்டு ஆடையுடுத்தி ஆபரணங்கள் பூட்டி யலங்கரித்துப் பரிமள களப கஸ்தூரி பூசி பாலசன மிடிவித்து (?) அந்தச் சிறு தேரையும் அலங்கார முஸ்தீதியாய்ச் சோடிப்பித்து அந்தத் தேரின் பேரில் கரிகாலச் சோழனுகிறவன் இருந்துகொண்டு அந்தப் பசுவையும் தேருக்கு ஓட்டிவரச் சொல்லி வீதியில் நிறுத்திக் கொண்டு திருவாரூர் வீதியில் பலபேரும் பார்த்துநின்று ஆச்சரியப்பட கச்சிவீர காமாக்ஷிராய முதலிகளும் கத்தூரி ரங்கப்பச் செட்டிக்கும் சடையப்பனுக்கும் மற்றுமுள்ள காரியத்தாருக்கும் கரிகாலச் சோழன் மகனைப் பார்த்துக் கண்ணீர் ததும்ப கரிகாலச் சோழனுகிறவன் அந்தப் பசுவை வடக்குமுகமாய் நிறுத்தி தன் மகனைப் பசுவெதிரே தெற்கே தலையாகப் போட்டுத் தேரைவிட்டுத் தன் மகனை ஊர்ந்துகொடுத்து அந்தப் பசுவைக் கையெடுத்துக் கும்பிட்டு உன் பழி வந்தது காராவே என் தாயே என்று சொல்லி கரிகாலச் சோழன் அந்தப் பசுவை யனுப்பிவித்தார். அனுப்புவித்தபடி அந்தப் பசு தன் கன்றின் பழி வந்ததென்று கரிகாலச் சோழன் கையில் பழிவாங்கிச் சந்தோஷமாகிப் போனபின்பு கரிகாலச்சோழன் மகனுக்குப்பசுவின்கன்றைக் கொன்ற குலபாதக [1]விருமத்தி துலைந்து கரிகாலச் சோழன் கையில் கொல்வித்தது. (கரிகாலச் சோழனுக்குத்) தன் மகனைக் கொன்ற குலபாதகமும் புத்திரபாவமும் புத்திரசோகமும் பிருமத்தியாதி தோஷமும் கரிகாலச் சோழனைச் சூழ்ந்தது. சூழ்ந்து விகாரவிருமத்தி மூடி பயித்திய விகாரங்கொண்டு கண்ட பேர்களைக் கழுத்தைக் கட்டிக்கொண்டு கதறவும் அடிக்கவும் வெட்டவும் குத்தவும் அரமனையை விட்டு அர்த்தராத்திரியில் காடு செடியில் ஓடிப்போகவுமாச்சுது. அப்படி பயித்திய விகாரங் கொண்டாடினபடி கச்சிவீர காமாக்ஷிராய சமைய முதலியும் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் சடையப்பனும் மற்றுமுள்ள அரமனைவாசல் காரியத்தாரும் கரிகாலச் சோழனுக்கு இது என்ன மாயமகிமை யென்று எல்லோருமா(யா)லோசித்து இருக்கும்போது கச்சி ஏகம்பருக்கு அறிக்கையாய் கச்சி ஏகம்பரர் சித்த மிரங்கித் திருமுகம் பார்த்து காமாக்ஷியை யழைத்து கரிகாலச் சோழன் மெத்த.......யப்படுகிறன். அவனே(னல்) இன்னம் சேரகொங்கு நாட்டில் முன்னூற்றறுபது

குற்றம் கண்டது

தேரில் ஊர்ந்து மகனைத் தண்டித்தல்

சோழனுக்குப் பைத்தியம் பிடித்தது

[1] பிருமத்தி

சிவாலயம் பிரதிஷ்டையாகவேணும். அவனுக்கு இடையில் இந்த அவதி வரலாகாது. அவனுக்குவந்த வினையை நாமே பரிகரித்து அவனைத் தடுத் தடிமைகொள்ளவேணும். அது விபரந் தெரியவருமே. இனி நீ குறத்தி என்னுசு(சொ)ரூபங் கொண்டுபோய்க் கரிகாலச் சோழனுக்கும் கைபார்த்துக் கண்ட குறி சொல்லி கரிகாலச் சோழன் விருமத்தியைப் பரிகரித்து வரவேணுமென்று காமாக்ஷியை யனுப்ப கச்சி ஏகம்பரர் அனுப்பியபடி காமாக்ஷியும் ஏகம்பரரிடத்தில் அனுப்புவித்துக்கொண்டு தெய்வக் குறத்தியென்னும் சொரூபங்கொண்டு குறக்கூடை தலையில் வைத்துப் பொற்பிரப்பன்கோல் கையிற்பிடித்துத் திருவாரூருக்கு வந்து கண்ட குறி சொல்வேன் சொல்வேன் என்று வீதிதோறும் குறிகூறி கரிகாலச் சோழனிடத்திற்கு வந்தாள். வந்தவளைச் சடையப்பனும் சமைய முதலியும் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் அரண்மனை வாசல் காரியக்காரரும் குறத்தியம்மையை யழைத்துவந்து ஆசாரவிரதமா யிருத்திக் கொண்டு குறத்திஅம்மே நீ எங்கள் கரிகாலச் சோழனுக்குக் கை பார்த்துக் கண்ட குறி சொல்லவேண்டுமென்று காரிய விபோகமாகக் கேட்டார்கள். அவர்கள் கேட்கக் குறத்தியும் அப்படியே குறி சொல்வேனென்று கரிகாலச் சோழனைத் தன் பக்கத்திலழைத்து இருத்திக்கொண்டு விநாயகரை நமஸ்காரம் பண்ணிக் கொண்டு கரிகாலச் சோழனை கைநீட்டச் சொல்லி காமாக்ஷி கைக்குறி பார்த்து இது கரிகாலச் சோழனுக்கு மற்றொரு வியாதியல்ல. மருத்தீடு சத்துரு மாய்கையல்ல. ஒருவர் முறைப்பாடு கி(ர)றகப் பகையல்ல. [1]வயப்புக்கடப்பு மனதேவதையள் குறையல்ல. இது புத்திர [2]சோப்பாவ விருமத்தியா தோஷங் கரிகாலச் சோழனைச் சூழ்ந்திருக்கிறது. இதற்கு ஒரு மருந்துண்டு. அதனால் தீர்ந்தால் தீர்ந்தது. அது அல்லவென்றால் மற்றொரு மருந்தாலும் தீராது. அது எப்படியென்றால் கரிகாலச் சோழனென்கிறவன் சேர கொங்குநாட்டில் கருவூர் முதல்கொண்டு வெள்ளிமலை முட்டங் கடையாக முன்னூறு சிவாலயமும் முப்பத்திரண்டனையும் கட்டி வைத்து முன்னூற்றறுபது சிவாலயத்திற்கு வரிசை மானியங்கள் கு(றை)றவற விடித்து விளக்கஞ் செய்து கட்டிய கோவிலும் மங்காமல் விட்ட மானியமும் நழுவாமல் என்னளும் ஒருநாள் போலே தானுள்ளவரைக்கும் நடத்தி வாரேனென்று சிவ சுப்பிரமண்ய தேவருள் படியால் நந்தி கோத்திரம் வீரபாகு தேவர் வம்சம் கை(ய்)க் கொள்வரில் லட்சம் தளவீரர்க்கு முன்னேனுகிய கச்சி வீரகாமாட்சிராய சிரச்சிங்காசனக் கர்த்தராகிய சமைய முதலி வம்சத்தில் கச்சி வீர வெங்கடாசல முதலிக்குக் கச்சி ஏகாம்பர

காமாட்சி குறத்தியாக வருதல்

குறத்தி குறி சொல்லல்

---

[1] வயிற்றுக் கடுப்பு [2] சோகபாவ பிரமஹத்தி

காமாக்ஷியைக் கூறி சடையப்பன் · கத்தூரி ரங்கப்ப செட்டி கூடி இருக்கின்ற கனகசபையே மாட்சியாகக் கரிகாலச் சோழன் வலக்கை கொடுத்தால் அதைக் கச்சி வீரவெங்கடாசல முதலி அபயஹஸ்தம் வாங்கிக் கொண்டு கச்சி ஏகாம்பரர் காமாக்ஷியைக் கூறி பூமி தொட்டு ரைத்துக் கரிகாலச் சோழனுக்கு நெற்றியிலிட்டால் இந்த விருமத்தி தீரும். தீர்ந்தால் கரிகாலச் சோழனும் முன் நாம் சொன்ன குறி நழுவாமல் நடத்தி வர்வும் காமாக்ஷி சொல்லவே கரிகாலச் சோழன் கேழ்க்கவே கரிகாலச் சோழனுக்கு விருமத்தியா தோஷம் அரைவாசி தணிந்தது. தணிந்தபடிக்கு கச்சி வீரகாமாட்சிராயன் வம்சத்தில் கச்சி வீர வெங்கடாசல முதலியும் காமாக்ஷி குறி சொன்னபடியாய்க் கச்சி ஏகாம்பரர் காமாக்ஷியை யர்(ச்)சித்துப் பகவானைக் கைதொழுது பூமிதொட்டுரைத்து கரிகாலச் சோழனுக்கு நெற்றியிலிட அவனுக்கு அந்த விறு(ரு)மத்தி தெளிந்து அமிருத குணமாகி காமாக்ஷியென்னும் குறத்தியைச் சந்தோஷப் பட்டுக்கொண்டு ஆடையாபரணாதிகள் கொடுத்து அனுப்பிவைத்தார்.

பிரமத்தி குணமானது

அனுப்பிவைத்த பின்பு காமாட்சி என்னும் குறத்தியும் கரிகாலச் சோழன் கையில் அனுப்பிவைத்துக் கொண்டபடி திருவாரூர் நகர் கடந்து திருக்காஞ்சீபுர நகருக்குப் போய் திருக்கம்பா நதியில் தீர்த்த மாடிக் கச்சி ஏகம்பரிடத்தில் சேர்ந்து காமாட்சியானாள். ஆனபின்பு கரிகாலச் சோழன் சமைய முதலிக்கும் சடையப்பனுக்கும் கத்தூரி ரங்கப்பச் செட்டிக்கும் மற்றுமுள்ளபேர்க்கு விருந்து விசாரித்துப் பாக்கு வெற்றிலைப் பச்சவடம் கொடுத்து எல்லாவற்குச் சந்தோஷப் படுத்தித் திருவாரூர் தியாகராயருக்கு அபிஷேக தீபாராதனை முடிப்பி வித்து எல்லாவரும் தரிசித்துக் கொண்ட பின்பு கரிகாலச் சோழன் முன்னூற்றறுபது சிவாலயமும் சேர கொங்கு நாட்டில் கட்டி வைத்து விழ(ள)க்கஞ் செய்ய வேணுமென்று யோசித்துக் காஞ்சீபுரத்துக் கச்சி வீரகாமாட்சிராய சமைய முதலியைக் கேட்க அவருமப்படியே யாமென்று சம்மதித்துக்கொண்டு அவரும் காஞ்சீபுரத்திற்கு அனுப்பி வித்து ஆதிபூருவீகம் செப்பேட்டுப் பட்டையத்திற்கு எதிரெடாகிய மானுட்டு வெள்ளோட்டுப் பட்டோலையும் தருவித்து அந்தப் பட்டோலையில் உறையூர்ச் சோழன் முதற் கொண்டு கரிகாலச் சோழனுக்குக் காமாக்ஷி யென்னும் குறத்தி குறி சொன்ன நாள் வரைக்கும் நடந்த பூர்வீக வரவெல்லாம் எழுதிச் சேர்த்துக் கொண்டு கரிகாலச் சோழனையும் அவருக்குள்பட்ட காரியத்தாரையும் சடையப்பனையும் அவருக்குள் பட்ட காரியத்தாரையும் கஸ்தூரி ரங்கப்ப செட்டியும் அவருக்குள் பட்ட காரியத்தாரையும் திருவையாற்றிலிருக்கின்ற மெய்ஞான சைவா சாரர் வம்சத்திலே குமர சுப்ரமண்ய பண்டிதரையும் அவருக்குட்பட்ட காரியத்தார்களையும் திருவாரூருக்கு வரவழைத்துக் கொண்டு தாமும்

பட்டயம் வெள்ளோலை எழுதினது

எல்லாரும் கருவூர்க்கு விஜயம் செய்தல்

திருப்பணி செய்தல்; மற்ற நியமனங்கள் செய்தல்

தமக்குட் பட்ட காரியத்தாருமாக திருவாரூர் நகர் கடந்து ஆதி கருவூருக்கு வந்தார். கருவூருக்கு வந்த பின்பு கச்சி வீரகாமாட்சி சமைய முதலியும் கரிகாலச் சோழனைக் கொண்டு கருவூரிலுண்டாகிய சிவலாயங்களுக்கு கோவிலும் குளமும் நகரமும் கோட்டையும் பட்டணமும் கட்டி வைத்துச் சடையப்பனும் சமைய முதலியும் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் இம் மூவருமாகக் கருவூர் நகருக்குப் பதினெண்சாதி பல குடியும் அழைத்து வைத்துத் கரிகாலச் சோழனைக்கொண்டு அந்தக் கோட்டைநகர் அதிகாரத்திற்கு ரங்கா ரெட்டியைவைத்து [1]கர்ணிக்கத்திற்குத் திருக்கணக்கரில் சிற்றம்பலப் பிள்ளையை வைத்துக் குடி முதன்மைக்கு குப்பண்ணன் வேளாளனை [2]வைய்த்து வ(ல)வங்கைச் செட்டுக்கு குமார செட்டி என்கிறவனை வைத்து வைத்த பின்பு அவ்விடத்திலுண்டாகிய கோவிலும் சுப்பிரமணிய பண்டிதரைக் கொண்டு பிரதிஷ்டை பண்ணி வைத்து இதற்கு நம்பி நாக பாசத்தவரும் (போடு) போடிவித்துத் திருவாடு தெண்டிகைச் சீர்பாதச் சேர்வைக்கு [3]கைக் கொள்வா-நூறு குடியும் பொடிவித்து நூறு குடிசைக் கொள்வதற்கு [4]நம்பி முதலாக திருவ(ல)வகை வரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்கு சரவண முதலி என்கிறவனைக் கொத்து பண்ணின பின்பு கோவிலுக்கு வரிசை மானியம் விட வேண்டுமென்று கரிகாலச் சோழனைக் கொண்டு கொங்கு தாராபுர நகரில் இருக்கின்ற சேரமா(ன்)ம் பெருமாளென்னும் சேரனைக் அனுப்பி வைத்து சேரனைக் கொண்டு சமைய முதலி கருவூர்ச் சிவால யங்களுக்கு வி(டு)டி வித்த வரிசை மானியம் ஆயிரம் பொன் கிராமமும் நூறுமிடா நெல்லு [5]விதைப் பாடு பூமியும் நூறுமிடா கருந்தான்ய விரைப் பாடும் சுங்கத்தில் நூறு பொன் திருவையும் இதற்கு [6]கலச் சாகரம் பொடி வைத்து நிகுதி செய்தார்.

சமைய முதலி நிகுதி செய்வித்தபடி கரிகாலச் சோழனும் சேரமா(ன்)ம் பெருமாளென்னும் சேரனும் சமைய முதலிக்கு விட்ட வரிசை மானியம் கருவூராலயத்திற்கு விட்ட வரிசை மானியத்தில் சமைய முதலிக்குப் பத்திலொன்று என்று கொண்டு கருவூராலயத் தூணில் கலச்சாகரம் பொடிவித்தார். பொடிவித்த பின்பு சமைய முதலியும் கருவூர்க் கோவிலுக்கும் கோவிலுக்கு விட்ட வரிசை மானியங்களுக்கும் மணியங் கணக்குத் தம்முடைய மனிதர் கைக் கொள்வரில் முத்துத் தாண்டவ முதலியை வைத்து நிகுதி செய்த பின்பு கோவிலுக்கு நம்பி முதன்மைக்குச் சரவண நம்பியை வைத்து நட்டுவரில் சொக்கலிங்க நட்டுவனை வைத்து தாசியில் நல்ல முத்து வேலாளை வைத்து இவர்கள்

[1] கருணீகத்திற்கு [2] வைத்து [3] கைக் கோலர் [4] நம்பி முதல் திருவலகு-ஆலயப் பணியாளர்கள் [5] விதைப்பாடு - விரைப்பாடு-ஓர் அளவு [6] கல்சாசனம்

எல்லாவற்றும் மா(ஞ)னுட்டு வெள்ளேட்டுப் பட்டையம் எழுதிக் கொடுப்பி வைத்து எல்லாவற்கும் நிருதி செய்து உடுபறை பாக்கு வெற்றிலை கொடுத்துச் சந்தோஷப்படுத்தி அவர்களையும் வரவழைத்

கொடுமுடி விஜயம்

துக் கொண்டு கருவூர் நகர் கடந்து கொடுமுடிக்கு வந்தார். கொடுமுடியிலிருந்து கொண்டு கொடி முடியி லுள்ள சிவாலயங்களுக்குக் கோவிலும் கட்டி வைத்து குளமும் வெட்டி வைத்து ஊரும் நகரமும் பட்டணமும் கொ(கோ)ட்டையும் கட்டி வைத்து அந்தக் கோட்டை நகர அதிகாரத்திற்கு எல்லப் பனென்கிற ரெட்டியை வைத்துக் கர்ணீகத்திற்குத் திருக்கணக்கரில் வேலாயுதம் பிள்ளையை வைத்து வைத்த பின்பு சமைய முதலியும் சடையப்பனும் இம்மூவருமாகப் பதினெண்சாதி பல்குடியும் அழைத்து வைத்து உழவு குடியான பதினெண்சாதி பல குடிக்கும் முதன்மையாக வேளாளரில் கந்தப்பனை வைத்துச் செட்டிக்குக் கவறை வலைஞரில் நாகப்பவன் வைத்த பின்பு கொடுமுடி ஆலயத்திற்கு சுப்பிரமணிய பண்டிதரைக்கொண்டு புண்ணியாங்கப் பிரதிட்டையும் பண்ணிவைத்து அந்தக் கோவிலுக்குச் சோழன் சேரனைக் கொண்டு ஆயிரம் பொன் கிராமமும் நூறு பொன் சுங்கத் தீர்வையும் நூறுமிடா விரைப்பாடு நஞ்சைப் பூமியும் நூறுமிடை விரைப்பாடு புஞ்செய் பூமியும் விடிவித்து விட்ட மானியத்திற்குக் கலச்சாகரம் பொடிவித்து அந்தக் கொடிமுடி ஆலயத்தில் விட்டமானியத்தில் சமய முதலிக்குப் பத்தில் ஒன்றொன்று கண்டு அந்த ஆலயத்தூணில் கலச்சாகரம் பொடி வைத்து அந்த (தாரையும் திருவையாற்றிலிருக்கின்ற மெய்ஞான சைவாசாரர் வம்சத் தில் குமர சுப்பிரமணிய பண்டிதரையும் அவருக்குள்பட்ட காரியத்தார் களையும் ஆலயத்திற்கு நம்பி முதலாகிய திருவலகு வரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்கு செங்கோட முதலியை வைத்து அந்தக் கோவிலுக் கும் கோவில் மணியம் கணக்குக்கு அத்தப்ப முதலியை வைத்து நம்பி முதன்மைக்கு வேலநம்பியை வைத்து நாகபாசத்தவரில் சந்திரசேகர நட்டுவனை வைத்து தாசியில் வள்ளியை வைத்து இவர்களுக்கெல்லாம் ஓலைப்பட்டையம் எழுதிக்கொடுத்து சமயமுதலி கையொப்பமிட்டு அவரவர் கையில் பட்டையமும் பாக்கு வெற்றிலையும் கொடுத்து நிருதி செய்தபின்பு சமயமுதலிக்கும் சடையப்பனுக்கும் ரங்கப்ப செட்டிக் கும் சோழன் சேரன் பாக்கு வெற்றிலை கொடுத்து அவர்களையும்

வெஞ்சமாக் கூடல் விஜயம்

வரவழைத்துக்கொண்டு கொடிமுடிநகர் கடந்து வெஞ்ச மாக் கூடத்திற்கு வந்து வேடர் வெட்டுவராகிய [1]கம் பழத்தவரை விட்டு செடி வெட்டி வெளி பண்ணிவைத்து அங்கிதுண்டாகிய சிவாலயங்களுக்குக் கோவிலும் கட்டிவைத்து குளமும் வெட்டிவைத்து ஆறும் நகரமும் பட்டணமும் கோட்டையும் பேட்டையும் கட்டிவைத்து, கட்டிவைத்த பின்பு சமைய முதலியும்

---

[1] கம்பளம்

சடையப்பனும் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் இம்மூவருமாகப் பதினெண்சாதி பல குடியுமழைத்து வைத்து உழவு குடியான பல குடிக்கும் முதன்மையாக வெள்ளாளரில் செல்லப்பனை வைத்து செட்டிபைக்குக் கவறை [1]வலிஞ்சியரில் ராமலிங்கசெட்டியை வைத்துக் கோட்டைநகர் அதிகாரத்திற்கும் மாதப் பட்டியை வைத்துக் கர்ணிக் கத்திற்குத் திருக்கணக்கரில் ஆனந்தப்பிள்ளையை வைத்து நிகுதிசெய்த பின்பு அந்த வெஞ்சமாக் கூடலாலயத்திற்கு சுப்பிரமணிய பண்டிதரைக் கொண்டு புண்ணியாங்கப் பிரதிஷ்டையும் பண்ணிவைத்துக் கோவிலூழியத்திற்கு நம்பி முதல் திருவலகு வரைக்கும் ஆள் பொடிவித்து திருவாடுதண்டிகை சீர்பாத ஊழியத்திற்கு கைக்கொள்வர் நூறு குடியும் வைத்து அந்தக் கைக் கொள்வற்கும் நம்பி முதல் திருவலகுவரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்குச் செல்லப்ப முதலியை வைத்து நம்பி முதன்மைக்கு வாரணவாசி நம்பியை வைத்து நாகபாச முதன்மைக்கு சொக்கலிங்க நட்டுவனை வைத்து தாசி முதன்மைக்கு லக்ஷுமியை வைத்து நிகுதி செய்தபின்பு சோழன் சேரனிவர்கள் வெஞ்சமாக்கூடல் (ஆலயத்திற்கு) கோவிலுக்கு விட்ட மானியம் ஆயிரம்பொன் கிராமம் நூறுபொன் சுங்கத் தீர்வையும் நூறுமிடா விரைப்பு நஞ்சையும் நூறுமிடா விரைப்புஞ்செய்யும் விடுவித்து விட்ட மானியத்திற்குக் கலச்சாகரம் பொடிவித்தார்கள்.

பொடிவித்தபின்பு சமைய முதலிக்கு வெஞ்சமாகக் கூடல் ஆலயத்திற்கு விட்ட மானியத்தில் பத்திலொன்று என்று கண்டு கோவில் தூணில் கலச்சாகரம் பொடிவித்தார்கள். பொடிவித்தபின்பு சமைய முதலியும் அந்தக் கோவிலிற்கும் கோவில் மணியத்திற்கும் மணியங் கணக்குக்கு முருகப்ப முதலியை வைத்து, வைத்த கணக்குக்கும் நாட்டாண்மை நம்பி நட்டுவன் தாசி இவர்களுக்கெல்லாம் சமைய முதலியைக் கொண்டு பாக்கு வெற்றிலையும் பட்டையமும் கொடுத்து நிகுதி செய்தார். செய்தபின்பு சோழன் சேரனுகிறவர்கள் சமைய முதலிக்கு சடையப்பனுக்கும் ரங்கப்ப செட்டிக்கும் பாக்கு வெற்றிலை கொடுத்து அவர்களையும் வரவழைத்துக்கொண்டு[2]வெஞ்சமாகக் கூடல் நகர் கடந்து வவ்வானிக் கூடலுக்கு வந்து [3]கம்பழத்தவரை விட்டு செடி வெட்டி வெளி (வழி) பண்ணிவைத்து [4]அங்கிலுண்டாகிய சிவாலயத்தையும் கண்டு [5]நண்ணுவுடையார்க்குக் கோவிலுங் கட்டிவைத்து குளமும் வெட்டிவைத்து ஊரும் நகரமும் பட்டிணமும் பேட்டையும் கட்டிவைத்துக் கோட்டையும் கட்டிவைத்தார்கள். அவர்கள் கட்டிவைத்த பின்பு சமய முதலியும் சடையப்பனும் ரங்கப்ப செட்டியும் இம்மூவருமாக அந்தக் கோட்டை நகருக்குப் பதினெண்சாதி பலகுடியு மழைத்துவைத்து அதில் உழவு

வானிக்கூடல் விஜயம்

[1] பலிஜர் [2] வானிக்கூடல் என்றிருக்கவேண்டும் [3] கம்பளம் [4] அங்கே [5] கண்ணூர் - திருநணா-பவானி

குடி பலகுடிக்கு முதன்மையாக வேளாளரில் (செல்லப்பனை வைத்து செட்டிமைக்கு கவறை வளைஞ்சியரில் ராமலிங்கம் செட்டியை வைத்து கோட்டைநகர் அதிகாரத்திற்கும் மாதப்பாட்டியை வைத்துக் கரணிக் கத்திற்கு திருக்கணக்கரில் ஆனந்தபிள்ளையை வைத்து நிருதிசெய்து பின்பு அந்த [1]வெஞ்சமாக் கூடல் ஆலயத்திற்கு சுப்பிரமணிய பண்டி தரைக் கொண்டு புண்யாங்கப் பிரதிஷ்டையும் பண்ணிவைத்துக் கோவி லூழியத்திற்கு நம்பி முதல் திருவலகு வரைக்கும் ஆள் பொடிவித்து)

மவ்வப்பக்க....னை வைத்துச் செட்டிமைக்குக் கவறை வளஞ்சிய ரில் வெங்கடாத்திரி செட்டியை வைத்து அந்தக் கோட்டை நகரதி காரத்திற்கு அக்கராட்டியை வைத்துக் கரணிகத்திற்குத் திருக்கணக் கரில் பரமானந்த பிள்ளையை வைத்து நிருதி செய்தபின்பு சமைய முதலியும் சுப்பிரமணிய பண்டிதரைக் கொண்டு நண்ணுவுடையார்க்குப் புண்ணியாங்கப் பிரதிஷ்டை பண்ணிவைத்தார். பண்ணிவைத்தபின்பு அந்தக் கோவிலுக்கு சோழன் சேரன் விட்ட மானியம் ஆயிரம்பொன் கிருமமும் நூறு பொன் சங்கத் தீர்வையும் நூறுமிடா விரைப்பு நஞ்சையும் நூறுமிடா விரைப்பு பிஞ்சையும் விடுவித்து விட்ட மானியத் திற்குச் சூலக்கலப் பொடிவித்தார். பொடிவித்த பின்பு சமைய முதலிக்கு வவ்வாணிக்கூடல் ஆலயத்திற்கு விட்ட மானியத்தில் பத்தி லொன்று என்று கண்டு கோவில் தூணில் கலச்சக்காரப் பொடிவித் தார். வைத்தபின்பு சமைய முதலியும் அந்தக் கோவிலூழியத்திற்கு நம்பி முதல் திருவலகு வரைக்கும் ஆள் பொடிவித்து திருவாடு தண்டிகை சீர்பாத ஊழியச் சேர்வைக்குக் கைக்கொள்வர். நூறு குடியும் அந்த நூறு குடிக்கும் நம்பி முதல் திருவலகு வரைக்கும் முதன்மை நாட் டாண்மைக்குச் செங்கோட முதலியை வைத்து அந்தக் கோவிலுக்கும் கோவிலுக்கு விட்ட மானியத்திற்கும் மணியம் கணக்குக்கு பழனியப்ப முதலியை வைத்து இவர்களுக்கெல்லாம் ஓலைப்பட்டையமும் பாக்கு வெற்றிலையும் சமைய முதலி கைக்கொண்டு அவரவர்க்குக் கொடுத்து நிருதி செய்தார். நிருதி செய்த பின்பு சோழன் சேரன் சமைய முத லிக்கும் சடையப்பனுக்கும் கத்தூரி ரங்கப்பச் செட்டிக்கும் பாக்கு வெற் றிலை கொடுத்து வரவழைத்துக் கொண்டு சுப்பிரமணியத் திருவாலயங் கட்டி விளக்கஞ் செய்ய வேணுமென்று வவ்வாணிக்கூடல் நகர்கடந்து கன்னிகா வனத்திற்குப் போனர். கன்னிகா வனத்தில் வேடாகம பழத்தவரை விட்டுச் செடி வெட்டி வழி பண்ணு வித்துச் சேரன் பேர்க்கு திருவாவினன்குடி தலத்தில் சிவாசலக் குமரேசருக்கு மேலவாசல் கோவில் கட்டி வைத்துத் தென் பழனி என்கிற ஊரும் கோட்டையும் பேட்டையும் பட்டணமும் நகரமும் கட்டி வைத்தார்.

கன்னிகா வன விஜயம்

திருவாவினன் குடி தென்பழனி

[1] வாணிக்கூடல் என்றிருக்கவேண்டும்

சேரமா(ன்)ம் பெருமாள் என்னும் சேரன் அதன் பின்பு [1]அன்ஞழில் வ(வை)ய்யாபுரிக் குளமும் கட்டி வைத்தார். கட்டி வைத்த பின்பு சோழன் பழனுபுரி நகரமும் கட்டி வைத்துப் பழனுபுரிக் குளமும் வெட்டி வைத்துக் கைலாசநாதருக்கும் பெரிய நாயகிக்கும் பழனியப் பருக்கும் கோவிலுங் கட்டி வைத்தார். கட்டி வைத்த பின்பு சேரமாம் பெருமாளென்னும் சேரன் பாலசுப்பிரமணியருக்குச் [2]சிவகிரி மலை மேல் மேலவாசல் கோவிலும் பாலசுப்பிரமணியர் பேருக்கு [3]வால சமுத்திரமென்று ஊரும் கட்டி வைத்தார். கட்டிவைத்த பின்பு சமைய முதலியும் சடையப்பனும் கத்தூரி ரங்கப்ப செட்டியும் தொண்டை நாடு காசீபுரத்திலிருந்த பதினெண் சாதி பல குடியும் தருவித்துக் கரிகாலச் சோழன் கட்டி வைத்த பழனுபுரி நகரிலும் சேரமா(ன்)ம் பெருமாளென்னும் சேரனும் கட்டி வைத்த தென்பழனி ஊரிலும் அவர் கட்டி வைத்த வால சமுத்திரத்திலும் பதினெண்சாதி பல குடியும் வைத்து நிகுதி செய்து அதில் உழவு குடியான பல குடிக்கு முதன்மையாக வேளாளரில் நல்லியப்பனென்கிற வேளாளனை வைத்துச் செட்டிமைககு முதன்மையாகக் கவறை வளைஞரில் கதிர் காம செட்டியை வைத்து அந்தத் தென் பழனிக் கோட்டை, ஊர், நகர், அதிகாரத்திற்கும் வால சமுத்திர நகர அதிகாரத்திற்கும் இது முதலாகிய வையாபுரி ஊரில் நாடு தேச நகர் அதிகாரத்திற்கும் அதிகாரம் செய்வதற்கு வேடரில் சின்னப்ப மண்ணுடி என்கிறவனை சேரமான் பெருமாளென்னும் சேரன் வைத்தான். கர்ணிகத்திற்குத் திருக்கணக்கரில் திருக்கவே வழகிய பிள்ளையை வைத்தார். சேரமான் பெருமாள் வைத்த பின்பு சமைய முதலியும் குமார சுப்பிரமணிய பண்டிதரைக் கொண்டு திருவாவினன்குடி ஆலயத்திற்கும் பழனுபுரி ஆலயத்திற்கும் சிவகிரி ஆலயத்திற்கும் இந்த மூவாலயத்திற்கும் புண்ணியாங்கப் பிரதிஷ்டையும் பண்ணி வைத்தார். வைத்த பின்பு சேரன் திருவாவினன்குடி ஆலயத்திற்கும் சிவகிரியாலயத்திற்கும் விட்ட மானியம் ஆயிரம் பொன் கிராமமும் நூறுபொன் சுங்கத்தீர்வையும் நூறுமிடா நஞ்சை விரைப்பும், நூறுமிடாப் புஞ்சை விரைப்பும் விடுவித்து விட்ட மானியத்திற்குச் சூலக்கல்லும் பொடிவித்தார். பொடிவித்த பின்பு சேரமான் பெருமாள் சமைய முதலிக்கு விட்ட மானியம் திருவாவினன்குடி சிவகிரியாலயத்திற்கு விட்ட மானியத்தில் பத்திலொன்று என்று திருவாவினன்குடி ஆலயத்தில் கலச்சாகரம் பொடிவித்தார். பொடிவித்த பின்பு கரிகாலச் சோழன் பழனுபுரி ஆலயத்திற்கு சேரமான் பெருமாள் என்னும் சேரன் கையில் கைக்கிறையப்பூமி வாங்கி விட்ட மானியம் ஐநூறுபொன் கிராமமும் ஐம்பதுபொன் சுங்கத்தீர்வையும் ஐம்பதுமிடா நஞ்சை விரைப்பு ஐம்பதுமிடாப் புஞ்சைப் விரைப்பும்

---

[1] அங்காளில் [2] பழனிமலை [3] பழனிக்கு 5 கல் அளவில் உள்ளது

விடுவித்து விட்ட மானியத்தில் சூலக்கலப் பொடிவித்தார். பொடிவித்த பின்பு சமைய முதலியாகிறவர் திருவாவின் குடித்தலம், பழனு²புரித்தலம் சிவகிரித்தலம் இந்த முத் தலம் என்று இனங்கண்டு இந்த மூவாலயத்தையும் ஓர் முகமாய்ச் சேர்த்துஅந்த ஆலய ஊழியங்களுக்கு நம்பி முதல் திருவலகு வரைக்கும் ஆனப்பொடிவித்துத் திருவாடு தண்டிகைச் சீர்பாத ஊழியம் சேர்வைக் குக் கைக்கொள்வரில் நூறுகுடியும் பழனுபுரி நகரில் வைத்து அந்த நூறு குடிகைக் கொள்வற்கும் முதன்மை நாட்டாண்மைக்குச் சரவண முதலி யை வைத்து நம்பி முதன்மைக்குக் குமார நம்பியை வைத்து நாக பாச முதன்மைக்கு வேலாயுத நட்டுவனை வைத்து தாசி முதன்மைக்கு நல்ல முத்து மயிலாளை வைத்து அந்த மூன்று கோவிலுக்கு விட்ட வரிசை மானியத்திற்கு மணியங் கணக்குக்கு வேலப்ப முதலியை வைத்து அவ ரவர்க்கு ஓலைப்பட்டையமும் பாக்கு வெற்றிலையும் சமைய முதலி கைக் கொண்டு கொடுத்து நிகுதி செய்தார். அவர் நிகுதி செய்த பின்பு கரி காலச் சோழனும் சேரமா(ன்)ம் பெருமாளென்னும் சேரனும் சமைய முதலிக்கும் குமார சடையப்பனுக்கும் கத்தூரி ரங்கப்பச் செட்டிக்கும் பாக்குவெற்றிலை கொடுத்துச் சந்தோஷப் படுத்தியிருக்கும் போது அன் னுளில் தென்மதுரை மாநகரத்திலிருக்கும் மீனுக்ஷி சௌந்திர பாண் டியனுகிறவன் கரிகாலச் சோழனும் சேரமாம் பெருமாளென்னும் சேர னும் வந்து பழனி முத்தலமும் கட்டி வைத்தார்களென்கிற சேதி மீனுக்ஷிசௌந்திர பாண்டியனுக்கு அறிக்கையாய் வரும் தாமும் ஒரு தலம் கட்டி வைக்க வே(ண்டு)னுமென்று யோசித்துக் கொண்டு தாமும் தமக்குட்பட்ட காரியப் பேருமாகப் புறப்பட்டு பழனுபுரி நகருக்கு வந்து சேரன் சோழனை யும் சமய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பனையும் வரவழைத்துக் கொண்டு பழனி நகர் கடந்து கொண்டு றங்கி வனத்திற்குப் போய் கொண்டுறங்கி வனத்தை வேடாகம் பழுத்த வரை விட்டுச் செடி வெட்டி வெளி பண்ணிவைத்து ஆய்க்குடி அமர பாண்டி நகரமும் கோட் டையும் பேட்டையும் கட்டி வைத்துக் கொண்டுறங்கி மலை மேல்செடி வெட்டி வழி பண்ணி வைத்து மீனுக்ஷி சௌந்திர பாண்டியன் பேர்க்குக் கொண்டுறங்கி மலை வேலாயுதற்குக் கோவிலும் கட்டி வைத்து இடும்பாபுரிக் குளமும் கட்டி வைத்தார். அவர் கட்டி வைத்த பின்பு சமைய முதலியும் சடையப்பனும் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் இம் மூவருமாகப் பதினெண் சாதி பல குடியும் அழைப்பித்து ஆய்க்குடி அமர பாண்டிநகரில் வைத்தார்கள். வைத்த பின்பு அதில் உழவு குடி பல குடிக்கும் முதன்மையாக வேளாளரில்

பழனியில் முத்தலம்

பாண்டியன் அறிந்துவந்து ஆலயம் கட்டுதல்

கொண்டரங்கி மலை

ஆய்க்குடி அமரபாண்டி இவைகள் கட்டியது

நாச்சியப்பனென்கிறவனை சடையப்பன் வைத்தான். அதில் செட்டி முதன்மைக்குக் கவறை வலஞ்சியரில் தேசிலிங்கனை கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தார். இவர்கள் வைத்த பின்பு மீனாட்சிசுவுந்திர பாண்டியன் ஆய்க்குடி அமர பாண்டிநகர் ஊரதிகாரத்திற்குச் சின்னப்ப மண்றாடி மைத்துனன் கொண்டப்ப மன்றாடி என்கிற வேடனை வைத்தான். கர்ணிகத்திற்கு அத்தைப் பிள்ளை யென்கிற திருக்கணக்கனை வைத்தார். அவர் வைத்து நிருதி செய்த பின்பு சமய முதலியும் சுப்பிரமணிய பண்டிதரைக் கொண்டு கொண்டுறங்கிமலை வேலாயுதற்குப் புண்யாங்கப் பிரதிஷ்டையும் பண்ணி வைத்தார். அவர் பண்ணிவைத்த பின்பு பாண்டியன் சேரன் கையில் கைக்கிறைய பூமி கொண்டு கொண்டுறங்கி மலையாலயத்திற்கு விடுவித்த மானியம் ஐந்நூறு பொன் கிராமமும் ஐம்பது பொன் சுங்கத்தீர்வையும் ஐம்பது மிடா விரைப்பு நஞ்செய்யும் ஐம்பது மிடா விரைப்புப் புஞ்செய்யும் விடுவித்தார். விட்ட மானியத்திற்குச் சூலக்கல் பொடிவித்தார். பொடிவித்த பின்பு சமைய முதலிக்கு அந்த ஆலயத்திற்கு விட்ட மானியத்தில் பத்திலொன்று என்று கொண்டுறங்கி மலையாலயத்தில் கலச்சாகரம் பொடிவித்தார். அவர் பொடிவித்த பின்பு சமய முதலியும் அந்தக் கொண்டுறங்கி மலையாலய ஊழியத்திற்கு நம்பி முதல் திருவலகு வரைக்கும் ஆளப்பொடிவித்துத் திருவாடு தண்டிகை சிர்பாத சேர்வை ஊழியத்திற்கு ஐம்பது குடிகைக் கொள்வதும் ஆய்க்குடி நகரில் வைத்தார். ஐம்பது கைக் கொள்வர்க்கும் நம்பி முதல் திருவலகு வரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்குத் திருவம்பவ முதலியை வைத்தார். நம்பி முதன்மைக்கு ஞானமூர்த்தி நம்பியை வைத்தார். நாகபாச முதன்மைக்குத் தாண்டவ நட்டுவனை வைத்தார். தாசி முதன்மைக்கு அன்ன முத்தாளை வைத்தார். வைத்த பின்பு அந்த ஆலயத்திற்கு விட்ட மானியத்திற்கு மணியங் கணக்குக்கு ..........ராபதி முதலியை வைத்தார். வைத்து அவரவர்க்கு சமய முதலிகைக் கொண்டு ஓலைப்பட்டயமும் பாக்கு வெற்றிலையும் கொடுத்து நிருதி செய்தார். நிருதி செய்த பின்பு பாண்டியன் சோழனுக்கும் சேரனுக்கும் சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டிக்கும் உடுபறை பாக்கு வெற்றிலை கொடுத்துச் சந்தோஷப்படுத்திக் கொண்டு எல்லோருமாகப் புறப்பட்டு ஆயக்குடி அமர பாண்டி நகர் கடந்து பழனுபுரி திருவாவினன் குடித் தலத்தில் சிவாலய தீர்த்தமும் சிவகிரிவாசத்தில் இந்திரநதி அக்கினிநதி யமநதி நிருருதிநதி வருணநதி வாயுநதி குபேரநதி ஈசான நதி இது முதலாகிய தெல்லாங் எல்லாவரும் தீர்த்தமாடியபின் பச்சைநதி வாத்துநதி பாலநதி சொன்னை நதி சுழலிநதி ஆக ஆறு இந்த நதியும் ஒன்ருய்க் கூடுந்துறையில் சண்முகநதி என்று பேருங் கண்டு எல்லோரு மந்தச் சண்முக நதியில் தீர்த்தமாடி பழனுபுரிக் கயிலாசநாதர் பெரிய நாயகி

திருவாவினன் குடியில் ஆறு நதிகூடுந்துறை சண்முகநதி ஆனது

பழனியப்பர் திருவாவினன்குடி சிவாசலக்குமரேசர் சிவகிரி பால சுப் பிரமண்யருக்கும் அபிஷேகம் தூப தீபாரூதனை முடிப்பித்து எல்லோ ரும் அந்த மூவாலயத்தையும் தரிசித்துக் கொண்டு பழனுபுரி நகரில் அரிபூசை சிவபூசை குருபூசை மகேசுவரபூசை மாத சிவசத்தி பூசையும் செய்வித்துக் கோதானம் வஸ்திரதானம் உத்தமதானமும் மூவர் ராசாக்களும் கொடுத்த பின்பு மீனுக்ஷி சௌந்திர பாண்டியன் போன பின்பு சேரமாம் பெருமாள் என்னும் சேரன் கரிகாலச் சோழனையும் சமையமுதலி சடையப்பன் ரங்கப்பச் செட்டி மற்றுள்ள பேர்களையும் வரவழைத்துக் கொண்டு பழனுபுரிநகர் கடந்து பூம்பறை வனத்துக்குப் போனார். போனபின்பு சேரன் வேடர் கம்பளத்தை வரவிட்டுப் பூம் பறை வனத்தைச் செடி வெட்டி வழி பண்ணி வைத்துப் பூம்பறைநகரமும் கோட்டையும் பேட்டையும் கட்டிவைத் துப் பின்பு பூம்பறை வனத்தில் பழனிமலையில் செடி வெட்டி வெளி பண்ணிவைத்துப் பூம்பறை நகரமும் கோட்டையும் பேட்டையும் கட்டின நகரத்து பண்ணிமலை[1] வேலாயுதற்குச் சேரன் பேருக்குக் கோவிலுங் கட்டிவைத்துப் பூம்பறை நகரில் ஒரு குளமும் கட்டி வைத்தார். அவர் கட்டிவைத்த பின்பு சமையமுதலியும் சடையப்பனும் கத்தூரிரங்கப்பச் செட்டியும் அம்மூவருமாகப் பூம்பறை நகர் கோட்டை ஊருக்குப் பதி னெண்சாதி பல குடியும் அழைத்து வைத்தார். வைத்த பின்பு அதில் உழவு குடியான பல குடிக்கும் முதன்மையாக வேளாளரில் மாந்தப்ப னென்கிறவனைச் சடையப்பன் வைத்தான். அதில் செட்டிமையான பல் குடிக்கு முதன்மையாகக் கவறை கழுஞ்சியரில் திருப்பதி செட்டி என்கிறவனைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தார். இவர்கள் வைத்த பின்பு சேரமாம் பெருமாளென்னும் சேரன் அந்தப் பூம்பறைக் கோட்டை நகர் ஊரதிகாரத்திற்கு வேடர் குண்ணுவரில் நாகப்ப மண் ணுடியை வைத்தார். கரணிகத்திற்குத் திருக்கணக்கரில் முத்து வேல் பிள்ளையை வைத்தார். சேரமாம் பெருமாள் வைத்த பின்பு சமைய முதலியாகிறவர் குமார சுப்பிரமணிய பண்டிதரை அழைப்பித்துப் பூம் பறை பண்ணிமலை வேலாயுதற்குப் புண்யாங்கப் பிரதிஷ்டையும் பண்ணி வைத்தார். அவர் பண்ணி வைத்த பின்பு சேரன் அந்தகோவி லுக்கு விட்ட மானியம் ஐந்நூறு பொன் கிராமமும் ஐம்பதுபொன் சுங்கத்தீர்வையும் ஐம்பதுமிடா விரைப்பு நஞ்சையும் ஐம்பதுமிடா விரைப்பு புஞ்சையும் விட்டு வித்து விட்ட மானியத்திற்குச் சூலக்கல் நாட்டும் பொடிவித்தார். பொடி வித்த பின்பு சமைய முதலிக்கு அந்த யாலயத்திற்கு விட்டமானியத்தில் சமைய முதலிக்குப் பத்திலொன்று என்று பண்ணிமலை ஆலயத்தில் கலச்சாகரம் பொடிவித்தார். பொடி வித்துச் சேரமாம் பெருமாள் நிகுதி செய்த பின்பு சமய முதலி பண்ணி

பாண்டியன் திரும்பியது

பூம்பறை விஜயம்

[1] பன்றிமலை - வராகமலை

மலையாலய ஊழியத்திற்கு நம்பி முதல் திருவலகு வரைக்கும் ஆள் பொடிவித்துத் திருவாடு தண்டிகைச் சீர்பாத ஊழியத்திற்கு ஐம்பது குடிசை கொள்வரும் ஐம்பது குடிக்கும் நம்பி முதல் திருவலகுவரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்குச் சண்முக முதலியை வைத்து நம்பி முதன்மைக்குக் குழந்தை நம்பியை வைத்து நாகபாச முதன்மைக்கு ராம நட்டுவனை வைத்து தாசி முதன்மைக்கு குப்பியை வைத்துக் கோவிலிற்கும்கோவில் மாணியத்திற்கும் மணியங்கணக்கிற்கு முத்து முதலியை வைத்து இவர்களுக்கெல்லாம் ஓலைப் பட்டையமும் பாக்கு வெற்றிலையும் சமைய முதலி கைக் கொடுத்து நிகுதி செய்தார். அவர் நிகுதி செய்த பின்பு சேரமாம் பெருமாள் என்னும் சேரன் கரிகாலச் சோழனுக்கும் சமய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டிக்கும் உடுபறை பாக்கு வெற்றிலையும் கொடுத்து அவர்களும் தானுமாகப் பண்ணிமலை வாசத்திலுள்பட்ட வராகநதியும் வேங்கை நதி இஷுபநதி அனுமநதி ஆளுநதி ஆக இந்த பஞ்ச நதியும் அதினுள்பட்ட பல நதியும் கண்டு எல்லோரும் தீர்த்தமாடி பண்ணிமலை வேலவற்கு அபிஷேக தூப தீபாராதனை முடிப்பிவித்து எல்லோரும் தரிசித்துக் கொண்டு சேரமாம் பெருமாளென்னும் சேரன் முதலாக எல்லோரும் பண்ணிமலையும் பறைங்கற் கடந்து ஆனையென்கிற இருளபதிக்கு வந்தார். வந்த பின்பு சேரமாம் பெருமாள் என்னும் சேரன் இருள் என்கிற ஆனைபதிமலை வனத்தைப் பெடர் கம்பளத்தவரை விட்டுச் செடி வெட்டி வெளி பண்ணிவைத்து முன் லிங்காலயத்தையும் கண்டு அவருக்குக் கோவிலும் கட்டிவித்து அந்த ஆனைமலை வனத்தில் ஆனைமலை நகரமென்று நகரமும் ஊரும் கோட்டையும் பேட்டையும் கட்டி ஒரு குளமும் கட்டி வைத்தார் சேரமாம் பெருமாள் என்னும் சேரன். அவர் கட்டிவைத்த பின்பு சமய முதலியும் சடையப்பனும் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் இம்மூவருமாக அந்த ஆனைமலைத் கோட்டை நகர் ஊரில் பதினெண் சாதி பல குடியும் அழைத்து வைத்தார். அதில் உழவு குடியான பல குடிக்கும் முதன்மையாக வேளாளரில் காழியப்பனென்கிறவனை சடையப்பன் வைத்தான். அதில் செட்டிமையான பல குடிக்கும் முதன்மையாகக் கவரை வளஞ்சியரில் வரதப்பனென்கிறவனை கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தார். இவர்கள் வைத்த பின்பு சேரமாம் பெருமாள் என்னும் சேரன் ஆனைமலைக் கோட்டை நகர் ஊரதிகாரத்திற்கு அள்ளியப்ப மண்ணுடி[1] என்கிற பூவிலுவனை வைத்தார். கர்ணிகத்திற்குத் திருக்கணக்கரில் மலையப் பிள்ளையை வைத்தார். அவர் வைத்து நிகுதி செய்தபின்பு சமைய முதலியாகிறவர் குமார சுப்பிரமணிய பண்டிதரை அழைத்து [2]அம்முனீச்வரமுடையார் கோவிலுக்குப் புண்ணி

வராகநதி முதலிய ஐந்து நதிகள்

ஆனைமலை விஜயம்

---

1 மன்றுடி  2 அமணீசரம் உடையார்

யாங்கப் பிரதிஷ்டையும் பண்ணிவைத்தார். பண்ணிவைத்த பின்பு அந்த ஆலயத்திற்கு சேரமாம்பெருமாளென்னும் சேரன் விடுவித்த மான்யம் ஆயிரம்பொன் கிராமமும் நூறுபொன் சுங்கத் தீர்வையும் நூறுமிடா விரைப்பு நஞ்செய்யும் நூறுமிடா விரைப்பு புஞ்செய்யும் விடுவித்து விட்ட மானியத்திற்கு நாலு சூலக்கல் நாட்டுப் பொடிவித்தார். பொடிவித்த பின்பு சமைய முதலிக்கு அந்த ஆலயத்தில் விட்ட மான்யத்தில் பத்திலொன்றென்று [1]அமுணரலிங்க ஆலயத்தில் கலச்சாகரம் பொடிவித்தார். கலச்சாகரம் பொடிவித்துச் சேரமாம் பெருமாள் என்னும் சேரன் நிருதி செய்தபின்பு சமைய முதலி அந்தக் கோவிலூழியத்திற்கு நம்பி முதல் திருவலகு கடவரைக்கும் ஆள் பொடிவித்துத் திருவாடுதண்டிகை சீர்பாத ஊழியச் சேர்வைக்குக் கைக்கொள்வார் நூறுகுடியும் ஆனைமலை நகரிலே வைத்து வைத்த நூறு குடிக்கும் நம்பி முதல் திருவலகு கடவரைக்கும் முதன்மை நாட்டாண்மை கைக்கொள்வரில் பொன்னம்பல முதலியை வைத்து நம்பி முதன்மைக்கு மோகாமபுரி நம்பியை வைத்து நாக பாச முதன்மைக்கு குப்ப நட்டுவனை வைத்துத் தாசி முதன்மைக்கு சுப்பிமாணிக்கத்தை வைத்து அந்தக் கோவிலுக்கும் கோவில் மணியம் கணக்குக்குக் கைக்கொள்வரில் சோலையங்கிரி முதலியை வைத்து அவர்களுக்கெல்லாம் சமைய முதலியைக் கொண்டு பாக்கு வெற்றிலையும் ஓலைப்பட்டையும் கொடுத்து நிருதி செய்தார். அவர் நிருதி செய்தபின்பு சேரமாம் பெருமாளென்னும் சேரன் கரிகாலச் சோழ சோழனுக்கு சமய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டிக்கும் உடுபறை பாக்கு வெற்றிலை கொடுத்து அவர்களையெல்லாம் வரவழைத்துக் கொண்டு ஆனைம(லை)லர் நகர் கடந்து திருத்தென் சேரி மந்திரகிரி வனத்திற்கு வந்தார். வந்தபின்பு கரிகாலச் சோழன் வெடர்கம்பளத்தவரை விட்டுச் செடி வெட்டி (வழி) பண்ணி வைத்து மந்திரகிரியிலும் செடி வெட்டி வழி பண்ணி வைத்துக் கரிகாலச் சோழன் தன் பேர்க்கு மந்திரகிரிமலை வேலாயுதற்கு மலை மேல் கோவிலுங் கட்டி வைத்து மந்திரகிரி வனத்தில் ஒரு குளமும் வெட்டி வைத்துத் திருத்தென் நகரமென்று நகரமும் கோட்டையும் பேட்டையும் கட்டி வைத்தார். அவர் கட்டிவைத்த தென்சேரி நகர் ஊர்க்கோட்டைக்குச் சமைய முதலியும் சடையப்பனும் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் இம் மூவருமாகப் பதினெண் சாதி பல குடியும் அழைத்து வைத்தார். அதில் உழவு குடியான பல குடிக்கும் முதன்மையாக வேளாளரில் பெரியதம்பி என்கிறவனை சடையப்பன் வைத்தான். அதில் செட்டிமையான பல குடிக்கும் முதன்மையாகக் கவறை வலைஞரில் கோபாலசெட்டி என்கிறவனைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி

மந்திரகிரி தென்சேரிமலை விஜயம்

[1] அமணலிங்கம

வைத்தார். அவர்கள் வைத்து நிகுதி செய்த பின்பு கரிகாலச் சோழன் தென்சேரிக்கோட்டை நகர் ஊரதிகாரத்திக்குப் பூவிலுவரில் பல்லவ மண்ணுடியை வைத்தார். கர்ணிகத்திற்குத் திருக்கணக்கவரில் சிவகாமி பிள்ளையை வைத்தார். அவர் வைத்து நிகுதிசெய்த பின்பு சமைய முதலியும் குமார சுப்பிரமணிய பண்டிதரை யழைத்து மந்திரகிரிமலை வேலாயுத ஆலாயுதத்திற்குப் புண்யாங்கப் பிரதிஷ்டையும் பண்ணி வைத்தார். அவர் பண்ணி வைத்த பின்பு கரிகாலச்சோழன் சேரமாம் பெருமாளென்னும் சேரனிடத்தில் கைங்கிரிய பூமி கொண்டு மந்திரகிரி யாலயத்திற்கு விடுவித்த மானியம் ஐந்நூறுபொன் கிராமமும் ஐம்பது பொன் சுங்கத் தீர்வையும் ஐம்பதுமிடா விரைப்பு நஞ்செய்யும் ஐம்பது மிடா விரைப்பு புஞ்சையும் விடுவித்து விட்ட மானியத்திற்கு நாலு சூலக் கல் நாட்டும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மானியத்தில் சமய முதலிக்குப் பத்திலொன்று என்று மந்திரகிரி வேலர் ஆலயத்தில் கலச் சாகரம் பொடிவித்தார். கரிகாலச் சோழன் கலச்சாகரம் பொடி வித்து நிகுதி செய்த பின்பு சமைய முதலியும் மந்திரகிரி ஆலய ஊழியத்திற்கு நம்பி முதல் திருவலகு கடை வரைக்கும் ஆள் பொடிவித்து, திருவாடு தண்டிகை சீர்பாத ஊழியத்திற்குக் கைக் கொள்வர் ஐம்பது குடியும் தென்சேரி நகரில் வைத்து வைத்த குடி ஐம்பதுக்கு நம்பி முதல் திருவலகு கடை வரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்குக் கைக்கொள்வரில் சொக்கலிங்க முதலியை வைத்து நம்பி முதன்மைக்கு தானப்ப நம்பியை வைத்து நாகபாச முதன் மைக்கு காளநட்டுவனை வைத்துத் தாசி முதன்மைக்கு செல்லி மாணிக் கியை வைத்து அந்தக் கோவிலிற்கும் கோவிலுக்கு விடப்பட்ட மானி யத்திற்கும் மணியங்கணக்குக்குக் கைக்கொள்வரில் மாரியப்ப முத லியை வைத்து அவர்களுக்கெல்லாம் ஓலைப்பட்டையமும் பாக்கு வெற் றிலையும் சமைய முதலி கைக்கொண்டு நிகுதி செய்தார். அவர் நிகுதி செய்த பின்பு கரிகாலச் சோழனென்கிறவன் சேரனுக்கும் சமய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டிக்கும் மற்று முண்டாகிய பேர்க்கும் பச்ச(வ)டம் பாக்கு வெற்றிலையும் கொடுத்தார். கொடுத்த பின்பு கரிகால்ச் சோழன் முதலாக எல்லோரும் மந்திரகிரி வாசத் திலிருக்கின்ற மகரநதி செங்குநதி மேஷநதி கருடநதி தர்ப்பநதி ஆக இந்தப் பஞ்சநதியினும் அதினுள்பட்ட பலநதியினும் தீர்த்தமாடி வந்து மந்திரகிரி வேலற்கு அபிஷேக தூப தீபாரூதனை முடிப்பித்து நரிசித்துக் கொண்டு கரிகாலச் சோழன் முதலாக எல்லாரும் மந்திர கிரி திருத்தென்சேரி நகர் கடந்து சென்னியங்கிரி வனத் திற்குப் போனார். போன பின்பு கரிகாலச் சோழனென்கிற வன் வேடர் கம்பழத்தை வரவிட்டுச் சென்னி மாகாளி வனத்தைச் செடி வெட்டி வெளி பண்ணி வைக்கும்

மகரநதி முதலிய ஐந்து நதிகள்

சென்னிமலை விஜயம்

சென்னி மாகாளி பலிகேட்டது

போது சென்னி மாகாளி என்கிறது கரிகாலச் சோழனிடத்துக்கு வந்து நரபலி கேட்டது. அது கேட்டபடிக்குக் கரிகாலச் சோழனென்கிறவன் சமைய முதலியை அழைத்து அந்தக் காளிக்கு ஒப்புச் சொல்லச் சொன்னார். அவர் சொன்னபடிக்கு சமைய முதலியும் அப்படியே அந்த மாகாளிக்கு இன்னகரமும் இந்த ஆலயமும் கட்டி முடித்தபின்பு உனக்கு நானே கரிகாலச்சோழனைக் கொண்டு முப்பலியுங் கொடுப்பிக்கிறேன் என்று ஒப்புத்தற்க....ணைச் சொன்னார். (அவர் சொன்னபடிக்குச் சமயமுதலியும் அப்படியே அந்த மகா காளிக்கு இன்னகரமும் இந்தவாலயமும் கட்டி முடித்தபின்பு உனக்கு நானே கரிகாலச்சோழனைக் கொண்டு முப்பலியும் கொடுப்பிக்கிறேனென்று ஒப்புத்தற்க....ணைச் சொன்னார்.)

அவர் சொன்னபடிக்கு அந்த மகாகாளியும் மனம் பொறுத்து நின்றபின்பு கரிகாலச் சோழனென்கிறவன் அந்த கம்பவிழத்தை வரவிட்டு அந்த வனத்திலு மந்தச் சென்னியங்கிரியிலும் செடி வெட்டி வளி பண்ணி வைத்துக் கரிகாலச்சோழன் சென்னியங்கிரியில் தம்முடைய பேருக்குச் சென்னியங்கிரி வேலாயுதற்குக் கோவிலுங் கட்டிவைத்து அந்த வனத்தில் ஒரு குளமுமூரும் நகரமும் பேட்டையும் கோட்டையுங் கட்டி வைத்தார். அவா கட்டிவைத்த பின்பு சமைய முதலியும் சடையப்பனும் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் இம் மூவருமாகச் சென்னியங்கிரி நகர் ஊருக்குப் பதினெண் சாதிப் பல குடியும் அழைத்து வைத்து அதில் உழவு குடியானவர் பல் குடிக்கும் முதன்மையாக வேளாளரில் நல்லதம்பி என்கிறவனை சடையப்பன் வைத்தான். அதில் செட்டிமையான பல குடிக்கும் முதன்மையாகக் கவறைவலைஞ்சியரில் குட்டி ரங்கனென்கிறவனைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தான். அவர்கள் வைத்து நிகுதிசெய்தபின்பு கரிகாலச்சோழனென்கிறவர் அந்தச் சென்னியங்கிரி நகர் ஊர்க்கோட்டை அதிகாரத்திற்கு அமர மண்ணுடி என்கிற வேட்டுவனை வைத்தார். கர்ணீகத்திற்குத் திருகணக்கரில் மீனாக்ஷி பிள்ளையை வைத்தார். அவர் வைத்து நிகுதி செய்தபின்பு சமையமுதலியாகிறவர் சென்னியங்கிரி ஆலயத்திற்கு குமார சுப்பிரமணிய பண்டிதரைக் கொண்டு புண்யாங்கப்பிரதிஷ்டை பண்ணி வைத்தார். பண்ணிவைத்த பின்பு கரிகாலச்சோழனென்கிறவர் சேரமாம் பெருமாள் என்னும் சேரனிடத்தில் கைக்கிரயபூமி கொண்டு சென்னியங்கிரி ஆலயத்திற்கு விட்ட மான்யம் ஐந்நூறு பொன் கிராமமும் ஐம்பது பொன் சுங்கத்தீர்வையும் ஐம்பது மிடா விரைப்பு நஞ்செய்யும் ஐம்பது மிடா விரைப்பு புஞ்சையும் விடுவித்து விட்ட மான்யத்திற்கு நாலு சூலக்கல் வெட்டும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மானியத்தில் சமையமுதலிக்குப் பத்திதில் ஒன்று என்று சென்னியங்கிரி ஆலயத்தில் கலச்சாகரம் பொடிவித்தார்.

கரிகாலச் சோழன் கலச்சாகரம் பொடிவித்து நிகுதி செய்த பின்பு சமையமுதலி அந்த ஆலய ஊழியத்திற்கு நம்பிமுதல் திருவலகு கடைவரைக்கும் ஆள்பொடிவித்து திருவாடு தண்டிகை சீர்பாத ஊழியத்திற்கு கைக்கொள்வரில் ஐம்பது குடியை யழைத்துச் சென்னியங்கிரி நகரத்தில் குடிவைத்து அதன்பின்பு சமைய முதலி அந்த ஐம்பது குடியும் வரவழைத்துத் தன்னெதிர் நிறுத்திக்கொண்டு அந்த ஐம்பது குடி கைக்கொள்வரில் யாதாமொருவன் சென்னி மாகாளி துர்க்கைக்கு ஒரு நற்பலி நான் கேட்டவிடத்தில் தருகிறேம் என்று நானென்று துணிந்தவர்க்கு இந்த ஐம்பது குடிக்கைக் கொள்வற்கும் நம்பி முதல் திருவலகுகடை வரைக்கும் முதன்மை நாட்டாண்மையும் சென்னியங்கிரியாலயத்திற்கு விட்ட மானியத்திற்கும் கொடுத்து நிகுதி செய்து தருகிறேமென்று சமயமுதலி சொல்ல அந்த ஐம்பது குடிக்கைக்கொள்வரும் கேட்டு அந்த ஐம்பதுகுடிக் கைக்கொள்வரில் குப்பண்ண முதலி நீங்கள் கேட்டவேளையில் இந்தச் சென்னிமா காளிக்கு நானே ஒரு நற்பலிக்கு நிகுதி செய்து அதன் பின்பு சமைய முதலியாகிறவர் அந்த ஐம்பதுகுடிக் கைக்கொள்வற்கும் நம்பி முதல் திருவலகுகடவரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்கு இந்தக் குப்பண்ண முதலியை வைத்து நம்பி முதன்மைக்கு வேலநம்பியை வைத்து நாகாச முதன்மைக்குக் குமர நட்டுவனை வைத்துத் தாசிமுதன்மைக்கு வெள்ளிமுத்து என்கிறவளை வைத்து அந்தக் கோவிலுக்கும் கோவில் மான்யத்து...........மணியங்கணக்குக்குக் குப்பண்ண முதலியை வைத்து அவர்களுக்கெல்லாம் பட்டையமும் பாக்கு வெற்றிலையும் கொடுத்து நிகுதி செய்த பின்பு சமையமுதலி அந்தச் சென்னி மாகாளி துர்க்கைக்கு கரிகாலச் சோழன் கையில் கோவிலுங் கட்டி வைத்து குமர சுப்பிரமணியப் பண்டிதரைக் கொண்டு துர்க்கையை நிலைநிறுத்திப் புண்ணியாங்க அஷ்ட மந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு கரிகாலச்சோழன் சேரனிடத்தில் கைக்கிரயபூமி கொண்டு அந்த துர்க்கை ஆலயத்திற்கு விட்ட மான்யம் பத்துமிடா விரைப்பு புஞ்செய்யும் பத்துமிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மானியத்திற்குச் சூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மானியத்தில் சமய முதலிக்குப் பத்தில் ஒன்றென்று சென்னி மாகாளி ஆலயத்தில் கலச்சாகரம் பொடிவித்துக் கரிகாலச் சோழன் நிகுதி செய்த பின்பு

சென்னி மாகாளி திருப்பணி

சமைய முதலி அந்த துர்க்கை ஆலய ஊழியத்திற்கு ஆதிசோகி கோரக்கநாதர் வர்க்கத்தில் குழந்தை பண்டாரத்தை வைத்து அவனைக் கொண்டு அந்தச் சென்னி மாகாளி துர்கைக்கு அபிஷேக தீபாறுதனை முடிப்பித்து அந்த முகத்தில் கருப்பண்ண முதலி தன் மகன் பால

நரபலி இட்டது

குமாரனை அழைத்து திருமஞ்சனமாடிவித்துத் [1]திருநீத்துக் காப்புமிட்டு ஆடையுடுத்தி ஆபரணங்கள் பூட்டி

அலங்கரித்துப் பாலசன மிடிவித்துப் பரிமள களப கஸ்தூரிகள் பூசி வீரசந்தனமிடிவித்து பாக்குவெற்றிலை கையில் கொடுத்து வீரகொம்பு, வீரகாளம், வீரமல்லாரி, வீரசிகண்டி, வலம்புரிச் சங்குடனே வீரமேள வாத்தியம் முழங்க பஞ்சவன்னக் குடை பஞ்சமுகத் தீவட்டிகை விருது ரண வீரவேங்கைப் புலிக் கொடியுடனே நடபாவாடையுடனே நட பாவாடைமேல் நடந்து நடன சங்கீதராக மேழவாக்கியம் சூழ்ந்துவர சென்னி மாநகரில் நலுவிதி [1]மிறவணையும் வரவித்துச் சென்னி மாகாளிக்கு எதிர்நிறுத்தி அந்தப் பாலகுமாரனைச் சமைய முதலியாகிற வர் நாம் முன்சொன்ன நற்பலியும் உனக்கு வந்துதென்று அந்தப் பாலகுமாரனை வெட்டி பலியூட்டிவைத்து அந்த முகத்தில் ஆடு, [2]பண்ணி, கோழி அறுத்துப் பலி யூட்டிவித்து அந்த முகத்தி லவ்வூரிலுள்ள குடி வரிசை சனங்களுக்கும் நீங்கள் இந்த துர்க்கைக்கு வருஷமொரு திரு நாள் நடத்திவைத்து நீங்கள் கட்டின வீடுதோறும் விளக்கும் பொங்க லும் ஆடு, பன்னி, கோழி இந்த முப்பலியும் வருஷம் ஒரு எருமைக் கிடா பலியும் கொடுத்து சென்னிமாகாளிக்கு ஒப்பித்து வாருங்க ளென்று அவர்களுக்கு மகட்டுச் செய்து அந்தச் சென்னி மாகாளிக் கும் நீயுமிவர்களிடத்தில் இந்தப்படி நடக்கும் நாளைக்கு ஆடு, பன்னி, கோழி இந்த முப்பலியும் வருஷம் ஒரு எருமைக்கிடா பலியும் அவர் களிடத்தில் வாங்கிக் கொண்டு அவர்களும் நீயு மிந்தக் கிராமதேவதை யாய் இருந்து அவர்களை ரட்சித்து வா வென்று அந்தச் சென்னி மாகாளிக்குச் சமைய முதலி கட்டுச் செய்து அதன் பின்பு சமைய முதலி அந்தச் சென்னி மாகாளி பலிக்கு நின்ற பாலகுமாரனையும் [3]சாவார்க் கோல முகத்தேதியாய் ஒரு கல் சிலை விக்கிரக மும் அவனைப் பார்த்தாப் போல பார்க்கிற முகமாக அடிப்பித்து அந்தச் சிலையை சென்னியங்கிரி ஆலயத்தில் நிறுத்திவைத்து குமார சுப்பிரமணிய பண்டிதரைக் கொண்டு அந்தச் சிலைக்குப் புண்யாங்க அஷ்ட மந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்து அபிஷேக தூபதீபாறுதனை முடிப்பித்து எல்லோரும் தரிசித்துக் கொண்டு அதன்பின்பு அந்தச் சாவார பலிக்கல் சிலைக்குச் சென்னியங்கிரி வேலவர்க்கு முந்தின பூசை நிவேத்தியம் என்று அந்தச் சென்னியங்கிரி ஆலயத்துக்குள்(ப்) பட்ட பேர்க்குக் கட்டுச் செய்து அவரவர்க்கும் நிகுதி செய்து சென்னி யங்கிரி வேலவர்க்கும் மற்றுமுள்ள தேவதைகளுக்கும் அபிஷேக தூப தீபாறுதனை முடிப்பித்து கரிகாலச் சோழன் சேரமாம் பெருமாளென் னுஞ் சேரன் சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி மற்றுமுள்ள பேரும் தரிசித்துக்கொண்டு சமைய முதலி கைப்பட்டி

கரிய காளி பலி கேட்டது

பலியிட்ட மகனுக்குச் சிலை நட்டு ஆராதனை செய்தது

---

[1] மெறவணை [2] பன்றி [3] சாவார பலிககல் சிலை-வீரககல். சங்கநூல் காண்க.

வெள்ளிப்பதி விஜயம்

ஒழுகினபடிக்குச் சென்னியங்கிரி நகர் கடந்து வெள்ளி யென்கிற இருளன்பதி வன்பதி வனத்துக்குப் போனார். போனபின்பு கரிகாலச் சோழன் வேடாகம பழத்தை வரவிட்டு அந்த வனத்தில் செடி வெட்டி வைக்கும்போது அந்த வனங் காத்திருந்த துர்க்கை பத்திரகாளி என்கிற கரியகாளி சோழனிடத் திற்கு வந்து பலி கேட்டது.

அது கேட்டபடிக்குச் சோழன் சமைய முதலியை அழைத்து அந்த துர்க்கைக்கு [1]ஒ(ம்)படச் சொல்லச் சொன்னார். அவர் சொன்ன படிக்குச் சமைய முதலியும் அந்த துர்க்கைக்குச் சோழன் இந்த நகர மும் இதில் கோட்டையும் பேட்டையும் இதிலுண்டாகிய ஆலயமும் கட்டி முடித்த பின்பு உனக்கு நானே சோழனைக் கொண்டு கோவிலுங் கட்டிவைத்து உன்னையும் நிலைநிறுத்தி உனக்கு பலியும் நானே கொடுப்புவிக்கிறேன் என்று சமைய முதலி சொல்ல அந்த துர்க்கை யும் கேட்டு மனம் பொறுத்து நின்ற பின்பு சோழன் வேடாகம பழத்தை விட்டு வெள்ளி என்கிற இருளன்பதி வனத்தைச் செடி வெட்டி வெளி பண்ணி வைத்து அதிலிருந்த நாகிசுரமுடையார் லிங்கத் தையும் கண்டு கரிகாலச் சோழன் அந்த நாகிசுரமுடையார்க்குக் கோவி லும் கட்டிவைத்து அதன் பின்பு சோழன் அந்த வனத்தில் முன் குடி யிருந்த வெள்ளியென்கிற இருளன் அந்த வெள்ளி என்கிற இருளன் பேர்க்கும் ஊர் வெள்ளி மாநகரம் இரும்பிறை மூதூ ரென்று வூருங்கட்டி வைத்து அதில் கோட்டையும் பேட் டையும் கட்டிவைத்து சோழன் கட்டி வைத்த பின்பு சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி அம்மூவருமாகப் பதினெண் சாதி பல குடியும் அழைத்து வெள்ளிமா நகரம் இரும்பிறை மூதூர் நகரம் கோட்டை பேட்டையிலும் குடிவைத்து அதிலுழவு குடியான பல குடிக்கும் முதன்மையாகச் சோழ தேசப் பால சேரிநகர் வேளாளரில் சின்னப்பனென்கிறவனை வைத்துச் சடையப்பன் நிகுதி செய்தான். அதில் செட்டிமையான பல்குடி முதன்மையாகக் கவறை வலைஞ்சியரில் முத்துரங்கனைக் கத்தூரி ரங்கப் பச் செட்டி வைத்தார். அவர்கள் வைத்து நிகுதி செய்தபின்பு கரி காலச் சோழன் அந்த வெள்ளி மாநகரம் இரும்பிறை மூதூர் கோட்டை நகரத்து அதிகாரத்திற்கு வேடுவரில் மலையணி மண்ணுடியை வைத்தார். அதில் கர்ணிகத்திற்குத் திருக்கணக்கரில் முருகநாத பிள்ளையை வைத்தார். அவர் வைத்து நிகுதி செய்த பின்பு சமைய முதலியும் உத்தமபண்டிதரைக் கொண்டு நாகிசுர முடையாருக்கும் ஓதிமலை வேலவர்க்கும் புண்ணியாங்க அஷ்டமந்திரப் பிர திஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழன்

வெள்ளிப்பதி இரும்பறை ஊர்

ஓதிமலை வேலர்

[1] ஓம்படல் - ஒத்துக்கொள்ளல்.

சேரனிடத்தில் கைக்கிரயபூமி கொண்டு அந்த நாகீசுர முடையாருக்கும் ஓதிமலை வேலர்க்கும் விட்டமானியம் ஐந்நூறு பொன் கிரமமும் ஐம்பது பொன் சுங்கமும் (ஐம்பதுபொன் சுங்கமும்) ஐம்பது மிடா விரைப்புஞ் சையும் ஐம்பதுமிடா விரைப் புஞ்சையும் விடிவித்து விட்டமானியத் திற்கும் நாலுசூலக்கல் நாட்டும்பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மானியத்தில் சமைய முதலிக்குப் பத்திலொன்றென்று அந்த நாகீசுர முடையாராலயத்தில் கலச்சாகரம் பொடிவித்துக் கரிகாலச் சோழன் நிகுதிசெய்த பின்பு சமைய முதலியும் அந்த ஆலய ஊழியத்திற்கு நம்பி முதல் திருவலகுகட வரைக்கும் ஆள் பொடிவித்துத் திருவாடு தண்டிகை சீர்பாத ஊழியத்திற்குக் கைக்கொள்வரில் ஐம்பதுகுடியும் வைத்து அந்த ஐம்பது குடிக்கைக் கொள்வற்கும் நம்பி முதல் திருவலகுகட வரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்கு சண்முக முதலியை வைத்து நம்பி முதன் மைக்கு சாமிநாத நம்பியை வைத்து நாகபாச முதன்மைக்கு ராயநட்டு வனை வைத்துத் தாசி முதன்மைக்கு தேவயானையை வைத்து அந்தக் கோவிலிற்கும் கோவில் மானியத்திற்கும் மணியங் கணக்குக்கு குமாரவேல் முதலியை வைத்து அவர்களுக் கெல்லாம் பட்டயமும் பாக்குவெற்றிலையும் கொடுத்து நிகுதி செய்த பின்பு சமைய முதலியும் அந்த வெள்ளி மாநகரம் இரும்பிறை மோதூர்காத்திருந்த துர்க்கை பத்திரகாளி என்கிற கரியகாளி அம்ம னுக்குக் கரிகாலச் சோழனைக் கொண்டு கோவிலுங் கட்டிவைத்து உத்தம பண்டிதரைக் கொண்டு அந்தக் கரியகாளி துர்க்கையை நிலை நிறுத்திப் புண்யாங்க அஷ்ட மந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்து அந்தக் கோவிலூழியத்திற்கு ஆதிசோதி கோரக்கநாதர் வர்க்கத்தில் காழி(ளி)யாண்டிப் பண்டாரத்தை வைத்து அவனைக்கொண்டு அந்த துர்க்கை பத்திரகாளி என்கிற கரியகாளி அம்மனுக்கு அபிஷேக தூப தீபாருதனை முடிப்பித்து அந்த முகத்தில் ஆடு, பன்னி, கோழி யறுத் துப் பலியூட்டித் தாம் முன்சொன்ன பலி வந்துதென்று அந்தத் துர்கைக்கு ஒப்பித்து அந்த முகத்தில் அவ்வூரிலுள்ள குடிவரிசை ஜனங்களுக்கும் அந்தத் துர்க்கைக்கு வருஷமொரு திருநாள் நடத்தி வைத்து அன்னளில் நீங்கள் கட்டின வீடு தோறும் விளக்கும் பொங்க லும் ஆடு, பன்னி, கோழி இந்த முப்பலியும் ஒப்பித்துவாருங்களென்று அவர்களுக்குக் கட்டுச் செய்வித்து இந்த துர்க்கைக்கு நீ அவர்களுக்கு கிராம வழித்தெய்வமாக அவர்களை ரக்ஷித்துக்கொண்டு இருமென்று சமையமுதலி துர்கைக்கு கட்டுச்செய்த பின்பு கரிகாலச் சோழன் சேர னிடத்தில் கைக்கிரய பூமிகொண்டு துர்க்கை கோவிலுக்கு விட்ட மானி யம் ஐந்து மிடா விரைப்பு நஞ்செய்யும் ஐந்துமிடா விரைப்பு புஞ்செய்யும் விடுவித்து விட்ட மானியத்திற்குச் சூலக்கல் நாட்டும்பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மானியத்தில் சமைய முதலிக்குப் பத்தில் ஒன்று என்று துர்க்கையாலயத்தில் கலச்சாகரம் பொடிவித்து கரிகாலச்

சோழன் நிகுதி செய்தபின்பு கரிகாலச் சோழன் சேரன் சமைய முதலி சடையப்பன் கத்தூரிரங்கப்பச் செட்டியும் மற்றுமுள்ளவருமாக சமைய முதலி கைப்பட்டோலை எழுதும்படிக்கு ஓதியங்கிரி வாரத்திலுள்ள பொன்மானினதி மகாநதி சங்கநதி சர்ப்பநதி கருடநதி ஆக இப்பஞ்ச நதியுங் கண்டு கரிகாலச் சோழன் அடித்துறுவை எடுப்புவித்து அணைஎரி கட்டி வைத்து அந்த நதிகளில் எல்லோரும் தீர்த்தமாடி வந்து ஓதியங்கிரி வேலற்கு அபிஷேக தூப தீபாருதனை முடிப்புவித்து எல்லோரும் தரிசித்துக் கொண்டு ஓதியங்கிரி இரும்பறை நகர் கடந்து எல்லோரும் சமைய முதலி பட்டோலை ஒழுகின் படிக்குச் சத்தி மங்கை மாகாளி வனத்திற்குப் போனார்.

சத்திமங்கை விஜயம்

போன பின்பு சத்தி மாகாளி வனத்தில் சேரமாம் பெருமாள் சத்தி மாகாளி துர்க்கை ஆலயப்பிரதிஷ்டையுஞ் செய்து நகரமும் கட்டி வைத்து குடிஏற்ற வேணுமென்று வேடர் கம்பழ(ள)த்தாரை விட்டுச் செடி வெட்டி வைக்கும் போது அந்த வனத்தில் காத்திருந்த சத்தி மங்கை மாகாளி துர்க்கை பத்திநி ஆகிறது சேரனிடத்திற்கு வந்து பலி கேட்டது. அது கேட்டபடிக்கும் சேரனும் சமைய முதலியை யழைத்து அந்தத் துர்க்கைக்கு ஒப்புச் சொல்லச் சொல்லிச் சொன்னர். அவர் சொன்னபடிக்குச் சமைய முதலியும் அப்படியே அந்தத் துர்க்கைக்கு இந்த நகரமும் உன் பேருக்குக் கட்டிவைத்த இந்த நகரத்தில் காவலாக இன்னகர் வட பாரிசத்தில் உனக்கும் ஆலயங் கட்டிவைத்து உன்னையும் நிலைநிறுத்தி நானே உனக்கு முப்பலியும் கொடுப்பி வைக்கிறேன் என்று துர்க்கைக்குச் சொன்னர். சமைய முதலி சொன்னபடி கேட்டு மனம் பொரு(று)த்து நின்றது. நின்றபின்பு சேரனுகிறவர் அந்த துர்க்கை மாகாளி வனத்தை வேடர் கம்பளத்தவரை வரவிட்டுச் செடிவெட்டி வெளிபண்ணிவைத்து அந்தத் துர்க்கைபேருக்குச் சத்திமங்கை நகரமென்று நகரமுங் கட்டிவைத்து அந்த நகரத்தில் கோட்டையும் பேட்டையும் கட்டிவைத்து ஒரு குளமும் வெட்டிவைத்து அந்த நகர் வட பாரிசத்தில் இந்த நகர்க்காவலாக அந்த சத்தி மங்கை மாகாளிக்கு வடக்கு வாலைக்கோவிலும் கட்டி வைத்தார். அவர் கட்டி வைத்த பின்பு சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி அம் மூவருமாகப் பதினெண் சாதி பல குடியும் அழைத்து அந்நகரில் குடி வைத்து அதிலுழவு குடியான பல் குடிக்கும் முதன்மையாகச் சோள தேசச் செந்தலைவூர் வேளாளரில் வாரண வாசி என்கிறவனைச் சடையப்பன் வைத்தான். அதில் செட்டிமையான பல குடிக்கும் முதன்மையாகக் கவறை வளஞ்சியரில் ரங்கண்ணச்செட்டி என்கிறவனைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தான். அவர்கள் வைத்து நிகுதி செய்த பின்பு சேரனுகிறவர் அந்தக் கோட்டைநகர் ஊரதிகாரத்திற்குச் சின்னப்ப மண்ணுடி என்கிற வேடனை வைத்தார். கர்ணிகத்திற்குத் திருக்

கணக்கரில் விசுவலிங்கம் பிள்ளையை வைத்தான். அவர் வைத்து நிகுதி செய்த பின்பு சமைய முதலியாகிறவர் உத்தம பண்டிதரை யழைப்பித்து அந்த சத்தி மங்கை மாகாளி விக்கிரகத்தை நிலை நிறுத்தி வைத்துப் புண்யாங்கம் அஷ்ட மந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்து அந்தக் கோவிலூழியத்திற்கு ஆதிசோதி கோரக்க நாதர் வர்க்கத்தில் செங்கோட் பண்டாரத்தை வைத்து அவன் முதலாக நாகபாசம் திருவலகு வரைக்கும் ஆள் பொடிவித்துத் திருவாடு தண்டிகைச் சீர்பாத ஊழியத்திற்குக் கைக்கொள்வர் முப்பது குடியும் வைத்து அந்த முப்பது குடிக்கும் அந்தப் பண்டார முதல் திருவலகு கடவரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்குக் கைக்கொள்வரில் சுப்பிரமணிய முதலியை வைத்து நாகபாச முதன்மைக்கு சீரங்க நட்டுவனை வைத்துத் தாசி முதன்மைக்கு மயில் மாணிக்கத்தையும் வைத்து சமைய முதலி நிகுதி செய்த பின்பு சேரன் துர்க்கை ஆலயத்திற்கு விட்ட மானியம் நூறு பொன் கிராமமும் பத்துப் பொன் சுங்கத் தீர்வையும் பத்து மிடா விரைப் புஞ்செய்யும் குளக்கரையில் பத்து மிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மானியத்திற்கு நாலு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த ஆலயத் திற்கு விட்ட மானியத்தில் சமைய முதலிக்குப் பத்திலொன்றென்று அந்த துர்க்கை யாலயத்தில் கலச்சாகரமும் பொடிவித்து சேரன் நிகுதி செய்தபின்பு சமைய முதலியாகிறவர் அந்தக் கோவிலுக்கும் கோவில் மானியத்திற்கும் மணியங் கணக்கிற்குக் கைக்கொள்வரில் கந்தப்பமுத லியை வைத்து அவர்களுக்கெல்லாம் ஓலைப்பட்டையமும் கொடுப்பித்து சமைய முதலியைக்கொண்டு பாக்கு வெற்றிலையும் கொடுத்து நிகுதி செய்தபின்பு சமைய முதலியாகிறவர் அந்தக் கோவில் பண்டாரத்தை அழைத்து அந்த துர்க்கைக்கு அபிஷேக தூபதீபாருதனை முடிப்பி வித்து அந்த முகத்தில் ஆடு, பன்னி, கோழி அறுத்துப் பலியூட்டித் தாம் முன்சொன்ன முப்பலியும் வந்ததென்று துர்க்கைக்கு ஒப்பித்து அந்த முகத்திலவ்வூரிலுள்ள குடிவரிசை சனங்களுக்கும் நீங்களிந்த து(ர்)க் கைக்கு வருஷமொரு திருநாள் நடப்பிவைத்து நீங்கள் கட்டினவீடு தோறும் விளக்கும் பொங்கலும் ஆடு, பன்னி, கோழி இந்த முப்பலியும் வருஷம் ஒரு எருமைக்கிடாபலியும் நீங்கள் இந்த துர்க்கைக்கு ஒப்பி வைத்து வாருங்களென்று அவர்களுக்கும் கட்டுச் செய்து அந்தத் துர்க்கைக்கும் 50 இந்தக் கிராம தேவதையாயிருந்து அவர்களை ரக்ஷித் துக்கொண்டு நடந்துவாருமென்று அந்தத் துர்க்கைக்கும் சமையமுதலி கட்டுச் செய்த பின்பு சேரன் கரிகாலச் சோழன் சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி மற்றுள்ள பேருமாக அந்தத் துர்க்கையைத் தரிசித்துக் கொண்டு அந்தச் சத்தி மங்கை நகர் கடந்து சமைய முதலி கைப்பட்டி ஒழுகின படிக்குத் திங்கள் வனத்திற்குப் போனார். போன பின்பு

திங்கள்வனம்

சேரனுகிறவர் வேடர் கம்பளரை வரவிட்டுத் திங்கள் மாகாளி வனத்தை நகரம் கட்ட வேணுமென்று செடி வெட்டி வைக்கும் போது அந்தத் திங்கள்வனங் காத்திருந்த காரிய காளி துர்க்கையும் பூமை முனியும் சேரனிடத்திற்கு வந்து பலி கேட்டது.

அது கேட்டபடிக்குச் சேரன் சமைய முதலியை அழைத்து அந்தத் துர்க்கை முனிக்கும் ஒப்புச் சொல்லச் சொன்னர். அவர் சொன்னபடிக்குச் சமைய முதலியும் அப்படியே அந்த துர்க்கை முனிக்கு இந்த நகரமும் கட்டி வைத்து உங்களுக்கு ஆலயம் கட்டி வைத்து முப்பலியும் நானே உங்களுக்கு ஒப்பி வைக்கிறேன் என்று சமைய முதலி துர்கையை முனிக்குச் சொல்ல அவர் சொன்னபடிக்குத் துர்க்கை முனியும் மனம் பொருத்து நின்ற பின்பு சேரமாம் பெருமாள் என்னும் சேரன் முன் துவாபரயுகத்தில் தர்மர் வனவாசம் செய்த நாளில் ஒருத் திங்கள் வனவாசம் செயத் திங்கள் வனத்தை வேடர் கம்பளத்தை விட்டுச் செடி வெட்டி வெளி பண்ணி வைத்து அவர் வனவாசம் செய்த ஒரு திங்கள் நாள் பேர்க்குத் திங்களூர் நகரமென்று நகரமும் பேட்டையும் கோட்டையும் கட்டி வைத்து ஒரு குளமும் வெட்டிவைத்து அந்த நகரத்தில் அந்நகர் காவலாக அந்நகர் வடபாரிசத்தில் அந்தக கரியகாளி துர்கைக்கு ருத்திர வாசல் கோவிலுங் கட்டி வைத்தார். அவர் கட்டி வைத்த பின்பு சமைய முதலியும் சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் அம் மூவருமாகப் பதினெண் சாதி பல குடியுமழைத்து அந்நகரில் குடிவைத்து உழவு குடியான பல குடிக்கும் முதன்மையாகக் கவறைவலெஞ்சியரில் மாந்த செட்டி என்கிறவனைச் சடையப்பன் வைத்தான். அதில் செட்டிமையான பல குடிக்கும் முதன்மையாகக் கவறைவளெஞ்சியரில் மாந்த செட்டி என்கிறவனை கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தார். அவர்கள் வைத்து நிகுதி செய்த பின்பு சேரமாம் பெருமாளென்னும் சேரன் அந்தக் கோட்டைநகர் ஊர் அதிகாரத்திற்கு வேட்டுவரில் பெரியண்ண மண்ணுடியை வைத்தார். அதில் கர்ணிகத்திற்குத் திருக்கணக்கரில் நல்லதம்பி பிள்ளையை வைத்தான். அவர் வைத்து நிகுதி செய்த பின்பு சமைய முதலியாகிறவர் உத்தம பண்டிதரை அழைத்து அந்தத் துர்க்கை முனியும் நிலைநிறுத்தி வைத்துப் புண்ணியாகங்கம் அஷ்ட மந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு சேரன் அந்த துர்க்கையாலயத்திற்கு விட்ட மானியம் நூறு பொன் கிராமமும் பத்துப் பொன் சுங்கத் தீர்வையும்........................ மிடா விரைப்பு புஞ்செய்யும் குளக்கரையில் பத்து மிடா விரைப்பு நஞ்செய்யும் விடிவித்து விட்ட மானியத்திற்கு நாலு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மானியத்தில் சமைய முதலிக்குப் பத்தில் ஒன்று என்று அந்த துர்க்கை ஆலயத்தில்

கலச்சாகரம் பொடிவித்தார். அவர் பொடிவித்து நிகுதி செய்த பின்பு சமைய முதலியாகிறவர் அந்தக் கோவிலூழியத்திற்கு ஆதிசோதி கோரக்கநாதர் வர்க்கத்தில் பிரமபண்டாரத்தை வைத்து அந்தப் பண்டார முதலாக நாக பாசத்திருவலகு வரைக்கும் ஆளப் பொடிவித்து திருவாடுதண்டிகை சீர்பாத ஊழியத்திற்குக் கைக்கொள் வர் எழுபது குடியும் வைத்து அந்த எழுபது குடிக்குப் பண்டார முதலாக திருவலகு கடவரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்கு நாகப்ப முதலியை வைத்து நாகபாச முதன்மைக்கு ஆனந்த நட்டுவனை வைத்துத் தாசி முதன்மைக்கு கறுப்பிமாணிக்கியை வைத்து அந்தக் கோயிலுக்கும் கோவில் மானியத்திற்கும் மணியங் கணக்குக்குக் கைக் கொள்வரில் செவந்தி முதலியை வைத்து அவர்களுக்கெல்லாம் ஓலைப் பட்டையும் கொடுப்பித்துச் சமைய முதலிகைக் கொண்டு பாக்கு வெற்றிலை கொடுத்து நிகுதி செய்தபின்பு சமைய முதலியாகிறவர் அந்த துர்க்கைக்கு அந்தப் பண்டாரத்தைக் கொண்டு அபிஷேக தூப தீபாருதனை முடிப்பித்து அந்த முகத்தில் ஆடு, பன்னி, கோழி அறுத்துப் பலியூட்டிவைத்து நாம் முன்சொன்ன முப்பலியும் வந்த தென்று அந்த துர்க்கைக்கு ஒப்புவித்து அந்த முகத்தி லவ்வூரிலுள்ள குடிசனங்களுக்கும் நீங்களிந்த துர்க்கைக்கு வருஷமொரு திருநாள் நடத்திவைத்து நீங்கள் கட்டின வீடுதோறும் பொங்கல் விழாக்கும் ஆடு, கோழி, பன்னி இந்த மூப்பலியும் வருஷமொரு எருமைக்கிடா பலியும் வருஷமொருதிறம் இந்தத் துர்க்கைக்கு நீங்கள் ஒப்பிவைத்து வாருங்களென்று அவர்களுக்கும் கட்டுச்செய்து அந்தத் துர்க்கைக்கும் நீர் இந்தக் கிராம தேவதையாய் இருந்து அவர்களையும் ரக்ஷித்துக் கொண்டு நடந்துவாரும் என்று சமைய முதலி அந்தத் துர்க்கைக்கும் கட்டுச்செய்து அந்தப் பூம முனியையும் நிலைநிறுத்தி வைத்து அந்த முனிக்கும் கரிவாடு, கத்தரிக்காய், கோழிமுட்டை, கரிசாராயம்...............
....வுஞ் சோறும் தயிர் நெய் பால் இதுமுதலாகியதெல்லாம் சூலவண்டி யில் வைத்து அந்தத் திங்களூர் நகர்சுத்தி வலமாக இழுத்துவந்து அந்த பூம முனிக்கு அந்தச் சூலவண்டி ஆதாரமும் ஆடு கோழி பன்னி(றி) அறுத்துப் பலியூட்டி வைத்து அந்தப் பூமன் முனிக்கு உனக்கு நாம் முன் சொன்ன பலியும் வந்ததென்று ஒப்பு வித்து அந்த கிராமத்தவற்கு இந்தப்படிக்கு..........நாள் இந்தப் பலியாகாமல் அந்தப் பூமன் முனிக்கு நீங்கள் ஒப்பித்து வாருங்களென்று அந்தக் கிராமத்தாருக்கும் கட்டுச் செய்து அந்தப் பூமன் முனிக்கு நீ இந்தப்படி இந்தக் கிராமத்தாரிடத்தில் பலி வாங்கிக் கொண்டு கிராமக் காவல் தேவதையாக யிருமென்று அந்த முனிக்கும் சமைய முதலி கட்டுச் செய்து பின்பு சேரன் சமைய முதலி கரிகாலச் சோழன் சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் மற்று முள்ள பேருமாக அந்தத் துர்க் கையும் பூமன் முனியும் தரிசித்துக்கொண்டு அந்தத் திங்களூர்

நகரிலுள்ள வட தூத்தி தென்னரசையும் கண்டு எந்த நகரிழிந்தாலும் இந்த நகருக்கு அழிவில்லை யென்று எல்லோரும் சந்தோஷப் பட்டுக்கொண்டு திங்களூர் நகர் கடந்து சமையமுதலி கைப்பட்டின் ஒழுகினபடிக்கு விஜய மங்கை வனத்திற் குப் போனார். போன பின்பு கரிகாலச் சோழனுகிறவர் தம்முடைய பெயர்க்கு நகரமும் கோவிலும் கட்டி வைக்க வேணுமென்று வேடர் கம்பழத்தை வரவிட்டுச் செடி வெட்டி வைக்கும் போது அந்த வனங் காத்திருந்த விஜய மங்கை மாகாளி சோழனிடத் திற்கு வந்து பலி கேட்டது.

திங்களூர்
விஜய மங்கை

அது கேட்ட படிக்கு கரிகாலச் சோழன் சமைய முதலியை யழைத்து அந்தத் துர்க்கைக்கு ஒப்புச் சொல்லச் சொன்னார். அவர் சொன்னபடிக்குச் சமைய முதலியும் அப்படியே அந்தக் துர்க்கைக்கு இந்த நகரமும் உன்னுடைய பெயர்க்குக் கட்டி வைத்து இந்த நகரத்திலுண்டாகிய ஆலயமும் கட்டி வைத்த பின்பு உனக்கு நானே சோழனைக் கொண்டு கோவிலும் கட்டி வைத்து உன்னையும் நிலை நிறுத்திவைத்து முப்பலியும் கொடுப்பிவைக்கிறேன் என்று சமைய முதலி அந்தத் துர்க்கைக்குச் சொன்னா.

சொன்னபடி கேட்டு துர்க்கையும் மனம் பொறுத்து நின்ற பின்பு கரிகாலச் சோழனுகிறவர் விஜய மங்கை மாகாளி வனத்தை வெட்டி வைத்து வெளி பண்ணி அங்கிலுள்ள சங்கரலிங்க உடையாருக்கு கரிகாலச்சோழன் தன்பேருக்குக் கோவிலும் கட்டி வைத்து அந்த விஜய மங்கை பெயர்க்கு விஜயபுரி நகரமென்று நகரமும் கட்டி வைத்துக் கோட்டையும் பேட்டையும் கட்டி வைத்தார். ஒரு குளமும் கட்டி வைத்தார். அவர் வெட்டி வைத்த பின்பு சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் அம் மூவருமாகப் பதினெண் சாதி பல் குடியும் அழைத்து அந்த நகரில் குடி வைத்து அதிலுழவு குடியான பலகுடிக்கும் முதன்மையாக (கவரை வளைஞியாரில் தனுக்கோடி செட்டியை) சோள தேசப் படைத்தலைநகர் வேளாரில் பெரியண்ண னென்கிறவனைச் சடையப்பன் வைத்தான். அதில் செட் டிமையான பல் குடிக்கும் முதன்மையாகக் கவறை வளைஞரில் தனுக் கோடி செட்டியைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தான். அவர்கள் வைத்து நிகுதி செய்த பின்பு கரிகாலச் சோழனுகிறவர் அந்தக் கோட் டை அதிகாரத்திற்கு வேட்டுவரில் குமாரவேல மண்ணுடியை வைத்தான் அதில் கர்ணிகத்திற்குத் திருக் கணக்கரில் சண்முகம் பிள்ளையை வைத் தார். அவர் வைத்து நிகுதி செய்த பின்பு சமைய முதலியாகிறவர் விஜயபுரிநகர் சங்கரலிங்க உடையாருக்கு உத்தம பண்டிதரை அழைத் துப் புண்ணியாங்கம் அஷ்டபந்தம் பிரதிஷ்டையும் செய்வித்தார். செய்வித்த பின்பு கரிகாலச் சோழனுகிறவர் சேரரிடத்தில் கைக்கிரய

பூமி கொண்டு அந்த ஆலயத்திற்கு. விட்ட மானியம் ஐந்நூறு பொன் கிராமமும் ஐம்பது பொன் சுங்கத் தீர்வையும் ஐம்பது மிடா விரைப்படிப் புஞ்செய்யும் குளக்கரையில் ஐம்பதுமிடா விரைப்பு நஞ்செய்யும் விடு வித்து விட்ட மானியத்திற்கு நாலு சூலக்கல்லும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மானியத்திற்கு சமைய முதலிக்குப் பத்தில் ஒன்று என்று விஜயபுரி சங்கரலிங்க ஆலயத்திற்குக் கலச்சாகரம் பொடிவித்தார். பொடிவித்த பின்பு சமைய முதலியும் அந்த ஆலய ஊழியத்திற்கு நம்பி முதல் திருவலகு கடவரைக்கும் ஆள் பொடிவித்துத் திருவாடு தண்டிகை சீர்பாத ஊழியத்திற்குக் கைக் கொள்வரில் ஐம்பது குடியும் வைத்து அந்த ஐம்பது குடிக்கும் நம்பி முதல் திருவலகு கடவரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்குக் கைக் கொள்வரில் சிவகிரி முதலியை வைத்து நம்பி முதன்மைக்கு ஆவடை நம்பியை வைத்து நாகபாச முதன்மைக்கு தேவன் நட்டுவனை வைத் துத் தாசி முதன்மைக்கு அம்ம முத்து மாணிக்கத்தை வைத்து அவர் களுக்கெல்லாம் ஓலைப்பட்டயமும் பாக்கு வெற்றிலையும் கொடுத்து சமைய முதலி நிகுதி செய்தபின்பு கரிகாலச் சோழனென்கிறவர் அந்த விஜய மாகாளிக்குத் தம்முடைய பேருக்கு உத்தரவாசல் கோவிலும் கட்டிவைத்து அந்தக் கோவிலுக்கு சேரனிடத்தில் கைக்கிரய பூமி கொண்டு விட்ட மானியம் நூறு பொன் கிராமமும் பத்து மிடா விரைப்புப் புஞ்செய்யும் பத்து மிடா விரைப்புநஞ்செய்யும் விட்டுவைத்து விட்ட மானியத்திற்குச் சூலக்கல் நட்டும் பொடிவித்து அந்த ஆலயத் திற்கு விட்ட மான்யத்தில் சமைய முதலிக்குப் பத்திலொன்று என்று விஜய மாகாளிக்குக் கலச்சாகரம் பொடிவித்து சேரன் நிகுதி செய்த பின்பு சமைய முதலியும் உத்தம பண்டிதரை அழைத்து விஜய மாகாளி விக்கிரமத்தை நிலைநிறுத்திப் புண்ணியாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டை செய்வித்து விஜயபுரி அம்மனென்று அந்தம்மனுக்குப் பேருங்கண்டு அந்தக் கோவிலூழியத்திற்கு ஆதிசோகி கோரக்கநாதர் வர்க்கத்தில் மயில் பண்டாரத்தை வைத்து அந்தப் பண்டார முதலாக நாகபாச திருவலகு வரைக்கும் ஆள் பொடிவித்து திருவாடு தண்டிகை சீர்பாத ஊழியத்திற்குக் கைக்கொள்வரில் இருபது குடியும் வைத்து அந்த இருபது குடிக்கும் அந்தப் பண்டார முதல் திருவலகு வரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்குக் கைக்கொள்வரில் தென்பழனி முதலி யை வைத்துநாகபாச முதன்மைக்குப் பள்ளி நட்டுவனை வைத்துத் தாசி முதன்மைக்கு மரகதமாணிக்கியை வைத்து அந்தக் கோவிலுக்குக் கோவில் மானியத்திற்கு மணியங்கணக்குக்குக் கைக்கொள்வரில் கொடி முடி வேலப்ப முதலியை வைத்து அவர்களுக்கெல்லாம் ஓலைப்பட்டைய மும் பாக்குவெற்றிலையுங் கொடுத்து சமைய முதலி நிகுதி செய்தபின்பு பண்டாரத்தைக் கொண்டு விஜயபுரி அம்மனுக்கு அபிஷேக தூப

தீபாரூதனை முடிப்பித்து அந்த மூகத்தில் ஆடு கோழி பன்னி அறுத்துப் பலியூட்டி வைத்து நாம் முன் சொன்ன முப்பலியும் வந்ததென்று அந்த துர்க்கை யம்மனுக்கு ஒப்பி வைத்து அந்த முகத்தி லவ்வூரிலுள்ள குடிவரிசை ஜனங்களுக்கும் அந்தம்மனுக்கும் நீங்கள் வருஷமொரு திருநாள் நடத்தி வைத்து அந்த நாளில் நீங்மள் கட்டின வீடு தோறும் பொங்கல் விளக்கு ஆடு பன்னி கோழி வருஷமொரு எருமைக் கிடா பலியும் அறுத்துப் பலி கொடுத்து வாருங்களென்று சமைய முதலி அவர்களுக்கும் கட்டுச் செய்து அந்நம்மனுக்கும் நீ இந்தப்படி வருஷ மொருநாள் அவர்களிடத்தில் பலி வாங்கிக் கொண்டு அவர்களுக்கும் கிராம தேவதையாயிருந்து அவர்களை ரக்ஷித்துக் கொண்டு நாள் தோறும் நடந்து வாருமென்று சமைய முதலி அந்நம்மனுக்குச் செய்தபின்பு கரிகாலச் சோழன் சேரமாம் பெருமாளென்றும் சேரன் சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி மற்றுமுள்ள பேருமாக அந்த விஜயபுரி நகரிலுள்ள நதி விவரம் சமைய முதலி கைப்பட்டி எழுதின ஒழுகின படிக்கு முன் துவாபரயுகத்தில் (ஐவர்) அய்வராசாக்கள் வனவாசம் செய்த நாளில் உண்டு செய்த நதியின் விவரம் வாசித்துக் கொடுத்தபடிக்கு விவரங்காண்க. தர்ம மாநதி வீமநதி விஜயநதி...........நகுலநதி தன்னையாளப் பிறந்த சகதேவநதி துரோபதைநதி ஆதிவிஜயமாகாளிநதி

ஏழு நதிகள்

ஆக அந்த ஏழுநதியும் கண்டு கரிகாலச் சோழன் அடித்தாருவை எடுப்பித்து அணை ஏரி கட்டிவித்து அந்நதிகளில் எல்லாரும் தீர்த்தமாடி வந்து விஜயபுரி சங்கரலிங்க உடையாருக்கும் விஜயபுரி அம்மனுக்கும் அபிஷேக தூப தீபாரூதனை முடிப்பித்து எல்லோரும் தரிசித்துக் கொண்டு விஜயபுரி நகர் கடந்து சமைய முதலி கைப்பட்டி ஒழுகின படிக்கு கீரனென்கிற இருளன்பதி வனத்திற்குப் போனார். போன பின்பு சேரமான் பெருமாள் கீரனென் கிற இருளன் பதிவனத்தை வேடர் கம்பளத்தவரை வரவிட்டுச் செடி வெட்டி வித்து நகரம் கட்டி வைக்க வேண்டுமென்று செடி வெட்டி வைக்கும் போது அந்த வனங் காத்திருந்த கண்டிகாளி என்கிற துர்க்கை பத்திரகாளி சேரனிடத்திற்கு வந்து பலி கேட்டது. அது கேட்குமிடத்தில் சேரன் சமைய முதலியை அழைத்து அந்த துர்க்கைக்கு ஒப்புச் செய்யச் சொன்னார்.

கீரனூர்

அவர் சொன்னபடிக்குச் சமைய முதலியும் அந்த துர்க்கைக்கு இந்த நகரமும் கட்டி வித்து குடி ஏற்றி வைத்த பின்பு சேரனைக் கொண்டு உனக்கும் கோவில் கட்டி வைத்து உன்னையும் நிலை நிறுத்தி வைத்து உனக்கு முப்பலியும் நானே நடப்பிவிக்கிறேன் என்று சமைய முதலி அந்த துர்க்கைக்கு ஒப்புச் சொன்னார். அவர் சொன்ன படி கேட்டு துர்க்கை மனம் பொறுத்து நின்ற பின்பு சேரமாம் பெரு

மாள் வேடர் கம்பளத்தவரை விட்டுச் செடி வெட்டி வெளி பண்ணி வைத்து அந்த வனத்தில் குடியிருந்த கீரனென்கிற இருளன் பேர்க்கு நகரமும் கீரனூர் நகரமென்று நகரமும் கட்டி வைத்துக் கோட்டையும் பேட்டையும் ஒரு குளமும் கட்டி வைத்தார். அவர் கட்டி வைத்த பின்பு சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் அம் மூன்று பேருமாகப் பதினெண் சாதிப் பல் குடியுமழைத்து அந்த நகரில் குடிவைத்து அதில் உழவு குடியான பல குடிக்கும் முதன்மை யாகச் (கவறை வலைஞரில் வரத செட்டியைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தான். அவர்கள் வைத்து நிகுதி செய்த பின்பு சேரன்) சோள தேச செந்தலைநகரில் வேளாளரில் தேவணனென்கிறவனைச் சடையப் பன் வைத்தான். அதில் சேடம்மையான பல குடிக்கும் முதன்மை யாகக் கவறை வலைஞ்சியரில் வரத செட்டியைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தான். அவர்கள் வைத்து நிகுதி செய்த பின்பு சேரன் அந்தக் கீரனூரதிகாரத்திற்கும் கோட்டை யதிகாரத்திற்கும் பூவிலூ வரில் கண்டி மண்ணுடியை வைத்து அதில் கர்ணிகத்திற்குத் திருக் கணக்கரில் சிவலிங்கப் பிள்ளையை வைத்து நிகுதி செய்தார். நிகுதி செய்த பின்பு சேரமான் பெருமாள் அந்தக் கீரனூர்க் கண்டி காளி யம்மனுக்குத் தம்முடைய பேருக்கு அந்தக் கீரனூர் காவலாக உத்திர வாசல் கோவிலுங் கட்டி வைத்தார். அவர் கட்டி வைத்த பின்பு சமைய முதலியாகிறவர் உத்தம பண்டிதரை அழைத்து அந்தக் கீர னூர் கீரைக் கண்டிகாளியம்மனை நிலை நிறுத்தி வைத்துப் புண்யாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு சேரமாம் பெருாளென்னும் சேரன் அந்த ஆலயத்திற்கு விட்ட மாணியம் நூறு பொன் கிராமமும் பத்துப் பொன் சுங்கத்தீர்வையும் பத்துமிடா விரைப்புப் புஞ்செய்யும் குளக்கரையில் பத்துமிடாவிரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மானியத்திற்கு நாலு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மானியத்தில் சமைய முதலிக் குப் பத்திலொன்று என்று கீரனூர் கீரகண்டி காளியம்மன் கோவிலில் கலச்சாகரம் பொடிவித்து சேரன் நிகுதி செய்த பின்பு சமைய முதலியாகிறவர் அந்த ஆலய ஊழியத்திற்கு ஆதிசோதி கோரக்க நாதர் வர்க்கத்தில் முத்துக் குமார பண்டாரத்தை வைத்து அந்தப் பண்டார முதலாக நாகபாச திருவலகை கட வரைக்கும் ஆள் பொடி வித்துத் திருவாடு தண்டிகைச் சீர்பாத ஊழியத்திற்குக் கைக் கொள் வரில் முப்பது குடியும் வைத்து அந்த முப்பது குடிக்கும் பண்டார முதல் திருவலகு வரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்குக் கைக் கொள்வரில் இருளப்ப முதலியை வைத்து நாகபாச முதன்மைக்கு வடமலை நட்டு வனை வைத்துத் தாசி முதன்மைக்குச் செண்பக மாணிக்கியை வைத்து அந்தக் கோவிலூழியத்திற்கு மணியம் கணக்குக்குக் கைக்கொள்வரில் ராமலிங்க முதலியை வைத்து அவர்களுக் கெல்லாம் ஓலைப்பட்டைய

மும் பாக்கு வெற்றிலையும் கொடுத்து சமைய முதலி நிருதி செய்த பின்பு சமைய முதலியாகிறவர் அந்தச் சீர்கண்டி காளியம்மனுக்கு அந்தப் பண்டாரத்தைக் கொண்டு அபிஷேக தூப தீபாராதனை முடிப்பித்து அந்த முகத்தில் ஆடு பன்னி கோழி அறுத்துப் பலி யூட்டி வைத்து நாம் முன் சொன்ன முப்பலியும் வந்ததென்று அந்த அம்மனுக் ஒப்பிவைத்து அந்த முகத்தில் அவ்வூரிலுள்ள குடிவரிசை ஜனங்களுக்கு இந்தம்மனுக்கு நீங்கள் வருஷமொரு நாள் திருநாள் நடத்திவைத்து அந்த நாளில் ஆடு பன்றி கோழி யறுத்துப் பலியூட்டி வைத்துப் பொங்கல் விளக்கு நீங்கள் கட்டின வீடுதோறும் எடுத்துக் கொடுத்து வருஷமொரு எருமைக்கிடாப் பலியும் இந்தம்மனுக்குக் கொடுத்து வாருங்களென்று அவர்களுக்குக் கட்டுச்செய்து அந்த துர்க்கைக்கு அவர்களிடத்தில் பலி பொங்கல் வாங்கிக்கொண்டு அவர்களுக்கும் இந்தக் கிராம தேவதையா யிருந்து அவர்களையும் ரக்ஷித்து வாருங்களென்று அந்தத் துர்க்கைக்கு சமைய முதலி கட்டுச்செய்த பின்பு கரிகாலச் சோழன், சேரன், சடையப்பன், கத்தூரி ரங்கப்பச் செட்டியும், மற்றுமுள்ள பேருமாக அந்தம்மனைத் தரிசித்துக்கொண்டு சமைய முதலி கைப்பட்டி ஒழுகின் படிக்குக் கீரனூர் நகர் கடந்து கோனன் என்கிற இருளன்பதி வனத்துக்குப் போனார். போனபின்பு கரிகாலச் சோழன் தம்முடைய பேருக்கு நகரும் கோவிலும் கட்டி வைக்க வேண்டுமென்று அந்தக் கோனன்பதி வனத்தை வேடர் கம்பழத் தவரைவிட்டுச் செடி வெட்டிவிக்கும் போது அந்த வனங் காத்திருந்த கோனமாகாளிதுர்க்கைப் பத்திநியாகிறது சோள(ழ)னிடத்திற்கு வந்து பலி கேட்டது. அது கேட்ட படிக்கு சோழனும் சமைய முதலியை யழைத்து அத்தத் துர்க்கைக்கு ஒப்புச் சொல்லச் சொன்னார். அவர் சொன்னபடிக்குச் சமைய முதலி யுமப்படியே அந்தத் துர்க்கைக்கு மப்படியே இந்த நகரமும் இங்கி துண்டாகிய ஆலயமும் கட்டி முடிப்பித்துப் பின்பு உனக்கும் நானே சோழனைக் கொண்டு கோவில் கட்டிவைத்து உன்னையும் நிலைநிறுத்தி வைத்து முப்பலியும் கொடுப்பிவிக்கிறேனென்று அந்தத் துர்க்கைக்கு சமைய முதலி சொன்னார். அவர் சொல்லக்கேட்டுத் துர்க்கையும் மனம் பொறுத்து நின்றபின்பு கரிகாலச் சோழனுகிறவர் வேடர்கம் பழத்தை வரவிட்டுச் செடி வெட்டிவெளி பண்ணி வைக்கும்போது அந்த வனத்தில் (முன்குடி இருந்த இருளன் கோனன் அந்த) சோழீசுரமுடையாரென்கிற லிங்கம் கண்டது. அந்த லிங்கத்திற்கு கரிகாலச் சோழன் தம்முடைய பேருக்குக் கோவிலுங் கட்டிவைத்து, அந்த வனத்தில் முன் குடியிருந்த இருளன் கோனன் அந்தக் கோனன் என்கிறவன் பேருக்கு நகரம் கோனுபுரி நகரமென்று நகரமும் கட்டிவைத்து அதில் கோட்டையும் பேட்டையும் ஒரு குளமும் கட்டிவைத்தார். அவர் கட்டி

கோனன்பதி நகர்

கோனமா காளி

வைத்த பின்பு சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி அம் மூவருமாகப் பதினெண் சாதிப் பல் குடியுமழைத்து அந்த நகரில் குடி வைத்து அதிலுழவு குடியான பல குடிகளுக்கும் முதன்மையாகச் சோள தேச சேந்தலை நகர் வேளாளரில் சின்னய்யனென்கிறவனைச் சடையப்பன் வைத்தான். அதில் செட்டிமயைான பல குடிக்கும் முதன் மையாகக் கவறை வலைஞரில் கருதப்பச் செட்டியை கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தான். அவர்கள் வைத்து நிகுதி செய்தபின்பு கரிகாலச் சோழனென்கிறவர் கோனுபுரி அதிகாரத்திற்குப் பூவிதுவரில் மொள்ள மண்ணுடியை வைத்தார். அதில் கர்ணிகத்திற்குத் திருக் கணக்கரில் ஞானசிவ பிள்ளையை வைத்தார். அவர் வைத்து நிகுதி செய்த பின்பு சமைய முதலியாகிறவர் உத்தம பண்டிதரை அழைத்து அந்தச் சோளீச்சுவரமுடையாருக்குப் புண்யாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழனென்கிற வர் சோழனிடத்தில் கைக்கிரயபூமி கொண்டு அந்த ஆலயத்திற்கு விட்ட மானியம் ஐந்நூறு பொன் கிராமமும் ஐம்பது பொன் சுங்கத் தீர் வையும் ஐம்பது மிடா விரைப்புப் புஞ்செயும் குளக்கரையில் ஐம்பது மிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மாணியத்திற்கு நாலு சூலக்கல் நாட்டிப் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மான்யத்தில் சமைய முதலிக்குப் பத்தில் ஒன்றென்று அத்த ஆலயத்தில் கலச்சாகரம் பொடிவித்து கரிகால சோழன் நிகுதி செய்த பின்பு சமைய முதலியாகிறவர் அந்த ஆலய ஊழியத்திற்கு நம்பி முதல் திருவலகு கடவரைக்கும் ஆள் பொடிவித்துத் திரு வாடு தண்டிகைச் சீர்பாத ஊழியத்திற்குக் கைக்கொள்வரில் ஐம்பது குடியும் வைத்து இந்த ஐம்பது குடிக்கும் நம்பி முதல் திருவலகு கட வரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்குக் கைக்கொள்வரில் சாந்த முதலியை வைத்து நம்பி முதன்மைக்கு யோகீச்சுவர நம்பியை வைத்து நாகபாச முதன்மைக்கு ஆண்டி நட்டுவனை வைத்துத் தாசி முதன் மைக்குச் செல்லி மாணிக்கியை வைத்து அந்தக் கோவிலுக்கும் கோவில் மானியத்திற்கும் மணியங்கணக்குக்குக் கைக்கொள்வரில் திருமலை முதலியை வைத்து அவர்களுக்கெல்லாம் ஓலைப்பட்டையமும் பாக்கு வெற்றிலையுங் கொடுப்பித்துச் சமைய முதலி நிகுதி செய்த பின்பு சமைய முதலியாகிறவர் கரிகாலச் சோழனைக் கொண்டு அந்தக் கோணபத்திர துர்க்கை பத்திரகாளிக்கு உத்திரவாசல் கோவிலுங் கட்டி உத்தமபண்டிதரைக் கொண்டு துர்க்கையை நிலைநிறுத்திப் புண் யாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டை செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரய பூமி கொண்டு அந்தத் துர்க்கை ஆலயத்திற்கு விட்ட மானியம் ஐந்து மிடா விரைப்புப் புஞ்செயும் ஐந்து மிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மான் யத்திற்குச் சூலக்கல் நாட்டும்பொடிவித்து துர்க்கை ஆலயத்திற்கு விட்ட

மான்யத்தில் சமைய முதலிக்குப் பத்திலொன்று என்று துர்க்கைக் கோவில் கலச்சாகரம் பொடிவித்துக் கரிகாலச் சோழன் நிகுதிசெய்த பின்பு சமைய முதலியும் துர்க்கைக் கோவிலூழியத்திற்கு ஆதி சோகி கோரக்கநாதர் வர்க்கத்தில் லிங்க பண்டாரத்தை வைத்து அவரைக் கொண்டு அந்தத் துர்கைக்கு அபிஷேக தூப தீபாரு தனை முடிப்பித்து அந்த முகத்தில் ஆடு பன்றி கோழி யறுத்துப் பலியூட்டி நாம் முன் சொன்ன முப்பலியும் வந்ததென்று துர்க்கைக்கு ஒப்பித்தபின்பு அந்த முகத்தி லவ்வூரிலுள்ள குடிவரிசை ஜனங்களுக்கும் நீங்களிந்த துர்க்கைக்கு வருஷமொரு திருநாள் நடந்தி வைத்து அந்த நாளில் நீங்கள் கட்டின வீடுதோறும் விளக்கும் பொங்கலும் ஆடு பன்னி கோழி இந்த முப்பலியும் வருஷமொரு எருமைக்கிடா பலியும் ஒப்பிவைத்து வாருங்களென்று அவர்களுக்கும் கட்டுச் செய்து இந்த துர்கைக்கு அவர்களிடத்தில் இந்தப்பலி வாங்கிக் கொண்டு அவர் களுக்குக் கிராம தேவதையாயிருந்து நீயும் அவர்களை ரக்ஷித்துவா வென்று துர்கைக்குச் சமைய முதலி கட்டுச் செய்த பின்பு கரிகாலச் சோழன் சேரன் சமையமுதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி மற்றுமுள்ள பேருமாகச் சோளீசுரமுடையாருக்கு அபிஷேக தூபதீபா ருதனை முடிப்பிவித்து எல்லோரும் தரிசித்துக் கொண்டு கோஞ்புரி

நடுவாச் சேரி

நகர் கடந்து சமையமுதலி கைப்பட்டோலை ஒழுகின படிக்கு நடுவனென்கிற இருளன்பதி வனத்திற்குப் போனார். போனபின்பு சேரமாம் பெருமாளென்னும் சேரன் தம் முடைய பேருக்கு நகரம் கட்டி வைக்க வேண்டுமென்று வேடர் கம் பளத்தவரை விட்டு அந்தச் செவள்பூண்டி வனத்தில் செடி வெட்டிவைக் கும்போது அந்த நடுவனென்கிற இருள்பதி சேவள் பூண்டிவனம் காத்திருந்த சேவள் பத்திரகாளி சேரனிடத்திற்கு வந்து பலி கேட்டது. அது கேட்டபடிக்கு சேரன் சமைய முதலியை அழைத்து அந்த துர்க் கைக்கு ஒப்புச்சொல்லச் சொன்னார். அவர்கள் சொன்னபடிக்குச் சமைய முதலியும் அந்தத் துர்க்கைக்கு இந்த நகரமும் கட்டி குடி ஏறிய பின்பு உனக்கும் நானே சேரனைக் கொண்டு கோவிலுங் கட்டி வைத்து உன்னை நிலைநிறுத்தி வைத்து முப்பலியும் கொடுப்பிக்கிறே னென்று சமைய முதலி சொல்ல துர்க்கையும் சமைய முதலி சொல்லக் கேட்டு மனம் பொறுத்து நின்ற பின்பு சேரனுகிறவர் வேடர் கம்பளத் தவரை வரவிட்டு அந்த வனத்தைச் செடி வெட்டி வெளி (வழி) பண்ணி வைத்து அந்த வனத்தில் குடியிருந்த இருளன் நடுவனென்கிறவன் அந்த நடுவன் பேருக்கு ஊரும் நடுவன் சேரி யென்று கட்டி வைத் அதில் கோட்டையுங் கட்டி வைத்து ஒரு குளமும் கட்டி வைத்தார். அவர் கட்டிவைத்த பின்பு சமைய முதலி சடை யப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி அம்மூவருமாகப் பதினெண்சாதி பல குடியும் அழைத்து நடுவன்சேரி நகருக்குக் குடிவைத்து அதில்

துளுவகுடியான பல குடிக்கும் முதன்மையாகச் சோளதேசப் பால் சேரி நகர் வேளாளரில் குமரர் வேளப்பனைச் சடையப்பன் வைத்தான். அதில் செட்டிமையான பல குடிக்கும் முதன்மையாகக் கவறை வலைஞ் சியரில் மல்லப்பனென்கிறவனைக் கத்தூரிரங்கப்பச்செட்டி வைத்தான். அவர்கள் வைத்து நிருதி செய்தபின்பு சேரமாம் பெருமாளென்னும் சேரன் நடுவன்சேரி நகர் அதிகாரத்திற்குப் பூவிலுவரில் செந்தேவியன் மண்ணுடியை வைத்து அதில் கர்ணிகத்திற்குத் திருக்கணக்கரில் (கர்ணி கத்திற்கு திருக்கணக்கரில்) காளத்திநாத பிள்ளையை வைத்து அவர் நிருதி செய்தபின்பு சமைய முதலியாகிறவர் சேரனைக் கொண்டு அந்தச் செவள் துர்க்கை பத்திரகாளிக்கு உத்திரவாசல் கோவிலுங் கட்டி வைத்து உத்தம பண்டிதரை யழைத்து அந்த துர்க்கையை நிலை நிறுத்தி வைத்துப் புண்யாங்கம் அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய் வித்த பின்பு சேரனுகிறவர் அந்த துர்க்கை ஆலயத்திற்கு விட்ட மான்யமும் முன்னூறு பொன் கிராமமும் முப்பது பொன் சுங்கத் தீர்வையும் முப்பது மிடா விரைப்புப் புஞ்செய்யும் விடுவித்து விட்ட மான்யத்திற்கு நாலு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த ஆலயத் திற்கு விட்ட மானியத்தில் சமைய முதலிக்குப் பத்திலொன்றென்று துர்க்கை யாலயத்தில் கலச்சாகரம் பொடிவித்து சேரன் நிருதி செய்தபின்பு சமைய முதலியும் அந்த துர்க்கை கோவிலூழியத்திற்கு ஆதிசோகி கோரக்கநாதர் வர்க்கத்தில் குருநாத பண்டாரத்தை வைத்து அந்தப் பண்டார முதலாக நாகபாசம் திருவலகு கட வரைக்கும் ஆள் பொடிவித்துத் திருவா(டு) தண்டிகை சீர்பாத ஊழியத்திற்கு முப் பது குடிக் கைக்கொள்வரும் வைத்து அந்த முப்பது குடிக்கும் பண்டார முதல் திருவலகு கடை வரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்குக் கைக்கொள்வரில் காசிலிங்க முதலியை வைத்து நாகபாச முதன்மைக் குத் தாண்டவ நட்டுவனை வைத்துத் தாசி முதன்மைக்குத் தில்லை மாணிக்கியை வைத்து அந்தத் துர்க்கைக் கோவிலுக்கும் கோவில் மான்யத்திற்கும் மணியங்கணக்குக்கு அத்தப்ப லிங்க முதலியை வைத்துஅவர்களுக்கெல்லாம் ஓலைப் பட்டையமும் பாக்கு வெற்றிலையும் கொடுத்துச் சமைய முதலி நிருதி செய்தபின்பு சமைய முதலி அந்தப் பண்டாரத்தைக் கொண்டு துர்க்கைக்கு அபிஷேக தூப தீபாருதனை முடிப்பிவித்து அந்த முகத்தில் ஆடு பன்னி கோழி யறுத்துப் பலி யூட்டிவைத்து நாம் முன்சொன்ன முப்பலியும் வந்தென்று துர்க் கைக்கு ஒப்பிவித்து அந்த முகத்தி லவ்வூரில் உள்ள குடிவரிசை ஜனங் களுக்கும் நீங்களிந்த துர்க்கைக்கு வருஷமொன்றுக் கொரு திருநாள் நடத்திவைத்து அந்த நாளில் நீங்கள் கட்டின வீடுதோறும் விளக்கும் பொங்கலும் ஆடு பன்னி கோழி இந்த முப்பலியும் வருஷமொரு எருமைக்கிடா பலியும் ஒப்பிவைத்து வாருங்களென்று அவர்களுக்கும் கட்டுச்செய்து அந்த துர்க்கைக்கும் நீயும் இந்தப்படி தப்பாமல் பலி

வாங்கிக்கொண்டு அவர்களுக்குக் கிராம தேவதையா யிருந்து அவர்களை ரக்ஷித்து வா வென்று அந்த துர்க்கைக்குக் கட்டுச் செய்து சமைய முதலி நிகுதி செய்தபின்பு சேரமாம் பெருமாளென்னும் சேரன், கரிகாலச் சோழன், சமைய முதலி, சடையப்பன், கத்தூரி ரங்கப்பச் செட்டியும் மற்றுமுள்ள பேருமாக அந்தத் துர்க்கைக்கு அபிஷேக தூப தீபாருதனை முடிப்பித்து அந்தத் துர்க்கைக்குச் செவளாபுரி அம்மனென்று பேருங்கண்டு எல்லோரும் தரிசித்துக் கொண்டு நடுவன் சேரிநகர் கடந்து சமைய முதலி கைஒழுகினபடிக்குப் பல்லனென்கிற இருளன் பதிவனத்திற்குப் போனார். போனபின்பு சேரமாம் பெருமாள் அந்த வனத்தில் வேடர் கம்பளத்தவரை வர விட்டுச் செடி வெட்டி வைக்கும் போது அந்தப் பல்லனென்கிற இருளன்பதி வனத்தில் காத்திருந்த துர்க்கை பத்திரக்காளி சேரனிடத்திற்கு வந்து பலி கேட்டது. அது கேட்டபடிக்குச் சேரன் சமையமுதலியை யழைத்து அந்த துர்க்கைக்கு ஒப்புச்சொல்ல சொன்னார். அவர் சொன்னபடிக்குச் சமையமுதலியும் அப்படியே அந்தத் துர்க்கைக்கு இந்த நகரமும் கட்டி குடிவைத்த பின்பு உனக்கு நானே சோழனைக் கொண்டு கோவில் கட்டி வைத்து உன்னையும் நிலைநிறுத்தி வைத்து உனக்கு முப்பலியுங் கொடுப்புவிக்கிறேன் என்று சமைய முதலி சொல்ல அந்த துர்க்கையும் கேட்டு மனம் பொறுத்து நின்ற பின்பு சேரன் வேடர்கம்பளத்தவரை விட்டு அந்தப் பல்லன்பதி இருளன் வனத்தைச் செடி வெட்டி வழி பண்ணி வைத்துச் சேராம் பெருமாளென்கிற சேரன் அந்த வனத்திலே முன் குடியிருந்த பல்லன் என்கிற இருளன் பேருக்குப் பல்லிடமென்ற ஊருங்கட்டி வைத்து அதில் கோட்டையும் கட்டி வைத்து ஒரு குளமும் கட்டி வைத்தார். அவர் கட்டி வைத்த பின்பு சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி இம் மூவருமாகப் பதினெண் சாதிப் பல் குடியுமழைத்து அந்தப் பல்லிடத்தில் நகரத்தில் குடிவைத்து அதில் உழவு குடியான பல குடிக்கு முதன்மையாகச் சோள தேசத் தென்திசை நகர் வேளாளரில் பள்ளியப்பனென்கிறவனைச் சடையப்பன் வைத்தான். அதில் செட்டிமையான பல குடிக்கும் முதன்மையாகக் கவறை வலைஞரில் சீரங்கச் செட்டி என்கிறவனைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தான். அவர்கள் வைத்து நிகுதி செய்த பின்பு சேரமாம் பெருமாளென்னும் (சேரமாம் பெருமாளென்னும்) சேரன் பலவிடத்து நகரதிகாரத்திற்குப் பூவிலவரில் பணிக்க மண்ணுடியை வைத்தார். அதில் கர்ணிகத்திற்குத் திருக்கணக்கரில் ஞான சிவம் பிள்ளையை வைத்து நிகுதி செய்த பின்பு சமைய முதலியாகிறவர் சேரனைக் கொண்டு முன் அந்த வனத்தில் காத்திருந்த துர்க்கை பத்திர காளிக்குக் கோவிலும் கட்டி வைத்து உத்தம பண்டிதரை யழைத்து அந்த துர்க்கையை நிலை நிறுத்தி வைத்துப் புண்யாங்கம்

பல்லன்வனம் பல்லடம்

அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு சேரமாம் பெருமாளென்னும் சேரன் அந்த துர்க்கைக் கோவிலுக்கு விட்ட மானியம் முன்னூறு பொன் கிராமமும் முப்பது பொன் சுங்கத் தீர்வையும் முப்பது விடாவிரைப்பு நஞ்செய்யும் முப்பது மிடா விரைப்புப் புஞ்செய்யும் விடுவித்துவிட்ட மான்யத்திற்கு நாலு சூலக்கல் நாட்டும் பொடிவித்து இந்த துர்க்கை கோவிலுக்கு விட்ட மானியத்தில் சமைய முதலிக்குப் பத்திலொன்றென்று துர்க்கைக் கோவிலில் கலச் சாசரம் பொடிவைத்துச் சேரன் நிருதிசெய்த பின்பு சமைய முதலியும் அந்தத் துர்க்கை கோவிலூழியத்திற்குப் பூதிசோதிகோரக்கநாதர் வர்க்கத்தில் முருகப் பண்டாரத்தை வைத்து அந்தப் பண்டார முதலாக நாகபாசம் திருவலகு கடைவரைக்கும் ஆள் பொடிவித்துத் திருவாடு தண்டிகைச் சீர்பாத ஊழியத்திற்குக் கைக்கொள்வரில் முப்பது குடியும் வைத்து அந்த முப்பது குடிக்கும் பண்டார முதல் திருவலகு கடைவரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்குக் கைக்கொள்வரில் சிராமலை முதலியை வைத்து நாகபாசமுதன்மைக்குப் பெத்தநட்டுவனை வைத்துத் தாசி முதன்மைக்குச் செம்மி மாணிக்கியை வைத்துத் துர்க்கை கோவிலுக்கும் கோவில் மான்யத்திற்கும் மணியங்கணக்குக் கைக்கொள்வரில் கச்சி முதலியை வைத்து அவர்களுக்கெல்லாம் ஓலைப்பட்டயமும் பாக்கு வெற்றிலையும் கொடுத்துச் சமைய முதலி நிருதி செய்தபின்பு சமைய முதலி அந்தப் பண்டாரத்தைக் கொண்டு அந்தத் துர்க்கைக்கு அபிஷேக தூபதீபாருதனை முடிப்பித்து அந்த முகத்தில் துர்க்கைக்கு ஆடு பன்னி கோழி அறுத்துப் பலி யூட்டிவித்து முன் நாம் உனக்குச் சொன்ன முப்பலியும் வந்ததென்று துர்க்கைக்கு ஒப்புவித்து அந்த முகத்தில அவ்வூரிலுள்ள ஜனங்களுக்கு நீங்கள் அந்தத் துர்க்கைக்கு வருஷமொரு திருநாள் நடத்தி வைத்து அந்த நாளில் நீங்கள் கட்டின வீடு தோறும் விளக்கும் பொங்கலும் ஆடு பன்னி கோழி முப்பலியும் வருஷமொரு எருமைக்கிடா பலியும் ஒப்புவித்து வாருங்களென்று அவர்களுக்கும் கட்டுச் செய்து அந்த துர்க்கைக்கும் நீயு மிந்தப்படி அவர்களிடத்தில் பலி வாங்கிக்கொண்டு அவர்களையும் ரக்ஷித்து வா வென்று அந்த துர்க்கைக்கும் சமையமுதலி கட்டுச் செய்த பின்பு சேரமாம் பெருமாளென்னும் சேரன் கரிகாலச் சோழன் சமயைமுதலி சடையப்பன் கத்தூரி ரங்கபபச் செட்டியும் மற்றுமுள்ள பேருமாக அந்தத்துர்க்கைக்கு அபிஷேகதூபதீபாருதனை முடிப்பித்து அந்தத் துர்க்கைக்குப் பலவிடத்துதுர்க்கை[1] பத்திரகாளி யென்று பேரும் பிறவுங் கண்டு கண்ட பின்பு எல்லோருமாக இந்தம்மனைத் தரி

---

[1] பல்லிடத்துர்க்கை.

சித்துக்கொண்டு அந்தப் பல்லிடத்து நகர் கடந்து சமையமுதலி கைப்பட்டோலை ஒழுகினபடிக்குத் தணக்கன் என்கிற இருளன்பதி வனத்தைச் செடிவெட்டி வைக்கும்போது அந்த வனத்தைக் காத்திருந்த மசனி துர்க்கைப் பத்திநி சோளனிடத்திற்கு வந்து பலி கேட்டது. அது கேட்டபடிக்குச் சோழன் சமையமுதலியை அழைத்து அந்த துர்க்கைக்கு ஒப்புச்சொல்லச் சொன்னார். அவர் சொன்னபடிக்குச் சமைய முதலியும் அப்படி கரிகாலச் சோழனுகிறவர் இன்னகரமும் இங்கிலுண்டாகிய ஆலயமும் கட்டி முடித்த பின்பு உனக்கு நானே சோழனைகொண்டு கோவிலுங் கட்டி வைத்து உன்னையும் நிலைநிறுத்தி வைத்து முப்பலியும் கொடுப்புவிக்கிறேன் என்று சமையமுதலி சொல்ல துர்க்கையும் கேட்டு மனம் பொறுத்து நின்ற பின்பு கரிகாலச்சோழனுகிறவன் அந்த வேடர் கம்பளத்தாரை விட்டுச் செடி வெட்டி வழி பண்ணி வைத்து அந்தச் சோமேசுர முடையார் லிங்கத்தையும் கண்டு அந்தச் சோமேசுர முடையாருக்குக் கரிகாலச் சோழன் தன் பேருக்குக் கோவிலுங் கட்டி வைத்து அந்த வனத்தில் முன் குடியிருந்த தணக்கன் என்கிற இருளன் பேருக்குத் தணக்கன் கோட்டையென்று நகரமும் கட்டி வைத்து அதில் கோட்டையும் பேட்டையும் கட்டிவைத்து குளமும் கட்டி வைத்தார். அவர் கட்டி வைத்த பின்பு சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் இம் மூவருமாகப் பதினெண் சாதிப் பல குடியும் அழைத்துத் தணக்கண் கோட்டை நகரில் குடிவைத்து உழவு குடியான பல குடிக்கும் முதன்மையாகச் சோளதேசம் தென்திசை நகர் வேளாளரில் சென்னிமலை என்கிறவனைச் சடையப்பன் வைத்தார்.



செட்டிமையான பல குடிக்கும் முதன்மையாகச் கவறை வலைஞரில் மரியனென்கிறவனைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தார். அவர்கள் வைத்து நிகுதி செய்த பின்பு கரிகாலச் சோழன் தணக்கன் கோட்டை நகரதிகாரத்திற்குச் சத்திமங்கலத்துச் சின்னப்ப மண்ணுடி அபாலித்தாணையத்து மண்ணுடி என்கிற வேடனை வைத்தார். அதில் கர்ணிகத்திற்குத் திருக்கணக்கரில் செகன்னுத பிள்ளையை வைத்தார். அவர் வைத்து நிகுதிசெய்த பின்பு சமைய முதலியாகிறவர் அந்தச் சோமேசுரமுடைய லிங்கத்திற்கு உத்தம பண்டிதரை அழைத்துப் புண்யாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டை செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழன் அந்த ஆலயத்திற்கு விட்ட மான்யம் ஐந்நூறு பொன். கிராமமும் ஐம்பது பொன் சுங்கத் தீர்வையும் ஐம்பது மிடா விரைப்புப் புஞ்செய்யும் குளக்கரையில் ஐம்பதுமிடா விரைப்புநஞ்செய்யும் விடுவித்துவிட்ட மான்யத்திற்கு நாலு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மான்யத்தில் சமைய முதலிக்குப் பத்திலொன்றென்று சோமேசுரமுடையா ராலயத்தில் கலச்சாகரம் பொடி

வித்து கரிகாலச்சோழன் நிகுதி செய்தபின்பு சமையமுதலியும் அந்தக் கோவிலூழியத்திற்கு நம்பி முதல் திருவலகு கடை வரைக்கும் ஆள் பொடிவித்துத் திருவாடு தண்டிகைச் சீர்பாத ஊழியத்திற்கு கைக் கொள்வரில் ஐம்பது குடியும் வைத்து அந்த ஐம்பது குடிக்கும் நம்பி முதல் திருவலகு கடைவரைக்கும் முதன்மை நாட்டாண் மைக்குக் கைக் கொள்வரில் பொன்னம்பல முதலியை வைத்து நம்பி முதன்மைக்கு ரத்தினகிரி நம்பியை வைத்து நாகபாச முதன் மைக்குப் பச்ச நட்டுவனை வைத்துத் தாசி முதன்மைக்கு முத்திமாணிக் கியை வைத்து அந்தக் கோவிலிற்கும் கோவில் மான்யத்திற்கும் மணி யம் கணக்குக்குக் கைக்கொள்வரில் சின்னய்ய முதலியைவைத்து அவர் களுக்கெல்லாம் ஓலைப்பட்டையமும் பாக்கு வெற்றிலையும் கொடுத்து சமையமுதலி நிகுதிசெய்தபின்பு சமைமுதலி அந்த வனத்தில் காத் திருந்த மசனி துர்க்கைக்குக் கரிகாலச் சோழனைக்கொண்டு கோவிலுங் கட்டிவைத்து உத்த பண்டிதரை அழைத்து அந்தத் துர்க்கையை நிலை நிறுத்திப் புண்யாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்தபின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரய பூமிகொண்டு துர்க்கை ஆலயத்திற்கு விட்ட மான்யம் பத்துமிடா விரைப்பாடு புஞ்செய்யும் பத்து மிடா விரைப்பாடு நஞ்செய்யும் விடு வித்து விட்ட மான்யத்திற்குச் சூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்டமான்யத்திற்கு விட்டமான்யத்தில் சமய முதலிக்குப் பத்தில் ஒன்றென்று துர்க்கையாலயத்தில் கலச்சாகரமும் பொடி வித்துக் கரிகாலச்சோழன் நிகுதி செய்தபின்பு சமையமுதலியும் அந்த துர்க்கைக் கோவிலூழியத்திற்கு ஆதிசோகி கோரக்கநாதர் வர்க்கத் தில் ராக்கபண்டாரத்தை வைத்து அந்தப் பண்டாரத்தைக் கொண்டு துர்க்கைக்கும் அபிஷேக தூபதீபாருதனை முடிப்பித்து அந்தத் துர்க் கைக்கு மசனியம்மன் என்று பெயருங்கண்டு அந்த முகத்தில் ஆடு பன்னி கோழி அறுத்துப் பலியூட்டிவைத்து முன் நாம் சொன்ன முப் பலியும் வந்திதென்று அந்த துர்க்கைக்கு ஒப்புவித்து அந்த முகத் தில் அவ்வூரிலுள்ள குடிவரிசை ஜனங்களுக்கு நீங்களிந்தம்மனுக்கு வருஷமொரு திருநாள் நடத்திவைத்திவைத்து அந்தநாளில் நீங்கள் கட்டின வீடுதோறும் பொங்கல் விளக்கும் ஆடு பன்னி கோழி இந்த முப்பலியும் அந்தம்மனுக்கு ஒப்பிவைத்து வாருங்களென்று அவர்களுக்கும் கட்டுச்செய்து அந்த மசனிஅம்மனுக்கு அவர்களிடத் தில் நீயும் இந்தப்படி பலி வாங்கிக் கொண்டு அவர்களுக்கு நீ கிராம தேவதையாயிருந்து அவர்களையும் ரக்ஷித்து வா வென்று அந்த மசனி அம்மனுக்குச் சமையமுதலி கட்டுச்செய்த பின்பு கரிகாலச் சோழன் சேரன் சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் மற்றுமுள்ள பெருமாகச் சோமேசுரலிங்கமுடையாருக்கு அபிஷேக

தூப தீபாருதனை முடிப்பித்து எல்லோரும் தரிசித்துக் கொண்டு தணக்கம் கோட்டை நகர் கடந்து வாணிக்கரை யருகில் குள்ளன் என்கிற இருளன்பதி வனத்திற்குப் போனார். சமைய முதலி கைப்பட்டோலை ஒழுகினபடிக்கு வானித் துறை அருகில் குள்ளனென்கிற இருளன்பதி வனத் திற்குப் போனபின்பு கரிகாலச்சோழன் வேடர் கம்பழத் தவரை வர விட்டு அந்த வனத்தில் செடிவெட்டிவைக்கும் போது அந்த வனத்தில் காத்திருந்த வானித்துறை துர்க்கை பத்திர காளி சோழனிடத்திற்கு வந்து பலி கேட்டது. அது கேட்ட படிக்குச் சோழன் சமய முதலியை அழைத்து அந்தத் துர்கைக்கு ஒப்புச் சொல் லச் சொன்னார். அவர் சொன்னபடிக்குச் சமையமுதலியு மப்படியே கரிகாலச் சோழனுகிறவர் இந்த நகரமும் இங்கிலுண்டாகிய ஆலயமும் கட்டிவைத்த பின்பு உனக்கு நானே சோழனைக் கொண்டு கோவி லுங் கட்டி வைத்து உன்னையும் நிலைநிறுத்தி முப்பலியும் கொடுப்பிக் கிறேன் என்று சமைய முதலி சொல்ல துர்க்கையும் கேட்டு மனம் பொறுத்து நின்றபின்பு கரிகாலச் சோழன் வேடர்கம்பழத்தை வர விட்டு அந்த வனத்தில் செடிவெட்டி வெளிபண்ணி வைத்து அந்த மகாலிங்கமுடையாரையும் கண்டு அந்த மகாலிங்கமுடையாருக்குச் சோழன் கோவிலும் கட்டி வைத்த பின்பு அந்த வனத்தில் வானித் துறை பரிசல் காவலாகக் காத்திருந்த குள்ளனென்கிற இருளன் அந்தக் குள்ளன் பேருக்கு ஊர் குள்ளந்துறை நகரமென்று நகரமும் கட்டிவைத்து அதில் கோட்டையும் பேட்டையும் கட்டிவைத்து அதில் ஒரு குளமும் கட்டிவைத்தார். அவர் கட்டி வைத்தபின் சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி இம்மூவருமாகப் பதினெண் சாதிப் பல குடியுமழைத்து அந்தக் குள்ள நகரில் குடிவைத்து அதிலுழவு குடியான பல குடிக்கும் முதன் மையாகச் சோளதேசத் தென்திசை நகர் வேளாளரில் செம்மனென் கிறவனைச் சடையப்பன் வைத்தான். அதில் செட்டிமையான பல் குடிக்கும் முதன்மையாகக் கவரை வளைஞரில் பொம்ம செட்டி என்கிற வனைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தான். அவர்கள் வைத்து நிருதி செய்தபின்பு கரிகாலச் சோழன் குள்ளந்துறைநகர் அதிகாரத்திற்குத் தணக்கன் கோட்டைதானையத்தும் மண்ணுடியர் பாலில் கங்கு நதி மண்ணுடி என்கிற வேடனை வைத்தார். அதில் கர்ணிகத்திற்குத் திருக் கணக்கரில் நீலகண்ட பிள்ளையை வைத்தார். அவர் வைத்து நிருதி செய்த பின்பு சமைய முதலியாகிறவர் மகாலிங்கமுடையாருக்கு உத்தம பண்டிதரை அழைத்துப் புண்யாங்கம் அஷ்ட மந்திரப் பிரதிஷ் டையும் செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக் கிரயபூமி கொண்டு அந்த ஆலயத்திற்கு விட்ட மான்யம் ஐந்நூறு பொன் கிராமமும் ஐம்பது பொன் சுங்கத் தீர்வை

தணக்கன் கோட்டை

குள்ளன் பதிவனம்

குள்ளந்துறை

யும் ஐம்பது மிடா விரைப்புப் புஞ்செய்யும் ஐம்பது மிடா விரைப்பு நஞ் செய்யும் விடுவித்து விட்ட மானியத்திற்கு நாலு சூலக்கல் நாட்டும் பொடிவித்துக் கரிகாலச் சோழன் நிகுதி செய்த பின்பு சமைய முதலி அந்த ஆலய ஊழியத்திற்கு நம்பி முதல் திருவலகு கடவரைக்கும் ஆள் பொடிவித்துத் திருவாடுதண்டிகை சீர்பாத ஊழியத்திற்குக் கைக் கொள்வரில் நாற்பது குடியும் வைத்து அந்த நாற்பது குடிக்கும் நம்பி முதல் திருவலகு கடை வரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்குக் கைக் கொள்வரில் கதிர்காம முதலியை வைத்து நம்பி முதன்மைக்கு ஞான மூர்த்தி நம்பியை வைத்து நாகபாச முதன்மைக்குக் கொப்ப நட்டுவனை வைத்துத் தாசி முதன்மைக்கு மூக்கிமாணிக்கியை வைத்து அந்தக் கோவிலுக்கும் கோவில் மானியத்திற்கும் மணியங்கணக்குக்குக் கைக் கொள்வரில் அல்லாளி முதலியை வைத்து அவர்களுக்கெல்லாம் ஓலைப் பட்டயமும் பாக்கு வெற்றிலையும் கொடுத்துச் சமைய முதலி நிகுதி செய்த பின்பு சமைய முதலியும் அந்த வனத்தில் முன்காத்திருந்த வானிதுர்க்கை பத்திரகாளிக்குச் சோழனைக் கொண்டு உத்தரவாசல் கோவிலுங் கட்டிவைத்து உத்தம பண்டிதரை அழைத்து துர்க்கையை நிலைநிறுத்திப் புண்ணியாங்கம் (பிரதிஷ்டையும்) அஷ்டமந்திரப் பிர திஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்தபின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக் கிரயபூமி கொண்டு துர்க்கையாலயத்திற்கு விட்ட மான்யம் ஐந்துமிடா விரைப்புப் புஞ்செய்யும் ஐந்துமிடா விரைப்பு நஞ் செய்யும் விடுவித்து விட்ட மான்யத்திற்குச் சூலக்கல் நாட்டும் பொடி வித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மான்யத்தில் சமைய முதலிக்குப் பத்திலொன்று என்று அந்த துர்க்கையாலயத்தில் கலச்சாகரம் பொடிவித்துக் கரிகாலச் சோழன் நிகுதி செய்த பின்பு சமைய முதலி யும் அந்தத் துர்க்கையாலயத்து ஊழியத்திற்கு ஆதிசோகி கோரக்கநாதர் வர்க்கத்தில் பிரம்மபண்டாரத்தை வைத்து அந்தப் பண்டாரத்தைக் கொண்டு துர்க்கைக்கு அபி ஷேக தூப தீபாருதனை முடிப்பித்து அந்தத் துர்க்கைக்கு வானி பத்திரகாளி யென்று பேருங் கண்டு அந்த முகத்தில் ஆடு பன்னி கோழி அறுத்துப் பலியூட்டி வைத்து உனக்கு நாம் முன் சொன்ன முப்பலியும் வந்ததென்று துர்க்கைக்கு ஒப்புவித்து அந்த முகத்தில் அவ்வூரிலுள்ள குடி வரிசை சனங்களுக்கு நீங்களிந்தப் பத்திரக் காளிக்கு வருஷமொரு திருநாள் நடத்தி வைத்து நீங்கள் கட்டின வீடு தோறும் விளக்கும் பொங்கலும் ஆடு பன்னி கோழி இந்த முப்பலியும் வருஷமொரு எருமைக்கிடா பலியும் ஒப்புவித்து வாருங்களென்று அவர்களுக்குக் கட்டுச் செய்து அந்த துர்க்கைக்கு நீயும் அவர்களிடத் தில் இந்தப்படி பலிவாங்கிக் கொண்டு அவர்களுக்குக் கிராம தேவதையாயிருந்து அவர்களை நீயும் ரக்ஷித்து வா வென்று அந்த பத்திரகாளிக்கும் சமையமுதலி கட்டுச் செய்த பின்பு

கரிகாலச் சோழன் சேரன் சமயமுதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி மற்றுமுள்ளபேருமாக அந்த வானிரநதியில் தீர்த்தமாடி வந்து மகாலிங்கத்திற்கு அபிஷேக தூப தீபாருதனை முடிப்பித்து எல்லோரும் தரிசித்துச்கொண்டு குள்ளந்துறை நகர் கடந்து சமய முதலி கையொழுகினபடிக்குக் கோமங்கை வனத்தில் வண்டி என்கிற குள்ளன்பதி வனதிற்குப்போனூர். போனபின்பு கரிகாலச் சோழன் வண்டிபதி வனத்தை வேடர்கம்பழத்தை வரவிட்டுச்செடி வெட்டி வைக்கும்போது அந்தக் கோமங்கை வண்டி பதிவனங் காத்திருந்த வண்டிகாளியாகிறது கரிகாலச் சோழனிடத்திற்கு வந்து பலி கேட்டது. அது கேட்ட படிக்குச் சோழன் சமைய முதலியை அழைத்து அந்தத் துர்க்கைக்கு ஒப்புச்சொல்லச் சொன்னூர். அவர் சொன்னபடிக்குச் சமைய முதலியும் அப்படியே அந்த துர்க்கைக்குச் சோழனுகிறவன் இந்நகரமும் இங்கிலுண்டாகிய ஆலயமும் கட்டி முடித்தபின்பு உனக்கும் நானே சோழனைக் கொண்டு கோவிலும் கட்டிவைத்து உன்னையும் நிலை நிறுத்திவைத்து முப்பலியும் கொடுப்பிவிக்கிறேன் என்று சமைய முதலி சொல்ல துர்க்கையும் கேட்டு மனம் பொறுத்து நின்றபின்பு கரிகாலச் சோழன் வேடர் கம்பளத்தை விட்டுச் செடி வெட்டி வழி பண்ணிவைத்து அந்தப் பூமீசுரமுடையாராகிய லிங்கத்தையும் கண்டு கரிகாலச் சோழன் அந்தப் பூமீசுரமுடையாருக்குக் கோவிலுங் கட்டி வைத்து அந்த வனத்தில் முன் குடியிருந்தவன் வண்டி என்கிற இருளன் பேருக்கு வண்டி கோட்டை என்று ஊருங் கட்டிவைத்து அதில் கோட்டையும் கட்டிவைத்து அதில் குளமும் கட்டி வைத்தார். அவர் கட்டி வைத்த பின்பு சமையமுதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி இம் மூவருமாகப் பதினெண் சாதிப் பல் குடியும் அழைத்து வண்டிக் கோட்டிட நகரில் குடி வைத்து அதில் உழவு குடியான பல குடியான பல்குடிக்கும் முதன்மையாகச் சோளதேசப் பாலச்சேரிநகர் வேளாளரில் சோழி என்கிறவனைச் சடையப்பன் வைத்தான். அதில் செட்டிமையான பல குடிக்கும் முதன்மையாகக் கவறைவளைஞரில் ரங்கசெட்டி என்கிறவனைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தான். அவர்கள் வைத்து நிகுதி செய்த பின்பு கரிகாலச் சோழன் வண்டிகோட்டை நகரதிகாரத்திற்கு முன் அ.......... ஞூரி நகரில் சேரன் வைத்து நிகுதி செய்த வில்லமண்ணுடி என்கிற வேட்டுவனை வைத்தார். அதில் கர்ணிகத்திற்குத் திருக்கணக்கரில் சிவ ராமகாசிப் பிள்ளையை வைத்தான்.

கோமங்கை வனம் வண்டிபதி

வைத்து நிகுதி செய்த பின்பு சமைய முதலியும் அந்தப் பூமீசுர முடையாருக்கு உத்தமபண்டிதரை அழைத்துப் புண்யாங்க அஷ்ட மந்திரப்பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழன் அந்த ஆலயத்திற்கு விட்ட மான்யம் ஐந்நூறு பொன்

கிராமமும் ஐம்பது பொன் .சுங்கத்தீர்வையும் ஐம்பது மிடா விரைப்பு நஞ்செய்யும் குளக்கரையில் ஐம்பது மிடா விரைப்புப் புஞ்செய்யும் விடுவித்து விட்ட மான்யத்திற்கு நாலு சூலக்கல் நாட்டுப் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்டமான்யத்தில் சமைய முதலிக்குப் பத்திலொன்று என்று பூமீசுரமுடையார் ஆலயத்தில் கலச்சாகரம் பொடிவித்து (திருவாடு தண்டிகை சீர்பாத ஊழியத்திற்குக் கைக்கொள்வர்)க் கரிகாலச் சோழன் நிகுதி செய்த பின்பு சமைய முதலியும் அந்த ஆலய ஊழியத்திற்கு நம்பி முதல் திருவலகு கடை வரை ஆள் பொடிவித்துத் திருவாடு தண்டிகைச் சீர்பாத ஊழியத்திற்குக் கைக் கொள்வர் முப்பது குடியும் வைத்து அந்த முப்பது குடிக்கும் நம்பி முதல் திருவலகு கடை வரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்குக் கைக்கொள்வரில் அமணலிங்க முதலியை வைத்து அந்தக் கோவிலுக்கும் கோவில் மான்யத்திற்கும் மணியங் கணக்கிற்கு கைக் கொள்வரில் ஆறுமுக முதலியை வைத்து நம்பி முதன்மைக்கு கந்தப்ப நம்பியை வைத்து நாகபாச முதன்மைக்கு சிதம்பர நட்டுவனை வைத்துத் தாசி முதன்மைக்குச் செம்பக மாணிக்கியை வைத்து அவர்களுக்கெல்லாம் ஓலைப்பட்டயமும் பாக்கு வெற்றிலையும் கொடுத்து சமைய முதலி நிகுதி செய்த பின்பு சமைய முதலியும் அந்த வண்டி பத்திரகாளிக்கு கரிகாலச் சோழனைக் கொண்டு கோவில் உத்திர வாசலும் கட்டி வைத்து உத்தம பண்டிதரை அழைத்து அந்த துர்க்கையை நிலைநிறுத்தி வைத்துப் புண்யாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு கரிகாலச்சோழன் சேரனிடத்தில் கைக்கிரய பூமி கொண்டு அந்த துர்க்கையாலயத்திற்கு விட்ட மானியம் பத்துமிடா விரைப்புப்புஞ்செய்யும் பத்து மிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மான்யத்திற்கு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த துர்க்கையாலயத்திற்கு விட்ட மான்யத்தில் சமைய முதலிக்குப் பத்தில் ஒன்றென்று துர்க்கை யாலயத்தில் கலச்சாகரமும் பொடிவித்து கரிகாலச் சோழன் நிகுதி செய்த பின்பு சமய முதலியும் அந்த துர்க்கை ஆலய ஊழியத்திற்கு ஆதி சோகி கோரக்க நாதர் வர்க்கத்தில் செங்கோட பண்டாரத்தை வைத்து அந்தப் பண்டாரத்தைக் கொண்டு துர்க்கைக்கு அபிஷேக தூப தீபாருதனை முடிப்பித்து அந்த முகத்தில் ஆடு பன்னி கோழி அறுத்துப் பலியூட்டி வைத்து நாம் உனக்குச் சொன்ன முப்பலியும் வந்தெதன்று துர்க்கைக்கு ஒப்பு வித்து அந்த நாளில் அவ்வூரிலுள்ள குடிவரிசை சனங்களுக்கு நீங்களிந்த துர்க்கைக்கு வருஷமொரு திருநாள் நடத்தி வைத்துக் கட்டின வீடுதோறும் விளக்கும் பொங்கலும் ஆடு பன்னி கோழி இந்த முப்பலியும் வருஷமொரு எருமைக்கிடா பலியும் இந்த துர்க்கைக்கு ஒப்புவித்து வாருங்களென்று அவர்களுக்கும் கட்டுச் செய்து அந்த துர்க்கைக்கும் நீ அவர்களிடத்தில் நீ இந்தப்படி பலி வாங்கிக்கொண்டு அவர்களுக்கு

கிராம தேவதையாயிருந்து அவாகளை ரக்ஷித்து வா வென்று அந்த துர்க்கைக்கும் சமைய முதலி கட்டுச் செய்த பின்பு கரிகாலச் சோழன் சேரன் சமையமுதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் மற்றுள்ள பேருமாக பூமீசுவர முடையாருக்கு அபிஷேக தூப தீபாராதனை முடிப்பித்து எல்லோரும் தரிசித்துக் கொண்டு வண்டி கோட்டை நகர் கடந்து சமய முதலி கையொழுகினபடிக்கு வெள்ளை யென்கிற இருளன் பதிக்குப் போனார்கள். போன பின்பு கரிகாலச் சோழன் வேடர் கம்பழத்தை விட்டு வெள்ளைப்பதி வனத்தில் செடி வெட்டி வைக்கும் போது அந்த வனத்தில் காத்திருந்த துர்க்கை பத்திரகாளி சோழனிடத்துக்கு வந்து பலி கேட்டது. அது கேட்டபடிக்கு கரிகாலச் சோழன் சமைய முதலியை அழைத்து அந்த துர்க்கைக்கு ஒம்புச் சொல்லச் சொன்னார். அவர் சொன்னபடிக்கு சமைய முதலியுமப் படியே துர்க்கைக்கு கரிகாலச் சோழன் ஆகிறவர் இந்த நகரமும் இங்கிலுண்டாகிய ஆலயமும் கட்டி முடித்த பின்பு உனக்கு நானே சோழனைக் கொண்டு கோவிலும் கட்டி வைத்து உன்னையும் நிலைக்கு நிறுத்தி வைத்து முப்பலியும் கொடுப்பிக்கிறேன் என்று சமய முதலி சொல்ல துர்க்கையும் கேட்டு மனம் பொறுத்து நின்ற பின்பு கரிகாலச் சோழன் வேடர் கம்பழத்தை விட்டுச் செடி வெட்டி வழி பண்ணி வைத்து அந்த வனத்தில் சங்கர லிங்கத்தையும் கண்டு அந்த லிங்கத் திற்கு சோழன் கோவிலுங் கட்டி வைத்து அந்த வனத்தில் முன் குடியிருந்த வெள்ளை யென்கிற இருளன் அந்த இருளன் பேருக்கு ஊர் வெள்ளாதி யென்று ஊருங் கட்டி வைத்து அதில் கோட்டையும் பேட்டையும் கட்டி வைத்து ஒரு குளமும் கட்டி வைத்தார். அவர் கட்டி வைத்த பின்பு சமைய முதலி குமார சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி இம் மூவருமாகப் பதினெண் சாதிப்பல குடியு மழைத்து அந்த வெள்ளாதி நகரில் குடிவைத்து அதில் உழவு குடியான பல குடிக்கும் முதன்மையாகச் சோளதேசப்பால் சேரி நகர் வேளாளரில் பிச்சையப்ப னென்கிறவனைச் சடையப்பன் வைத்தான். அதில் செட்டிமையான பல குடிக்கும் முதன்மையாகக் கவரைவலஞ்சியரில் வரதப்ப னென்கிறவனைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தார். அவர்கள் வைத்து நிருதி செய்த பின்பு கரிகாலச் சோழன் வெள்ளாதி நகரதிகாரத்திற்கு வில்ல மண்ணாடி அபாலில் கொண்டப்ப மண்ணாடி என்கிற வேட்டுவனை வைத்தார். அதில் கர்ணிகத்திற்குத் திருக்கணக்கரில் வெங்கடாத்திரி பிள்ளையை வைத் தார். அவர் வைத்து நிருதி செய்த பின்பு சமைய முதலியும் உத்தம பண்டிதரைக் கொண்டு சங்காதி லிங்கருக்குப் புண்யாங்க அஷ்ட மந்திரிப் பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரய பூமி கொண்டு அந்த

வெள்ளைப்பதி வனம்

வெள்ளாதி

ஆலயத்திற்கு விட்ட மான்யம் ஐந்நூறு பொன் கிராமமும் ஐம்பது பொன் சுங்கத்தீர்வையும் ஐம்பதுமிடா விரைப்புப் புஞ்செய்யும் குளக் கரையில் ஐம்பது மிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மான் யத்திற்கு நாலுசூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மான்யத்தில் சமைய முதலிக்குப் பத்திலொன்று என்று சங் கரலிங்க ஆலயத்தில் கரிகாலச் சோழன் கலச்சாகரம் பொடிவித்த பின்பு சமய முதலியும் அந்த ஆலய ஊழியத்திற்கு நம்பி முதல் திரு வலகு கடை வரைக்கும் ஆள் பொடிவித்துத் திருவாடு தண்டிகை ஊழி யத்திற்குக் கைக் கொள்வரில் நாற்பது குடியும் வைத்து அந்த நாற்பது குடிக்கும் நம்பி முதல் திருவலகு கடைவரைக்கும் முதன்மை நாட்டாண் மைக்குக் கைக்கொள்வரில் வெற்றி வேல் முதலியை வைத்து நம்பி முதன்மைக்கு சொக்கநாத நம்பியை வைத்து நாகபாச முதன்மைக்கு அழகப்ப நட்டுவனை வைத்துத் தாசி முதன்மைக்கு குப்பி மாணிக்கியை வைத்து அந்தக் கோவிலிற்கும் கோவில் மான்யத்திற்கும் மணியங் கணக்குக்குக் கைக்கொள்வரில் தீத்தா முதலியை வைத்து அவர்களுக் கெல்லாம் ஓலைப்பட்டையமும் பாக்கு வெற்றிலையும் கொடுத்து சமைய முதலி நிகுதி செய்தபின்பு சமைய முதலியும் அந்த வனத்தில் முன் காத்திருந்த துர்க்கை பத்திரகாளிக்கு சோழனைக்கொண்டு உத்திர வாசல் கோவிலுங் கட்டிவைத்து உத்தம பண்டிதரைக்கொண்டு அந்த துர்க்கையை நிலைநிறுத்திவைத்து புண்யாங்க அஷ்டமந்திரப் பிர திஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு கரிகாலச்சோழன் சேரனிடத்தில் கைக்கிரய பூமி கொண்டு அந்த துர்க்கை ஆலயத்திற்கு விட்ட மான்யம் பத்து மிடா விரைப்பு நஞ்செய்யும் பத்து மிடா விரைப்புப் புஞ்செய்யும் விடுவித்து விட்ட மான்யத்திற்கு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த துர்க்கை ஆலயத்திற்கு விட்ட மானியத்தில் சமைய முதலிக்குப் பத்திலொன்றென்று துர்க்கையால யத்தில் கரிகாலச் சோழன் கலச்சாகரம் பொடிவித்தார். பொடிவித்த பின்பு சமையமுதலியும் அந்த துர்க்கை ஆலய ஊழியத்திற்கு ஆதி சோகி கோரக்க நாதர் வர்க்கத்தில் கௌரி பண்டாரத்தை வைத்து அந்தப் பண்டாரத்தைக் கொண்டு அந்த துர்க்கைக்கு அபிஷேக தூப தீபாருதனை முடிப்பித்து அந்த முகத்தில் ஆடு பன்னி கோழி அறுத்து முப்பலியூட்டி வைத்து நாம் முன் உனக்குச் சொன்ன முப்பலியும் வந்ததென்று அந்த துர்க்கைக்கு ஒப்புவித்து நீங்கள் கட்டின வீடு தோறும் விளக்கும் பொங்கலும் ஆடு பன்னி கோழி இந்த முப்பலியும் வருஷமொரு எருமைக்கிடா பலியும் நீங்கள் இந்த துர்க்கைக்கு ஒப்பு வித்து வாருங்களென்று அவர்களுக்குக் கட்டுச் செய்து அந்த துர்க் கைக்கும் அவர்களிடத்தில் நீ இந்தப்படி பலி வாங்கிக்கொண்டு அவர் களுக்கு நீ கிராமதேவதையா யிருந்து அவர்களை ரக்ஷித்துவாவென்று

சமைய முதலி அந்த துர்க்கைக்குக் கட்டுச்செய்த பின்பு கரிகாலச் சோழன் சேரன் சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி சமைய முதலியும் மற்றுமுள்ள பேருமாக சங்கரலிங்கத்திற்கு அபிஷேக தூப தீபாருதனை முடிப்பித்து எல்லோரும் தரிசித்துக்கொண்டு வெள்ளாதி நகர் கடந்து சமைய முதலி கைப்பட்டி யொழுகின படிக்கு கவையன் என்கிற இருளன்பதி வனத்திற்குப் போனர். அவர்கள் போனபின்பு கரிகாலச் சோழன் கவையன்பதி வனத்தில் வேடர் கம்பழத்தை விட்டுச் செடி வெட்டி வைக்கும்போது அந்த வனத்தில் காத்திருந்த கவையதுர்க்கை பத்திரகாளி சோழனிடத்திற்கு வந்து பலி கேட்டது.

கவையன்பதி

அது கேட்டபடிக்குச் சோழன் சமைய முதலியை அழைத்து அந்த துர்க்கைக்கு ஒப்புச் சொல்லச் சொன்னர். அவர் சொன்ன படிக்குச் சமைய முதலியும் அப்படியே அந்த துர்க்கைக்கு (ஒப்புச் சொல்லச் சொன்னர்.) கரிகாலச் சோழனுகிறவர் இந்த நகரமும் இதிலுண்டாகிய ஆலயமும் கட்டி முடித்தபின்பு உனக்கு நானே சோள(ழ)னைக் கொண்டு ஆலயமும் கட்டிவைத்து உன்னையும் நிலை நிறுத்தி வைத்து முப்பலியும் கொடுப்புவிக்கிறேன் என்று சமைய முதலி சொல்ல துர்க்கை கேட்டு மனம் பொறுத்து நின்றபின்பு கரிகாலச் சோழன் வேடர் கம்பழத்தை விட்டு அந்த வனத்தில் செடி வெட்டி வழி பண்ணிவித்து அதிலிருந்த கரிகால ஈசுவரமுடையாராகிய லிங்கத்தையுங் கண்டு கண்டபின்பு அந்த லிங்கத்திற்கு கரிகாலச் சோழன் கோவிலுங் கட்டிவைத்து கோவில் நகரமென்று ஊருங் கட்டிவைத்துக் கட்டிவைத்த பின்பு சோழன் முன் அந்த வனத்தில் குடியிருந்த கவையனென்கிற இருளன் அந்தக் கவையன் பேருக்கு கவையன் புத்தூர் என்று ஊருங் கட்டிவைத்து அதில் கோட்டையும் பேட்டையும் கட்டிவைத்து ஒரு குளமும் கட்டிவைத்தார். அவர் கட்டி வைத்த பின்பு சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி இம்மூவருமாகப் பதினெண் சாதிப் பல குடியுமழைத்து கவையன் புத்தூர் நகரிலும் கோவில் நகரிலும் குடிவைத்து அதில் உழவு குடியான பல குடிக்கும் முதன்மையாகச் சோழதேசப்பால்சேர் நகர் வேளாளரில் அப்பனென்கிறவனைச் சடையப்பன் வைத்தான் அதில் செட்டிமையான பல குடிக்கும் முதன்மையாகக் கவரை வலைஞரில் திருப்பதி செட்டி என்கிறவனைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தான். அவர் கண்வைத்து நிகுதி செய்த பின்பு கரிகாலச் சோழன் கவையம்புத்தூர் நகரத்திற்குப் பூவிலுவரில் சின்னப்ப மண்ணுடியை வைத்தார். அதில் கர்ணிகத்திற்குத் திருக்கணக்கரில் சித தம்பலப் பிள்ளையை வைத்தார். அவர் வைத்து நிகுதி செய்த பின்பு சமைய முதலியும் உத்தம பண்டிதரை அழைத்து காலகால லிங்கத் திற்குப் புண்யாங்க அஷ்ட மந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார்

அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரய பூமி கொண்டு அந்த ஆலயத்திற்கு விட்ட மானியம் ஐந்நூறு பொன் கிராமமும் ஐம்பது பொன் சுங்கத்தீர்வையும் ஐம்பது மிடா விரைப்புப் புஞ்செய்யும் ஐம்பது மிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மான்யத்திற்கு நாலு சூலக்கல் நாட்டும் பொடி வித்து அந்த ஆலயத் திற்கு விட்ட மான்யத்தில் சமய முதலிக்குப் பத்திலொன்றென்று கால கால ஈசுரர் ஆலயத்தில் கரிகாலச் சோழன் கலச்சாகரம் பொடிவித்து நிகுதி செய்த பின்பு சமைய முதலியும் அந்த ஆலய ஊழியத்திற்கு நம்பி முதல் திருவலகு கடை வரைக்கும் ஆள் பொடிவித்துத் திருவாடு தண்டிகை ஊழியத்திற்குக் கைக்கொள்வர் அறுபது குடியும் வைத்து அந்த அறுபது குடிக்கும் நம்பி முதல் திருவலகு கடை வரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்குக் கைக்கொள்வரில் திருத்தணி முதலியை வைத்து நம்பி முதன்மைக்குக் குப்பைய நம்பியை வைத்து நாகபாச முதன்மைக்குச் சந்திர நட்டுவனை வைத்துத் தாசி முதன்மைக் குப் பார்வதி மாணிக்கியை வைத்து அந்தக் கோவிலுக்கும் கோவில் மான்யத்திற்கும் மணியம் கணக்குக்குக் கைக்கொள்வரில் விசுவனுத முதலியை வைத்து அவர்களுக்கெல்லாம் ஓலைப் பட்டையமும் பாக்கு வெற்றிலையும் கொடுத்து சமைய முதலி நிகுதி செய்தபின்பு சமைய முதலியும் அந்த வனத்தில் காத்திருந்த கவைய காளிக்கு சோழனைக் கொண்டு கோவிலுங் கட்டிவைத்து உத்தம பண்டிதரை அழைத்துப் புண்யாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்தபின்பு கரிகாலச் சோழன் சேரனிடத் தில் கைக்கிரய பூமி கொண்டு அந்த துர்க்கை ஆலயத்திற்கு விட்ட மான்யம் நூறு பொன் கிராமமும் பத்துப் பொன் சுங்கத் தீர்வையும் பத்து மிடா விரைப்புப் புஞ்செய்யும் பத்து மிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மானியத்திற்குச் சூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த துர்க்கை யாலயத்திற்கு விட்ட மான்யத்தில் சமைய முதலிக்குப் பத்தி லொன்று என்று துர்க்கை யாலயத்தில் கலச்சாகரம் பொடிவித்துக் கரிகாலச் சோழன் நிகுதி செய்தபின்பு சமைய முதலியும் அந்த துர்க்கைக் கோவிலூழியத்திற்கு ஆதி சோக கோரக்கநாதர் வர்க்கத் தில் குப்பண்ண பண்டாரத்தை வைத்து அந்தப் பண்டாரம் முதலாக நாகபாசம் திருவலகு கடவரைக்கும் ஆள்பொடிவித்து அந்தப் பண்டா ரத்தைக் கொண்டு துர்க்கைக்கு அபிஷேக தூபதீபாருதனை முடிப் பித்து அந்த முகத்தில் துர்க்கைக்கு ஆடு பன்னி கோழி அறுத்துப் பலியூட்டி வைத்து நாம் உனக்கு முன் சொன்ன முப்பலியும் வந்த தென்று துர்க்கைக்கு ஒப்புவித்து அந்த முகத்தி லவ்வூரிலுள்ள குடிவரிசை ஜனங்கட்கும் நீங்களிந்த துர்க்கைக்கு வருஷமொரு திரு நாள் நடத்தி வைத்து நீங்கள் கட்டின வீடுதோறும் பொங்கலும் விளக்கும் ஆடு பன்னி கோழி இந்த முப்பலியும் வருஷமொரு எருமைக்

கிடாபலியும் நீங்களிந்த துர்க்கைக்கு ஒப்பிவைத்து வாருங்களென்று அவர்களுக்கும் கட்டுச் செய்து அந்த துர்க்கைக்கும் நீயுமிந்தப்படி அவர்களிடம் பலி வாங்கிக்கொண்டு அவர்களுக்கு நீயுமிந்தக் கிராம தேவதையாயிருந்து அவர்களை ரக்ஷித்து வாவென்று சமைய முதலி அந்த துர்க்கைக்கு கட்டுச் செய்து பின்பு கரிகாலச் சோழன் சேரன் சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் மற்றுமுள்ள பேருமாக சமைய முதலி கையொழுகினபடிக்கு அந்தக் கோவில் நகரத்தில் காலநதியுங் கண்டு கண்ட பின்பு கரிகாலச் சோழன் அந்தக் காலநதியை அடித்தூருவை எடுப்பித்து அவனை ஏரிகட்ட வைத்த பின்பு கரிகாலச் சோழன் சேரன் சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் மற்றுமுள்ள பேருமாக அந்தக் காலநதியில் தீர்த்தமாடி வந்து காலகால ஈசுவரற்கு அபிஷேக தூபதீபாருதனை முடிப்பித்து எல்லோரும் தரிசித்துக் கொண்டு அந்தக் கோவில் நகரிலிருக்கும் பொழுது அன்னளில் முன் உறையூர்ச் சோழன் பெண்சாதிகளில் கரிகாலச் சோழன் தாயாராகிற சிங்கம்மாளையும் அவன் சிறிய தாயாராகிய சாமண(ள)ம்மாளையும் வைத்துச் சஞ்சரித்த பிராமணரில் ராமபட்டர் சந்திரபட்டர் இந்த இரண்டு பேரும் முன் கரிகாலச் சோழனை வெள்ளை யானை வந்து சோழ தேச நகரதிகாரத்திற்கு முடிசூட்ட எடுத்துக் கொண்டு போகும்போது அன்னளில் கரிகாலச் சோழன் தாயாரும் கரிகாலச் சோழனைப் பின்துடர்ந்து போம்போது அப்பொழுது இந்தப் பிராமணரில் இரண்டு பேரும் சிங்கம்மாளையும் சாமண(ள)ம்மாளையும் பின்துடர்ந்து போய் அதே ராமபட்டர் சந்திரபட்டரென்கிற இரண்டு பேரும் அந்தம்மனவர்களை உங்கள் பேருக்கு எங்களுக்கு இவ்விடத்தில் அக்கிரகாரம் கட்டிவைத்துப் பூமிதானம் விடுவித்துப் பின் முன் உன் தர்மம் இவ்விடத்தில் நடக்கத்தக்கதாகக் கட்டுச்செய்ய வேண்டுமென்று இந்தப் பிராமணரிரண்டு பேரும் அந்த இரண்டு அம்மனையும் கேட்ட நாளில் அந்த இரண்டு அம்மனும் இரண்டு பிராமணருக்கு எங்களிரண்டு பேருக்கும் இரண்டு அக்கிரகாரம் கட்டிவைத்துப் பிராமணக் குடியும் வையுங்கள். இனிமேல்பட்டு என் மகன் இவ்விடத்திற்கு வந்து உங்களுக்கெல்லாம் நிகுதி செய்து கொடுப்பானென்று அந்தம்மவனவர்கள் பிராமணருக்குச் சொல்லிப் போனபடியினலே அந்தப் பிராமணரும் அந்தப்படியே அகாமும் (அக்ர காரமும்) கட்டிவைத்து அதில் பிராமணர் குடியும் ஏற்றிவித்து அதற்கு நிகுதி காண்க வேண்டுமென்று அந்த ராமபட்டர் சந்திரபட்டர் என்கிற பிராமணர் இரண்டு பேரும் கரிகாலச் சோழனிடத்திற்கு வந்தார். வந்த பின்பு கரிகாலச் சோழன் பிராமணர் சொன்ன பூருவீகம் கேட்டு

கோவில் நகரம்

சிங்காநல்லூர் பிராமணர் வருகை

சந்தோஷப்பட்டுக்கொண்டு கரிகாலச் சோழன் சேரனையும் சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி(யை)யும் மற்றுள்ள பேரையும் வரவழைத்துக்கொண்டு கரிகாலச் சோழன் சிறு தாயார் சாமளம்மாள் பேருக்குக் கட்டிவைத்த சாமளபுரத்து அக்கிரகாரத்திற்குப் போனார்கள். போனபின்பு கரிகாலச் சோழன் அந்தச் சாமளபுரத்திலுள்ள கோளீசுரமுடையாருக்குக் கோவிலும் கட்டிவைத்து அந்தச் சாமளம்மாள் பேருக்கு அக்கிரகாரமும் கட்டிவைத்து ஒரு குளமும் கட்டிவைத்து பின்பு சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி அம்மூவருமாகப் பதினெண் சாதிப் பல குடியும் அழைத்துச் சாமளாபுர நகரில் குடிவைத்து அதிலுழவு குடியான பல குடிக்கும் முதன்மைக்குச் சோளதேச தென் திசை நகர் வேளாளரில் கந்தப்பனென்கிறவனைச் சடையப்பன் வைத்தான். செட்டிமையான பல குடிக்கும் முதன்மையாகக் கவலைவலைஞ்சியரில் செஞ்சி செட்டி என்கிறவனைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தான். அவர்கள் வைத்து நிகுதி செய்தபின்பு கரிகாலச்சோழன் அந்த நகரத்திற்குக் கோவிலுவரில் வஞ்சி மண்ணுடியை வைத்தான். அதில் கர்ணிகத்திற்குத் திருக்கணக்கரில் தாசப்பிள்ளையை வைத்தார். வைத்து நிகுதி செய்த பின்பு சமைய முதலியும் உத்தம பண்டிதரை அழைத்துச் சோளீசுர முடையாருக்குப் புண்யாங்கப் பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரய பூமி கொண்டு அந்த ஆலயத்திற்கு விட்ட மானியம் முன்னூறு பொன் கிராமமும் முப்பது பொன் சுங்கத்தீர்வையும் முப்பது மிடா விரைப்புப் புஞ்செய்யும் குளக்கரையில் முப்பதுமிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மான்யத்திற்கு நாலு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மான்யத்தில் சமைய முதலிக்குப் பத்திலொன்றென்று சோளீசுர முடையாராலயத்தில் கலச்சாகரம் பொடிவித்துக் கரிகாலச் சோழன் நிகுதி செய்த பின்பு சமைய முதலியும் அந்த ஆலயத்து ஊழியத்திற்கு நம்பி முதல் திருவலகு கடை வரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்குக் கைக்கொள்வரில் அமராபதி முதலியை வைத்து நம்பி முதன்மைக்கு வள்ளியன் நம்பியை வைத்து நாகபாச முதன்மைக்குச் சித்த நட்டுவனை வைத்துத் தாசி முதன்மைக்குக் குள்ளி மாணிக்கியை வைத்து அந்தக் கோவிலிற்கும் கோவில் மான்யத்திற்கும் மணியம் கணக்குக்குக் கைக்கொள்வரில் தேவகிரி முதலியை வைத்து அவர்களுக்கெல்லாம் ஓலைப்பட்டயமும் பாக்கு வெற்றிலையும் கொடுத்துச் சமைய முதலி நிகுதி செய்த பின்பு கரிகாலச் சோழன் சாமண(ள)புரத்து அக்கிரகாரத்திற்கு சந்திர பட்டரை முதலாளியாய் அந்தச் சந்திர பட்டருக்குக் கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரய பூமிகொண்டு சாமண(ள)புரத்து அக்ரகாரத்திற்கு சந்திரபட்டருக்கு விட்ட மானியம் ஐந்நூறு பொன் கிராமமும் ஐம்பது பொன் சுங்கத் தீர்

சாமளாபுரம்

வையும் ஐம்பதுமிடா விரைப்புப் புஞ்செய்யும் குளக்கரையில் ஐம்பது மிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மான்யத்திற்குக் கல் வெட்டும் பொடிவித்து சந்திரபட்டர் கையில் செப்பெடப் பட்டையும் கொடுத்துக் கரிகாலச் சோழன் தன்னுடைய சிறிய தாயார் சாமளம்மாள்பேருக்கு அந்தக் கிராமதாரை என்று சந்திர பட்டர் கையில் உபையதாரை வார்த்து நிகுதி செய்த பின்பு கரிகாலச் சோழன் சேரன் சமைய முதலி குமார சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் மற்றுள்ள பேருமாக சோளீசுரமுடையாருக்கு அபிஷேக தூப தீபாராதனை முடிப்பித்து எல்லோரும் அவரை தரிசித்துக்கொண்டு பின்பு கரிகாலச் சோழன் ராமபட்டரையு மழைத்துக் கட்டு(டி)வித்த சிங்க(நல்லூர்) அகஇரகாரத்திற்கு வந்தார். வந்தபின்பு கரிகாலச் சோழன் தன் தாயார் சிங்கம்மாள் பேருக்கு ஊரும் நகரமும் கோட்டையும் கட்டு(டி)வித்து அதில் பிராமணருக்கு அக்கிரகாரமும் கட்டிவைத்து சிங்கம்மாள் பேருக்கு ஒரு குளமுங் கட்டிவைத்தார். அவர் கட்டிவைத்த பின்பு சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி இம்மூவருமாகப் பதினெண்சாதிப் பல குடியுமழைத்து (ர)சிங்கநல்லூர் நகரத்தில் குடியும் வைத்து அதிலுழவு குடியான பல குடிக்கும் முதன்மையாகச் சோழதேச தென்திசை நகர வேளாளரில் சின்னையனென்கிறவனைச் சடையப்பன் வைத்தான். அதில் செட்டிமையான பல குடிக்கும் முதன்மையாகக் கவறைவலேஞரில் சென்னனென்கிறவனைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தான். அவர்கள் வைத்து [1]நிகுதி செய்தபின்பு கரிகாலச் சோழன் சிங்கநெல்லூரதிகாரத்திற்கு[2]கவிலூ(லுவ)ரில் சிங்கமண்ணுடியை வைத்தான். அதில் கருணிகத்திற்குத் திருக்கணக்கரில் கொண்டப் பிள்ளையை வைத்தான். அவர் வைத்தபின்பு கரிகாலச் சோழன் சிங்கநல்லூர் அக்கிரகாரத்திற்கு ராமபட்டரைக் கொண்டு பிராமணக் குடியும் வைப்பித்து வைத்த குடிக்கு ராமபட்டரை முதன்மையாளி(ழி)யாய் வைத்து அந்த ராமபட்டருக்கும் அக்கிரகாரத்திற்கும் கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரய பூமிகொண்டு சிங்கநல்லூர் அக்கிரகாரத்திற்கு விட்ட மான்யம் ஐந்நூறு பொன் கிராமமும் ஐம்பது பொன் சுங்கத் தீர்வையும் ஐம்பது மிடா விரைப்புப் புஞ்செய்யும் குளக்கரையில் ஐம்பது மிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மான்ய பூமி கண்டு கல்வெட்டும் [3]பொடிவித்துக் கரிகாலச் சோழனை ஆனை வந்து [4]கவறிஎடுத்தபடிக்கு அந்தக் குளத்திற்கு [5]ஆனை அவமுக் குளமென்று பேருங்கண்டு கண்டபின்பு கரிகாலச் சோழன் அந்தக் குளத்தை [6]அடித்தூருவை எடுப்பித்து அவனே ஏரி கட்டிவித்து கட்டி

சிங்கம்மாள் பேருக்கு ஊரும் கோட்டையும் கட்டியது

குளம் கட்டுதல்

[1] நியதி-நியமனம் [2] கவிலுவர் [3] போடு [4] வாரிஎடுத்த [5] ஆனைவாரிக்குளம் [6] அடித்தூர்வை-சேறு எடுத்தல்

வித்த பின்பு கரிகாலச் சோழன் அந்த ஆனை அவறி(வாரி)க் குளமும் சிங்கம்மாள் பேருக்குக் கட்டிவைத்த சிங்கம்மாள் குளமும் அந்த அக்கிரகாரத்திற்குச் [1]சேத்தி அந்த அக்கிரகாரத்திற்கு விட்ட மான்யத்திற்கும் குளத்திற்கும் செப்பேட்டுப் பட்டையம் எழுதி ராமபட்டையர் கையில் கொடுத்துக் கரிகாலச் சோழன் சிங்கம்மாள் பேருக்குக் கட்டிவைத்த அக்கிரகாரத்திற்கு சிங்கம்மாளுக்கு உபயமென்று ராமபட்டர் கையில் தாரை விட்டார். கரிகாலச் சோழன் விட்டபடிக்கு ராமபட்டர் அக்கிரகார மான்யம் தாரை ஏற்றபின்பு கரிகாலச்சோழன் சேரமான்(ம்)பெருமாளென்னும் சேரன் சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி(யும்) மற்றுமுள்ள பேருமாகச் சிங்கநல்லூர் நகர் கடந்து சமைய முதலி கையொழுகினபடிக்கு வெள்ளை யென்கிற

வெள்ளளூர்

இருளன்பதி வனத்திற்குப் போனார். போனபின்பு கரிகாலச் சோழன் வேடர்கம்பள(ழ)த்தை விட்டு அந்த வனத்திலே செடி வெட்டி வைக்கும்போது அந்த வனத்தில் காத்திருந்த துர்க்கை [2]பெச்சியாகிறது கரிகாலச் சோழனிடத்திற்கு வந்து பலி கேட்டது. அது கேட்டபடிக்குச் சோழன் சமையமுதலியை அழைத்து அந்த துர்க்கைக்கு [3]ஒப்புச் சொல்லச் சொன்னார். அவர் சொன்னபடிக்குச் சமைய முதலியும் அப்படியே துர்க்கைக்கு சோழனுகிறவர் இந்த நகரமும் அதிலுண்டாகிய ஆலயமும் கட்டி முடித்த பின்பு உனக்கு நானே சோழனைக் கொண்டு கோவிலுங் கட்டிவைத்து (கட்டிவைத்த பின்பு) உன்னையும் நிலைநிறுத்தி முப்பலியும் கொடுப்புவிக்கிறேன் என்று சமைய முதலி சொல்ல துர்க்கை கேட்டு மனம் பொறுத்து நின்றபின்பு கரிகாலச் சோழன் வேடர் கம்பள(ழ)த்தை விட்டு அந்த வனத்தில் செடி வெட்டி வெளி பண்ணிவைத்து அதி

தேனீசுரர்

லிருந்த தேனீசுரமுடையாராகிய லிங்கத்தையும் கண்டு கண்டபின்பு காரிகாலச் சோழன் தேனீசுரமுடையாருக்குக் கோவிலும் கட்டிவைத்துக் கட்டிவைத்த பின்பு சோழன் அந்த வனத்திலே முன் குடியிருந்த இருளன் வெள்ளை அந்த வெள்ளையென்கிறவன் பேருக்கு ஊர் வெள்ளளூர் என்று ஊருங்கட்டிவைத்து அதில் [4]பட்டிணமும் கோட்டையும் பேட்டையும் கட்டி வைத்து ஒரு குளமும் கட்டி வைத்தார். அவர் கட்டி வைத்த பின்பு சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி அம்மூவருமாகப் பதினெண் சாதிப் பல குடியும் அழைத்து வெள்ளளூர் நகரில் குடிவைத்து அதில் உழவு குடியான பல குடிக்கும் முதன்மையாகச் [5]சோளதேச தென்திசை நகர் வேளாளரில் நல்லதம்பி என்கிறவனைச் சடையப்பன் வைத்தான். அதில் செட்டிமையான பல குடிக்கும் முதன்மையாகக் கவறை [6]வலைஞ்சியரில் குள்ளனென்கிறவனைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தான். அவர்கள் வைத்து நிருதி செய்தபின்பு கரிகாலச் சோழன் வெள்ளளூர்

[1] சேர்த்து [2] பேச்சி [3] ஒப்பு-சமாதானம் [4] பட்டணமும் [5] சோழ [6] பலிஜர்

நகரதிகாரத்திற்கு [1]காவிலூவரில் சோழியண்ண [2]மண்ணுடியை வைத்தார். அதில் கருணிகத்திற்குத் திருக்கணக்கரில் தாண்டவ பிள்ளையை வைத்தார். அவர் வைத்து நிருதி செய்த பின்பு சமைய முதலியாகிற வர் உத்தம பண்டிதரை வரவழைத்து தேனீசுரமுடையாருக்குப் புண்யாங்க அஷ்ட[3]மந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரயபூமி கொண்டு அந்த ஆலயத்திற்கு விட்ட மான்யம் ஐந்நூறு பொன் கிராமமும் ஐம்பது பொன் சுங்கத் தீர்வையும் ஐம்பது மிடா விரைப்புப் புஞ்செய்யும் குளக்கரையில் ஐம்பது மிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மான்யத்திற்குப் பூமி கண்டு நாலு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மானியத்தில் சமைய முதலிக்குப் பத்திலொன்றென்று தேனீசுரமுடையா ராலயத்தில் [4]கற்சாகரம் பொடிவித்து கரிகாலச் சோழன் நிருதி செய்த பின்பு சமைய முதலியு மந்த ஆலய ஊழியத்திற்கு நம்பி முதல் திருவலகு கடைவரைக்கும் ஆள்பொடிவித்துத் [5]திருவாடுதண்டிகைச் சீர்பாத ஊழியத்திற்குக் கைக்கொள்வர் நாற்பது குடியும் வைத்து அந்த நாற்பது குடிக்கும் நம்பி முதல் திருவலகு கடை வரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்குக் கைக்கொள்வரில் ஆனந்த முதலியை வைத்து நம்பி முதன்மைக்கு நல்லய நம்பியை வைத்து நாகபாச முதன்மைக்கு சித்த நட்டுவனை வைத்துத் தாசி முதன்மைக்கு திருமி மாணிக்கியை வைத்து அந்தக் கோவிலுக்கும் கோவில் மான்யத்திற்கும் மணியங் கணக்குக்குக் கைக்கொள்வரில் புக்கொளி முதலியை வைத்து அவர்களுக்கெல்லாம் ஓலைப்பட்டயமும் பாக்கு வெற்றிலையும் கொடுத்துச் சமைய முதலி நிருதி செய்த பின்பு சமைய முதலியும் அந்த வனத்தில் காத்திருந்த [6]பெச்சிக்குச் சோழனைக் கொண்டு கோவிலும் கட்டிவித்து உத்தம பண்டிதரை அழைத்து பெச்சியை நிலைநிறுத்திப் புண்ணியாங்காஷ்ட மந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரய பூமி கொண்டு பேச்சியாலயத்திற்கு விட்ட மானியம் பத்துமிடா விரைப்புப் புஞ்செய்யும் பத்து மிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மான்ய பூமி கண்டு சூலக்கல் நாட்டுப் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மானியத்தில் சமைய முதலிக்குப் பத்திலொன்றென்று பேச்சியாலயத்தில் கற்சாசனம் பொடிவித்து (அந்த ஆலயத்தில்) கரிகாலச் சோழன் நிருதி செய்த பின்பு சமைய முதலியு மந்தப் பேச்சி ஆலய ஊழியத்திற்கு ஆதிசோகி கோரக்கநாதர் வர்க்கத்தில் வடிவேல் பண்டாரத்தை வைத்து அவனைக் கொண்டு பேச்சிக்கு அபிஷேக தூப தீபாருதனை முடிப்பித்து அந்த

---

[1] காவிலுவர் [2] மண்ணுடி-மன்னுடி என்ற சொல்லின் மருவு என்பர். மண்ணுடி-நிலத் தலைவன் என்றும் கூறலாம். [3] பந்தனம் [4] கற்சாசனம் [5] சுவாமியைத் தூக்கும் தண்டு அல்லது வாரை [6] பேச்சி

முகத்தில் ஆடு பன்னி கோழி யறுத்துப் பலியூட்டிவித்துத் தாம் முன் சொன்ன முப்பலியும் வந்ததென்று பேச்சிக்கு ஒப்பித்து அந்த நாளில் அவ்வூரிலுள்ள குடிவரிசை சனங்களுக்கும் நீங்களிந்தப் பேச்சிக்கு வரு(ஷ)மொரு திருநாள் நடத்திவைத்து நீங்கள் கட்டின வீடு தோறும் விளக்கும் பொங்கலும் ஆடு பன்னி கோழி இந்த முப்பலியு மிந்தப் பேச்சிக்கு நீங்கள் ஒப்பித்து வாருங்களென்று அவர்களுக்கும் கட்டுச் செய்து அந்தப் பேச்சிக்கு நீயும் அவர்களிடத்தில் இந்தப் படி பலி வாங்கிக் கொண்டு அவர்களுக்கும் இந்தக் கிராம தேவதையா யிருந்து அவர்களையும் ரக்ஷித்துவா வென்று அந்தப் பேச்சிக்கும் சமைய முதலி கட்டுச் செய்த பின்பு கரிகாலச் சோழன் சேரன் சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் மற்றுமுள்ள பேருமாக தேனீசுரமுடையாருக்கு அபிஷேக தூபதீபாரு தனை முடிப்பித்து எல்லோரும் அவரைத் தரிசித்துக்கொண்டு [1]வெள்ளத்தூர் நகர் கடந்து சமைய முதலி கைப்படி ஒழுகினபடிக்குச் [2]சூர னென்கிற இருளன்பதி வனத்திற்குப் போனார். போன பின்பு கரிகாலச் சோழன் சூரன்பதிவனத்தில் வேடர் கம்பளத்தை விட்டுச் செடிவெட்டி வைக்கும்போது அந்த வனத்தில் காத்திருந்த அத்தம் பெரியம்ம(னென்கிற) சூரகாளி துர்க்கை சோழ னிடத்திற்கு வந்து பலி கேட்டது. அது கேட்டபடிக்குச் சோழன் சமைய முதலியை அழைத்து அந்தத் துர்க்கைக்கு ஒப்புச் சொல்லச் சொன்னார். அவர் சொன்னபடிக்குச் சமைய முதலியும் அப்படியே துர்க்கைக்குக் கரிகாலச் சோழன் இந்த நகரமும் இதில் உண்டாகிய ஆலயமும் கட்டி முடித்தபின்பு உனக்கு நானே சோழனைக் கொண்டு கோவிலுங் கட்டிவித்து உன்னையும் நிலைநிறுத்தி முப்பலியும் கொடுப்பு விக்கிறேனென்று சமைய முதலி சொல்ல துர்க்கையும் கேட்டு மனம் பொறுத்து நின்றபின்பு கரிகாலச் சோழன் அந்த வனத்தை வேடர் கம்ப[ழ](ள)த்தை விட்டுச் செடி வெட்டி வழி(வெளி) பண்ணிவைத்து அதிலிருந்து வைத்தியலிங்க முடையாரையும் கண்டு கண்டபின்பு கரிகாலச் சோழன் வயித்திலிங்கத்திற்குக் கோவிலுங்கட்டிவைத்து அந்த வனத்தில் முன் குடியிருந்த சூரனென்கிற இருளன் அந்த சூரன் பேருக்கு ஊர் சூரனூர் என்று ஊரும் கட்டி வைத்து அதில் கோட்டையும் பேட்டையும் கட்டிவைத்து அதிலொரு குளமும் கட்டி வைத்தார். அவர் கட்டி வைத்த பின்பு சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் அம்மூவருமாகப் பதினெண்சாதிப் பல குடியும் அழைத்துச் சூரனூரில் குடிவைத்து அதில் உழவு குடியான பல குடிக்கும் முதன்மையாக சோழதேச தென்திசை நகர் வேளாளரில் குமார வேலப்பனென்கிற வனைச் சடையப்பன் வைத்தான்.

சூரனூர்
சூலூர்

---

1 வெள்ளலூர் 2 சூரன்

அதில் செட்டிமையான பல குடிக்கும் முதன்மையாகக் கவறை வளைஞ்சியரில் ஒன்னப்பனென்கிறவனைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தார்.

அவர்கள் வைத்து நிகுதி செய்தபின்பு கரிகாலச் சோழன் சூரனூரதிகாரத்திற்குப் பூவுலுவரில் சூரமண்ணுடியை வைத்தார். அதில் கர்ணிகத்திற்குத் திருக்கணக்கரில் சிராமலைப் பிள்ளையை வைத்தார். அவர் வைத்து நிகுதிசெய்த பின்பு சமைய முதலியும் உத்தம பண்டி தரை அழைத்து வைத்தியலிங்கத்திற்குப் புண்ணியாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரய பூமி கொண்டு வைத்தியலிங்க ராலயத்திற்கு விட்ட மான்யம் முன்னூறு பொன் கிராமமும் முப்பது பொன் சுங்கத் தீர்வையும் முப்பது மிடா விரைப்புப் புஞ்செய்யும் விடுவித்து விட்ட பூமி கண்டு நாலு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மானியத்தில் சமைய முதலிக்குப் பத்தி லொன்றென்று வைத்தியலிங்க ஆலயத்தில் கலச்சாகரம் பொடிவித்து கரிகாலச் சோழன் நிகுதிசெய்த பின்பு சமைய முதலியும் அந்த ஆலய ஊழியத்திற்கு நம்பி முதல் திருவலகு கடைவரைக்கும் ஆள் பொடிவித் துத் திருவாடு தண்டிகைச் சீர்பாத ஊழியத்திற்குக் கைக்கொள்வர் இருபது குடியும் வைத்து அந்த இருபது குடிக்கும் நம்பி முதல் திரு வலகு கடைவரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்குக் கைக்கொள்வரில் தென்காசி முதலியை வைத்து நம்பி முதன்மைக்கு நண்ணுவுடை நம்பியை வைத்து நாகபாச முதன்மைக்குப் பல்ல நட்டுவனை வைத்துத் தாசி முதன்மைக்குக் குழந்தையை மாணிக்கியை வைத்து அந்தக் கோவிலுக்கும் கோவில் மான்யத்திற்கும் மணியம் கணக்குக்குக் கைக் கொள்வரில் நஞ்சப்ப முதலியை வைத்து அவர்களுக்கு எல்லாம் ஓலைப் பட்டயமும் பாக்கு வெற்றிலையும் கொடுத்து சமைய முதலி நிகுதி செய்தபின்பு சமைய முதலியும் அந்த வனங் காத்திருந்த அத்தம் பெரிய துர்க்கைக்குச் சோழனைக் கொண்டு கோவிலுங் கட்டிவைத்து உத்தம பண்டிதரைக் கொண்டு துர்க்கையை நிலைநிறுத்தி புண்யாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்தபின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரய பூமி கொண்டு துர்க்கை யாலயத்திற்கு விட்ட மான்யம் ஐந்து மிடா விரைப்பு நஞ்செய்யும் ஐந்து மிடா விரைப்புப் புஞ்செய்யும் விடுவித்து விட்ட மானியம் பூமி கண்டு கல்நாட்டும் பொடிவித்து துர்க்கை யாலயத்திற்கு விட்ட மானியத்தில் சமைய முதலிக்குப் பத்திலொன்று என்று அந்த துர்க்கை யாலயத்தில் கலச்சாகரம் பொடிவித்து கரிகாலச் சோழன் நிகுதி செய்தபின்பு சமைய முதலியும் அந்த துர்க்கைக் கோவிலூழி யத்திற்கு ஆதிசோகி கோரக்கநாதர் வர்க்கத்தில் சொக்கலிங்க

பண்டாரத்தை வைத்து அவர்களைக் கொண்டு துர்க்கைக்கு அபிஷேக தூப தீபாருதனை முடிப்பித்து அந்த முகத்தில் ஆடு பன்னி கோழி யறுத்துப் பலியூட்டிவைத்து நாம் முன் சொன்ன முப்பலியும் வந்த தென்று துர்க்கைக்கு ஒப்புவித்து அந்த நாளில் அவ்வூரிலுள்ள குடி வரிசை சனங்களுக்கும் நீங்களிந்த துர்க்கைக்கு வருஷமொரு திருநாள் நடத்திவைத்துக் கட்டின வீடுதோறும் விளக்கும் பொங்கலும் ஆடு பன்னி கோழி இந்த முப்பலியும் வருஷமொரு எருமைக்கிடாப் பலியும் ஒப்புவித்து வாருங்களென்று அவர்களுக்குக் கட்டுச்செய்து அந்த துர்க்கைக்கும் நீயுமிந்தபடிக்கு அவர்களிடத்தில் பலி வாங்கிக் கொண்டு அவர்களுக்கு மிந்தக் கிராமதேவதையா யிருந்து அவர்களை ரக்ஷித்து வாவென்று அந்தத் துர்க்கைக்குச் சமைய முதலி கட்டுச் செய்தபின்பு கரிகாலச் சோழன் சேரன் சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் மற்றுள்ள பேருமாக வைத்தியலிங்கருக்கு அபி ஷேக தூபதீபாருதனை முடிப்பித்து எல்லோரு மவரைக் தரிசித்துக் கொண்டு சூரனூர் நகர் கடந்து இருவனனென்கிற இருளன்பதி வனத்திற்குப் போனார். போனபின்பு கரி காலச் சோழன் வேடர் கம்பழ(ள)த்தை விட்டுச் செடி வெட்டி வைக்கும்போது அந்த வனங் காத்திருந்த பொன்னூர் துர்க்கை பத்திரகாளி சோழனிடத்திற்கு வந்து பலி கேட்டது. அது கேட்டபடிக்குச் சோழன் சமைய முதலியை யழைத்து அந்த துர்க் கைக்கு ஒப்புச் சொல்லச் சொன்னார். அவர் சொன்னபடிக்குச் சமைய முதலியும் அப்படியே துர்க்கைக்குச் சோழன் இந்த நகர மும் இதிலுண்டான ஆலயமும் கட்டி முடித்தபின்பு உனக்கு நான் சோழனைக் கொண்டு கோவிலுங் கட்டிவைத்து முப்பலியும் கொடுப்பி விக்கிறேன் என்று சமைய முதலி சொல்ல துர்க்கையும் கேட்டு மனம் பொறுத்து நின்றபின்பு கரிகாலச் சோழன் வேடர் கம்பளத்தை விட்டுச் செடிவெட்டி வழிபண்ணிவைத்து அதிலிருந்த சவுந்திரசிவலிங்க முடையாருக்குக் கோவிலுங் கட்டிவைத்து அந்த வனத்தில் முன்குடி யிருந்த இருளன் இருவன் அந்த இருவன் பேருக்கு இருவனூரென்று ஊரும் கட்டிவைத்து அதில் கோட்டையும் பேட்டையும் கட்டிவைத்து ஒரு குளமும் கட்டி வைத்தார். அதை கட்டிவைத்த பின்பு சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி அம்மூவருமாகப் பதி னெண் சாதிப் பல குடியும் அழைத்து இருவனூர் நகரில் குடிவைத்து அதிலுழவுகுடியான பல குடிக்கும் முதன்மையாகச் சோளதேசத்தின் திசைவூர் வேளாளரில் பெரியதம்பி யென்கிறவனை சடையப்பன் வைத் தான். இதில் செட்டிமையான பல குடிக்கும் முதன்மையாகக் கவறை வலைஞ்சியரில் காவேரியப்ப னென்கிறவனைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தான். அவர்கள் வைத்து நிருதி செய்தபின்பு கரிகாலச் சோழன் இருவூரதிகாரத்திற்குப் பூவிலுவரில் கருமமண்ணுடியை வைத்

இருவனூர்
இருகூர்

தான். அதில் கர்ணிகத்திற்குத் திருக்கணக்கரில் தாசப் பெருமாள் பிள்ளையை வைத்தார். அவர் வைத்து நிருதி செய்தபின்பு சமைய முதலியாகிறவர் உத்தம பண்டிதரை அழைத்து அந்தச் சிவலிங்க முடையாரலயத்திற்குப் புண்யாங்க அஷ்ட மந்திரப் பிரதிஷ்டையும் செய் வித்தார். அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரய பூமி கொண்டு அந்த ஆலயத்திற்கு விட்ட மான்யம் முன் னூறு பொன் கிராமமும் முப்பது பொன் சுங்கத் தீர்வையும் முப்பது மிடா விரைப்புப் புஞ்செய்யும் குளக்கரையில் முப்பது மிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மானியபூமி கண்டு நாலு சூலக் கல் நாட்டும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மானியத்தில் சமைய முதலிக்குப் பத்திலொன்றென்று அந்த ஆலயத்தில் கலச்சாக ரம் பொடிவித்துக் கரிகாலச் சோழன் நிருதி செய்தபின்பு சமைய முதலியு மந்த ஆலய ஊழியத்திற்கு நம்பி முதல் திருவலகு கடைவரைக் கும் ஆள் பொடிவித்துத் திருவாடுதண்டிகைச் சீர்பாத ஊழியத்திற்குக் கைக்கொள்வர் இருபது குடியும் வைத்து அந்த இருபது குடிக்கும் நம்பி முதல் திருவலகு கடைவரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்குக் கைக்கொள்வரில் தனுக்கோடி முதலியை வைத்து நம்பி முதன்மைக்கு வாரணவாசி நம்பியை வைத்து நாகபாச முதன்மைக்குப் பெரும்நாச்சி நட்டுவனை வைத்துத் தாசி முதன்மைக்கு நாகி மாணிக்கியை வைத்து அந்தக் கோவிலுக்கும் கோவில் மானியத்திற்கும் மணியங் கணக்குக் கைக் கொள்வரில் நயினு முதலியை வைத்து அவர்களுக்கெல்லாம் ஓலைப்பட்டையமும் பாக்கு வெற்றிலையும் கொடுத்து சமைய முதலி நிருதி செய்த பின்பு சமைய முதலியு மந்த வனத்தில் காத்திருந்த பொன்னூர் துர்க்கை பத்திரகாளிக்குச் சோழனைக் கொண்டு உத்தர வாசல் கோவிலும் கட்டிவைத்து உத்தம பண்டிதரைக் கொண்டு துர்க் கையை நிலைநிறுத்திப் புண்யாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்தபின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரயபூமிகொண்டு துர்க்கை ஆலயத்திற்கு விட்ட மானியம் ஐந்து மிடா விரைப்பு நஞ்செய்யும் ஐந்து மிடா விரைப்புப் புஞ்செய்யும் விடுவித்து விட்டமானியம் பூமிகண்டு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த துர்க்கைக்கு விட்ட மானியத் தில் சமய முதலிக்குப் பத்திலொன்றென்று துர்க்கையாலயத்தில் கரிகாலச்சோழன் கலச்சாகரம் பொடிவித்து நிருதி செய்தபின்பு சமையமுதலியும் அந்த ஆலய ஊழியத்திற்கு ஆதிசோகி கோரக்க நாதர் வர்க்கத்தில் அழக பண்டாரத்தை வைத்து அவரைக்கொண்டு துர்க்கைக்கு அபிஷேக தூப தீபாரூதனை முடிப்பித்து அந்த முகத்தில் ஆடு பன்னி கோழி யறுத்துப் பலியூட்டிவைத்து நாம் முன் சொன்ன முப்பலியும் வந்ததென்று துர்க்கைக்கு ஒப்புவித்து அந்த முகத்தில் அவ்வூரிலுள்ள குடிவரிசை சனங்களுக்கும் நீங்கள் இந்த துர்க்கைக்கு

வருஷமொரு திருநாள் நடத்திவைத்துக் கட்டின வீடுதோறும் விளக்கும் பொங்கலும் ஆடு பன்னி கோழி இந்த முப்பலியும் அறுத்துப் பலியூட்டி வைத்து அந்த முப்பலியும் வருஷமொரு எருமைக்கடா பலியுமிந்த துர்க்கைக்கு ஒப்பிவைத்து வாருங்களென்று அவர்களுக்கும் கட்டுச்செய்து அந்த துர்க்கைக்கும் நியமித்தபடி பலி வாங்கிக்கொண்டு அவர்களுக்கும் இந்தக் கிராம தேவதையாயிருந்து அவர்களையும் ரக்ஷித்து வாவென்று அந்த துர்க்கைக்கும் சமைய முதலி கட்டுச்செய்த பின்பு கரிகாலச் சோழன் சேரமாம் பெருமாளென்னும் சேரன் சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் மற்றுள்ள பேருமாகச் சிவலிங்கமுடையாருக்கு அபிஷேக தூப தீபாராதனை முடிப்பித்து எல்லோரும் அவரை தரிசித்துக் கொண்டு இருகூர் நகர் கடந்து சமைய முதலி கையொழுகினபடிக்கு இடியனென்கிற இருளன்பதி வனத்திற்குப் போனார்.

இடிகரை

போனபின்பு கரிகாலச் சோழன் அந்த வனத்தில் வேடர் கம்பளத்தை விட்டுச் செடி வெட்டிவிக்கும் போது அந்த வனங்காத்திருந்த வில்லி துர்க்கை பத்திரகாளி சேரனிடத்திற்கு வந்து பலி கேட்டது. அது கேட்டபடிக்குச் சோழன் சமைய முதலியை அழைத்து அந்த துர்க்கைக்கு ஒப்புச் சொல்லச் சொன்னார். அவர் சொன்ன படிக்குச் சமைய முதலியும் சோழன் இந்த நகரமும் இதிலுண்டான ஆலயமும் கட்டி முடித்த பின்பு உனக்கு நானே சோழனைக் கொண்டு கோவிலுங் கட்டி உன்னையும் நிலைநிறுத்தி முப்பலியும் கொடுப்பித்து வைக்கிறேன் என்று சமைய முதலி சொல்ல துர்க்கையும் கேட்டு மனம் பொறுத்து நின்றபின்பு சோழன் வேடர் கம்பளத்தை விட்டுச் செடி வெட்டி வழி பண்ணி வைத்து அந்த வனத்திலிருந்த வில்லீசுர முடையாருக்கு கோவிலுங் கட்டிவைத்து அந்த வனத்தில் முன்குடியிருந்த இருளன் இடியனென்கிறவன் பேருக்கு ஊர் இடிகரை என்று ஊருங் கட்டி வைத்து அதில் கோட்டையும் பேட்டையுங் கட்டி வைத்து அதில் ஒரு குளமும் கட்டி வைத்தார். அவர் கட்டி வைத்தபின்பு சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி இம்மூவருமாகப் பதினெண் சாதிப் பல குடியும் அழைத்து இடிகரை என்கிற நகரில் குடி வைத்து அதிலுழவு குடியான பல குடிக்கும் முதன்மையாகச் சோழதேசப் பாலச்சேரி நகர வேளாளரில் தேவியண்ணனென்கிறவனைச் சடையப்பன் வைத்தான். அதில் செட்டிமையான பல குடிக்கும் முதன்மையாகக் கவறைவளைஞரில் தம்மனென்கிறவனைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தான். அவர் வைத்து நிருதி செய்தபின்பு கரிகாலச் சோழன் இடிகரை என்கிற நகரதிகாரத்திற்குக் கவையம் புத்தூர் சின்னப்ப மண்ணுடி அபாலிவ வில்லிபுத்தூர் மண்ணுடி என்கிற பூவிலுவனை வைத்தார். அதில் கர்ணிகத்திற்குத் திருக்கணக்கரில்

ஞானபிள்ளையென்கிறவனை வைத்தார். அவர் வைத்து நிகுதிசெய்த பின்பு சமய முதலியும் உத்தம பண்டிதரை யழைத்து வில்லீசுரமுடை யாருக்குப் புண்யாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார்.

அவர் செய்வித்தபின்பு கரிகாலச்சோழன் சேரனிடத்தில் கைக் கிரய பூமிகொண்டு வில்லீசுரமுடையாராலயத்திற்கு விட்டமான்யம் முன் னூறு பொன் கிராமமும் முப்பது பொன் சுங்கத் தீர்வையும் முப்பது மிடா விரைப்புப் புஞ்செய்யும் குளக்கரையில் முப்பது மிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மான்யம் பூமிகண்டு நாலு சூலககல் நாட் டும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மான்யத்தில் சமைய முதலிக்குப் பத்திலொன்றென்று வில்லீசுரமுடையாராலயத்தில் கலச் சாகரமும் பொடிவித்து கரிகாலச்சோழன் நிகுதிசெய்தபின்பு சமய முதலியும் அந்த ஆலயத்தின் ஊழியத்திற்கு நம்பிமுதல் திருவலகு கடைவரைக்கும் ஆள் பொடிவித்துத் திருவாடு தண்டிகைச் சீர்பாத ஊழியத்திற்குக் கைக்கொள்வரில் முப்பது குடியும் வைத்து அந்த முப்பது குடிக்கும் நம்பி முதல் திருவலகு கடைவரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்குக் கைக்கொள்வரில் பெரியண்ண முதலியை வைத்து நம்பி முதன்மைக்கு குமார நம்பியை வைத்து நாகபாச முதன்மைக்கு ராஜ நட்டுவனை வைத்துத் தாசி முதன்மைக்குக் காசி மாணிக்கியை வைத்து அந்தக் கோவிலுக்கும் கோவிலூழியத்திற்கும் மணியம் கணக்குக்குக் கைக்கொள்வரில் ஆதிமூர்த்தி முதலியை வைத்து அவர்களுக்கெல்லாம் ஓலைப்பட்டயமும் பாக்கு வெற்றிலையும் கொடுத்து சமய முதலி நிகுதி செய்த பின்பு சமய முதலியும் அந்த வனத்தில் காத்திருந்த வில்லி பத்திரகாளிக்குச் சோழனைக் கொண்டு கோவிலுங்கட்டி வைத்து உத்தம பண்டிதரைக் கொண்டு அந்த துர்க்கையை நிலைநிறுத்தி புண்யாங்க அஷ்டமந்திரப் பிர திஷ்டை செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரய பூமி கொண்டு துர்க்கை ஆலயத்திற்கு விட்ட மான்யம் ஐந்து மிடா விரைப்பு நஞ்செய்யும் ஐந்துமிடாவிரைப்புப் புஞ்செய்யும் விடுவித்துவிட்ட மான்யம் பூமி கண்டு சூலக்கல் நாட்டும் பொடிவித்து துர்க்கை யாலயத்திற்கு விட்ட மான்யத்தில் சமைய முதலிக்குப் பத்திலொன்றென்று துர்க்கை யாலயத்தில் கலச்சாகரம் பொடிவித்து கரிகாலச் சோழன் நிகுதி செய்த பின்பு சமைய முதலியும் அந்த துர்க்கையாலய ஊழியத்திற்கு அதிசோகி கோரக்க நாதர் வர்க்கத்தில் வசவ பண்டாரத்தை வைத்து அவரைக் கொண்டு துர்க்கைக்கு அபிஷேக தூப தீபாருதனை முடிப் பித்து அந்த முகத்தில் ஆடு பன்னி கோழி அறுத்துப் பலியூட்டி வைத்து நாம் முன் சொன்ன முப்பலியும் வந்ததென்று துர்க்கைக்கு ஒப்புவித்து அந்த முகத்தில் அவ்வூரிலுள்ள குடிவரிசை சனங்களுக்

கும் நீங்கள் இந்த துர்க்கைக்கு வருஷம் ஒரு திருநாள் நடத்தி வைத்துக் கட்டின வீடு தோறும் விளக்கும் பொங்கலும் ஆடு பன்னி கோழி இந்த முப்பலியும் வருஷமொரு எருமைக்கிடா பலியும் ஒப்பித்து வாருங்க ளென்று அவர்களுக்குக் கட்டுச் செய்து அந்த துர்க்கைக்கும் நீயு மிந்தப்படிக்கு அவர்களிடத்தில் பலி வாங்கிக் கொண்டு அவர்களுக்கு மிந்தக் கிராம தேவதையாயிருந்து அவர்களையும் ரக்ஷித்து வாவென்று அந்த துர்க்கைக்கும் கட்டுச்செய்த பின்பு கரிகாலச் சோழன் சடை யப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி மற்றுமுள்ள பேருமாக வில்லீ சுர முடையாருக்கு அபிஷேக தூப தீபாருதனை முடிப்பித்து எல்லோரு மவரைத் தரிசித்துக் கொண்டு இடிகரை நகர் கடந்து சமைய முதலி கையொழுகின படிக்குத் துடிய னென்கிற இருளன்பதி வனத்திற்குப் போனார். போனபின்பு கரி காலச்சோழன் வேடர் கம்பளத்தவரை விட்டு அந்த வனத்தைச் செடி வெட்டி வைக்கும் போது அந்த வனத்தில் காத்திருந்த மங்கை மாகாளிதுர்க்கை என்கிறது சோழனிடத்திற்கு வந்து பலிகேட்டது. கேட்டபடிக்குச் சோழன் சமைய முதலியை அழைத்து அந்த துர்க்கைக்கு ஒப்புச் சொல்லச் சொன்னார். அவர் சொன்னபடிக்குச் சமய முதலியு மப்படியே துர்க்கைக்குச் கரிகால சோழன் இந்த நகரமும் இதிலுண்டாகிய சிவலிங்கத்திற்கு ஆலயமும் கட்டி முடித்த பின்பு உனக்கும் நானே சோழனைக் கொண்டு கோவிலுங் கட்டி வைத்து உன்னையும் நிலைநிறுத்தி முப்பலியும் கொடுப்பிவைக்கிறேனென்று சமையமுதலி சொல்ல துர்க்கையும் கேட்டு மனம் பொறுத்து நின்ற பின்பு சோழன் வேடர் கம்பளத்தை விட்டு அந்த வனத்தைச் செடிவெட்டி வழிபண்ணி வைத்து அந்த வனத்தில் முன் அகத்தியர் பூசித்த அகத்திய லிங்கத்தையும் கண்டு கண்ட பின்பு கரிகாலச்சோழன் அந்த அகத்தீசுர முடையாருக்குக் கோவிலுங் கட்டிவைத்து அகத்தியமுனி பெயருக்கு குருவரிஷி ஊரென்று ஊறு(ருங்) கட்டி வைத்து அதில் அகத்தியர் குளமென்று ஒரு குளமும் கட்டிவைத்துக் கட்டிவைத்தபின்பு அந்த மங்கை மாகாளி வனத்தில் குடியிருந்த இருளன் துடியன் அந்தத் துடியனென்கிறவன் பேருக்கு ஊர் துடியனூரென்று ஊருங் கட்டி வைத்து அதில் கோட்டையும் பேட்டையுங் கட்டி வைத்தார். அவர் கட்டி வைத்த பின்பு சமைய முதலி குமாரர் சடையப்பன் கத்தூரி ரங்கப்பச்செட்டி அம்மூவருமாகப் பதினெண்சாதிப் பல குடியுமழைத்து துடியனூரில் குடிவைத்து அதில் உழவு குடியான பல குடிக்கும் முதன்மையாக சோளதேச பாலசேரி நகர் வேளாளரில் கொண்டப்பயனென்கிறவ னைச் சடையப்பன் வைத்தான். அதில் செட்டிமையான பல குடிக்கும் முதன்மையாகக் கவறைவளைஞ்சியரில் வடமலை என்கிறவனை கத் தூரி ரங்கப்பச் செட்டி வைத்தான். அப்படி அவர்கள் வைத்து நிருதி

துடியனூர்

செய்தபின்பு கரிகாலச் சோழன் துடையனூர் நகரதிகாரத்திற்குக் கவையன்புத்தூர் சின்னப்ப மண்ணுடியென்கிற பூவிலுவனை வைத்தார். அதில் கர்ணிகத்திற்குத் திருக் கணக்கரில் காளி பெருமாள்பிள்ளையை வைத்து நிருதி செய்தபின்பு சமைய முதலியும் உத்தம பண்டிதரை அழைத்து அகத்திய லிங்கமுடையாருக் குப்புண்யாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார்.

அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரய பூமிகொண்டு அகத்தியலிங்கர் ஆலயத்திற்கு விட்ட மான்யம் முன்னூறு பொன்கிராமம் முப்பது முன்(பொன்) சுங்கத்தீர்வையும் முப்பதுமிடா விரைப்புப் புஞ்செய்யும் குளக்கரையில் முப்பதுமிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்டமான்யம் பூமிகண்டு நாலுசூலக் கல் நாட்டும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மான்யத்தில் சமைய முதலிக்குப் பத்திலொன்று என்று அகத்தீசுவர முடையா ருடைய ஆலயத்தில் கலச்சாகரம் பொடிவித்துக் கரிகாலச் சோழன் நிருதி செய்த பின்பு சமைய முதலியும் அந்த ஆலய ஊழியத்திற்கு நம்பி முதல் திருவலகு கடைவரைக்கும் ஆள் பொடிவித்துத் திருவாடு தண்டிகைச் சீர்பாத ஊழியத்திற்குக் கைக்கொள்வர் நாற்பது குடியும் வைத்து அந்த நாற்பது குடிக்கும் நம்பி முதல் திருவலகு கடைவரைக் கும் முதன்மை யாண்மைக்கு (நாட்டாண்மைக்கு)க் கைக்கொள்வரில் குடியண்ணமுதலியை வைத்து நம்பி முதன்மைக்குச் செல்லப்ப நம்பியை வைத்து நாகபாச முதன்மைக்குப் பெரிய நம்பி நட்டுவனை வைத்துத் நாசி முதன்மைக்கு வெள்ளை மாணிக்கியை வைத்து அவர்களுக்கெல்லாம் ஓலைப்பட்டயமும் பாக்கு வெற்றிலையும் கொடுத்து சமைய முதலி நிருதி செய்த பின்பு அந்தக் கோவிலுக்கும் கோவில் மான்யத்திற்கு மணியங் கணக்குக்குக் கைக்கொள்வரில் அதி காரி முதலியை வைத்து அவர்களுக்கெல்லாம் ஓலைப்பட்டயமும் பாக்கு வெற்றிலையும் கொடுத்துச் சமைய முதலி நிருதி செய்த பின்பு சமய முதலியும் அந்த வனத்தில் காத்திருந்த மங்கை மாகாளி என்கிற துர்க்கைக்கு சோழனைக்கொண்டு உத்தரவாசல் கோவிலுங் கட்டி வைத்து உத்தம பண்டிதரைக் கொண்டு அந்த துர்க்கையை நிலை நிறுத்திப் புண்யாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார்.

அவர் செய்வித்தபின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக் கிரய பூமிகொண்டு அந்த துர்க்கை ஆலயத்திற்கு விட்ட மான்யம் அஞ்சுமிடா விரைப்புப் புஞ்செய்யும் ஐந்துமிடாவிரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்டமான்ய பூமிகண்டு சூலக்கல்நாட்டும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்டமான்யத்தில் சமையமுதலிக்குப் பத்திலொன் றென்று அந்த துர்க்கையாலயத்தில் கலச்சாகரமும் பொடிவித்து கரிகாலச் சோழன் நிருதிசெய்தபின்பு சமயமுதலியும் அந்த துர்க்கை யாலய ஊழியத்திற்கு ஆதிசோகி சொக்கநாதர் வர்க்கத்தில் வெள்ளைப்

பண்டாரத்தை வைத்து அவரைக்கொண்டு அபிஷேக தூபதீபாரு தனையும் முடிப்பித்து அந்த முகத்தில் துர்க்கைக்கு ஆடு பன்னி கோழி அறுத்துப் பலியூட்டிவைத்து நாம் முன்சொன்ன முப்பலியும் உனக்கு வந்ததென்று துர்க்கைக்கு ஒப்பித்து அந்த முகத்தில் அவ்வூரிலுள்ள குடிவரிசை ஜனங்களுக்கும் நீங்களிந்த துர்க்கைக்கு வருஷமொரு திருநாள் நடத்தி வைத்து விளக்கும் பொங்கலும் கட்டின வீடுதோறும் ஒப்பிவைத்து ஆடு பன்னி கோழி இந்த முப்பலியும் வருஷமொரு எருமைக்கிடா பலியும் இந்த துர்க்கைக்கு ஒப்பித்து வாருங்களென்று அவர்களுக்கும் கட்டுச் செய்து அந்த துர்க்கைக்கும் நீயு மிந்தப்படி பலிவாங்கிக்கொண்டு அவர்களுக்கு மிந்தக் கிராம தேவதையாயிருந்து அவர்களையும் ரக்ஷித்து வா வென்று அந்த துர்க்கைக்கும் சமய முதலி கட்டுச்செய்து பின்பு கரிகாலச் சோழன் சேரன் சமய முதலி கத்தூரி ரங்கப்பச் செட்டியும் மற்று முள்ள பேருமாக சமைய முதலி கையொழு கினபடிக்குக் துடியனூர்த் தலத்தில் முன் பூர்விகத்து அகத்திய நதியும் சித்தர்நதியும் கண்டுகண்டபின்பு கரிகாலச்சோழன் அந்த நதிகளை அடி தூருவை எடுப்பித்து அணை ஏறிகட்டி வைத்த பின்பு எல்லோருமந்த நதி யில் தீர்த்தமாடி அகத்தீசுரமுடையாருக்கு அபிஷேக தூபதீபாருதனை முடிப்பித்து எல்லோரு மவரைத் தரிசித்துக்கொண்டு துடியனூர் நகர்

கோவன் புத்தூர்

கடந்து சமயமுதலி கையொழுகினபடிக்குக் கோவனென் கிற இருளன்பதி வனத்திற்குப் போனார். போன பின்பு கரிகாலச் சோழன் அந்த வனத்தில் வேடர் கம்பளத்தை விட்டுச் செடி வெட்டி வைக்கும் போது அந்த வனத்தில் காத்திருந்த [1]கொனமாகா.................துர்க்கை சேரனிடத்தில் வந்து பலி கேட்டது. அது கேட்டபடிக்கு சோழன் சமைய முதலியை யழைத்து அந்த துர்க்கைக்கு ஒப்புச்சொல்லச் சொன்னார். அது சொன்னபடிக்கு (சமைய முதலி) அந்த துர்க்கைக்கு சோழன் இந்த நகரமும் இதிலுண்டாகிய ஆலயமும் கட்டி முடித்துப் பின்பு (உனக்கு) (சோழனைக்) கொண்டு கோவிலுங் கட்டி வைத்து உன்னையும் நிலை நிறுத்தி முப்பலியும் கொடுப்பி வைக்கிறேன் என்று சமய முதலி சொல்ல துர்க்கையும் கேட்டு மனம் பொறுத்து நின்ற பின்பு சோழன் வேடர் கம்பளத்தை விட்டுக் கோவன் வனத்தைச் செடி வெட்டி வெளி பண்ணி வைத்து அதிலிருந்த சங்கு ஈசுரமுடையாராகிய லிங்கத்தையுங் கண்டபின்பு கரிகாலச்சோழன் அந்தச் சங்கீசுர முடை யாருக்குக் கோவிலுங் கட்டிவைத்து அந்த வனத்தில் முன் குடியிருந்த கோவனென்கிற இருளன் அந்தக் கோவனென்கிறவன் பேருக்கு ஊர் கோவன்புத்தூரென்று ஊரும் கட்டி வைத்து அதில் கோட்டையும் பேட்டையும் கட்டி வைத்து ஒரு குளமும் கட்டி வைத்தார். அவர் கட்டி வைத்த பின்பு சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச்

[1] கோனமாகாளி.

செட்டி அம்மூவருமாய்ப் பதினெண்சாதிப் பல குடியும் அழைத்துக் கோவன்புத்தூர் நகரில் குடி வைத்து அதிலுழவு குடியான பல குடிக்கும் முதன்மையாகச் சோழதேசப் பால சேரி நகர் வேளாளரில் பிச்சப்பனென்கிறவனைச் சடையப்பன் வைத்தான். செட்டிமையான பல குடிக்கும் முதன்மையாகக் கவறைவலைஞ்சியரில் வரதப்பனென்கிறவனைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தார். அவர்கள் வைத்து நிகுதி செய்த பின்பு சோழன் கோவன்புத்தூர் நகரதிகாரத்திற்குத் துடியனூர் சின்னப்ப மண்றாடி என்கிற மாவிலுவனை வைத்தார். அதில் கர்ணிகத்திற்குத் திருக்கணக்கரில் சிதம்பர அதிகாரி பிள்ளையை வைத்தான். அவர் வைத்து நிகுதி செய்தபின்பு சமய முதலியும் உத்தம பண்டிதரைக் கொண்டு சங்கீசுரமுடையாருக்குப் புண்யாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரய பூமி கொண்டு சங்கீசுரமுடையாருடைய ஆலயத்திற்கு விட்ட மானியம் ஐந்நூறு பொன் கிராமமும் ஐம்பது பொன் சுங்கத் தீர்வையும் ஐம்பது மிடா விரைப்புப் புஞ்செய்யும் குளக்கரையில் ஐம்பது மிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மானியம் பூமி கண்டு நாலு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மானியத்தில் சமய முதலிக்குப் பத்திலொன்றொன்று சங்கீசுரமுடையா ராலயத்தில் கலச்சாகரம் பொடிவித்து கரிகாலச் சோழன் நிகுதி செய்த பின்பு சமைய முதலியும் அந்த ஆலய ஊழியத்திற்கு நம்பி முதல் திருவலகு கடைவரைக்கும் ஆள் பொடிவித்துத் திருவாடு தண்டிகைச் சீர்பாத ஊழியத்திற்குக் கைக்கொள்ளர் ஐம்பது குடியும் வைத்து அந்த ஐம்பது குடிக்கும் நம்பி முதல் திருவலகு கடைவரைக்கும் முதன்மையாண்மைக்குக் கைக்கொள்வரில் திருவம்பல முதலியை வைத்து நம்பி முதன்மைக்கு சின்னப்ப நம்பியை வைத்து நாகபாச முதன்மைக்கு வேலாயுத நட்டுவனை வைத்துத் தாசி முதன்மைக்கு மயில் மாணிக்கியை வைத்து அந்தக் கோவிலுக்கும் கோவில் மானியத்திற்கும் மணியங் கணக்குக்குக் கைக்கொள்வரில் சோணாசல முதலியை வைத்து அவர்களுக்கெல்லாம் ஓலைப்பட்டயமும் பாக்கு வெற்றிலையும் கொடுத்து சமைய முதலி நிகுதி செய்த பின்பு சமைய முதலியும் அந்த வனத்தில் காத்திருந்த கோனமாகாளி என்கிற துர்க்கைக்குச் சோழனைக் கொண்டு உத்திர வாசல் கோவிலுங் கட்டிவைத்து உத்தம பண்டிதரை அழைத்து அந்தக் கோனமாகாளியை நிலை நிறுத்திப் புண்ணியாங்க அஷ்ட மந்திரப்பிரஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரய பூமி கொண்டு துர்க்கை ஆலயத்திற்கு விட்ட மான்யம் பத்துமிடா விரைப்பு நஞ்செய்யும் பத்து

மிடா விரைப்புப் புஞ்செய்யும் விடுவித்து விட்ட மான்ய பூமி கண்டு சூலக் கல் நாட்டு பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மாணியத்தில் சமய முதலிக்குப் பத்திலொன்றென்று அந்த துர்க்கையாலயத்தில் கலச் சாகரமும் பொடிவித்துக் கரிகாலச் சோழன் நிருதி செய்த பின்பு சமைய முதலியும் அந்த துர்க்கை ஆலயத்தின் ஊழியத்திற்கு ஆதி சோகி கோரக்கநாதர் வர்க்கத்தில் கப்பிணி பண்டாரத்தை வைத்து அவரைக் கொண்டு துர்க்கைக்கு அபிஷேக தூபதீபாருதனை முடிப் பித்து அந்த முகத்தில் துர்க்கைக்கு ஆடு பன்னி கோழி அறுத்துப் பலியூட்டிவைத்து நாம் முன்சொன்ன முப்பலியும் துர்க்கைக்கு வந்த தென்று ஒப்பித்து அந்த முகத்தில் அவ்வூரிலுள்ள குடிவரிசை சனங் களுக்கும் நீங்களிந்த துர்க்கைக்கு வருஷமொரு திருநாள் நடத்தி வைத்துக் கட்டின வீடுதோறும் விளக்கும் பொங்கலும் ஆடு பன்னி கோழி இம் முப்பலியும் வருஷமொரு எருமைகிடா பலியும் இந்த துர்க் கைக்கு ஒப்பித்து வாருங்களென்று அவர்களுக்கும் கட்டுச் செய்து அந்த துர்க்கைக்கும் நீயுமவர்களிடத்தில் இந்தப் படி பலி வாங்கிக் கொண்டு அவர்களுக்கும் இத்தக்கிராம தேவதையாயிருந்து அவர்களை ரக்ஷித்துவா வென்று அந்த துர்க்கைக்குச் சமையமுதலி கட்டுச்செய்த பின்பு கரிகாலச்சோழன் சேரமான் பெருமாளென்னும் சேரன் சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் மற்றுமுள்ள பேரு மாக சங்கீசுர முடையாருக்கு அபிஷேக தூப தீபாருதனை முடிப்பித்து எல்லோரும் அவரைத் தரிசித்துக்கொண்டு கோயம்புத்தூர் நகரிலிருக் கும் போது முன்னுளில் காஞ்சிமா நதிக்கரைப் பற்றில் அரசவனத்தில் பேரை என்கிற இருளன் வீடுகட்டி பேரை [1]என்பித்து அந்தப் பதியில் குடியிருந்து பிழைப்புப் பண்ணி வரு நாளில் அந் நாளில் அந்த வனத்தில் [2]வொகிலியர் ஆடுமேய்த்துக் காஞ்சிமா நதிக்கரையில் பட்டி போட்டு மாடடைத்து மாடு ஆடு மேய்த்து நடந்துவரும் நாளில் ஒரு நாள் சாயங்கால வேளை யில் மாடு மேய்ந்துக் காஞ்சிமா நதியில் தண்ணீர் குடித்து மாடு பட்டிக்கு வரும்போது அதில் ஒரு காராம் பசுவானது தாளீன்ற கன்றுக்குப் பால் கொடுக்க வென்று சரைச்சாயாய்க் கதறிக்கொண்டு தன் கூட நேர்ந்துவந்த(பசு) வெல்லாம் விட்டு அந்தப் பசுவானது முன்னே ஓடி பசுப்பட்டியில் புகுந்து கதறிக்கொண்டு கன்றுக்குட்டியை மூஞ்சியில் தள்ளிப் படலைக் கொம்பில் தள்ள அந்தக் கன்றானது தாயின் பேர்க்கனிவு கொண்டு அந்தப் பட்டியில் [3]சந்துநெறித்து வந்து பசு மடியில் வந்து ஊட்டிற்று. ஊட்டும்போது அவ்விடத்தில் ஐந்து முகப்புற்று வளர்ந்து அந்தப் புற்றுக்குள்ளே சிவலிங்கமிருந்தது. இருக்கும்போது அந்தப் பசுவின்

பேரையூர்-பேரூர்

பேரூர் உற்பத்தி வாலாறு

[1] என்று சொல்லி [2] கன்னடக் குடியானவர். ஒக்கல்-குடி [3] சந்து உண்டாக்கி

கன்றுக் குளம்பானது புற்றுக் கண்ணுக்குள்ளே ஊன்றிற்று. ஊன்றும்போது அந்த சிரசில் அந்தப் பசுவின் கன்றின் குளம்பானது ஊனைத் தாக்கிற்று. தாக்கும்படிக்கு அப்பொழுது சிவலிங்கமாவது கன்றின் குளம்பை இருகப்பிடித்துப் பிடித்த படிக்கு அந்தக் கன்றானது ஆரா ரென்று கதறிற்று. கன்றானது கதறின படிக்கு அந்தப் பசுவானது அந்தப் புற்றுக்கண்ணைத் தன்னுடைய கொம்பினால் குத்திற்று. அது குத்தும்படிக்கு அந்தச் சிவலிங்கத்திற்குப் பசுவின் கொம்படி பட்டது. பட்டபடிக்கு அந்தச் சிவலிங்கமானது பசுவின் கன்றின்காலைப் பிடித்தபிடி விட்டது. விட்டபின்பு அந்தச் சிவலிங்கத்திற்கு அந்தக் கன்றின் குளம்பு ஊனப்பட்ட [1]கன காயத்திலும் பசுவின் குளம்பு பட்ட மொக்கைக் காயத்திலும் ரத்தச்சோரி பெருகி அந்தப் புற்றுக்கண்ணெல்லாம் கரைந்து அந்தப்பட்டி எல்லாம் நிரம்பி அந்தப் பட்டியானது அடைபட்ட சேற்றுப்பதி பட்டியாயிருந்தது. ரத்தப்பதி பட்டி போலிருந்தது. இருக்கும் போது அந்த மாட்டிடையன் வைக்கிலியக் கிலாரியன் பின்பு நின்ற மாடானதெல்லாம் ஓட்டிக்கொண்டு பட்டியுள்ளே ஓட்டி பட்டி புகுந்து பார்க்கும் போது அந்த ரத்தப் பதியைக் கண்டு அந்த மாட்டை பாக்கி கிலாரியர் எல்லாம் பயந்து இதுவென்ன மகிமை ஆச்சரியமென்று பட்டி புகுந்து [2]கிலாரியர் வேதித்து பார்க்கும் போது ஒரு புற்று கண்டது. அந்தப் புற்றுக் கண்ணைத் தோண்டிப் பார்க்கும் போது ஒரு லிங்கக்கண் கண்டது. கண்ட லிங்கக்கண்ணை வேதித்துப் பார்க்கும்போது அந்த லிங்கக் கண்ணுக்குப் பசுவின் கன்று குளம்பு பட்டு அந்தக் குளம்பு பட்ட காயத்தில் ரத்தம் பெருகிப் படிந்திருந்தது. அப்படி யிருந்த அதிசயத்தைக் கண்டு அந்த மாட்டையாக்கிலாரியள் பேரைப்பதியில் இருக்கின்ற பேரை யென்கிற இருளனுக்கு அந்த அதிசயத்தை அறிக்கை செய்யவேண்டுமென்று அவனை விசாரித்துப் பார்க்கும்போது அந்தப் பேரை யென்கிற இருளன் அவனும் அன்னாளில் மான்வேட்டைபோய் திசைதப்பி வெள்ளியங்கிரி வனத்தில் புகுந்து மிருகங்கள் ஒன்றும் [3]லபியாமல் பொழுதளவும் சுற்றி மதி மயங்கி அவனும் வெள்ளியங்கிரியில் முடியில் இராத் தங்கியிருந்து காலையில் எழுந்திருந்து பார்க்கும்போது அந்த வெள்ளியங்கிரி முடியில் இர்த்தவாறு பெருகிவரக் கண்டு அந்தப் பேரை என்கிற இருளனும் இதுவென்ன மாயம், மகிமை, ஆச்சரியமென்று அவ்வாற்றின் கரை வழியே நடந்து சோதித்துப் பார்க்கும்போது அந்த வெள்ளியங்கிரியிலிருக்கின்ற பஞ்சலிங்கத்திற்கும் பசுவின் கன்று குளம்பு பட்டு அந்த லிங்கக்கண்ணுக்குக் குளம்புபட்ட காயத்தில் ரத்தம் பெருகி வடிந்து வந்திருந்தது. அந்த அதிசயத்தைக் கண்டு பேரை என்கிற இருளனும்

---

1 கன - பெரிய   2 கிலாரியர் - ஆட்கள்.   3 லபி - கிடைக்காமல்

மெத்த ஆச்சரியப்பட்டுக்கொண்டு. அவனும் நாம் கண்ட அதிசயத்தை நம் பதியிலுள்ள கிலாரிகளுக்கு சொல்லவேண்டுமென்று வேட்டை முகம் பாராமல் அவனும் வெள்ளியங்கிரிவிட்டு இறங்கிப்பேரைப்பதிக்கு வந்தான். வந்தபின்பு அந்த வனத்தில் பட்டிபோட்டிருந்த மாட்டையாய கிலாரிகள் தாங்கள் முதல்நாள் கண்ட அதிசயமாகிய கால பூர்வீக வரவெல்லாம் கிலாரியள் பேரை யென்கிற இருளனுக்குச் சொன்னார்கள். கிலாரியர் சொல்ல பேரை என்கிறவன் கேட்டு பட்டிபுகுந்து அவனும் பார்த்து மெத்த அதிசயப்பட்டுக்கொண்டு தான் கண்டுவந்த அதிசயத்தையும் கிலாரியளுக்குச் சொல்லி கிலாரியளும் தானுமாக மெத்த ஆச்சரியப்பட்டுக்கொண்டு இந்த அதிசயங்களானது வெள்ளியங்கிரி முடியிலும் அரசவன பேரைப்பதி கிலாரிப்பட்டியிலும் நம்ம கண்ணுக்குக் காண்பித்தது என்னென்னவோ சிவன் செயல் இன்னதென்று நாமறியப்போகாதென்று அந்த கிலாரியளும் பேரை யென்கிற இருளனும் கூடி மெத்த ஆலோசித்துக்கொண்டு இருக்கும் போது அன்னளில் கரிகாலச்சோழன் சேரன் சமையமுதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச்செட்டி இவர்களெல்லாம் கோவன்பதி வனத்திற்கு வந்து அந்த வனத்தையும் வெட்டி வழி பண்ணி வைத்துக் கோவன்பேருக்கு கோவன்புத்தூர் என்று ஊருங் கட்டிவைத்து அதிலிருந்த சங்கீசுர முடையாருக்குக் கோவிலுங் கட்டி வைத்துப் பிரதிஷ்டையும் பண்ணிவைத்து வரிசை மானியம் விடுவித்து எல்லா நிலவரப்படுத்தி வைத்து எல்லோரும் அந்தக் கோவன்புத்தூர் நகரில் இருக்கிறார்கள் என்கிற சேதி மேரை என்கிற இருளன் கோவன்புத்தூருக்கு வந்து கரிகாலச்சோழன் சேரனைக் கண்டு தான் கண்ட அதிசயத்தை அறிக்கை செய்தான்.

கோவையிலிருந்த கரிகாலன் பேரூர் வரலாறு கேட்டல்

அவன் அறிக்கை செய்தபடிகளுக் கரிகாலச்சோழன் சேரன் கேட்டு சமய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச்செட்டியும் மற்றுமுள்ள பேரையும் வரவழைத்துக் கொண்டு நாம் வேடி இருளன் சொன்ன அதிசயக்கைக் காண வேண்டு மென்று எல்லாரும் புறப்பட்டுக் கோவன்புத்தூர் நகர் கடந்து பேரை என்கிற இருளனிருக்கின்ற அந்த வனத்திற்குப் போனார்கள். போன பின்பு கரிகாலச் சோழன் சேரன் சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் மற்றுள்ள பேருமாக அந்த இருளனையு மழைத்து முன் விட்டுக்கொண்டு அந்த அந்த வனத்திலிருக்கின்ற கிலாரிப் பட்டி புகுந்து பார்த்து வெள்ளியங்கிரி முடிக்கும் போய்ப் பார்த்துக்கொண்டு அவர்களும் மெத்த ஆச்சரியப்பட்டுக்கொண்டு எல்லோரும் வெள்ளியங்கிரியைப் பார்த்து இந்த வெள்ளியங்கிரியே பூலோக கைலாலசம் அந்த அரசவனமே மேலைச் சிதம்பரம் அந்த மேலைச் சிதம்பரத்திற்கு

மூலம் இந்தப் பூலோக கைலாசகிரியாகிய வெள்ளியங்கிரியென்று கண்டு அவர்களும் மெத்த அதிசயப்பட்டுக்கொண்டு அந்த வெள்ளியங் கிரி விட்டு இறங்கி மேலைச் சிதம்பரமாகிய பேரைப்பதி அரசவனத்திற் குப் போனார்கள். போன பின்பு கரிகாலச்சோழன் சேரன் சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச்செட்டி மற்றுள்ளபேரும் அந்த இருளை(ணை)யும் முன்னிட்டுக்கொண்டு அந்த வனத்தில் கிலாரிப் பட்டி புகுந்(து) அந்த லிங்கக் கண்ணைக் கண்டு காமாட்டிக் சேர்வை சேவ கரை விட்டு லிங்கக் கண்ணைத் தோன்றுவித்துச் சோதினை பார்க்கும் போது [1]மு றுவிடையும் பிரளயமான ஜலமும் கண்டது. கண்டபின்பு ஜலத்தை [2]யிறப்பித்துச் சமைய முதலி மூறுவிடையில் கலச்சாகரம் போட்டிருந்தது. அந்தக் கலச்சாகரத்தை வாசித்துப் பார்க்கும் போது முன் கிருதயுகத்தில் தேவேந்திர மகாராயன் அதிகார நாளில் [3]விரும்பப் பிரதிஷ்டையில் அந்த லிங்கத்திற்குப் பேர் பூலோககைலாச லிங்கமென்றும் பேர்.

அந்த நகரத்திற்குப் பேர் காரூர் நகரமென்றும் பேர். அந்த கிரிக்குப் பெயர் நவரத்தினகிரி யென்றும் பெயர். திரேதாயுகத்தில் அரிச்சந்திர மகாராயர் அதிகார நாளில் வேதவியாசர் பிரதிஷ்டையில் சிவலிங்கத்திற்குப் பெயர் சிதம்பரலிங்க மென்றும் அந்த நகரத்திற்குப் பெயர் ஆருரென்றும் பெயர். அந்தக் கிரிக்குப் பெயர் பசும்பொன் கிரி யென்றும் பெயர். துவாபரயுகத்தில் சந்தனுமாராயர் அதிகார நாளில் மார்க்கண்டிகப் பிரதிஷ்டையில் அந்த லிங்கத்திற்குப் பெயர் அரசமடல் லிங்க ரென்னும் பெயர். அந்த நகரத்திற்குப் பெயர் பேரூ ரென்று பெயர். அந்த கிரிக்குப் பெயர் செம்பொன்கிரி யென்று பேரா யிருக்கும். அப்படியிருந்த பேருக்கு அந்த மூண்ணு[4]....டையிலும் கலச்சாகரம் போட்டிருந்ததைச் சமய முதலி வாசித்துச் சோழன் சேரனுக்குக் காண்பித்துக் கொடுக்கச் சோழன் சேரன் கேட்டு இது சதுர்யுகம்கண்ட தல மென்று சந்தோஷப்பட்டுக் கொண்டு முன் யுகத்தில் அந்த லிங்கத்தைப் பூஜித்தவர் யாரென்று சமையமுதலியைச் சோழன் சேரன் கேட்க அவர்கள் கேட்டபடிக்குச் சமயமுதலியும் அந் நமு[று]ணு உடையில் போட்டிருந்த கலச்சாகரத்தை வாசித்துக் கொடுத்தபடிக்கு விவரங் காண்க.

முன் கிரேதாயுகத்தில் விரும்பப் பிரதிஷ்டையில் பூசித்தவர் பட்டிமுனி யென்னும் திரேதாயுகத்தில் வேதவியாசப் பிரதிஷ் டையில் பூசித்தவர் கோமுனி யென்னும் மூன்று யுகத்துக்கும் (அந்த லிங்) துவாபரயுகத்தில் மார்க்கண்டிக பிரதிஷ்டையின் பூசித்தவா ஏகபாத முனிவர் என்னு மிப்படி மூன்று யுகத்திற்கும் அந்த லிங்கத்தைப் பூசித்து அர்ச்சித்து வந்தவர் பெயர் விவரங் கண்டு

[1] மூன்று ஆவடையாரம் [2] இறைப்பித்து [3] பிரம்ம [4] முணுவுடை

அந்த மூ]ணு]வுடையிலும் போட்டிருந்த சாகரத்தை சமயமுதலி யாகிறவர் சோழன் சேரனுக்கு வாசித்துக் கொடுக்க அவர்களும் கேட்ட சோழன் சேரனுகிறவர் சமயமுதலியை அந்த கிரிக்குக் கலி யுகத்தில் பெயரென்ன வென்று கேட்க அவர் கேட்டபடிக்குச் சமய முதலியும் தன் கைவிவரப்பட்டி ஒழுகினபடி வாசித்துக் கொடுத்தபடி விவரங் காண்க. முன் கிருதயுகத்தில் மாணிக்கப்பச்சை மரகதரத்தின் கிரி என்றும் பெயர். திரேதாயுகத்தில் பசும் பொன் கனககிரி என்றும் பெயர். துவாபரயுகத்தில் நாகதாம்மிர செம்பொன் கனககிரி யென்றும் பெயர். அப்படியிருக்கப்பட்ட நாகதாம்பிர செம் பொன் கனககிரியைக் கலியுகத்தில் முன் சாலிவாகன நாளில் சாலி வாகனனைச் சபித்துச் சிவனுக்கு முறை செய்து சங்காரம் செய்ய வேண்டுமென்று பூலோகத்திலுள்ள நவகோடி சித்தர்களும் அந்த கிரியில் அரிய தவசுகள் செய்யும்போது அந்தத் தாம்பரகனக கிரியை

வெள்ளியங்கிரி

வெள்ளியங்கிரியாக்க வேண்டுமென்று ள்ந்த கிரிக்கு வெள்ளியங்கிரி யென்று பெயரும் கண்டு கண்ட ।பின்பு

நவகோடி சித்தர்களும் கிரி அடி மூலத்தில் குகை கட்டி வைத்து ரசம் வைத்து ரசவாத மருந்துவிட்டு ரச மூதினார்கள். ஊதும்போது அந்த கிரியில் முன் கிரேதா யுகத்திலிருந்த மாணிக்கப் பச்சை அந்த ரச உப்பையின் புகைப்பட்டு அந்த மாணிக்கைப் பச்சை கரைந்து வழிந்து பெருகிற்று. அது பெருகினபடிக்கு மாணிக்கப் பச்சை ஊரென்றும் பெயராயிற்று. ஆனபின்பு திரேதாயுகத்திலிருந்த பசும்பொன் கனகம் ரசஉப்பைப்பட்டுக் கரைந்து பசும்பொன்னுறென்னும் பேராகிப் பெருகிற்று.

துவாபரயுகத்தில் நாகதாம்பர செம்பொன் கனகமாயிருந்தது. ரசஉப்பைதாவி வெள்ளியங்கிரியாகிக் கரைந்து வெள்ளியாறென்னும் பெயராகிப் பெருகிற்று. பெருகினபடிக்கு அந்த கிரிக்குக் கலியுகத்தில் வெள்ளியங்கிரி என்னும் பெயராயிற்று. ஆனபின்பு அந்த வெள் ளியங்கிரியானது வெள்ளிநீராய் வழிந்தது. ஆறுய்ப் பெருக அந்த கிரி கலியுகத்தில் மனிதர் கண்ணுக்குக் கருமன் கரி ஆயிற்று. ஆனாலும் நவகோடி சித்தர்கள் இட்ட பேர் அந்த கிரிக்கு வெள்ளியங்கிரி என்னும் பூலோககைலாய மென்னும் பெயரென்னும் சமய முதலியாகிறவர் ஆதிகாஞ்சியில் ஏகாம்பரமாச்சிதழ வசூலிருக்கின்ற செப்பேட்டுப் பட்டயத்திலுள்ளபடிக்குத் தன்கைவிவரப்படி வாசித்துக் கொடுக்க கரிகாலச் சோழன் சேரன் கேட்டுச் சந்தோஷப்பட்டுக் கொண்டு கரி காலச் சோழன் அந்த லிங்கத்திற்குக் கோவிலும் அந்த நகரமும் கட்டி முடிப்பிக்க வேண்டுமென்று வேடர்கம்பளத்தை விட்டுப் பேரைப்பதி அரசவனத்தை வெட்டி வைக்கும் போது அந்த வனங்காத்திருந்த

ஆதிமூர்க்கமாகாளி என்கிற துர்க்கை சோழனிடத்திற்கு வந்து [1]சோடிநரபலி கேட்டது.

அது கேட்டபடிக்குச் சோழன் சமைய முதலியை அழைத்து அந்த துர்க்கைக்கு ஒப்புச் சொல்லச் சொல்லிச் சொன்னார். அவர் சொன்னபடிக்குச் சமைய முதலியும் அப்படியே துர்கைக்குச் சொன்னார்.

சோழனுகிறவன் இந்த நகரமும் கட்டிவைத்து அந்த லிங்கத்திற்குக் கோவிலும் கட்டி முடிப்பிவித்த பின்பு உனக்கு நானே சோழனைக்கொண்டு கோவிலுங் கட்டிவைத்து உன்னையும் நிலை நிறுத்திவைத்துச் சோடி நரபலி கொடுப்பிவிக்கிறேன் என்றும் பின் மூன்நடக்கு நாளைக்கு ஆடு பன்னி கோழி இந்த முப்பலியும் வருஷமொரு எருமைக்கிடா பலியும் கொடுத்து நடத்திவர அந்தக் கிராமத்தவருக்குக் கட்டுச்செய்து நடத்திவாரெனென்று சமைய முதலி சொல்ல துர்க்கையும் கேட்டு மனம் பொறுத்து நின்ற பின்பு கரிகாலச்சோழன் வேடர்கம்பழத்தைவிட்டு அரசவனத்தை வெட்டி வெளிபண்ணி வைத்து பண்ணி வைத்த பின்பு கரிகாலச்சோழன் அந்த லிங்கத்திற்கு முன் தோன்றிச் சோதித்துக் கண்ட மூணுவிடையம் மண் போட்டு மூடிமறைத்து முன்கண்டத்தை ஒரு புறமாய்க்கட்டி நிறுத்தி அணை ஏரி கட்டி வைத்து அடித்தூருவு மெடுப்பித்து அந்த நதிக்குப் பெயர் சிங்கந்தி என்று பேருங்கண்டு கண்டபின்பு அந்த லிங்கத்திற்குப் பெயர் கிலாரப்பட்டியில் காண்பித்தபடியினலே பட்டி லிங்கரென்று பேருங்கண்டு கண்ட பின்பு கரிகாலச்சோழன் பேரைப்பதி அரசவனப் பட்டிலிங்கத்திற்குக் கோவிலும் கட்டி வைத்தார். கட்டிவைத்த பின்பு முன் அந்த அரசவனத்தில் குடியிருந்த இருளன்பேரை என்கிறவன் அந்தப் பேரை என்கிறவன் பேருக்கு ஊர் பேரை ஊரென்று ஊரும் கட்டிவைத்து அதில் கோட்டையும் பேட்டையும் கட்டிவைத்து அதில் ஒரு குளமும் கட்டிவைத்தார். அவர் கட்டிவைத்த பின்பு சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி அம்மூவருமாகப் பதினெண் சாதிப் பல குடியுமழைத்துப் பேரையூரில் குடியும் வைத்து அதிலுழவு குடியான பல குடிக்கும் முதன்மையாகச் சோளதேசத் தென்திசை நகர வேளாளரில் குப்பய்யண்ணனென்கிறவனைச் சடையப்பன் வைத்தான். அதில் செட்டிமையான பல குடிக்கும் முதன்மையாகக் கவறை வலைளுரில் நாகப்பனென்கிறவனைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தான்.

அவர்கள் வைத்து நிருதி செய்து பின்பு கரிகாலச் சோழன் பேரையூர் நகரதிகாரத்திற்குப் பூவிலுவரில் குமாரக்கொப்ப மண்ணுடிடியை வைத்தார். அதில் கர்ணிகத்திற்குத் திருக்கணக்கரில் சிவலிங்க

---

1 சோடி - இரண்டு

பிள்ளையை வைத்தார். அவர் வைத்து நிகுதி செய்தபின்பு சமைய முதலி உத்தம பண்டிதரைக் கொண்டு பேரை அரசவனப்பட்டி லிங்கத்திற்குப் புண்யாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்தபின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரயபூமி கொண்டு பட்டிலிங்கராலயத்திற்கு விட்ட மான்யம் ஆயிரம்பொன் கிராமமும் நூறுபொன் சுங்கத் தீர்வையும் நூறுமிடா விரைப்புப் புஞ்செய்யும் குளக்கரையில் நூறுமிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மானியபூமி கண்டு நாலு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மானியத்தில் சமைய முதலிக்குப் பத்திலொன்றென்று பட்டிலிங்கராலயத்தில் கலச்சாகரமும் பொடிவித்துக் கரிகாலச் சோழன் நிகுதி செய்த பின்பு சமைய முதலியும் அந்த ஆலய ஊழியத்திற்கு நம்பி முதல் திருவலகு கடை வரைக்கும் ஆள் பொடிவித்துத் திருவாடு தண்டிகை சீர்பாத ஊழியத்திற்கும் தில்லைச் சிதம்பரத்து மூவாயிரம் குடிகைக்கொள்வரில் நூறு குடியை அழைத்து வைத்து வைத்தபின்பு சமைய முதலியாகிறவர் அந்த நூறு குடியும் வரவழைத்துத் தன்னெதிரில் நிறுத்திக்கொண்டு அந்த நூறு குடிகைக்கொள்வரில் யாாதமொருவன் அதிமூர்க்க மாகாளிக்குச் சோடிநரபலிக்கு நான் கேட்டவிடத்தில் தருகிறேமென்று நானென்று வந்தவருக்கு இந்தக் கோவில் முதன்மை நாட்டாண்மைக்கும் இந்தக் கோவிலுக்கும் கோவில் மானியத்திற்கும் மணியங் கணக்குக்கு வைத்து ரத்தக் காணிபட்டையம் கொடுப்புவிக்கிறேனென்று சமய முதலி சொல்ல அந்த நூறு குடி கைக்கொள்வரும் கேட்டு அந்த நூறு குடி கைக்கொள்வரில் அண்ணன் தம்பி இரண்டு பேர் தில்லைச் சிதம்பர முதலியென்றும் தில்லை நல்லதம்பி முதலியென்றும் அந்த இரண்டு பேரும் நீங்கள் கேட்ட வேளையில் ஜனத்திற்கொரு நரபலி தருகிறோமென்று சமயமுதலிக்குச் சொன்னார்கள். அவர்கள் சொன்னபடிக்குச் சமயமுதலியும் அவர்களிடத்தில் இரண்டு நரபலிக்கும் நிகுதி செய்துகொண்டபின்பு சமையமுதலியாகிறவர் அந்த நூறுகுடி கைக்கொள்வருக்கும் நம்பி முதல் திருவலகுகடை வரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்கு அந்தத் தில்லைச் சிதம்பர முதலியை வைத்து நம்பி முதன்மைக்குச் சரவண நம்பியை வைத்து நாகபாச முதன்மைக்குச் சுந்தரலிங்க நட்டுவனை வைத்துத் தாசி முதன்மைக்கு மரகத மாணிக்கியை வைத்து அந்தக் கோவிலிற்கும் கோவில் மான்யத்திற்கும் மணியம் கணக்குக்கும் அந்தத் தில்லை நல்லதம்பி முதலியை வைத்து அவர்களுக்கெல்லாம் நிகுதி செய்த பின்பு சமய முதலியும் அந்தப் பேரைப்பதி அரசவனத்தில் காத்திருந்த அதிமூர்க்கமாகாளி யென்கிற துர்க்கைக்குக் கரிகாலச் சோழனைக் கொண்டு உத்தரவாசலும் கோவிலும் கட்டி

வைத்து உத்தம பண்டிதரைக் கொண்டு துர்க்கையை நிலை நிறுத்திப் புண்யாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரய பூமி கொண்டு அந்த துர்க்கை ஆலயத்திற்கு விட்ட மான்யம் பத்து மிடா விரைப்புப் புஞ்செய்யும் பத்துமிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மான்ய பூமிகண்டு சூலக்கல் நாட்டும் பொடிவித்துக் கரிகாலச் சோழன் நிருதி செய்த பின்பு சமைய முதலியும் அந்த துர்க்கையாலய ஊழியத்திற்கு ஆதிசேசி கோரக்கநாதர் வர்க்கத்தில் பரமானந்தப் பண்டாரத்தை வைத்து அவனைக் கொண்டு அதிமூர்க்க மாகாளிக்கு அபிஷேக தூபதீபாராதனை முடிப்பித்து அந்த முகத்தில் அந்தத் தில்லைச் சிதம்பர முதலி தில்லை நல்லதம்பி முதலி என்கிற அந்த இரண்டு பேரும் மக்கள் இரண்டு பாலகுமாரரை அழைத்துவந்து திருமஞ்சனமாட்டி வைத்துத் திருநீற்றுக்காப்புமிட்டு ஆடையுடுத்தி ஆபரணங்கள் பூட்டி அலங்கரித்துப் பாலசனமிடுவித்துப் பரிமளகளபகஸ்தூரிகள் பூசி வாசனைச் சந்தனமிடுவித்து பாக்கு வெற்றிலை கையில் கொடுத்து வீரகொம்பு வீரகாளம் வீரமல்லாரி வீரசெகண்டி வலம்புரியுடனே வீரமேளவாத்தியம் முழங்க பஞ்சவண்ணக்குடை பஞ்சமுகத் தீவட்டி கைவிருது ரணவீர வரிவேங்கைப் புலிக்கொடியுடனே நடபாவாடையுடனே நடபாவாடைமேல் நடந்து நடனசங்கிதராக மேளவாத்தியம் சூழ்ந்துவர அரசனப்பேரையூர் நாலுவீதி [1]மிரவணையும் வரவி (அ)திமூர்க்கமாகாளிக்கு எதிர்நிறுத்தி அந்த இரண்டு பாலகுமாரரையும் அரசவனப்பேரை அதிமூர்க்கமாகாளிக்கு சமைய முதலியாகிறவர் உனக்கு நாம் முன் சொன்ன சோடிநரபலியும் வந்ததென்று அந்தப் பாலகுமாரரை வெட்டிப் பலியூட்டி வைத்து அந்த முகத்தில் ஆடு பன்னி கோழி அறுத்துப் பலியூட்டி வைத்து அந்த முகத்திலவ்வூரிலுள்ள குடிவரிசை சனங்களுக்கும் நீங்கள் இந்த துர்க்கைக்கு வருஷமொரு திருநாள் நடத்தி வைத்து நீங்கள் கட்டின வீடுதோறும் விளக்கும் பொங்கலும் ஆடு பன்னி கோழி இந்த முப்பலியும் வருஷமொரு எருமைக்கடா பலியும் நீங்களிந்த அதிமூர்க்க மாகாளிக்கு ஒப்பித்துவாருங்களென்று அவர்களுக்கும் கட்டுச்செய்து அந்த அதிமூர்க்கமாகாளிக்கு நீயுமவர்களிடத்தி லிருந்தப்படி நடந்து நாளைக்கு ஆடு பன்னி கோழி இந்த முப்பலியும் வருஷமொரு எருமைக்கிடா பலியும் அவர்களிடத்தில் வாங்கிக்கொண்டு அவர்களுக்கு மிந்தக் கிராமதேவதையாயிருந்து அவர்களையும் ரக்ஷித்து வாவென்று அந்த அரசவனம் பேரை அதிமூர்க்கமாகாளிக்கு சமைய முதலி கட்டுச் செய்தபின்பு சமயமுதலியும் அந்த அதிமூர்க்க மாகாளிக்கு நின்ற இரண்டு பாலகுமாரரையும் [2]சாவாரக்கோல

இரண்டு நரபலி நடந்தது

---

[1] மிரவணை-ஊர்கோலம் [2] சாவாரக் கோலம்-சிறந்த கோலம்.

முஹூர்த்தேதியாய் இரண்டு கல்சிலை விக்கிரகமடிப்பித்து விக்கிரகத்தை அரசவனப்பேரை பட்டில் லிங்கர் கோவில் மேலை வாசலில் நிலைநிறுத்தி வைத்து உத்தம பண்டிதரைக் கொண்டு அந்தச் சிலைகளுக்குப் புண்ணியாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்து அபிஷேக தூபதீபாராதனை முடிப்பித்து எல்லாரும் தரிசித்துக் கொண்டு பின்பு அந்தச் சாவாரப்பலி கல்சிலைக்கு பட்டிலிங்கத்திற்கு முந்தியபூசை நிமித்திய மென்று அந்தப் பட்டிலிங்கர் ஆலயத்திற்குள் பட்ட பேருக்கும் கட்டுச்செய்து சமைய முதலி நிகுதி செய்த பின்பு சமய முதலியும் கரிகாலச் சோழன் சேரன் சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் மற்று முள்ள பேருமாக அந்த அரசவனத் திருப்பேரூர் தலத்தில் [1]நச்சி நிரநதியும் அமிருதநதியும் கண்டு கண்ட பின்பு சேரமான் பெருமாள் என்னும் சேரன் கண்ட நதிகளை அடித்தூர்வை எடுப்பித்து அணைஏரி கட்டி வைத்து நிலவறையில் மூடி அந்த நச்சி நதிமேல் நச்சி விநாயகனை வைத்து வைத்த பின்பு அமிருத நதியை நிலவறையில் மூடி அதன்மேல் அமிருத விநாயகனை வைத்து உத்தம பண்டிதரைக் கொண்டு அந்த விநாயகருக்கு இரண்டு புண்யாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்து அபிஷேக தூபதீபாராதனை முடிப்பித்து எல்லோரும் தரிசித்துக் கொண்டு பின்பு கரிகாலச் சோழன் முன்பூர்வீகத்து உறைக்கிணறும் கண்டு கண்ட பின்பு அடித்தூருவை யெடுப்பித்து அணைஏரி கட்டிவைத்து அந்த உறைக்கிணற்றிலுள்ள ஆறுசடை நீர்ப்பாம்புங் கண்டு எல்லோரும் அதிசயப்பட்டுக்கொண்டு கொண்ட பின்பு அந்தக காலத்திலுள்ள வெள்ளைச் சிங்கையும் அரசம்பலமும் பட்டிவிநாயகனும் கண்டு பொன் கட்டி விநாயகனும் பொன் காளியம்மனும் பிறவா(கறப்ப)னை இறவாப் புளியலும் பஞ்சவண்ணசித்தேசி விருக்ஷமும் சோதி விருக்ஷமும் முண்டக விருக்ஷமும் நாலுதலைக்குடைப்பாம்பும் ஏழு பிடாரியும் வடகயிலை தென்கயிலை அழகிய சிற்றம்பலமும் பட்டிகோமுனி ஏகபாத முனி பூசித்ததும் அர்ச்சித்ததும் கரதலம் என்று இது முதலாகிய அதிசயமெல்லாம் சமய முதலி காஞ்சீபுரத்துச் செப்பேட்டிலுள்ள படிக்குத் தன் கைப்பட்டி ஒழுகின்படி விவரம் வாசித்துக் காண்பித்துக் கொடுக்க சோழன் சேரன் கேட்டு கண்டு இந்த அதிசயங்களைப் பார்த்து மெத்த அதிசயத்தலமென்று அவர்களும் சந்தோஷப்பட்டுக் கொண்டு அந்தத் திருப்பேரையூர் நாலு வீதியும் சுற்றி அதிலுள்ள அதிசயமெல்லாம் கண்டு அந்தத் தலத்தில் [2]சாணங்கம் பளுவாது பிரேதத்திற்குத் தலைமண்டை வெடியாது. அந்தத் தலத்தில் பிறக்க முத்தி சிறக்க முத்தி இறக்க முத்தி இந்த மும்முத்தியும் இந்தத் தலத்தில் உண்டென்று இது முதலாகிய அதிசய மெல்லாம் சமைய முதலி தன் கைப்பட்டி ஒழுகின்படிக்கு விவரம் வாசித்துக் கொடுக்க சோழன்

---

[1] நச்சு நதி-நச்சுக் கிணறு. [2] சாணம் புழுவாது.

சேரன் கேட்டு இந்தத் தலம் சதுர்யுகத்திற்கும் மகா அதிசயத்தலம் இதுவே மேலைச் சிதம்பரத் தலமென்று மெத்த சந்தோஷப்பட்டுக் கொண்டு கரிகாலச் சோழனும் சேரனும் மெத்த அதிசயப்பட்டிருந்த பின்பு கரிகாலச் சோழன் சேரன் சமய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் மற்றுமுள்ள பேருமாகத் திருப்போரை பட்டிலிங் கத்திற்கு அபிஷேக தூபதீபாராதனை முடிப்பித்து எல்லாரும் அவரைத் தரிசித்துக் கொண்டு பின்பு சமைய முதலியாகிறவர் அந்த அதிமூர்க்க மாகாளிக்குப் பலி கொடுத்த தில்லைச்சிதம்பர முதலிக்கும் அவன் தம்பி நல்லதம்பி முதலிக்கும் நிகுதி செய்தார்.

## நிகுதிசெய்த விவரங் காண்க

அரசவனத் திருப்பேரைப்பட்டிலிங்கர் ஆலயத்துக்குட்பட்ட நம்பி முதல் திருவலகு கடைவரைக்கும் திருவாடுதண்டிகைச் சீர்பாத ஊழியத்திற்கு வைத்த கைக்கொள்வர் நூறு குடிக்கும் முதன்மை நாட்டாண்மைக்கு அதிமூர்க்கம்மனுக்கு நரபலி கொடுத்த தில்லைச் சிதம்பரமுதலி என்று கண்டு அந்தக் கோவிலுக்கும் கோவில் மானி யத்திற்கும் மணியம் கணக்குக்கு அதிமூர்க்கமாகாளிக்கு நரபலி கொடுத்த தில்லைநல்லதம்பி முதலி என்று கண்டு அவர்கள் அண்ணன், தம்பி இரண்டுபேருக்கும் அரசவனத் திருப்பேரை ஊரும் அந்தக் கோவிலும் அதினுள்பட்ட ஆலயமும் அந்த ஆலயங்களுக்கு விட்ட மானியமும் அவர்களுக்கு நத்தக்காணி ஆதீனம் என்று கண்டு சமய முதலி அவர்களுக்கு அரசவனத் திருப்பேரைபட்டீசுரர் ஆலயத்தில் கலச்சாகரம் பொடிவித்து அவர்கள்கையில் நத்தக்காணிச் செப் பேட்டுப்பட்டையம் கொடுத்தார்.

## கொடுத்தநாள் விபரங் காண்க

கலியுக சகாப்தம் (3551)கது மேல் செல்லாநின்ற ஈசுர ௵ கார்த்திகைமீ 5ௗ பஞ்சமியும் பெற்றநாளில் கரிகாலச் சோழன் சேரமாம் பெருமாளென்றும் சேரன் காஞ்சீபுரத்துக் கச்சிவீரகாமாட் சிராயச் சீர்ச்சிங்கானக்கர்த்தராகிய சமயமுதலி வம்சத்தில் கச்சிவீர வேங்கடாசலமுதலியும் சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் இவர்கள் எல்லோரும் கூடிப் பட்டையம் கொடுத்த நாளும்கண்டு சந்தோ ஷமாக எல்லோரும் திருப்பேரைநகர் அரசவனப்பட்டீசுரர் பச்சை மரகதவல்லி மற்றுள்ள சுவாமிகளுக்கும் அபிஷேக தூபதீபாராதனை முடிப்பித்து எல்லோரும் தரிசித்துக் கொண்டு திருப்போரையூர்நகர் கூடங்க சமயமுதலி கையொழுகின்படிக்கு ஆவனென்கிற இருளன்பதி

வில்வவனத்திற்குப் போனார். போனபின்பு கரிகாலச் சோழன் அந்த வில்வ வனத்தில் வேடர் கம்பளத்தை வரவிட்டுச் செடி வெட்டி வைக்கும்போது அந்தவனம் காத்திருந்த எழுபதி(து) கன்னிக்கும் முன்னோடும் கறுப்பனாகிற ஆலடி அண்ணனென்கிற கறுப்பன் வந்து சோழனிடத்தில் தனக்கொரு நரபலி கேட்டது. அது கேட்டபடிக்குச் சோழன் சமைய முதலியை அழைத்து அந்தத் துர்க்கைக்கு ஒப்புச் சொல்லச் சொன்னார். அவர் சொன்னபடிக்குச் சமைய முதலியும் அந்த எழுபது கன்னிக்கும் முன்னோடும் கறுப்பனாகிற ஆலடி அண்ணனென்கிற கருப்பனுக்கு சோழன் இந்த நகரமும் இதிலுண்டான சிவாலயமும் கட்டி முடித்தபின்பு உனக்கு நானே சோழனைக்கொண்டு கோவிலுங் கட்டி வைத்து உன்னையும் நிலைநிறுத்தி உனக்கொரு நரபலியும் கொடுப்பிவிக்கிறேன் என்று சமைய முதலியும் சொல்ல அந்த ஆலடி கறுப்பண்ணனும் கேட்டு மனம்பொறுத்து நின்ற பின்பு சோழன் வேடகம்பளத்தை விட்டு ஆவனனென்கிற இருளன் பதி வனத்தைச் செடிவெட்டி வழிபண்ணிவைத்து அதிலிருந்த அவினாசி லிங்கத்தையும் கண்டு அதன்பின்பு அந்த அவனாசிலிங்க உடையாருக்குக் கோவிலுங் கட்டிவைத்து அந்த வனத்தில் முன்குடியிருந்த ஆவுனனென்கிற இருளன் அந்த ஆவுனனென்கிற இருளன் பேருக்கு அவினாசிநகர மென்று ஊருங் கட்டிவைத்துக் கரிகாலச் சோழன் கட்டிவைத்தபின்பு இதன் கீழ்ப்பாரிசத்தில் சேரன் முன் வம்சத்தவர் கட்டிவைத்த ஆறுமுகவர் தக்ஷிணகாசித் திருமுருகன் பூண்டி முருகநாதசாமியும் முயங்கு பூண்முலை அம்மனையும் வேம்படி கறுப்பண்ணனையுமிந்த ஆலயமும் சேரன் கண்டு கண்டபின்பு சேரன் முருகநாதசாமி முயங்கு பூண்முலை அம்மனுக்குக் கோவிலும் கட்டிவைத்து ஆறுமுகவர் தக்ஷிணகாசித் திருமுருகன் பூண்டி யென்று ஊருங் கட்டிவைத்துக் கட்டிவைத்த பின்பு சேரனிடத்திற்கு நாக தேவகன்னி வந்து தனக்கு முப்பலி கொடுக்கவேண்டு மென்று கேட்டது. அது கேட்டபடிக்குச் சேரன் சமையமுதலியை அழைத்து அந்த நாக தேவகன்னிக்கைக்கு ஒப்புச்சொல்லச் சொன்னார். அவர் சொன்னபடிக்குச் சமைய முதலியும் நாகதேவகன்னிகைக்குச் சேரனைக்கொண்டு உன்பேருக்கு நகரமும் கோட்டையும் கட்டிவைத்து அந்தக்கோட்டைக் காவலும் உன்னுடையதாகச்செய்து எந்நாளுமுன்னைத் தெய்வமாகப் பூசித்து நடத்திவரக் கட்டுச் செய்து தருகிறேனென்று சமைய முதலி சொல்ல நாகதேவகன்னியும் கேட்டு மனம் பொறுத்து நின்றபின்பு சேரனும் வேடர் கம்பளத்தைவிட்டுச் செடிவெட்டி வழிபண்ணிவைத்துச் சமய முதலி சொன்னபடியாய் அந்த நாகதேவகன்னி பேருக்கு நாகதேவ

அவிநாசி

திருமுருகன் பூண்டி

கன்னிகாபுரி கோட்டையென்று ஒரு கோட்டையும் கட்டிவைத்து அந்தக் கோட்டையிலுள்ளே தக்ஷிண காசி விநாயக னுக்குக் கோவிலும் கட்டிவைத்து அந்த தக்ஷிண விநாயகனைக் கோவிலில் வைத்து அதன் பின்பு அந்தக் கோட்டை கிழக்குவாசலில் நாகதேவகன்னிக்குக் கோவில் கட்டிவைத்து அந்தக் கோவிலில் நாகதேவகன்னியை நிலைநிறுத்தி அதன் பின்பு தக்ஷிணகாசி அவிஞசிலிங்கத்திற்(கு எதிர்) கையாகச் சேரனும் ஆறுமுகவரதக்ஷிணகிரி அடிவாரத்தில் கோவிலும் கட்டி வைத்து சிவலிங்கமும் உண்டுபண்ணி கோவிலில் நிலைநிறுத்தி அதன் பின்பு கரிகாலச் சோழன் அவிஞசித்தலத்தில் தாமரைக்குளமென்று ஒரு குளமும் கட்டிவைத்தார். அந்தக் குளத்திற்கு எதிர்கையாக சேரமான்பெருமாளென்னும் சேரன் அந்தத் தலத்தில் ஆறுமுகவர் தக்ஷிணகிரிக்கு வடபால் கிரிஅடிவாரத்தில் அவனும் ஒரு குளம் கட்டிவைத்து அந்தக் குளத்திற்குத் தாமரைத் தடாகம் என்று பேருங் கண்டு அந்தக் குளத்திற்கு மதகு போடுவித்து வயலுண்டு செய்து அச்சுக்கட்டி அணிமுறை கண்டபின்பு சேரன் அந்த அவிஞசிலிங்கர் கோவிலுக்குக் கிழமேல்பால் முன் தேவர்கள் நாளிலே உண்டான [1]மாமாங்கப் பொய்கையும் ஐராவதப் பொய்கையும் சரவணப் பொய் கையும் சக்கரதீர்த்தப் பொய்கையும் அகத்தியர் பொய்கையும் ஐவ ராசாக்கள் பொய்கையும் நாகதேவ கன்னிப் பொய்கையும் இப்படி யாகிய பொய்கை ஏழு பொய்கையும் கண்டு சேரன் தூருவை எடுப் பித்து அந்த ஏழு பொய்கையும் நதியும் கண்டு அதன்பின்பு சேரன் அந்த ஏழு பொய்கை நதிப்பாறைக்குக் கீழ்ப்பால் வடபுரத்தில் செம்பொன் விழல்கண்டு தானநிந்துகொண்டு அதன்பின்பு சேர மான்பெருமாளென்னும் சேரன் கரிகாலச் சோழனிருவரும் கூடி இருவரும் சமையமுதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச்செட்டி இம் மூவருக்கும் இந்த ஆறுமுக வீரதக்ஷிண காசித்திருமுகன் பூண்டி யிருக்கும் இந்த அவிஞசிதலத்து நகரத்திற்கும் நாகதேவ கன்னிகா புர நகரத்திற்கும் நாகதேவ கன்யகாபுரக் கோட்டைக்கும் பதினெண் சாதிப் பல குடியுமழைத்து வைக்கச் சொன்னார். அவர்கள் சொன்ன படிக்குச் சமையமுதலியும் சடையப்பன் கத்தூரி ரங்கப்பச்செட்டி அம்மூவருமாகப் பதினெண்சாதிப் பல குடியுமழைத்து அந்த ஆறுமுக வர் தக்ஷிணகாசித்திருமுருகன் பூண்டிருக்கும் அந்த அவிஞசி நகரத்துக்கு நாகதேவ கன்னிகாபுர நகரத்திற்கு நாகதேவ கன்யகா புரக்கோட்டைக்குக் குடிவைத்து அதில் உழவு குடியான பல குடிக்கும் முதன்மையாகச் சோழ தேசப் பால சேரி நகர் வேளாளரில் சோழி யப்பனென்கிறவனைச் சடையப்பன் வைத்தார். அதில் செட்டிமையான

நாகதேவகன்னிகா புரி

பல குடிக்கும் முதன்மையாகக் கவறைவளஞ்சியரில் வீரப்பனென்கிறவனைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தார். அவர்கள் வைத்து நிகுதி செய்த பின்பு அந்த ஆறுமுகவர் தக்ஷிணகாசித்திருமுருகன் பூண்டிக்கும் அந்த அவினசிலிங்கத்திற்கு நாகதேவ கன்னிகா புரநகரத்திற்கு நாகதேவ கன்யகாபுரக்கோட்டைக்கு இந்த அதிகாரத்திற்கு சேரமான் பெருமாள் என்னும் சேரனும் கரிகாலச் சோழனும் இருவரும் கூடி துடிசைமண்ணுடி மகனுக்கு அந்த நாகதேவ கன்னி பேரும் கொடுத்து அவனுக்கு நாகதேவமண்ணு(ன்று)டி என்கிற பேர் கொண்டபின்பு நாகதேவமண்ணு(ன்று)டியை அதிகாரத்திற்கு வைத்தார். அதில் கர்ணிகத்திற்குத் திருக்கணக்கரில் நல்லநம்பி பிள்ளையை வைத்தார். அவர்வைத்து நிகுதி செய்த பின்பு சமய முதலியும் உத்தம பண்டிதரைக்கொண்டு ஆறுமுகவர் தக்ஷிணகாசித்திருமுகம் பூண்டி முருக்நாதசாமி முயங்கு பூண்முலை அம்மனுக்கு அந்த வேம்படிக் கருப்பண்ணனுக்கும் அவினசிலிங்கத்திற்கும் பெருங்கருணை யம்மனுக்கும் தக்ஷிணகாசி விநயகருக்கும் சிவலிங்கத்திற்கும் புண்யாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு சேரமான் பெருமாளென்னும் சேரன் ஆறுமுகவர் தக்ஷிணகாசித் திருமுகம் பூண்டி முருகநாதசாமியும் முயங்குபூண்முலை யம்மனுக்கு முன் சேரன் வம்சத்தவர் விட்டமானியம் கண்டு ஆயிரம் பொன் கிராமமும் நூறு பொன் சுங்கமும் நூறுமிடா புஞ்செய்யும் நூறுமிடா நஞ்செய்யும் விட்டு விட்டமான்யம் பூமிகொண்டு நாலுசூலக்கல் நாட்டும் பொடிவித்து இந்த ஆலயத்திற்கு விட்ட மானியத்தில் சமயமுதலிக்குப் பத்திலொன்றென்று வரிசை மானியம் கண்டு ஆறுமுகவர் தக்ஷிண காசித் திருமுருகன் பூண்டி முருகநாதசாமி ஆலயத்தில் கல்வெட்டுப் பொடிவித்து அதன்பின்பு சேரன் ஆறுமுகவர் தக்ஷிணகிரி அடிவாரத்தில் கோவிலுங் கட்டிவைத்துச் சிவலிங்கமுண்டு செய்து அந்தச் சிவலிங்கத்திற்குத் தான் கட்டிவைத்த தாமரைத் தடாகக்குளத்து வயல் பூமியில் இருபதுமிடா விரைப்பு நஞ்செய்யும் இருபதுமிடா விரைப்பு நஞ்செய்யும் நூறுபொன் கிராமமும் விட்டு முதலைவாய்ப் பிள்ளையும் சங்கு சக்கரத் திருச்சூலக்கல் வெட்டும் அந்தக் கோவிலுக்கு வட மேற்கு மூலையில் குளத்துள்வாயில் ஒரு கல் பொடிவித்து அந்தக் குளத்திற்குக் கீழ்ப்பால் வடக்குத் திசைப் பூமியில் மான்யம் விடுவித்து அந்தப் பூமியில் சூலக்கல்நாட்டு நாலுதிசைக்கும் நாலுகல் பொடிவித்து அந்த ஆறுமுகவர் தக்ஷிணகிரி அடிவாரத்தில் கோவில் கட்டிவித்துச் சிவலிங்கம் உண்டுசெய்து அந்தச் சிவலிங்கத்திற்கு விட்டமானியத்தில் சமய முதலிக்குப் பத்திலொன்று வரிசை மானியமென்று அந்த ஆலயத்தில் கல்வெட்டுப் பொடிவித்து சேரன் நிகுதிசெய்த பின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரயபூமி கொண்டு அவினசிலிங்க

ருக்கும் பெருங்கருணை அம்மனுக்கும் விட்ட வரிசை மானியம் ஆயிரம் பொன் கிராமமும் நூறுபொன் சுங்கமும் நூறுமிடா விரைப்புப் புஞ் செய்யும் நூறுமிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மானியத் திற்கு நாலு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அதில் சமயமுதலிக்குப் பத்திலொன்றென்று அந்த அவிநாசிலிங்கர் ஆலயத்தில் கல்வெட்டு பொடிவித்துக் கரிகாலச் சோழன் கிருதிசெய்த பின்பு சமயமுதலி அந்த ஆலய ஊழியங்களுக்கு நம்பிமுதல் திருவலகு கடை வரைக்கும் ஆள்பொடிவித்துத் திருவாடுதண்டிகைச் சீர்பாத ஊழியத்திற்குக் கைக் கொள்வரில் நூறு குடியை அழைத்து அந்த ஆறுமுகர் தக்ஷிணகாசித் திருமுகம் பூண்டி இருக்கும் அந்த அவிஞசி நகரத்திலும் நாகதேவ கன்னியா நகரத்திலும் நாகதேவ கன்னியாபுரக் கோட்டையிலும் இந்த நூறு குடிக் கைக்கொள்வரையும் குடிவைத்து அதன்பின்பு சமைய முதலி அந்த நூறு குடியும் வரவழைத்து தன்னெதிர் நிறுத் திக்கொண்டு அந்த நூறு கைக்கொள்வரில் யாதாமொருவர் எழுபதி கன்னிக்கும் முன்னோடும் கருப்பன் ஆலடிக் கருப்பண்ணனென்கிற கருப்பனுக்கு ஒரு நரபலி நான் கேட்டவிடத்தில் தருகிறோமென்று நானென்று துணிந்து வந்தவருக்கு இந்த நூறு குடிக கைக்கொள்வ ருக்கும் நம்பிமுதல் திருவலகு கடைவரைக்கும் முதன்மை நாட்டாண் மையும் இந்தத் தலத்தில் பத்துமிடா விரைப்பு காட்டு பூமியும் பளிக்கை யும் மானியப்பட்டையமும் சேரன் சோழனைக் கொண்டு கொடுப்பிவிக் கிறோமென்று சமய முதலி சொல்ல அந்த நூறுகுடிக் கைக்கொள்வரும் கேட்டு அந்த நூறு குடிக் கைக்கொள்வரில் புக்கொளி முதலி மகன் காசிலிங்க முதலி நீங்கள் கேட்ட வேளையில் நானே ஒரு நரபலியும் கொடுப்புவிக்கிறேன் என்று சமைய முதலிக்குச் சொன்னான். அவன் சொன்ன சொல்படிக்கு சமைய முதலியும் புக்கொளி முதலி மகன் காசிலிங்க முதலி கையில் ஒரு நரபலிக்கு கிருதி பண்ணிக்கொண்ட பின்பு சமய முதலி அந்த நூறுகுடி கைக்கொள்வருக்கும் நம்பிமுதல் திருவலகு கடைவரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்கு புக்கொளி முதலி மகன் காசிலிங்க முதலியை வைத்து நம்பி முதன்மைக்கு சரவண நம்பியை வைத்து நாகபாச முதன்மைக்கு முருக நட்டுவனை வைத்துத் தாசி முதன்மைக்கு நாகமாணிக்கியை வைத்து அந்தக் கோவிலுக்கும் கோவில் மானியத்திற்கும் மணியங்கணக்குக்கு காஞ்சீ புரத்துச் சமயச்சங்கோதி சோலையங்கிரி முதலி மகன் வாரணவாசி முதலி இந்த வாரணவாசி முதலி மகன் முத்துக்குமார முதலியை வைத்து அவர்களுக்கெல்லாம் பாக்கு வெற்றிலை கொடுத்து கிருதி செய்தபின்பு சமய முதலியும் அந்த ஆவுனனென்கிற இருளன்பதி வனங்காத்திருந்த எழுபதி கன்னிக்கும் முன்னோடும் கறுப்பனைகிற ஆலடி யண்ணனென்கிற கருப்பண்ணனுக்குக் கரிகாலச் சோழனைக்

கொண்டு கோவிலும் கட்டிவைத்து உத்தம பண்டிதரைக் கொண்டு அந்தக் கருப்பண்ணனை நிலைநிறுத்தி புண்யாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரய பூமி கொண்டு அந்தக் கருப் பண்ணன் ஆலயத்திற்கு விட்ட மானியம் பத்து மிடா விரைப்புப் புஞ்செய்யும் பத்து மிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மான்யத்தில் சூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மானியத்தில் சமய முதலிக்குப் பத்திலொன் றென்று கருப் பண்ணனாலயத்தில் கலச்சாசுரம் பொடிவித்துக் கரிகாலச் சோழன் நிருதி செய்தபின்பு சமய முதலி அந்தக் கருப்பண்ண ஆலய ஊழியத்திற்கு ஆதிசோகி கோரக்கநாதர் வர்க்கத்தில் பொன்னம்பலப் பண்டாரத்தை வைத்து அவனைக் கொண்டு அந்தக் கருப்பண்ண னுக்கு அபிஷேக தூப தீபாருதனை முடிப்பித்து அந்த முகத்தில் புக்கொளி முதலி மகன் நாட்டாண்மைக் காசிலிங்க முதலி தன் வீட்டுச் சனத்தில் ஒரு பால குமாரனை அழைத்துவந்து திருமஞ்சனமாட்டி வைத்துத் திருநீற்றுக் காப்புமிட்டு ஆடையுடுத்தி ஆபரணம் பூட்டி அலங்கரித்து பால் அசனம் இடுவித்து பரிமள களப கஸ்தூரிகள் பூசி வீர சந்தன மிடுவித்துப் பாக்கு வெற்றிலை கையிற் கொடுத்து வீர கொம்பு வீரகாஹளம் வீரமல்லாரி வீரசிகண்டி வலம்புரிச் சங்குடனே வீரமேளவாத்தியம் முழங்கப் பஞ்சவர்ணக் குடை பஞ்சமுகத் தீவட்டிகை விருதுரண வீர வரி வேங்கைப்புலிக் கொடியுடனே நட பாவாடையுடனே நடபாவாடை மேல் நடந்து நடன சங்கீதராக மேளவாத்தியத்துடனே சூழ்ந்துவர அவினுசி நகரில் நாலு வீதி மிரவணையும் வருவித்து எழுபது கன்னிக்கும் முன்னேடும் கருப்ப னென்கிற ஆலடிக் கருப்பண்ணன் எதிர்நிறுத்தி அந்தப் பால குமாரனையும் சமைய முதலியாகிறவர் உனக்குச் சொன்ன நரபலியும் வந்ததென்று அந்த பால குமாரனை வெட்டிப் பலியூட்டிவைத்து அந்த முகத்தில் ஆடு பன்னி கோழி இந்த முப்பலியும் வருஷமொரு எருமைக்கிடாப் பலியும் நீங்களிந்தக் கறுப்பண்ணனுக்கு ஒப்புவித்து வாருங்களென்று அவர்களுக்குக் கட்டுச்செய்து அந்தக் கறுப்பண்ண னுக்கும் நீயுமிவர்களிடத்தில் இந்தப்படி நடக்கும் நாளைக்கு ஆடு பன்னி கோழி இந்த முப்பலியும் வருஷமொரு எருமைக்கிடாப் பலியும் அவர்களிடத்தில் வாங்கிக்கொண்டு அவர்களுக்கு மிந்தக் கிராம தேவதையாயிருந்து அவர்களையும் ரக்ஷித்துவாவென்று அந்தக் கறுப் பண்ணனுக்குச் சமைய முதலிக் கட்டுச்செய்தபின்பு அதன்பின்பு சமய முதலி அந்தக் கறுப்பண்ணனுக்குப் பலிக்குநின்ற பாலகுமாரனை யும் சாவாரக் கோலமுஸ்தேதியாய் ஒரு கல்சிலை விக்கிரகமும் அடிப்பித்து அந்தச் சிலையை அவினுசிலிங்கப் பெருங்கருணைச் சுற்றால யத்தில் கல்சிலையை வைத்து உத்தம பண்டிதரைக் கொண்டு அந்தச்

சிலைக்குப் புண்யாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்து அபிஷேக தூப தீபாருதனை முடிப்பித்து எல்லோரும் தரிசித்துக் கொண்டு அந்தச் சாவாரபலிக் கல்சிலைக்கு அவினுசிலிங்கர் பெருங் கருணைக்கும் முந்தின பூசை நிவேத்தியம் என்று அந்த அவினுசி லிங்கர் பெருங்கருணை ஆலயத்திற்குள்பட்ட பேருக்கும் கட்டுச்செய்து அதன்பின்பு நாகதேவகன்னிகாபுரிக் கோட்டைக் கிழக்கு வாசலி லிருக்கின்ற நாகதேவகன்னி கோவிலுக்கு வந்து சமய முதலி உத்தம பண்டிதரைக் கொண்டு புண்யாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு சேரன் அந்த நாககன்னிக்கு விட்ட மானியம் ஐந்து மிடா விரைப்புப் புஞ்செய்யும் ஐந்து மிடா விரைப்பு நஞ்செய்யும் விட்டு விட்ட மானியத்திற்குச் சூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த நாககன்னிக்கு விட்ட மானியத்தில் சமய முதலிக்குப் பத்திலொன்றென்று அந்த ஆலயத்தில் சலச்சாகரம் பொடிவித்து சேரன் நிகுதிசெய்த பின்பு சமய முதலியு மந்த நாக கன்னிக்கு ஆலடிக் கறுப்பண்ணன் கோவில் பண்டாரம் பொன்னம் பலப் பண்டாரத்தைக் கொண்டு அபிஷேக தூப தீபாருதனை முடிப் பித்து அந்த முகத்தில் ஆடு பன்னி கோழி அறுத்து முப்பலி யூட்டி வைத்து அந்த முகத்தில் அவ்வூரிலுள்ள குடிவரிசை ஜனங்களுக்கு நீங்கள் இந்த நாககன்னிக்கு வருஷமொரு திருநாள் நடத்திவைத்து நீங்கள் கட்டின வீடுதோறும் விளக்கும் பொங்கலும் ஆடு பன்னி கோழி இந்த முப்பலியும் இந்த நாககன்னிக்கு நடத்திவரச் சொல்லி அவர்களுக்குக் கட்டுச்செய்து அந்த நாககன்னிக்கும் நீயு மிவர்க ளிடத்தில் இந்தப்படி (நடக்கும்) நாளைக்கு ஆடு பன்னி கோழி இந்த முப்பலியும் அவர்களிடத்தில் வாங்கிக்கொண்டு அவர்களுக்கும் நீயு மிந்தக் கிராமதேவதையாயிருந்து அவர்களையும் ரக்ஷித்துவாவென்று நாககன்னிக்குச் சமய முதலி கட்டுச்செய்து அதன்பின்பு சமய முதலி எழுபது(தி) கன்னிக்கும் முன்னேடும் கருப்பனுகிற ஆலடிக் கருப் பண்ண னென்கிற கருப்பண்ணனுக்குப் பலிகொடுத்த புக்கொளி முதலி மகன் நாட்டாமைக் காசிலிங்க முதலிக்குச் சேரன் சோபு னிடத்தில் புஞ்சைக் கட்டில் பத்து மிடா விரைப்புப் புஞ்செய்யும் விடுவித்து உம்பளிக்கை மான்யப் பட்டயமும் எழுதிக் கொடுத்து அந்த மானிய பூமியில் சூலக்கல் நாட்டுப் பொடிவித்துக் காசிலிங்க முதலிக்குப் பட்டயமும் பாக்கு வெற்றிலையும் கொடுத்துச் சமய முதலி நிகுதி செய்தபின்பு கரிகாலச் சோழன் சேரமான்பெருமாளென்னும் சேரன் சமய முதலி நிகுதி செய்தபின்பு கரிகாலச் சோழன் சேரமாம் பெருமாளென்னும் சேரன் சமய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி மற்றுமுள்ள பேரும் முன் தேவர்கள் நாளில் உண்டான மாமாங்கப்பொய்கையிலும் ஐராவதப்பொய்கையிலும் சரவணப்பொய்கையிலும் சக்கரதீர்த்தப்பொய்கையிலும் அகத்தியர்

பொய்கையிலும் ஐவர்ராசாக்கள் .பொய்கையிலும் நாகதேவகன்னிப் பொய்கையிலும் தீர்த்தமாடிவந்து ஆறுமுகவர் தக்ஷிண காசித் திரு முருகன் பூண்டி முருகநாத சுவாமி முயங்கு பூண்முலை அம்மனுக்கு அவிநாசிலிங்கர் பெருங்கருணை அம்மனுக்கும் மற்றுமுள்ள தேவதை களுக்கும் அபிஷேக தூப தீபாராதனை முடிப்பித்து எல்லோரும் தரிசித்துக்கொண்டு அறுமுகவர் தக்ஷிண காசித் திருமுகன் பூண்டி அவிநாசி நகர் கடந்து கரிகாலச் சோழன் சேரமாம்பெருமா ளென்னும் சேரன் சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி மற்றுமுள்ள பேரும் சமய முதலி கைப்பட்டி

சேவூர்

யொழுகின்படிக்குச் செவனென்கிற இருளன்பதி வனத்திற்குப் போனார். போனபின்பு கரிகாலச் சோழன் அந்த வனத்தில் வேடர்கம்பளத்தை வரவிட்டுச் செடிவெட்டி வைக்கும் போது அந்த வனங் காத்திருந்த துர்க்கை பத்திரகாளி சோழனிடத் திற்கு வந்து பலிகேட்டது. அது கேட்டபடிக்குச் சோழன் சமைய முதலியை யழைத்து அந்த துர்க்கைக்கு ஒப்புச் சொல்லச் சொன்னார். அவர் சொன்னபடிக்குச் சமய முதலியும் அந்த துர்க்கைக்குச் சோழ னிந்த நகரமும் இதில் கோட்டையும் பேட்டையும் இதிலுண்டாகிய ஆலயமும் கட்டி முடித்தபின்பு உனக்கு நானே சோழனைக் கொண்டு கோவிலுங் கட்டிவைத்து உன்னையும் நிலைநிறுத்தி உனக்கு முப்பலி யும் நானே கொடுப்புவிக்கிறேன் என்று சமைய முதலி சொல்லஅந்த துர்க்கை பத்திரி(பத்திரகாளி) கேட்டு மனம் பொறுத்து நின்றபின்பு சோழன் வேடர்கம்பழத்தை விட்டுச் செவனென்கிற இருளன்பதி வனத்தைச் செடிவெட்டி வழி பண்ணி வைத்து அதிலிருந்த முன் வாலி பூசித்த வாலீசுரலிங்கத்தையும் அறப்பெருஞ்செல்வி யம்மனையும் மற்று மவ்விடத்திலுள்ள ஆலயமும் கண்டு அதன்பின்பு பாதாள சிவகங்கை யும் அக்கினிகங்கையும் கருடதீர்த்தமும் வாலிபூசித்த வாலிநதியும் கண்டு அந்த வாலிநதிக்கரைக்கு ஒரு குளமும் கட்டிவைத்து (ஆகப் பஞ்சநதி யும் கண்டு அதன்பின்பு) அமிருதநதிதீரவாசமும் அமிருதநதிதீர வாசத்திற்குச் செம்பிய மண்ணுடி பேருக்கு ஒரு குளமும் கட்டி வைத்து ஆகப் பஞ்ச நதியும் கண்டு அதன்பின்பு கரிகாலச் சோழன் அந்த வாலீசுரமுடையாருக்கும் அறப்பெருஞ்செல்வி யம்மனுக்கும் கோவிலும் கட்டிவைத்து அதன்பின்பு சோழன் அந்த வனத்தில் முன் குடியிருந்த செவனென்கிற இருளன் அந்தச் செவனென்கிற இருளன் பேருக்கு ஊர் சேவூரென்று ஊரும் கட்டிவைத்து அதில் கோட்டையும்,பேட்டையும் கட்டிவைத்து சோழன் கட்டிவைத்த பின்பு சமய முதலி சடையப்பன் கத்தூரிரங்கப்பச் செட்டி அம்மூவருமாகப் பதினெண்சாதிப் பல குடியும் அழைத்துச் சேவூர் நகரில் கோட்டை பேட்டையில் குடிவைத்து அதில் உழவு குடியான பல குடிக்கும் முதன் மையாகச் சோழதேசப் பால்சேரிநகர் வேளாளரில் பெரிய சோழி

யப்பனைச் சடையப்பன் வைத்தான். அதில் செட்டிமையான பல குடிக்கும் முதன்மையாகக் கன்னடிய வளிஞ்சியரில் ராமலிங்கப்பச் செட்டியை கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தார். அவர்கள் வைத்து நிகுதிசெய்த பின்பு கரிகாலச் சோழன் அந்தச் சேலூர் பேட்டைக் கோட்டை நகரதிகாரத்திற்குப் பூவிலுவரில் செம்பய மண்ணுடியை வைத்தார். அதில் கர்ணிகத்திற்குத் திருக்கணக்கரில் பெரியநல்லையா பிள்ளையை வைத்தார். அவர் வைத்து நிகுதிசெய்த பின்பு சமைய முதலியும் உத்தம பண்டிதரைக் கொண்டு அந்த வாலீசுரலிங்கமுடையாருக்கும் அறப்பெருஞ்செல்வி அம்மனுக்கும் புண்ணியாங்க அஷ்ட மந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார்.

அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரய பூமிகொண்டு அந்த வாலீசுரர் அறப்பெருஞ்செல்வி அம்மனுக்கு விட்ட மானியம் ஆயிரம் பொன் கிராமமும் நூறுபொன் சுங்கமும் நூறுமிடா விரைப்புப் புஞ்செய்யும் நூறுமிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்டமானியத்திற்கு நாலு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மானியத்தில் சமய முதலிக்குப் பத்திலொன்றென்று அந்த வாலீசுரமுடையாராலயத்தில் கலச்சாகரமும் பொடிவித்துக் கரிகாலச் சோழன் நிகுதி செய்த பின்பு சமைய முதலியு மந்த ஆலய ஊழியத்திற்கு நம்பிமுதல் திருவலகு கடைவரைக்கும் ஆள் பொடிவித்துத் திருவாடு தண்டிகைச் சீர்பாத ஊழியத்திற்குக் கைக்கொள்வரில் நூறு குடியும் வைத்து அந்த நூறுகுடிக் கைக்கொள்வருக்கும் நம்பி முதல் திருவலகு கடைவரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்குக் கைக்கொள்வரில் முத்துக் குழந்தை முதலியை வைத்து நம்பி முதன்மைக்குச் சாமிநாத நம்பியை வைத்து நாகபாச முதன்மைக்கு முத்துவேல் நட்டுவனை வைத்துத் தாசி முதன்மைக்குச் செம்ப மாணிக்கியை வைத்து அந்தக் கோவிலுக்கும் கோவில் மானியத்திற்கும் மணியம்கணக்குக்கு குமாரக்காழி முதலியைவைத்து அவர்களுக்கெல்லாம் ஓலைப்பட்டையமும் பாக்கு வெற்றிலையும் கொடுத்து நிகுதி செய்தபின்பு சமய முதலியும் அந்தச் சேவ னென்கிற இருளன் பதிவனம் காத்திருந்த பத்திரகாளி துர்க்கைக்குக் கரிகாலச் சோழனைக் கொண்டு கோவில் கட்டி வைத்து உத்தமபண்டிதரைக் கொண்டு அந்த பத்திரகாளியை நிலைநிறுத்திப் புண்ணியாங்க அஷ்டமந்திர (பந்தனப்)பிரதிஷ்டையும் செய்வித்தார்.

அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரய பூமி கொண்டு அந்த பத்திரகாளி துர்க்கை யாலயத்திற்கு விட்டமானியம் பத்து மிடா விரைப்புப் புஞ்செய்யும் பத்துமிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்டமான்யத்தில் சூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்டமா மாணியத்தில் சமய முதலிக்

குப் பத்திலொன் றென்று அந்த பத்திரகாளி துர்க்கையாலயத்தில் கலச்சாகரம் பொடிவித்துக் கரிகாலச் சோழன் நிருதி செய்த பின்பு சமய முதலி அந்தப் பத்திரகாளி துர்க்கை ஆலய ஊழியத்திற்கு ஆதிசோகி கோரக்கநாதர் வர்க்கத்தில் செம்ம பண்டாரத்தை வைத்து அவனைக் கொண்டு அந்தப் பத்திரகாளி துர்க்கைக்கு அபிஷேக தூபதீபாராதனை முடிப்பித்து அந்த முகத்தில் ஆடு பன்னி கோழி அறுத்துச் சமய முதலியாகிறவர் உனக்கு நாம் முன் சொன்ன முப்பலியும் வந்ததென்று பலியூட்டிவைத்து அந்தப் பத்திரகாளி துர்க்கைக்கு அழகு நாச்சியம்மனென்று பேருங்கண்டு அவ்வூரிலுள்ள குடிவரிசை ஜனங்களுக்கும் நீங்களிந்த அழகநாச்சி யம்மனுக்கு வருஷமொரு திருநாள் நடத்தி வைத்து நீங்கள் கட்டின வீடுதோறும் விளக்கும் பொங்கலும் ஆடு பன்னி கோழி இந்த முப்பலியும் வருஷமொரு எருமைக் கிடா பலியும் நீங்களிந்த அழகநாச்சி யம்மனுக்கு ஒப்புவித்து வாருங்களென்று அவர்களுக்குக் கட்டளை செய்து அந்த அழகநாச்சி யம்மனுக்கும் நீயுமிவர்களிடத்தில் இந்தப்படி நடக்கும் நாளைக்கு ஆடு பன்னி கோழி இந்த முப்பலியும் வருஷமொரு எருமைக் கிடா பலியும் அவர்களிடத்தில் வாங்கிக்கொண்டு அவர்களுக்கும் நீ இந்தக் கிராம தேவதையாயிருந்து அவர்களையும் ரக்ஷித்துவா வென்று அந்த அழகநாச்சி யம்மனுக்குச் சமய முதலி கட்டுச்செய்து அதன் பின்பு கரிகாலச் சோழன் சேரமாம் பெருமாளென்னும் சேரன் சமய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி மற்றுள்ள பேரும் வாலீசுரர் அறப்பெருஞ்செல்வி அம்மனுக்கும் மற்றுள்ள தேவதைகளுக்கும் அபிஷேக தூப தீபாராதனை முடிப்பித்து எல்லோரும் தரிசித்துக் கொண்டு சேலூர் நகர் கடந்து சமய முதலி கைப்பட்டி ஒழுகின்படிக்கு மன்னியென்கிற இருளன் பதி வனத்திற்குப் போனார்.

மன்னியூர் போன பின்பு சேரமாம் பெருமாளென்னும் சேரன் அந்த வனத்தில் வேடர் கம்பழத்தை வரவிட்டுச் செடி வெட்டிவைத்தார். வைக்கும்போது அந்த வனங் காத்திருந்த மன்னி மாகாளி என்கிற துர்க்கைகள் இருவரும் சேரனிடத்திற்கு வந்து எங்களுக்குப் பன்னிரண்டு நரபலி கொடுக்கச் சொல்லிக் கேட்டது. அது கேட்டபடிக்குச் சேரன் சமய முதலியை அழைத்து அந்த மன்னி மாகாளிதுர்க்கை இருவருக்கும் ஒப்புச் சொல்லச் சொன்னார். அவர் சொன்னபடிக்குச் சமய முதலியும் அந்தத் துர்க்கை இருவருக்கும் சேரமாம் பெருமாள் என்னும் சேரன் இந்த நகரமும் இதில் கோட்டையும் பேட்டையும் இதிலுண்டாகிய ஆலயமும் கட்டி முடித்த பின்பு உனக்கு நானே சேரனைக்கொண்டு கோவிலும் கட்டிவைத்து உன்னையும் நிலை நிறுத்தி உங்களுக்குப் பன்னிரண்டு நரபலியும் கொடுப்புவிக்கிறேன் என்று சமய முதலி சொல்ல துர்க்கை இருவரும் கேட்டு மனம் பொறுத்து நின்ற பின்பு சேரன்

வேடர் கம்பழத்தைவிட்டு மன்னி யென்கிற இருளன்பதி வனத்தைச் செடி வெட்டி வழி பண்ணி வைத்து அதிலிருந்த முன் சேரன் வம்சத்தவர் கட்டிவைத்த மன்னிலிங்கர் கோவிலும் அருந்தவத்தம்மன் கோவிலும் அதிலிருந்த மன்னிலிங்கர் அருந்தவத்தம்மனையும் கண்டு மற்றும் அவ்விடத்திலுண்டான ஆலயங்களும் கண்டு அந்த மன்னிலிங்கர் அருந்தவத்தம்மனுக்குச் சேரமாம் பெருமாளென்னும் சேரன் கோவிலும் கட்டி வைத்து அதன் பின்பு உத்தம தீர்த்தமும் கண்டு உத்தமபண்டிதர் நயினுர் பேருக்கு ஒரு குளமும் கட்டிச் சிவகங்காநதியும் கண்டு அணை ஏரி கட்டி வைத்து அதன் பின்பு தக்ஷிணகங்கா திருநல்லாத்துத் தீரவாசமும் கண்டு அதன் பின்பு தென்பாரிசத்தில் சக்கரகிரியும் அதினுள்ளே சங்குச் சுனையும் கண்டு பாலநதி தீரவாசமும் கண்டு ஆகப் பஞ்சநதியும் கண்டு அதன்பின்பு சேரன் அந்த வனத்தில் முன் குடியிருந்த இருளன் மன்னி என்கிற இருளன் அந்த மன்னி என்கிற இருளன் பேருக்கு ஊர் மன்னியூரென்று ஊருங் கட்டிவைத்து அதில் கோட்டையும் பேட்டையும் கட்டிவைத்துச் சேரமாம் பெருமாளென்னும் சேரன் கட்டிவைத்த பின்பு சமய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி அம் மூவருமாகப் பதினெண்சாதிப் பலகுடியும் அழைத்து மன்னியூர் நகரில் குடிவைத்து அதிலுழவு குடியான பல குடிக்கும் முதன்மையாகச் சோழதேசப் பால்சேரி நகர் வேளாளரில் பெருமாளென்கிற வனைச் சடையப்பன் வைத்தான்.

செட்டிமையான பல குடிக்கும் முதன்மையாகக் கவறைவளைஞரில் ரங்கப்பனென்கிறவனைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தார்.

அவர்கள் வைத்து நிகுதி செய்தபின்பு சமைய முதலியாகிறவர் சேரமாம்பெருமாளென்னும் சேரனையும் கரிகாலச் சோழன் சடையப்பன் கத்தூரி ரங்கப்பச்செட்டி இவர்களைப் பார்த்து இந்த துர்க்கை இருவருக்கும் பன்னிரண்டு நரபலி கொடுப்பிக்க வேணும். இந்தப் பன்னிரண்டு நரபலி கொடுத்த பேருக்கு இந்த மன்னியூர் நகர் கோட்டை பேட்டை சீமை கருணிகமும் இந்த மன்னிலிங்கர் அருந்தவத்தம்மன் கோவிலுக்கும் கோவில் மாணியத்திற்கும் மணியங் கணக்கும் கொடுத்து இந்த மன்னியூர் ரத்தக்காணி ஆதி இளம் நரபலி கொடுத்தவர்களுக்குக் கொடுப்பிவிக்க வேண்டுமென்று இவர்களுடனே சமய முதலி சொல்ல சேரன் சோழன் சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி மற்றுமுள்ள பேருங் கேட்டு எல்லோரும் சந்தோஷப் பட்டு அவர்களு மப்படியே இந்த மன்னி மாகாளிதுர்க்கை இருவருக்கும் பன்னிரண்டு நரபலியும் கொடுத்தவருக்கு இந்த மன்னியூர் நகர் கோட்டை பேட்டை சீமை கருணிகமும் மன்னிலிங்கர் அருந்தவச்

செல்வி கோயில் மணியங்கணக்கும் இந்த மன்னியூர்ச் சீமைக் கருணிக மும் இந்த தேவஸ்தானத்து மணியங்கணக்கும் ரத்தக்காணி கொடுத்து நிருதி செய்யென்று சேரமாம்பெருமாளென்னும் சேரனும் கரிகாலச் சோழன் சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் சமய முதலிக்கு நிருதிசெய்து கொடுத்தார்கள்.

அவர்கள் நிருதிசெய்து கொடுத்தபடிக்குச் சமய முதலியும் சம்மதித்துக்கொண்ட பின்பு சேரமாம்பெருமாளென்னும் சேரன் மன்னியூர்நகர்க் கோட்டை பேட்டைச் சீமை அதிகாரத்திற்குப் பூவி லுவரில் நல்ல வீரப்ப மண்ணுடியை வைத்தார். சேரன் வைத்து நிருதி செய்தபின்பு சமய முதலியும் உத்தம பண்டிதரைக் கொண்டு மன்னி லிங்கருக்கும் அருந்தவச் செல்வி அம்மனுக்கும் புண்ணியாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு சேரமாம்பெருமாளென்னும் சேரன் மன்னிலிங்கர் அருந்தவச் செல்வி அம்மனுக்கு விட்ட மானியம் முன் தன்வம்சத்தவர் விட்ட வரிசை மானியங் கண்டு சேரன் மன்னிலிங்கர் அருந்தவச் செல்வி அம்மனுக்கு விட்ட மானியம் ஆயிரம்பொன் கிராமமும் நூறுபொன் சுங்கமும் நூறுமிடா விரைப்புப் புஞ்செய்யும் நூறுமிடா விரைப்பு குளக்கரையில் நஞ்சை பூமியும் விட்டு விட்ட மானியத்திற்கு நாலு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மானியத் தில் சமய முதலிக்குப் பத்திலொன்றென்று மன்னிலிங்கர் அருந்தவச் செல்வி கோவிலில் கல்வெட்டுப் பொடிவித்துச் சேரமாம்பெருமா ளென்னும் சேரன் நிருதிசெய்த பின்பு கரிகாலச் சோழன் சேரமாம் பெருமாளென்னும் சேரனிடத்தில் மன்னியூருக்கு வடதிசையில் கைக்கிரய பூமிகொண்டு மன்னிலிங்கர் அருந்தவச் செல்வி அம்மனுக்கு விட்ட மானியம் ஐந்நூறுபொன் கிராமமும் ஐம்பதுபொன் சுங்கமும் ஐம்பதுமிடா விரைப்புப் புஞ்செய்யும் ஐம்பதுமிடா விரைப்பு நஞ்செய் யும் விடுவித்து விட்ட மானியத்திற்கு நாலு சூலக்கல் நாட்டும் பொடி வித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மானியத்தில் சமய முதலிக்குப் பத்தி லொன்றென்று அந்த ஆலயத்தில் கலச்சாகரம் பொடிவித்துக் கரிகாலச் சோழன் நிருதிசெய்த பின்பு சமய முதலியும் அந்த ஆலய ஊழியத்திற்கு நம்பி முதல் திருவலகு கடைவரைக்கும் ஆள்பொடிவித் துத் திருவாடுதண்டிகைச் சீர்பாத ஊழியத்திற்குச் சமய முதலி காஞ்சீபுரத்திலிருந்து தனக்குள்பட்ட காரியப்பேர் கைக்கொள்வரில் அதன் முதன்மைக்குத் தன் தம்பி கச்சிக் கச்சாலையப்ப முதலி மக்கள் கச்சிக் கச்சாலைக் கந்தப்ப முதலியும் இவனுக்கிளையவன் கச்சிக் கச்சாலையப் பெருமாள் முதலியும் இவர்களுக்குட்பட்ட ஜனம் நூறுகுடியும் இந்தக் கச்சிக் கச்சாலைக் கந்தப்ப முதலிக்கும் கச்சிக் கச்சாலைப் பெருமாள் முதலிக்கும் மைத்துனராகிய சாதிசமயதள

விசாரணை முதன்மையில் சூர்யமூர்த்தி முதலி மகன் கொங்கமட்டுகிற கண்டனென்கிற முதலியும் இவர்களுக்குள்பட்ட ஜனம் நூறு குடியும் சாதி சமயப்பட்டத்துத் தனி விசாரணை நாட்டுக் கர்ணிகர் முதன்மைக்கு கச்சிக் கச்சாலைக் கந்தப்ப முதலிக்கும் இவர்கள் தம்பி கச்சிக் கச்சாலைப் பெருமாள் முதலிக்கும் கொங்கமட்டுகிற கெண்டனுக்கு மைத்துனனாகிய திருவேங்கட முதலி மகன் கச்சி வடமலையப்ப முதலி இவன் மகன் கச்சி அமராபதி முதலி இவன் மகன் கச்சி வினை தீர்த்த முதலி இவன் மகன் கச்சி அருந்தா முதலியும் இவனுக்குள்பட்ட சனம் நூறு குடியும் சமயசங்கோதி விசாரணை முதன்மையில் கச்சிக் கச்சாலைக் கந்தப்ப முதலிக்கு இவர்கள் தம்பி கச்சிக் கச்சாலைப் பெருமாள் முதலிக்கும் கொங்கமட்டுகிற கெண்டனுக்கும் கச்சி அருந்தாமுதலிக்கும் மைத்துனனாகிய வாரணவாசி முதலி மகன் காசிவேல் முதலியும் இவர்களுக்குட்பட்ட சன நூறு குடியும் இப்படி ஐந்து முதன்மைக்கும் ஐந்நூறு குடியை அழைத்து மன்னியூர்நகரில் குடிவைத்துக்குடிவைத்த பின்பு சமைய முதலியாகிறவர் அந்த ஐந்நூறு குடியும் வரவழைத்துத் தன்னெதிரில் நிறுத்திக்கொண்டு இந்த ஐந்நூறுகுடிக் கைக்கொள்வரில் யாதாமொருவன் மன்னி மாகாளிதுர்க்கை இருவருக்கும் பன்னிரண்டு நரபலி நான் கேட்டவிடத்தில் தாரோமென்று நானென்று துணிந்து வந்தவருக்கு இந்த மன்னியூர்க் கோட்டை பேட்டை நகரத்துச் சீமைக் கருணிகமும் கோவில் மணியங் கணக்கும் ரத்தக்காணி கொடுப்பிவிக்கிறேமென்று சமைய முதலி சொல்ல அந்த நூறுகுடிக் கைக்கொள்வரும் காஞ்சிபுரத்துச் சாதி சமயபட்டத்துத் தளவிசாரணை நாட்டுக் கர்ணிகர் கச்சித் திருவேங்கட முதலி மகன் கச்சி வடமலையப்ப முதலி இவன் மகன் கச்சி அமராபதி முதலி இந்தக் கச்சி அமராபதி முதலிககு மக்கள் நாலு பேரும் மூத்தவன் கச்சி வினைதீர்த்த முதலி இவனுக்கிளையவன் கச்சி முதலி இவனுக் கிளையவன் கச்சித் திருவேங்கட முதலி இவனுக்கிளையன் கச்சி வடமலையப்ப முதலி இப்படி நாலுபேர் மக்களில் மூத்தவன் கச்சி வினைதீர்த்த முதலி இந்தக் கச்சி வினைதீர்த்த முதலியை வெள்ளாதிக் கோவில் மணியங் கணக்குக்கு வைத்து இவன் மகன் கச்சி அருந்தா முதலி நீங்கள் கேட்ட வேளையில் இந்த மன்னி மாகாளிக்குப் பன்னிரண்டு நரபலியும் கொடுக்கிறேனென்று சமய முதலிக்குக் கச்சி அருந்தா முதலி சொல்ல அவன் சொன்னபடிக்குச் சமைய முதலியும் கச்சி அருந்தா முதலி கையில் பன்னிரண்டு நரபலிக்கும் நிருதிபண்ணிக்கொண்டு பின்பு சமைய முதலியாகிறவர் அந்த ஐந்நூறுகுடிக் கைக்கொள்வருக்கும் நம்பி முதல் திருவலகு கடைவரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்குக் கச்சிவீர காமாச்சிராயச் சீர்ச் சிங்காசனக் கர்த்தராகிய அறுசமய முதலிக்குச் சகோதரமாகிய

கச்சிக்கச் சாலையப்ப முதலி மகன் மூத்தவன் கச்சிக் கச்சாலை கந்தப்ப முதலி இவனுக்கிளையவன் கச்சிக்கச்சாலைப் பெருமாள் முதலியை வைத்து நம்பி முதன்மைக்கு நல்லைய நம்பியை வைத்து நாகபாசமுதன்மைக்குக் கிருஷ்ண நட்டுவனை வைத்துத் தாசி முதன்மைக்கு அலமேலு மங்கை[மாணிக்கி]யை வைத்து அந்தக்கோவி லுக்கும் கோவில் மானியத்திற்கும் மணியங்கணக்குக்கும் மன்னியூர்க் கோட்டை பேட்டை நகரத்துச் சீமை கர்ணிகத்திற்குக் கச்சி வினைதீர்த்த முதலி மகன் கச்சி அருந்தா முதலியை வைத்து அவர் களுக்கெல்லாம் பாக்கு வெற்றிலை கொடுத்து நிருதி செய்த பின்பு சமய முதலியும் அந்த மன்னியூர் நகரம் காத்திருந்த மன்னி மாகாளி துர்க்கை இருவருக்கும் சேரனைக் கொண்டு கரிகாலச்சோழன் கையில் உத்தரவாசல் கோயிலும் கட்டி வைத்து உத்தம பண்டிதரைக் கொண்டு துர்க்கை இருவரையும் நிலைநிறுத்தி புண்யாங்க அஷ்ட மந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார். அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரயபூமி கொண்டு அந்த துர்க்கை இருவர் ஆலயத்திற்கும் விட்ட மானியம் இருபதுமிடா விரைப்புப் புஞ்செய்யும் இருபதுமிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மான்யத்திற்குச் சூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மானியத்தில் சமய முதலிக்குப் பத்தி லொன்றென்று மன்னி மாகாளி இரண்டு ஆலயத்திலும் கலச்சாகரம் பொடிவித்துக் கரிகாலச் சோழன் நிருதி செய்த பின்பு சமய முதலி அந்த துர்க்கை ஆலய ஊழியத்திற்கு ஆதிசோகி கோரக்கநாதர் வர்க்கத்தில் பெரியாண்டி பண்டாரத்தை வைத்து அவனைக் கொண்டு மன்னி மாகாளிதுர்க்கை இருவருக்கும் அபிஷேக தூபதீபாரூதனை முடிப்பித்து அந்த முகத்தில் அருந்தா முதலி தன் வீட்டுச் சனத்தில் பன்னிரண்டு பாலகுமாரர்களை அழைத்து வந்து திருமஞ் சனம் ஆட்டிவைத்துத் திருநீற்றுக் காப்பு மிட்டு ஆடை யுடத்தி ஆபரணங்கள் பூட்டி அலங்கரித்துப் பாலசன மிடுவித்துப் பரிமள களப கஸ்தூரிகள் பூசி வீரசந்தனமிடுவித்துப் பாக்கு வெற்றிலை கையில் கொடுத்து வீரகொம்பு வீரகாஹளம் வீர மல்லாரி வீரசெகண்டி வலம்புரிச்சங்குடனே வீரமேளவாத்தியம் மூழங்க பஞ்சவண்ணக்குடை பஞ்சமுகத் தீவட்டி கைவிருது ரண வீரவரி வேங்கைப் புலிக்கொடியுடனே நடபாவாடையுடனே நடபாவாடைமேல் நடந்து நடன சங்கீதராய் மேளவாத்தியம் சூழ்ந்து வர மன்னியூர்நகரில் நாலுவீதி மிரவணையும் வருவித்து மன்னி மாகாளி இருவருக்கும் எதிர்நிறுத்தி அந்தப் பன்னிரண்டு பாலகுமாரரையும் மன்னி மாகாளி இருவருக்கும் சமய முதலியாகிறவர் உங்களுக்கு நாம் முன்சொன்ன பன்னிரண்டு பலியில் ஒருவருக்கு ஆறு பலியும் ஒருவருக்கு ஆறு பலியும் இந்த பன்னிரண்டு பலியும் இருவருக்கும்

பன்னிரண்டு நரபலிகள்

வந்ததென்று அந்த பாலகுமாரரை வெட்டிப் பலியூட்டி வைத்து அந்த முகத்தில் ஆடு பன்னி கோழி அறுத்துப் பலியூட்டி வைத்து அந்த முகத்தில் அவ்வூரிலுள்ள குடிவரிசை சனங்களுக்கும் நீங்களிந்த துர்க்கை இருவருக்கும் வருஷமொரு திருநாள் நடத்திவைத்து நீங்கள் வீடுதோறும் விளக்கும் பொங்கலும் ஆடு பன்னி கோழி இந்த முப் பலியும் வருஷமிரண்டு எருமைக் கிடா பலியும் இருவருக்கும் கொடுத்து நீங்களிந்த மன்னி மாகாளிக்கு ஒப்பித்து வாருங்களென்று அவர் களுக்கும் கட்டுச்செய்து அந்த மன்னி மாகாளி இருவருக்கும் நீங்கள் இருவர்களும் இவர்களிடத்தில் இந்தப்படி நடக்கும் நாளைக்கு ஆடு பன்னி கோழி இந்த முப்பலியும் வருஷந்தோறு மிரண்டு எரு மைக்கிடா பலியும் அவர்களிடத்தில் வாங்கிக்கொண்டு அவர்களுக்கு நீர் இந்தச் கிராம தேவதை யாயிருந்து அவர்களையும் ரக்ஷித்து வாருமென்று அந்த மன்னி மாகாளிக்குச் சமய முதலி கட்டுச் செய்து அவர்களுக்குப் பேர் பெரியம்மன் சின்னம்மன் என்று பேருங்கண்டு அதன் பின்பு சமைய முதலியும் அந்தப் பெரியம்மன் சின்னம்ம னிருவருக்கும் பலிக்கு நின்ற பன்னிரண்டு பால குமாரரையும் சாவாரக் கோல முஸ்தேதியாய் பன்னிரண்டு கல் சிலை விக்கிரகமும் அவர்களைப் பார்த்தாப் போல் பார்க்கிறமுகமாக முடிப்பித்து அந்தச் சிலைகளை மன்னிநாதர் அருந்தவச்செல்வி சுற்றாலயமேல்வாசலில் நிறுத்திவைத்து உத்தம பண்டிதரைக் கொண்டு அந்தப்பன்னிரண்டு சிலைகளுக்கும் புண்யாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்து அபிஷேக தூபதீபாறு தனை முடிப்பித்து எல்லோரும் தரிசித்துக கொண்டு அதன்பின்பு அந்தச் சாவாரப்பலிக்கல் சிலையளுக்கு மன்னி நாதர் அருந்தவச் செல்விக்கு முந்தின நைவேத்தியமென்று அந்தப் படி மன்னிநாதர் அருந்தவச்செல்வி ஆலயத்திற்குள்பட்ட பேருக்குச் கட்டுச்(செய்து) அதன்பின்பு சமைய முதலியும் இந்தமன்னியூர் நகரம் மகாபூர்வீகத் தலமென்று சந்தோஷப்பட்டு இந்தத் தலத்திலிருந்து கொண்டு கரிகாலச் சோழன் சேர கொங்கு நாட்டில் கட்டிவைத்த சிவாலயம் ஆதிகருவூர் முதல்கொண்டு திருப் பேரையூர் வரைக்கும் கட்டிவைத்த கொங்கேழு சிவா லயத்திற்கும் அதனுள்பட்ட முன்னூற்றறுபது சிவா லயத்திற்கும் அதனுள்பட்ட விஷ்ணு ஆலயமும் சுப்பிர மணியர் திருவாலயமும் மடவாலயமும் குருவாலயமும் அது எடுத்து துர்க்கை ஆலயத்திற்கும் கொங்கு இரு பத்திநாலு நாட்டுக்கும் கேரளமாகிய மலையாளம் கொச்சி தேசத்துவரைக்கும் சாதிசமயப்பட்டம் விசாரணை செய்துகொண்டு வருகிறபடிக்கு நம்ம தம்பி கச்சிக் கச் சாலையப்ப முதலி இவன் மகன் மூத்தவன் கச்சிக் கச்சாலைக் கந்தப்ப முதலிக்குப் பட்டம் சூட்டிவைக்க வேண்டுமென்று மன்னிமாநகரில்

மன்னியூரில் கருவூர் முதல் கொண்டு பேரூர் வரை 7 சிவாலயம் 360 சிவாலயம் இவைகளின் விசாரணை தந்து பட்டம் கட்டினது

மன்னிராதர் தென்வாசலில் ஒரு சமயமண்டபம் கட்டிவைத்துச்சமய மண்டபத்திற்கு அலங்காரச்சோடு முஸ்தேதியும் உண்டுசெய்து அதன் பின்பு சமைய முதலி தன்னிடத்திலிருக்கின்ற அறுசமய முத்திரை மோதிரமும் அறுசமயசரமும் வீரவாளும் வெண்டாமரைநூல் பட்டாசனமும் வெண்முத்து மணிக்கிரீடமும் அருந்தவச்செல்வி பாதத்தில் வைத்து அருந்தவச் செல்வி யம்மனைப் பணிந்து கொண்டு அதன்பின்பு சமைய முதலி தன் தம்பி கச்சிக் கச்சாலையப்ப முதலி மகன் கச்சிக் கச்சாலைக் கந்தப்ப முதலிக்குப் பட்டம் முடி சூட்டவேணுமென்று உத்தமலிங்காசாரரும் சமய முதலியும் உத்தம தீர்த்தத்திற்குப் போய்த் திருமஞ்சனம் எடுப்பிவித்துக்கொண்டு வந்து கச்சிக் கச்சாலைக் கந்தப்ப முதலிக்குத் திருமஞ்சனமாட்டிவைத்துத் திருநீற்றுக காப்புமிட்டு ஆடையாபரணதிகள் பூட்டி அலங்கரித்துச் சமயமுதலி தன் தம்பி மகனை வரவழைத்துப்போய் அருந்தவச் செல்வி கனகசபையில் நிறுத்தி அருந்தவச்செல்வி பாதத்தில் வைத்து இருந்த ஆறுகாலப் பீடமெடுத்து வந்து அதன்மேல் வெண்டாமரைநூல் பட்டாசனம் விரித்துப் பட்டாசனத்தின்மேல் தன் தம்பி மகன் கச்சிக் கச்சாலை கந்தப்ப முதலியை வந்திருக்கச் சொல்லி அருந்தவச் செல்வி பாதத்தில் வைத்த சமயமுத்திரை தெதி வகை எல்லாம் எடுத்து வந்து வந்தபின்பு வெண்முத்து மணிக்கிரீடம் தரித்து வீரவாளும் கையில் கொடுத்து அறுசமயசரமும் கழுத்தில் போட்டு அறுசமயமுத்திரை மோதிரமுங் கையிலிட்டு அருந்தவச்செல்வி கழுத்து ஐந்தருவின் திருமாலை வாங்கிக் கச்சிக்கச்சாலை கந்தப்ப முதலி கழுத்தில் போட்டு அருந்தவச்செல்வி பாதத்தில் வைத்து அறுசமய முத்திரைச் செங் கோலும் வாங்கிக் கச்சிக்கச்சாலைக் கந்தப்பமுதலி கையில் கொடுத்துப் பட்டாபிஷேகம் முடிசூட்டி சாதிசமய ஆறுசமயப்பட்ட முடிசூட்டி கந்த புஷ்ப தூப தீபம் பரிமாறி மூவர்ராசாக்களும் உறவின்முறை யாரும் மற்றுள்ளபேரும் கச்சிக்கச்சாலைக் கந்தப்ப முதலியைத் தரிசித்துக்கொண்டு மூவர்ராசாக்களும் சமய முதலியும் உத்தமலிங்கா சாரரும் இந்தக் கொங்கு இருபத்திநாலு நாடும் கேரளமாகிய மலையாளம் கொச்சி தேசத்துவரைக்கும் அறுசமயமும் சாதிசமயப் பட்டத்து விசாரணையும் விசாரிச்சுவரச் சொல்லி கச்சி வீரகாமாச்சி ராயச் சீர்ச்சிங்காதனக் கர்த்தாவாகிய அறுசமய முதலி யென்று பட்டத்துப்பேர் கொடுத்து கொடுத்தபடிக்கு அவரும் அறுசமய அதிகாரமும் பேரும் வாங்கிக்கொண்டு பட்டாசனம் விட்டெழுந்திருந்து அருந்தவச் செல்வி பாதத்தில் சமயமுஸ்தேதி அதிகாரவகையெல்லாம் வைத்துப் பணிந்து தரிசித்துக் கொண்ட பின்பு எல்லோருக்கும் வெற்றிலை கொடுத்து எல்லோரையும் நமஸ்கரித்துக்கொண்டு நிற்கும் போது சமய முதலியும் அருந்தவச் செல்வி பாதத்தில் வைத்திருக்கிற சமயமுஸ்தேதி அதிகார வகையெல்லாம் வைத்துப் பணிந்து தரிசித்துக்

கொண்ட பின்பு எல்லோருக்கும் வெற்றிலையுங் கொடுத்து எல்லோரையும் நமஸ்கரித்துக் கொண்டு நிற்கும்போது சமைய முதலியும் அருந்தவச் செல்வி பாதத்தில் வைத்திருக்கிற சமைய மூஸ்தேதி அதிகார வகையெல்லாம் எடுத்துத் தான் தரிசித்துக்கொண்டு கச்சிக்கச்சாலை கந்தப்ப முதலியும் மூவர் ராசாக்களையும் மற்றுள்ளபேரையும் அழைத்துக்கொண்டு சமயமண்டபத்திற்கு வந்து சமயமண்டபத்தி லிருந்து கொண்டு இந்தக் கச்சிக்கச்சாலைக் கந்தப்ப முதலி பட்டத்திற் குள்பட்ட காரியப்பேர் நடந்து வருவதற்குச் சாதிசமய தளவிசாரணைக் குக் கச்சிக்கச்சாலை கந்தப்ப முதலிக்கு மைத்துனராகிய சுந்திரமூர்த்தி முதலி மகன் சூரியமூர்த்தி முதலி இவன் மகன் கொங்கமட்டுகிற கெண்டனை வைத்துச்சாதிசமய பட்டத்தள விசாரணை நாட்டுக் கர்ணிகத்திற்கு கச்சிக்கச்சாலை கந்தப்ப முதலிக்கும் கொங்கமட்டுகிற கண்டனுக்கும் மைத்துனராகிய காஞ்சீபுரத்துத் திருவேங்கடமுதலி மகன் கச்சி வடமலையப்ப முதலி இவன் மகன் கச்சி அமராபதி முதலி இவன் மகன் கச்சி வினைதீர்த்த முதலி இவன் மகன் மன்னியூர் கோவில் மாணியம் கணக்கும் சீமைக் கருணிகமும் பெரியம்மன் சின்னம்மனுக்குப் பன்னிரண்டு நரபலி கொடுத்து ரத்தக்காணி வாங்கின கச்சி அருந்தா முதலியை வைத்துச் சமயசங்கதி விசாரணைக்குக் கச்சிக் கச்சாலைக் கந்தப்ப முதலிக்கும் கொங்கமட்டுகிற கெண்டனுக்கும் கச்சி அருந்தா முதலிக்கும் இவர்கள் மூவருக்கும் மைத்துனராகிய சோலையங்கிரி முதலி மகன் வாரணவாசி முதலி இவன் மகன் காசிவேல் முதலியை வைத்துச் சமய இளந்தாரி திருத்தணி முதலி மகன் தனுக்கோடி முதலி இவன் மகன் ராமலிங்க முதலியை வைத்துச் சாதிசமய நாட்டுச் சோடிளந்தாரிக்குக் காஞ்சீபுரத்துச் சாதிசமய நாட்டுச் சொடிளந்தாரி நாகபாசச் சொக்கலிங்கன் அவன் மகன் சுந்தரலிங்கத்தை வைத்து இவர்களுக்கெல்லாம் உடுகரை பாக்குபச்சைவடம் கொடுத்துக் களப கஸ்தூரிகள் பூசி பாக்கு வெற்றிலை கொடுத்துக் காஞ்சிபுரத்துக்குக் கச்சிவீர காமாச்சிராயச் சீர்ச்சிங்காசனக் கர்த்தராகிய சமய முதலி நிருதிசெய்த பின்பு கச்சிக் கச்சாலைக் கந்தப்ப முதலியைக் கொண்டு சமய முதலியும் தங்கள் சமயமண்டபத்தி லிருக்கும்போது மூவர்ராசாக் களுக்கு உத்தம லிங்காசாரர்க்கும் நம்பி நாகபாசத்தவற்கும் நாட்டுறவின் முறை கைக்கொள்வருக்கும் மற்றுமுள்ள பேருக்கும் சமய மண்டபத்தில் விருந்து படி அரிசி விசாரித்து அவரவருக்கு உடுகரை பச்சை வடம் பாக்கு வெற்றிலை கொடுத்துப் பரிமள கஸ்தூரிகள் பூசி சமய முதலியும் அருந்தவச் செல்வி அம்மன் பிரசாதம் கொடுப்பித்துச் சமயமண்டபம் விட்டு எல்லோரையும் கூட்டிக்கொண்டு மன்னிநாதர் அருந்தவச் செல்வி ஆலயத்திற்குப் போய் மன்னிநாதர் அருந்தவச்செல்வி யம்மனுக்கும் மற்றுள்ள தேவதைகளுக்கும் அபிஷேக தூப தீபாராதனை முடிப்பித்து எல்லோரும் தரிசித்துக்கொண்டு

மன்னியூர் நகர் கடந்து திருப்பேரையூர் நகருக்குப் போனூர். போன பின்பு கரிகாலச் சோழன் சேரமாம் பெருமாளென்னும் சேரன் சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச்செட்டியும் மற்றுமுள்ள பேரும் பட்டீசுவரர் பச்சை மரகதவல்லி யம்மனுக்கும் மற்றுமுள்ள தேவதைகளுக்கும் அபிஷேக தூப தீபாருதனை முடிப்பித்துக் கரி காலச் சோழன் சேரமான் பெருமாளென்னுஞ் சேரனு சமைய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச்செட்டியும் மற்றுமுள்ள பேரும் அவரைத் தரிசித்துக்கொண்டு தரிசித்துக்கொண்டபின்பு கரிகாலச் சோழன் சேரமான்பெருமாளென்னும் சேரன் சமையமுதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச்செட்டியும் எல்லோரும் இனி நாம் எல்லோரும் போய் வெள்ளியங்கிரியிலிருக்கின்ற பஞ்சலிங்கத்திற்கும் அபிஷேக தூப தீபாருதனை முடிப்பித்து எல்லோரும் அவரைத் தரிசித்து அர்ச்சித்துக்கொண்டு கிரிவிட்டு இறங்குவர வேணுமென்று கரிகாலச் சோழன் முதலாக எல்லோரும் யோசித்துக்கொண்டு திருப்பேரையூர் கடந்து எல்லோருமாக அந்தப்பேரை யென்கிற இருளனையும் முன் னிட்டுக்கொண்டு சமைய முதலி கையொழுகின்படிக்கு வெள்ளியங்கிரி யடி திருமுட்ட வனத்திற்குப் போனூர். போனபின்பு கரிகாலச்சோழன் திருமுட்ட வனத்தில் வேடர் கம்பளத்தை விட்டுச் செடி வெட்டி வைக்கும்போது அந்த வனம் காத்திருந்த நாக துர்க்கை பத்திரகாளி என்கிற துர்க்கை சோழனிடத் திற்கு வந்து பலி கேட்டது. அது கேட்டபடிக்குச் சோழன் சமய முதலியை அழைத்து அந்த துர்க்கைக்கு ஒப்புச்சொல்லச் சொன்னூர்.

முட்டம் நாகீசுரர்வனம்

அவர் சொன்னபடிக்குச் சமய முதலியும் துர்க்கைக்குக் கரிகாலச் சோழன் இந்த நகரமும் இதிலுண்டாகிய சிவலிங்கத்திற்குக் கோவிலும் கட்டி முடித்தபின்பு உனக்கு நானே சோழனைக்கொண்டு கோவிலும் கட்டிவைத்து உன்னையும் நிலைநிறுத்தி முப்பலியும் கொடுப்புவிக் கிறேன் என்று சமய முதலி சொல்ல துர்க்கையும் கேட்டு மனம் பொறுத்து நின்ற பின்பு கரிகாலச் சோழன் வேடர் கம்பழத்தை விட்டு அந்த வனத்தைச் செடிவெட்டி வெளி பண்ணிவைத்து அதி லிருந்த நாகீசுரமுடைய லிங்கத்தையும் கண்டார்கள். கண்டபின்பு கரிகாலச்சோழன் திருநாகீசுரமுடையாருக்குக் கோவிலும் கட்டி வைத்துத் திருமுட்டமென்று ஊரும் கட்டிவைத்து அதில் கோட்டை யும் பேட்டையும் ஒரு குளமும் கட்டிவைத்தார்.

அவர் கட்டிவைத்த பின்பு சமய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச்செட்டியும் அம்மூவருமாகப் பதினெண்சாதிப் பலகுடியும் அழைத்துத் திருமுட்டமென்கிற ஊரில் குடியும் வைத்து அதிலுழவு குடியான பல குடிக்கும் முதன்மையாகச் சோழதேசத் தென்திசை

யூர் நகர் வேளாளரில் நல்லண்ணனென்கிறவனைச் சடையப்பன் வைத்தான். அதில் செட்டிமையான பல குடிக்கும் முதன்மையாகக் கவறை வளைஞ்சியரில் மயிலாபுரி என்கிறவனைக் கத்தூரி ரங்கப்பச் செட்டி வைத்தான். அவர்கள் வைத்து நிகுதி செய்தபின்பு கரிகாலச் சோழன் திருமுட்ட நகர் அதிகாரத்திற்குப் பேரையூர் நகரதிகாரக் கொமராக் கொப்ப மண்ணுடி அப்பால் நாகப்ப மண்ணுடி யென்கிற பூவிலுவர் வம்சத்தார் அதில் கர்ணிகத்திற்குத் திருக்கணக்கரில் வயிரவநாதப் பிள்ளையை வைத்தார். அவர் வைத்து நிகுதி செய்த பின்பு சமய முதலியும் உத்தமபண்டிதரைக் கொண்டு திருநாகீசுர முடையாருக்குப் புண்யாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய் வித்தார். அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரய பூமி கொண்டு திருநாகீசுரமுடையாராலயத்திற்கு விட்ட மானியம் ஐந்நூறுபொன் கிராமமும் ஐம்பதுபொன் சுங்கத்தீர்வையும் ஐம்பதுமிடா விரைப்புப் புஞ்செய்யும் குளக்கரையில் ஐம்பதுமிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மானியம் பூமி கண்டு நாலு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மானியத் தில் சமய முதலிக்குப் பத்திலொன்றென்று திருநாகீசுரமுடையா ராலயத்தில் கலச்சாகரம் பொடிவித்து கரிகாலச் சோழன் நிகுதி செய்த பின்பு சமய முதலியும் அந்த ஆலய ஊழியத்திற்கு நம்பி முதல் திருவலகு கடைவரைக்கும் ஆள் பொடிவித்துத் திருவாடுதண்டிகைச் சீர்பாத ஊழியத்திற்குக் கைக்கொள்வர் ஐம்பது குடியும் வைத்து அந்த ஐம்பது குடிக்கும் நம்பிமுதல் திருவலகு கடைவரைக்கும் முதன்மை நாட்டாண்மைக்குக் கைக்கொள்வரில் மலையப்ப முதலியை வைத்து நம்பி முதன்மைக்குச் சிவலிங்க நம்பியை வைத்து நாகபாச முதன்மைக்கு முதலி நட்டுவனை வைத்துத் தாசி முதன்மைக்குக் காளிமாணிக்கியை வைத்து அந்தக் கோவிலிற்கும் கோவில் மானியத் திற்கும் மணியங்கணக்குக்குக் கைக்கொள்வரில் வயிராவதி முதலியை வைத்து அவர்களுக்கெல்லாம் ஓலைப்பட்டையமும் பாக்கு வெற்றிலையும் கொடுத்துச் சமய முதலி நிகுதிசெய்த பின்பு சமய முதலியும் அந்தக் திருமுட்டவனம் காத்திருந்த நாககாளி என்கிற துர்க்கைக்குச் சோழ னைக் கொண்டு உத்தரவாசல் கோவிலும் கட்டிவைத்து உத்தம பண்டிதரைக் கொண்டு அந்த துர்க்கையை நிலைநிறுத்தி புண்ணி யாங்க அஷ்டமந்திரப் பிரதிஷ்டையும் செய்வித்தார்கள்.

அவர் செய்வித்த பின்பு கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரய பூமி கொண்டு துர்க்கை ஆலயத்திற்கு மான்யம் பத்துமிடா விரைப்புப் புஞ்செய்யும் பத்துமிடா விரைப்பு நஞ்செய்யும் விடுவித்து விட்ட மான்ய பூமி கண்டு சூலக்கல் நாட்டும் பொடிவித்தார். அந்த துர்க்கை யாலயத்திற்கு விட்ட மானியத்தில் சமய முதலிக்குப் பத்தி

லொன்றென்று இந்த துர்க்கை யாலயத்தில் சாசனம் பொடிவித்துக் கரிகாலச் சோழன் நிகுதிசெய்த பின்பு சமய முதலியும் அந்த துர்க்கை ஆலய ஊழியத்திற்கு ஆதிசோகி கோரக்கநாதர் வர்க்கத்தில் வெள்ளைப் பண்டாரத்தை வைத்து அவனைக் கொண்டு துர்க்கைக்கு அபிஷேக தூப தீபாராதனை முடிப்பித்து அந்த முகத்தில் துர்க்கைக்கு ஆடு பன்னி கோழி அறுத்துப் பலியூட்டி வைத்து நாம் முன் சொன்ன முப்பலியும் வந்ததென்று துர்க்கைக்கு ஒப்பிவித்து அந்த முகத்திலவ் வூரிலுள்ள குடிவரிசை சனங்களுக்கும் நீங்களிந்த துர்க்கைக்கு வருஷமொன்றுக்கு ஒரு திருநாள் நடத்தி வைத்து (அவர்களுக்குக்) கட்டின வீடுதோறும் விளக்கும் பொங்கலும் ஆடு பன்னி கோழி இந்த முப்பலியும் வருஷமொரு எருமைக்கிடா பலியும் ஒப்பித்து வாருங்களென்று அவர்களுக்கும் கட்டுச்செய்து அந்த துர்க்கைக்கும் நீயு மிந்தப்படி அவர்களிடத்தில் பலிகளை வாங்கிக்கொண்டு அவர்களுக்கும் இந்தக் கிராமதேவதையாயிருந்து அவர்களை ரக்ஷித்து வாவென்று அந்த துர்க்கைக்குச் சமய முதலி கட்டுச்செய்தபின்பு கரிகாலச் சோழன் சேரன் சமய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப் பச்செட்டியும் மற்றுள்ளபேருமாக அந்தத் திருமுட்டமென்கிற ஊரையும் வெள்ளியாறும் பொன்னுறும் பச்சையாறும் கல்லாறும் காஞ்சியாறும் பெருகி வருகிறதைக் கண்டு இந்த வெள்ளியங்கிரி யிருப்பதற்கும் இந்த நதிகள் பெருகி வருவதற்கும் அந்த வெள்ளியங்கிரி அடிமுட்டத்தில் அந்த நதிகள் பெருகிவரும் கரைச்சார்வில் இந்தத் திருமுட்டமென்கிற ஊர் இருப்பதற்கும் பார்த்து அவர்களெல்லாம் சந்தோஷப்பட்டுக்கொண்டு இந்த ஊர் அரசவனத் திருப்பேரூருக்கும் அதிகம் திருமுட்டநல்லூரென்று அரசவனத் திருப்பேரூர்க்கு நல்லூர் திருமுட்டநல்லூர் என்று சொன்னுர்கள். கரிகாலச் சோழன் சேரன் சமய முதலி சடையப்பன் கஸ்தூரி ரங்கப்பசெட்டியும் மற்றுள்ளபேருமாக அந்த ஊரைப் பார்த்து அரசவனத் திருப்பேரையூருக்குத் திருமுட்டமென்று கட்டிவைத்த ஊர் நல்லூரென்று அவர்கள் சொன்ன படியினுலே அந்தஊருக்குப் பேர் திருமுட்டநல்லூரென்று பேராயிற்று. திருமுட்டநல்லூரென்று பேரானபின்பு கரிகாலச்சோழன் சேரன் ஆதிகருவூர் முதலாகத் திருப்பேரூர் வரைக்கும் கொங்கேழு சிவாலயமும் அதினுள்பட்டடங்கிய சிவாலயமும் அதனுள்பட்ட விஷ்ணுவாலயமும் சுப்பிரமணியத் திருவாலயமும் மடவாலயமும் குருவாலயமும் அதனடுத்த துர்க்கையாலயமும் சேரகொங்கு நாட்டில் ஆதி கருவூர்முதல் கொண்டு வெள்ளியங்கிரி அடிமுட்டங் கடைவரைக்கும் கட்டிமுடித்த

சோழன் முன் ஜன்ம சரிதை

பின்பு சோழன் முன் ஜன்மாந்திரத்தில் விறகு தலையனுயிருந்து மெத்ததவுதாய்ப்பட்டு கங்கையில் விழுந்து சாக வேண்டுமென்று அந்தக் கங்கையில் குதிக்கும் போது அந்த கங்காபரமேசுவரி ஆனவள் அந்த விறகு தலையனைப் பார்த்து நீ இன்றைக்குக் குதிக்கவேண்டாம் நாளைக்கு மூன்று செங்

கல் சுட்டுக் கரத்திலிடுக்கிக் கொண்டு வந்து கங்கையில் குதி யென்று கங்காபரமேசுவரி சொல்ல அவனுமப்படியே குதிக்க அந்தக்கங்கையும் அவன் சீவனை வாங்கிக்கொண்டு அந்தக்கல்லிடுக்கின அவதானமாய்ச் சதாசிவன் சமூகத்தில் அழைத்துப் போய்விட சதாசிவன் கங்கை யைப் பார்த்து நீயுமிவனும் வந்த கார்யமென்ன வென்று கேட்க அவர் கேட்டபடிக்குக் கங்காபரமேசுவரியும் அப்ப இந்த விறகுதலை யனுகிறவன் ஆதிகருவூர் முதல்கொண்டு வெள்ளியங்கிரி அடிமுட்ட வரைக்கும் முன்னூற்றறுபது சிவாலயமும் முப்பத்திரண்டணை யும் திருமுட்டமும் வெள்ளியங்கிரி அடிமுட்டதலைஅணை முதல் கொண்டு பவானி கூடல் உபயகாவேரிக்கரைவரைக்கும் சேரகொங்கு நாட்டில் தான் கட்டிவைக்க வேணுமென்று யிவனனுன் பேரும் கரை அருகில் அனேக காலமாய்த் தவசுசெய்து சலித்து ஒரு நாள் என் பொப்புனம் என்று விழுந்திறந்தான். இறந்தவனை(ச்சதாசிவ)த் தேவரிடத்திற்குக் கொண்டுவந்து விட்டேன். அவன் முன்னூற்றறு பது சிவாலயமும் முப்பத்திரண்டணையும் கட்டிவைக்கிறேனென்று அருந்தவம் பண்ணினதிற்குச் சாக்ஷி அந்த மூன்று செங்கல் லென்று அவன் கொண்டுபோன செங்கல்லைக் கங்காபரமேசுவரி வாங்கிச் சிவன் பாதத்தில் வைத்து முறைசெய்தாளாம்.

அவள் முறைசெய்தபடிக்குச் சதாசிவன் கங்காபரமேசுவரி யையும் விறகுதலையன் உயிர் நினைவையும் பார்த்துச் சந்தோஷப் பட்டுக்கொண்டு சதாசிவன் அந்த விறகுதலையன் உயிரை...........முன் மகன்........ரையூர் சோழனுக்கு ஆண்புத்திரனில்லாமல் அன்னைபோல அரியதவம் செய்கிறான். ஆயிரங்கோடி தவம்...........அரசர் வயித்தில் பிறக்கவேண்டும். ஆயிரம்கோடி பாவம்செய்து ஆளுக்காள் சுமக் கச் சிவியான் வயிற்றில் பிறக்கவேண்டும். அப்படியாகிலும்....உன்னை யும் கங்காபரமேசுவரி ஆனவள் மெத்த தவுதாய்ப்பட்டு அனேகம் தபசு செய்தானென்று சொல்லவந்தாளே. அதுவும் நா........கேட் டது சரி. ஆனல் நீ போய் உரையூர்ச் சோழன் மனையாள் சி........ மான (சின்னம்மாள்) வயிற்றில் கர்ப்பமாய் தரித்...............புத்திரனய்ப் பிறந்து வளர்ந்து பிரவுடவனுகிச் சோழமண்டலம் சீமைக்கு அதிகாரக் கர்த்தனுகிய ராஜநீதி முறைமை யொழுக்கம் (தவருமல்) நடப்பித்து அவ்விடத்திலுண்டாகிய சிவாலயம் விஷ்ணுவாலயம் சுப்பிரமணியத் திருவாலயம் மடவாலயம் குரு(வாலயம்) ஆக இந்தப் பாஞ்சாலய முதலாகியதும் அடுந(அதன)டுத்த துர்க்கை ஆலயங்களும் விசாரித்துக் குடிநீதி துரைநீதி குருநீதி (நிய)தி ஒரு ஒழுகும் தவருமல் குடிமாவு துரைமாவு குருமாவு ஸ்ரீமாவு இன்னுலுமாவும் தவருமல் விசாரித்து அவரவர்க்கு அச்சுக்கட்டுப் பண்ணி அந்தச் சோள தேசத்தில் நிகுதி செய்த் பின்பு ஆதி காஞ்சிபுர காமாச்சி

தளவ(ரிசையி)லிருக்கின்ற செப்பேட்டுப் பட்டையத்திலுள்ள...........ச் சேர கொங்கு நாட்டில் சேரமாம் பெருமாளென்னும் சேரனும் நீயும் ஒரு முகப்பட்டுக்கொண்டு ஆதிகருவூர் முதல் கொண்டு மேலைத் திருப்பேரூர் வரைக்கும் கொங்கேழு சிவாலயமுங் கட்டிவைத்துக் கருவூர் முதற்கொண்டு வெள்ளியங்கிரி முட்டங்கள் கொங்கேழு சிவா லயத்திற்கும் அதனுள்பட்ட முன்னூற்றறுபது சிவாலயமும் அதனுள் பட்ட விஷ்ணுவாலயமும் (சுப்பிரம)ணியத் திருவாலயமும் (மட)வாலய மும் குருவாலயமும் அதனடுத்த துர்க்கை ஆலயமும் கட்டிவைத்தபின்பு வெள்ளியங்கிரி முட்டம் தலையணைவரையில் கொண்டு அதனுள்பட்ட முப்பத்திரண்டணையும் (ப)வானிக்கூடல் உபய காவேரிக் கரை வரைக்கும் கட்டி வையென்று கரிகாலச் சோழனுக்குச் சதாசிவன் முன் ஜன்மாந்திரத்தில் அமைத்தபடியினலேயும் கரிகாலச்சோழன் முன் ஜன்மாந்தரத்தில் (அமைத்தப)டிக்குக் கட்டி வைக்குறேன் என்று சதாசிவன் பாதத்தில் அறிக்கை செய்து வந்த...........த் தினலேயும் கரிகாலச் சோழன்........ அவர்களிரண்டு பேரும் ஒரு முகப்பட்டுக் கொண்டு ஆதி காஞ்சிபுரத்துக் காமாச்சி தவிசில்லிருக் கின்ற செப்பேட்டுப்பட்டையத்தில் உள்ளபடிக்குச் சமய முதலி தன் கைப்பட்டி ஒழுகின் விவரம் வாசித்துக் கொடுத்தபடிக்கு விவரங் கண்டு ஆதிகருவூர் முதல் கொண்டு மேலச்சிதம்பரத் திருப்பேரையூர் வரைக்கும் சோழன் சேரன் கொங்கேழு சிவாலயமும் கட்டிவைத்து ஆதிகருவூர் முதல் கொண்டு கரிகாலச்சோழன் சேரன் வெள்ளியங் கிரி அடிமுட்டம்வரைக்கும் கொங்கேழு சிவாலயத்திற்குட்பட்ட முன் னூற்றறுபது சிவாலயமும் அதினுள்பட்ட சிவாலயமும் அதனுள்பட்ட விஷ்ணுவாலயமும் சுப்பிரமணியத் திருவாலயமும் மடவாலயமும் குரு வாலயமும் ஆக இந்தப்பத்...........ல்லாம் முதலாகியதும் அதனடுத்த துர்க்கையாலயமும் கட்டிமுடித்த பின்பு கரிகாலச் சோழன் பூலோக கைலாச வெள்ளியங்கிரி அடிமுட்டம்தலையணை முதல் கொண்டு பவானிக் கூடல் உபயகாவேரிக்கரைவரைக்கும் முப்பத்திரண்டணை யும் கட்டி கரிகாலச் சோழன் முடிப்பித்த பின்பு கரிகாலச்சோழன் கட்டி முடித்த நாள் விவரங்காண்க.

கோயில் திருப்பணி கட்டிமுடித்த நாள் கலி 3556

கலியுகச்சகாத்தம் 3556-க்கு மேல் செல்லா நின்ற விசயவருஷ தைமீ 12உ சுக்கிரவாரம் தசமியும் பெற்ற நாளில் கரிகாலச்சோழன் சேரன் சேரகொங்கு நாட்டில் முன்னூற்றறுபது சிவாலயமும் முப்பத்திரண்டணையும் கட்டிமுடித்துத் தீர்ந்த நாள் அந்த நாளென்றறியவும். கண்டறிந்தபின்பு கரிகாலச்சோழன் சமைய முதலி சடையப்பன் கத்தூரிரங்கப்பச்செட்டியும் மற்றுள்ளபேருமாக அந்தத் திருமுட்டநல்லூர் தலத்தில் பெருகிவரும் வெள்ளிநதி பொன்னிநதி

பச்சைநதி கல்லுநதி காஞ்சிநதி ஆகப் பஞ்சநதியிலும் எல்லோரும் தீர்த்தமாடிவந்து திருநாகீசுரமுடையாருக்கு அபிஷேக தூப தீபாருதனை முடிப்பித்து எல்லோருமவரை தரிசித்துக் கொண்டு சங்குநதி, கூர்மநதி, சர்ப்பநதி, கருடநதி, அனுமந்நதி, ராமர்நதி, இடும்பநதி, கடம்பநதி, மயில்நதி, வசவநதி, அன்னநதி, ஆகுவாகனநதி இது முதலான நதிகளும் கண்டு இதனுள்பட்ட பல நதியெல்லாம் கண்டு கரிகாலச் சோழன் சேரன் சமய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் மற்றுள்ள பேருமாக மெத்த ஆச்சரியப்பட்டுக் கொண்டு இருக்கும்போது கரிகாலச் சோழன் சேரன் மற்றுள்ளவர் எல்லோரையும் வரவழைத்துக் கொண்டு வெள்ளியங்கிரி முடிக்கும் கீழ்ப்பால் வட்டபாறைக்கு எல்லேவரையும் வரவழைத்துக் இருத்திக் கொண்டு சமயமுதலியை யழைத்து இந்த கிரிக்குப் பூலோக கைலாசமாவதென்ன வென்று கேட்டார். அவர் கேட்டபடிக்குச் சமய முதலி தம்முடைய கைவிவரப்பட்டியை வாசித்துக் கொடுத்தார். அவர் வாசித்துக் கொடுத்த விவரங் காண்க.

கிரிவரயாறு

கந்தபுராண சாரம்

முன் கிருத(கிரேதா)யுகத்தில் தேவர்களையும் கூட்டிக்கொண்டு சிவனை நிந்தனைசெய்ய வேண்டாம் என்கிறதாக வேள்வி அக்கினி வளர்க்கும்போது ஆதிசிவகயிலாசத்திலிருக்கின்ற சிவனுக்கு வெகுகோப சோப வேர்வையாகி உத்தரமுகத்தில் வேர்வையை வாரி மணிப்பாறையின் பேரிலெறிந்தார். அப்பாறை வெடித்து அதில் ஆயிர முகத்துடன் அகோரவீரேசுரன் பிறந்து சிவனைத் திட்டித்துப்பார்த்து எனக்கெதிர் எங்கே என்று கேட்டார். அவர் கேட்டபடிக்குச் சிவன் உனக்கெதிர் தாருகாவனத்தில் தக்கமுனியும் முப்பத்து முக்கோடி தேவர்களும் போவென்று ஏவ அவர் ஏவும்படிக்கு அகோரவீரேசுரன் போய் முப்பத்து முக்கோடி தேவர்களையும் ஜெயித்துத் தக்க முனியையும் தலையைவெட்டி அவன் வளர்த்த யாகவேள்வி அக்கினியில் பொடிவித்து வீரமுடனே வெற்றிவாகைமாலை சூடித் தன்னிடத்திற்கு வந்தான். வந்து தான் செயித்த சமரமுனையாண்மை சிவனுக்கறிக்கை செய்தான். அவனறிக்கை செய்யச் சிவன் மெத்த ஆலோசித்துக்கொண்டு முப்பத்து முக்கோடி தேவர்களையும் தக்கமுனியுடனே தேவர் முனிவரையும் சங்கரித்துப்போட்டு நாமிருந்தாவதென்னவென்று அவர் சித்தமிரங்கி திருமுகம் பார்த்து மாண்ட தேவருக்கும் முனிவருக்கும் உயிர் கொடுப்பித்து அழைப்பித்தார். அழைத்தபடிக்குத் தேவரும் முனிவரும் வந்து சிவனைத் தொழுதார்கள் தொழுத முனிவரையும் தேவரையும் சிவன் திருமுகம் பாராமல் நீங்கள் சிவ நிந்தை செய்து அவயோகமாகவல்லவோவுளது. இனிமேல் நீங்கள் இன்று முதற்கொண்டு இந்தக் கிரேதாயுகவாண்டில்

சிவதரிசனம் காணாமல் சிவயோகமும் செய்யாமல் அவரவர்கள் ஆசார நிலை குலையும். மறுத்துத் தொண்ணூற்றோராயிர வருஷம் சூரருக்கு அடிமை ஆள்பட்டு அவன் வீட்டு வெள்ளாட்டிபோல வாதப்படுவீர்க ளென்று சிவன் முனிவரையும் தேவரையும் சபித்தார். அவர் சபித்த சாபம் தேவரும் முனிவரும் கைஏற்றுக்கொண்டு எங்கள் சாபம் எப்பொழுது தீருமென்று தேவரும் முனிவரும் சிவனுக்குச் சரணம் செய்தார்கள். சரணம் செய்த தேவருக்கும் முனிவருக்கும் சிவன் உங்கள் சாபம் தீருநாள் திரேதாயுக ஆண்டில் 91000 வரு சென்ற பின்பு சுப்பிரமணியத் தேவர் வந்து உங்கள் சாபம் தீர்ப்பாரென்று சிவன் தேவருக்கும் முனிவருக்கும் சொல்லி அவர்களையும் மனுப் பித்துப் போட்டு இனிமேல் நாம் சிவரூபம் கொண்டிருந்தால் தேவரும் முனிவரும் வந்து முறை செய்குவார்களென்று சிவரூபத்தை மறைத்து மலையாக வளர்ந்தார். வளர்ந்ததற்கு விவரம். தக்ஷிண பூமியில் பிரும கிரி விஷ்ணுகிரி ருத்திரகிரி வெள்ளியங்கிரி நீலகிரி ஆக இந்த ஐந்து கிரியின் கண்டது சரியே. அந்த ஐந்து கிரிக்கும் விவரம். சிவனுக்கு ஐந்து முகம். அந்த முகத்திற்கு விவரம். பிருமமுகம், விஷ்ணுமுகம், ருத்திரமுகம், மயேசுரமுகம், சதாசிவமுகம் ஆக ஐந்து முகமும், கெட்டது சரியே. அந்த ஐந்து முகத்திற்கும் ஐந்து ஐந்து கிரிக்கும் விவரம். அந்தப் பிரம்மமுகமாவது பிருமகிரி, விஷ்ணுமுகமாவது விஷ்ணுகிரி, ருத்திரமுகமாவது ருத்திரகிரி, மயேசுவர முகமாவது வெள்ளியங்கிரி, சதாசிவமுகமாவது நீலகிரி. சதாசிவன் நிலையை மாலும் அயனும் அடிதலை காணார்கள். அத்தன்மை போல நீலகிரியை அடி தலை மாலும் அயனும் தேவரும் முனிவரும் சித்தரும் கண்டதில்லை. அப்படியாகிலும் மூள்வது. அப்படி ஐந்து முகத்துடனே இருந்த சிவன் ஐந்து கிரியாய் வளர்ந்து தேவருக்கும் முனிவருக்கும் காண்பி யாமல் மறைந்து போகத் தேவரும் முனிவரும் சிவனமைத்தபடிக்குத் தென் சமுத்திரக்கரை திடர்நடுவிலிருக்கின்ற வீரமயேந்திர புரத்துப் பத்மாசுரன் கையில் சிக்கி மெத்த நவுதாயப்பட்டு மெலிந்து மெய்மறந்து அவரவர் செய்யும் தவு[சிவ]சையு மறுத்துத் தெய்வபூசை சாலக்கிராமங்களெல்லாம் காடு செடியிலே எறிந்து விட்டுச் சீர்காழித் தலத்திலே போய் தேவர் முனிவர்களெல்லாம் மூங்கிலாய் முளைத்துத் தேவரும் முனிவரும் மூங்கிலாய் வளர அப்படி வளரும் நாளில் அகத்திய மாமுனிவர் வடகயிலாசத்தில் சிவனிருந்தால் நாம் பொதிய மலையில் இருக்கத் தகும் அவர் கயிலை விட்டு எழுந்தருளிக் காடு மலையில் மறைந்து போக நாம் பொதிய மாமலையில் இருந்தால் பூமி தென் கீழாய்ச் சாயும். நாம் பொதியத்திலிராமல் அவர் கயிலாசத்தி லிருந்தால் பூமி வடகீழாய்ச் சாயும் என்று அகத்திய மாமுனிவர் சிவன் கயிலாசத்தில்லாதிருக்க நாம் பொதியத்திலிருந்தால் பூமிக்கு லயம் வரும் என்று அகத்திய மாமுனிவர் சிவன்

கைலாசம் விட்டெழுந்தருளி யாவருக்கும் காணுமல் காடு மலையாய் மறைந்துபோன நாளில் அகத்திய மாமுனியும் அந்நாளில் பொதியம் விட்டு எழுந்தருளி இப் புவனத்திலுண்டாகிய கம்பநதி பம்பநதி காவேரி கோதாவரி துங்கபத்திரை கிருஷ்ணவேணி பம்பைநதி வேதநதி சரஸ்வதிநதி இந்த ஒன்பது நதியும் இதனுள்பட்ட பல நதி ஆயிரங்கோடி நதியையும் வருண சிவமந்திர முகாந்திரத்தினலே தியானித்து வரவழைத்து தத்தம்முடைய கமண்டலத்தில் அடைத்துக் கொண்டு அகத்திய மாமுனியும் குடகுமலைச்சார்வு குகை வாசத்தி லிருந்து கொண்டு யாவரும் அறியாத தாவில் கமண்டலத்தையும் வைத்துப் பாங்கு பதனம் செய்து கொண்டு தாமும் குகைவாசத்தில் இருந்து கொண்டு சிவனை நோக்கி இந்த நாள் என்று விடியுமென்று இரண்டு கண்ணையும் மூடி அவரும் அருந்தவம் செய்து வரும் நாளில் தேவரும் முனிவரும் சீர்காழியில் மூங்கிலாய் வளர்ந்து விற்றுத் தீர்ந்து இப் புவனத்தில் காடு செடி மலையிலும் கிரியிலும் இந்த விற் றெ(த்தெ) (வெதிர்) என்பது பரந்து பூமியில் முளைத்துப் பிரபலமாகிய பின் மூங்கிலுக்குப் பெயர் தேவதாவிசேஷமென்றும் பேராயிற்று. அப்படி அந்நாளில் தேவருக்கும் முனிவருக்கும் சிவன் சபித்த தொண்ணூற்றேராயிரம் வருஷ நாளில் சென்று அவர்களுக்குச் சாபம் தொலையும் நாளாகிய சீர்காழியில் வெதி(விது)ராய் முளைத்துத் தவசுயிருந்த தேவருக்கும் முனிவருக்கும் (மது)வெதிரென்னும்........ ரூபமறுத்துத் தேவரும் தேவராகி முனிவரும் முனிவராகி எல்லோரும் ஒன்ருய்க் கூடி இனி நாமெல்லோரும் போய்ச் சிவனைத் தேடிப் பார்த்துக் கொண்டு சிவன் பாதத்தில் சூரன் (நம்மளை) நம்மை நிக்ரகம் செய்த நியாயமெல்லாம் சிவனுக்கு நாம் முறைசெய்ய வேணுமென்று தேவரும் முனிவருங் கூடி ஆலோசித்துக் கொண்டு சீர்காழித்தலம் கடந்து மேற்கே முகமாக வந்து திருவண்ணமலைக்கு வந்து திருவண்ணமலையில் சிவன் அவ்விடத்திலிருப்பாரென்று பார்க்கும் போது அங்குக் காணுமல் கயிலாசம், பிரம்மலோகம், வைகுண்டலோகம், தவலோகம், சிவலோகம், சத்யலோகம் மகாலோகம், இகலோகம், பரலோகம், இரேழு பதிநான்கு லோகம், சத்தி முத்தி பாதாளம், ஆயிரத் தெட்டண்டம், இருநூற்றிருபத்திநாலு புவனம், சப்தசாகரமாகிய புவனம், இருபத்தோராயிரங் கோடி காத விஸ்தீரணம் உடைய புவனத்தில் தேடிப்பார்த்த தேவரும் முனிவரும் சிவனையும் நந்தியையும் காணுமல் திருவண்ணமலையி லிருக்கின்ற தேவேந்திரமகாராயனிடத்திற்கு வந்து சொன்னர்கள். அவர்கள் சொல்ல தேவேந்திரமகாராயனும் மற்றுள்ள தேவரும் முனிவரும் கேட்டு மெத்தத் துக்கித்துக்கொண்டு இருக்கும்போது அந்நாளில்... மகா முன் வேங்கை மரப்பொட்டியுள்ளொளிந்திருந்து அந்தக் காலனுளப் போச் சென்று கண்டு அந்த மரப்பொட்டை விட்டு

வெளியிலே வந்து அவரும் தேவரையும் முனிவரையும் தேடிக்கொண்டு திருவண்ணுமலைக்குப் போய்த் தேவரையும் முனிவரையும் கண்டார். அவர் கண்ட பின்பு தேவரும் முனிவரும் நாரத மாமுனியைச் சிவனிருக்கும் தாவு நிலை கேட்டார்கள். அவர்கள் கேட்டபடிக்கு நாரத மாமுனியும் சிவன் சிவரூபமறுத்துப் பஞ்சக்கிரியாய் வளர்ந்து இன்ன தாவில் கிரியாய்வளர்ந்து இருக்கிருரென்று நாரத மாமுனி தேவருக்கும் முனிவருக்கும் சொன்ஞர். அவர் சொன்னபடிக்குத் தேவரும் முனிவரும் கேட்டுச் சந்தோஷப்பட்டுக்கொண்டு தேவரும் முனிவரும் நாரத முனியை வரவழைத்துக்கொண்டு திருவண்ணுமலை வனங்கடந்து தக்ஷிணமுகமாகப் புறப்பட்டு வரும்போது புவனத்தில் ஜலங்களில்லாமலும் மழைமாரியில்லாமலும் காடுபு(வ)னமெல்லாம் வெந்து கருகி புஷ்பஜாதிகளெல்லாம் தீய்ந்திருப்பதைக் கண்டு தேவேந்திர மகாராயன் நாரதமாமுனியை யழைத்துச் சூரன் செய்த நிக்கிரகத்திஞலே மழைமாரியற்றுப்போஞலும் இப்பூமியிலுள்ள ஒன்பது நதியும் அதனுள்பட்ட ஆயிரம் கோடி நதியும் ஜலம் வாங்கிப்போக வந்த காரியமென்னவென்று தேவேந்திரன் நாரதரைக் கேட்டார். அவர் கேட்டபடிக்கு நாரதரும் அகத்திய மாமுனிவன் தம்முடைய கமண்டலத்தில் தாய்நதி ஒன்பது நதியையும் அதனுள்பட்ட பல நதியையும் பிடித்தடைத்துக்கொண்டு போய் குடகுமலைச் சார்வில் வெள்ளியங்கிரி மலைப் பொதும்பில் கமண்டலத்தைத் தருவித்து அரிய தவம் செய்கிருரென்று நாரதர் தேவருக்கும் தேவேந்திரருக்கும் முனிவருக்கு மிது விவரம் சொல்லத் தேவரும் முனிவரும் தேவேந்திரனும் நாரத முனியை அந்த நதியை யழைப்பதற்கு எப்படி ஆகுமென்று கேட்டார்கள். அப்படிக் கேட்டபடிக்கு நாரதரும் தேவேந்திரன் முதலாகிய தேவருக்கும் முனிவருக்கும் நீங்கள் எல்லோரும் போய்க் கன்னிகாவனம் திருவாவினன்தலத்தில் சனீசுவரனை நோக்கிப் புரட்டாசி மீ௵ எம்பிரான் விரதம் என்று ஐந்து சனிவாரம் பிடித்து முடித்துக்கொடுத்தால் அப்பொழுது எம்பிரான் கிருபையாலே சனியனும் உங்களுக்கு வெளிப்பட்டுக் காக்ஷிகொடுத்து அந்த நதியை வரவழைத்து உங்கள் மனதிலுள்ளபடியாய் முடித்துக் கொடுப்பாரென்று நாரதர் சொல்லத் தேவேந்திரன் முதலாகிய தேவரும் முனிவரும் கேட்டு அதுவே காரியமென்று எல்லோரும் கன்னிகாவனத் திருவாவினன்குடித் தலத்திற்குப் போய் அத்தலத்தில் தேவேந்திரன் முதலாக எல்லோரும் புரட்டாசிமாதத்தில் எம்பிரான் விரதமென்று சனியனை நோக்கி ஐந்து சனிவாரம் பிடித்து அரியதவம் முடித்தார்கள். அவர்கள் முடித்தபடிக்குச் சனியனும் சித்தமிரங்கித் திருவுளம் மகிழ்ந்து எம்பிரான் கிருபையாலே அவர்களுக்காக வாகனத்துடனே வந்து காக்ஷிகொடுத்தார். அவர் காக்ஷி கொடுத்தபடிக்குத் தேவேந்திரன் முதலாகிய தேவரும் முனிவரும் சனியனைக் கண்டு தரிசித்துக் கொண்டு தாங்கள் கிரேதாயுகவாண்டில் தொண்ணூற்றே

ராயிர வருஷம் சதாசிவன் வாக்குப்படியாகும். உம்முடைய மகிமை யாலும் அசுரருக்கு அடிமையாள்பட்ட படுதுயரும் இப்புவனத்தி லுள்ள நதி மறுத்த பரிதாபமும் சனியீசுரருக்கு முறை செய்தார்கள். அவர்கள் முறை செய்தபடிக்குச் சனியனும் கேட்டுத் தேவேந்திரன் முதலாகிய தேவருக்கும் முனிவருக்கும் நீங்களிந்தத் தலத்தில் இன்று முடித்தாப்போல புரட்டாசி மாதத்தில் கன்னிகா வனத் திருவாவினன் குடித்தலத்தில் எம்பிரான் விரதமென்று புரட்டாசி மாதத்தில் ஐந்து சனிவாரம் பிடித்து எம்பிரானுக்கு அறிக்கை ஒப்பிவித்து வாரூே மென்று எல்லோரும் எம்பிரானைப் பிருர்த்தனை பண்ணிக் கொள்ளுங் கள். பண்ணிக் கொண்டால் உங்களுக்கு எம்பிரான் கிருபையினுலே உங்களுக்கு இன்று முதல் கொண்டு நவகிரகத் தோஷப் பகைகளும் தீரும். தீர்ந்தபடிக்கு இப்புவனத்திற்குக் கிரகபகைகளும் துலேந்து போன நதியும் வரும். வந்து புவனமும் செழிக்கும். அது செழித்த படிக்கு உங்களுக்கும் செழிப்பு முண்டாகிச் சதாசிவன் தரிசினமும் கொடுத்துச் சிவசுப்பிரமணிய தேவரை அவர் அழைக்கவிட்டுச் சிவசுப்பிரமணிய தேவர் முகாந்தரத்தினுலே உங்கள் சிறையும் மீட்பித்து உங்களைத் தெய்வலோகத்தில் குடிவைப்பாரென்று சனீ சுரன் தேவேந்திரன் முதலாகிய தேவருக்கும் முனிவருக்கும் திருவாக்குக் கொடுத்தார். அவர் கொடுத்தபடிக்குத் தேவரும் முனிவரும் கேட்டு அவரிடத்திலே அது வாக்கு வரம் வாங்கிக் கொண்டிருக்கும் போது அந்நாளில் சனீசுவரன் காக வ(ா)க)னத் துடன் நீ போய் குடகுமலேச் சார்பில் இருக்கின்ற அகத்திய முனி பல நதியும் அடைத்து மலேப்பொதும்பில் தாபித்திருக்கின்ற கமண்டலத்தை நீ அவதான மகிமையால் தட்டிக் கவிழ்த்து நதிகளையும் வெளிப்படுத்தி வரவழைத்துக்கொண்டு அவர் தபசிலிருக் கிருர். அவர் தவசையும் குலேத்து அவரைத் தவசுநிலேவிட் டெழுப்பி அவரையும் வரவழைத்துக்கொண்டு அந்த நதியையும் வரவழைத்துக் கொண்டு அரைக்ஷணத்தில் வாவென்று காகமுனிக்குச் சனீச்சுவரன் கட்டுச் செய்தார்.

அவர் கட்டுச்செய்தபடிக்குக் காகமுனியும் முறைக் (மெளரை) குச் சம்மதித்துக்கொண்டு குடகுமலேச் சார்வுக்குப் போய் அந்த மலேச்சார்வும் மலேப்பொதும்பில் தாவித்திருக்கின்ற கமண்டலத்தைக் காக முனிசுரூபங்கொண்டு காலாலே தட்டிக்கவிழ்த்து அது கவிழ்த்த படிக்கு அந்த நதிகளெல்லாம் வெளிப்பட்டுப் பெருகிற்று. அது பெரு கும்படிக்கு அந்த நதிய(க)ள் பெருகும் இரைச்சல் கேட்டு அகத்திய மாமுனிவர் தவசுநிலே சிவசத்தி (தி)யானத்தை மறுத்து அந்தக் கஷ்டநாள் இப்புவனத்திற்குத் து(தொ)லேந்ததோ வென்று கண்

விழித்துப் பார்த்தார். அவர் பார்த்தபடிக்கு அவர் கை கமண்டலமும் கவிழ்ந்து அந்த நதிகளெல்லாம் சிதறிப் பெருகிற்று.

பெருகினபடி கம்பைநதி அம்பைநதி காவேரி கோதவரி கிருஷ்ணவேணி பம்பைநதி வேதநதி சுரசுவதி சிவகங்கைநதி இந்த அஷ்ட நதியும் அந்தக் குடகுமலைச் சார்வில் பூமி பாரத்தில் இறங்கி பூமியுள் காவேரியாக நடந்து எப்பொழுதும் தாமிருக்கின்ற தாவுதலத்திற்கு வந்து பூமியிலுற்பத்தியாய் ஜலம் மிகுத்து பூமி விட்டு வெளியேவந்து ஜலம் கு(கொ)ழித்துப் பெருகி அஷ்டநதியென்னும் பேராயிற்று. ஆனபடிக்குக் காவேரி நதியும் அந்தக் குடமலைச் சார்வில் இருந்து பூமி பார்த்து மேல் நடந்து அறி(ரி)ய திருமலைச்சார்பு காடு வனம் புனம் இது முதலாகிய மலை நாடு தேசமெல்லாம் சுற்றிக் காவேரிக்கு வந்து ஜலப் பொழி (பிரள) யமாய்(ப்) பெருகி(க்) காவேரி நதியென்னும் பேராயிற்று. ஆனபடிக்கு அந்த அஷ்டநதியுடனே சேர்ந்து நவநதி பெயராயிற்று. ஆனபடிக்கு அதினுள்பட்ட ஆயிரங்கோடி நதியும் அந்தக் குடகுமலைச் சார்வும் மலைப்பொதும்பில் பூமிபாரத்திலிறங்கிப் பூமின்காவழியே நடந்து தாமிருக்கின்ற தாவுதலம் போய்ச் சேர்ந்து தாம் எப்போதுமிருக்கின்ற தாவு தலத்தில் பூமியும் கண்ணில் உற்பத்தியாகி பூமி விட்டு வெளியே வந்து ஜலம் கொப்பளித்துப் பெருகி இப்புவனத்திலாயிரங் கோடி பல நதியென்னும் பேராயிற்று. ஆனபின்பு காகமுனியும் சனியன் சொல்படிக்கு நதியுமழைத்துக் கொண்டு அகத்திய முனியுமழைத்துக் கொண்டு கன்னிகாவனத் திருவாவினன்குடித் தலத்திற்குப் போனார். போய்ச் சனியனிடத்தில் தான் போய்வந்த கார்ய விவரமெல்லாம் சொல்லச் சனியனும் கேட்டுச் சந்தோஷமாகித் தேவர்களிடத்தில் அனுப்பித்துக் கொண்டு அவர் மாய்கையாய் போனார். அவர் போன பின்பு தேவேந்திரன் முதலாகிய தேவரும் முனிவரும் பூலோகத்தில் முன்னிருந்த நதிகளெல்லாம் பெருகி பூலோகம் செழித்து இருப்பதைக் கண்டு சந்தோஷப்பட்டுக்கொண்டு அந்தக் கன்னிகாவனத் திரு வாவினன்குடித் தலத்தில் சிவாசல நதியும் கண்டு அந்த நதியில் எல்லோரும் தீர்த்த மாடி தேவேந்திர மகாராயன் அந்தத் தலத்தில் எம்பிரான் கிருபையாலே கற்பனை விக்கிரகம் சனியன் பேருக்கு சனீசுரவிக்கிரகம் ஸ்தாபித்துப் பூசித்துத் தரிசித்துக் கொண்டு தேவேந்திரன் முதலாகிய தேவரும் முனிவரும் நாங்கள் வருஷமொரு திருநாள் இந்தத் தலத்தில் புரட்டாசி மாதம் எம்பிரான் விரதமென்று சனியனை நோக்கி ஐந்து சனிவாரம் பிடித்து முடித்து ஒப்பித்து சதுர்யுகத்திற்கும் நடந்து வருகிறோ மென்று தேவேந்திரன் முதலாகிய தேவரும் முனிவரும் சனியின் விக்கிரகத்தைத் தரிசித்துப் பிரார்த்தனை பண்ணிக்கொண்டு

திருவாவினன் குடி

வானிக்கூடல் கன்னிகாவனத் திருவாவினன்குடித் தலம் கடந்து புன்னைவனவானிக்கூடல் தலத்திற்குப் போனார். போன பின்பு அற்பசி மாதத்தில் வானிக்கூடத்தலத்தில் அவ்வானிக்கூடதுறை உபய காவேரி நதியில் தேவேந்திரன் முதலாகிய தேவரும் முனிவரும் (அற்பது) ஐப்பசி மாதம் துலா முழுக்கு முழுகி முழுகியபின் அந்தத் தலத்தில் தேவேந்திரமகாராயன் வானிக்கூடல்கரை அருகில் மணலைக் கூட்டித் தாபிதலிங்கம் பூசித்து அர்ச்சித்துக் கொண்டபின்பு அந்த லிங்கத்திற்கு நண்ணுவுடையாரென்று பேரும் கண்டு கண்டபின்பு தேவரும் முனிவரும் அந்த லிங்கத்தைக் கண்டு தரிசித்து இருக்கும்போது அந்நாளிலகத்தியமாமுனியும் குடகுமலைச் சாரலிருந்து தேவர்களைத் தேடிவந்தார். அவர் வந்தபடிக்குத் தேவரும் அகத்திய மாமுனியைத் தரிசித்துக் கொண்டிருக்கும்போது அந்நாளில் அகத்திய மாமுனியும் தேவேருக்கு முதலாகிய தேவேந்திரனும் நாரதமுனியைப் பார்த்து அழைத்துச் சதாசிவனிருக்கிறதாவு நிலை எங்கே என்று கேட்டார்கள். அவர்கள் கேட்டபடிக்கு நாரதரும் தேவேந்திரன் முதலாகிய தேவர்களையும் அகத்தியமாமுனியுடனே மற்ற முனிவர்களையும் வரவழைத்துக் கொண்டு பிரம்மகிரி வனத்திற்கு வந்தார். அவர் வந்தபின்பு பிருமகிரி வாசத்திலுள்ள ஆயிரத்தெட்டு இதழ் கமலநதியும் பிருமநதியும் சரஸ்வதிநதியும் அன்னநதியும் சதுர்வேதநதியும் கண்டு அந்தப் பஞ்சநதியிலும் தேவேந்திரன் முதலாகிய தேவரும் அகத்திய மாமுனியுடனே மற்ற முனிவரும் தீர்த்தமாடி ஆடியபின் அந்த கிரிவாசத்தில் தேவேந்திரன் பிருமலிங்கம் தாபித்து அர்ச்சித்தார்.

## அர்ச்சித்தபடிக்கு விவரம்

தேவேந்திரன் முதலாகிய தேவரும் முனிவரும் அவ்வானிக் கூடலத்தலம் விட்டு கார்த்திகைமீ முதல் சோமவாரநாள் பிரும கிரிவாசத்திற்கு வந்து பஞ்சநதியும் கண்டு தீர்த்தமாடி பிருமலிங்கமும் தாபித்துப் பூசித்து அர்ச்சித்தார். அவர் அர்ச்சித்தபடிக்குப் பிரம தேவன் அன்னவர் களத்துடனே வந்து தேவருக்கும் முனிவருக்கும் காக்ஷி(ட்சி) கொடுத்தார். அவர் காக்ஷி(ட்சி) கொடுத்தபடிக்குத் தேவரும் முனிவரும் பிருமாவைக் கண்டு தரிசித்துக்கொண்டு தேவேந்திரன் முதலாகிய தேவரும் முனிவரும் எங்களுக்குச் சிவதரிசனம் என்றைக் காகும்? கஷ்டநாள் என்றைக்குத் து(தொ)லையுமென்று பிருமாவைக் கேட்டார்கள். அவர்கள் கேட்டபடிக்கு பிரம்மாவும் அந்தக் கிரி வாசத்தில் தேவர்களையெல்லாம் கூட்டமிட்டு வட்டப்பாறையில் இருத் திக்கொண்டு அந்த வட்டப்பாறைமேல் விநயகர் லிங்கம் தாபித்துப் பூசித்து அர்ச்சித்துக்கொண்டு அந்தப் பாறையைச் சாந்துனல் சதுரக்கோணமாய் மெ(மொ)ழுகி அதன்மேல் நூற்றெட்டு வெண்முத்து

மணி பரப்பி வேதங்களித்துப் பார்த்து வேதவாக்யத்தைக் கண்டு தேவேந்திரன் முதலாகிய தேவர் முனிவர்களையுங்களுக்குக் கார்த்திகைக் கடைசி சோமவாரத்தில் பூலோக கயிலாசத்தில் சதாசிவ தரிசனமாகும். ஆனாலும் இன்னும் முப்பத்திரண்டு ஆண்டு சென்றபின்பு வேலவரால்(து)உங்கள் சிறை விடுதிப்படும் என்று சொல்லி பிரமதேவன் தேவேந்திரன் முதலாகிய தேவருக்கும் அகத்திய மாமுனியுடனே மற்ற முனிவருக்கும் அவரிடத்தில் பிருமவேத வாக்கியங் கொடுத்தார்.

அவர் கொடுத்த படிக்கு தேவேந்திரன் முதலாகிய தேவரும் அகத்திய மாமுனியுடனே மற்ற முனிவரும் அவரிடத்தில் பிருமவேத வாக்கிய வாக்குவரம் வாங்கிகொண்டு அந்தக்கிரியில் முதல் சோமவார நாள்கொண்டு ஏழு நாளிருந்தார். இருந்தபின்பு இரண்டாவதான சோமவாரநாள் பிருமதேவன் தேவேந்திரன் முதலாகிய தேவர்களையும் அகத்திய மாமுனியுடனே மற்ற முனிவர்களையும் வரவழைத்துக் கொண்டு இரண்டாம் சோமவாரநாள் விஷ்ணுகிரிக்குப் போனார். போனபின்பு அந்தக் கிரிவாசத்திலுள்ள சங்காளிநதியும் கருடநதியும் சக்கரநதியும் அனுமந்நதியும் லக்ஷ்மிநதியும் கண்டு அந்தப் பஞ்ச நதியிலும் பிரும தேவேந்திரன் அந்த விஷ்ணுகிரியில் குகைவாசமுண்டு செய்து அந்தக் குகையில் விஷ்ணுலிங்கம் தாபித்துப் பூசித்து அர்ச்சித்தார். அவர் அர்ச்சித்தபடிக்குப் பிரம்மதேவன் தேவர் அகத்திய மாமுனி மற்ற முனிவரும் அந்த லிங்கத்தைக் கண்டு தரிசித்துக் கொண்டு நிற்கும்போது அன்னளில் விஷ்ணுதேவன் தேவருக்குக் காக்ஷிகொடுத்தார். அவர் காக்ஷிகொடுத்தபடிக்குத் தேவரும் முனிவரும் விஷ்ணுவைக் கண்டு தரிசித்துக் கொண்டு விஷ்ணுவின் வாக்குவரம் வாங்கிக் கொண்டு அந்தக் கிரிவாசத்தில் ஏழுநாளிருந்து விஷ்ணுவையும் வரவழைத்துக்கொண்டு தேவேந்திரன் அந்த விஷ்ணுகிரிவாச குகை சாத்தி திருகணி முத்திரிக் கோலினலே வீக முத்திரி பொடிவித்து அந்தக் குகைவாசல் சுவரப்புடையில் ராமபாண முத்திரை பொடிவித்து விஷ்ணுவையும் வரவழைத்துக் கொண்டு மூன்றும் சோமவாரநாள் உத்தரகிரிக்குப் போனர். போன பின்பு அந்தக் கிரிவாசத்திலுள்ள வீரபத்திரநதியும் கன்னிநதியும் தகரநதியும் அக்னிநதியும் காற்றுநதியும் கண்டு அந்தப் பஞ்ச நதியினும் பிருமதேவன் விஷ்ணுதேவன் தேவேந்திரன் தேவன் அகத்திய முனி மற்ற முனிவரும் அந்தப் பஞ்ச நதியிலும் தீர்த்தமாடிய பின் தேவேந்திரன் அந்த ருத்திரகிரி வாசத்தில் குகையுண்டு செய்து அந்தக் குகையில் ருத்திரலிங்கம் தாபித்துப் பூசித்து அர்ச்சித்துக்

கொண்ட பின்பு பிருமா விஷ்ணு தேவேந்திரன் தேவர் அகத்திய முனியுடன் மற்ற முனிவரும் அந்த லிங்கத்தை அர்ச்சித்துக் கொண்டு நிற்கும்போது அந்நாளில் ருத்திரதேவர் தேவருக்கு(ம்) முனிவர்க்கும் காக்ஷி கொடுத்தார். அவர்கள் காக்ஷி கொடுத்தபடிக்குத் தேவரும் முனிவரும் (ருத்திரதேவ) மகேசுவரரைக் கண்டு தரிசித்துக் கொண்டு அவரிடத்தில் வாக்கு வரம் வாங்கிக்கொண்டு அந்த கிரியில் ஏழு நாள் தவம் செலுத்தி(யபின்) நாலாம் சோமவார நாள் ருத்திர தேவரையும் வரவழித்துக்கொண்டு தேவேந்திரன் பிரம்மா விஷ்ணு அகத்திய மாமுனியுடனே மற்ற முனிவரும் பூலோக கைலாச மாணிக்கப் பச்சை மரகத ரத்தினகிரிக்குப் போனார். போய் அந்த கிரி வாசத்திலுள்ள ரிஷபநதியும் பச்சைநதியும் சிவகங்கைநதியும் கன்னிநதியும் விநயகர் நதியும் கண்டு அந்தப் பஞ்சநதியினும் பிரும்மா விஷ்ணு ருத்திரன் தேவேந்திரன் தேவர்கள் அகத்திய முனியுடனே மற்ற முனிவர்களும் அந்தப் பஞ்சநதியினும் தீர்த்தமாடிய பின் தேவேந்திரன் அந்த கிரி வாசத்தில் மாணிககப் பச்சை மரகத வைடூர்யசிகர கோபுரகுகை சோடித்து அந்தக் குகைக்குப் பாதாள தளவசு பிருமகிரி விஷ்ணுகிரி ருத்திரகிரி மாணிக்கப் பச்சை மரகத ரத்தினகிரி மாணிக்கப் பச்சை வைடூர்ய நீலகிரி இந்த ஐந்து கிரி அடி மூல வேரும் ஒன்றாய்க் கூடும் சந்தில் பாதாளவிச் சொடித்த பின்பு தேவேந்திரன் அந்த மாணிக்கப் பச்சை மரகத ரத்தினகிரி முடிமீதிலிருக்கின்ற மாணிக்கப் பச்சை மரகத வைடூர்ய ரத்தினசிகர கோபுரகுகை வாசத்தில் பிருதிவி அப்பு தேயு வாயு இந்த நாலுவித லிங்கத்தையும் தாபித்துப் பூசித்து அர்ச்சித்துக் கொண்டபின்பு பிரம்மா விஷ்ணு ருத்திர தேவர்கள் அகத்திய முனியுடனே மற்ற முனிவர்களும் அந்த நாலாம்பத (நாலுவித) லிங்கத்தையும் கண்டு தரிசித்துக் கொண்டு எல்லோரும் கை கூப்பி நின்று கொண்டு சூரன் படுத்தின நிந்தனை எல்லாம் சொல்லி மகேசுர முகத்திற்கு முறை செய்தார்கள். அவர்கள் முறை செய்தபடிக்கு மகேசுரரும் தேவருக்கும் முனிவருக்கும் காக்ஷி கொடுத்தார். அவர்கள் காக்ஷி கொடுத்தபடிக்குத் தேவரும் முனிவரும் மகேசுரரைக் கண்டு தரிசித்துக் கொண்டு அவரிடத்தில் வாக்கு வரம் வாங்கி கொண்டு அந்த மகேசுரகிரியில் ஏழு நாள் தவுசு செலுத்தியபின் மகேசுரர் பிரம்ம விஷ்ணு ருத்திரர் தேவேந்திரன் முதலாகிய தேவர்கள் அகத்திய முனியுடனே மற்ற முனிவர்களையும் முன் சொன்ன குகையுள்ளே வரவழைத்துக் கொண்டு அந்த ஐந்து கிரி வேரும் பொருந்திய அடி மூலம் ஆறுதார வீட்டுக்குப் போனார். போன பின்பு அந்த ஆறுதார வீட்டிலிருக்கின்ற சுப்ரதீபநதியும் பஞ்சகல்யாணநதியும் நீலமேகவண்ணநதியும் பரமஜோதிநதியும் பரமானந்தநதியும் பரிமள கங்காநதியும் ஆக அந்த ஆறு நதியும் கண்டு பிரும்மா விஷ்ணு ருத்திரர்

மகேசுரர் தேவேந்திரன் முதலாய தேவர்கள் அகத்தியமுனியுடனே மற்ற முனிவர்களும் அந்த ஆறு நதி(யும் கண்டு பிரம்ம விஷ்ணு ருத்திரர்)யிலும் தீர்த்தமாடியபின் தேவேந்திரன் அந்த ஐந்து கிரியும் பொரு(ந்)திய பஞ்சதீப வீட்டில் மாணிக்கப் பச்சை மரகத வைடூர்ய நீலவர்ணக்குகை சோதித்து அந்தக் குகைவாசத்தில் ஆகாச லிங்கத்தைத் தாபித்துப் பூசித்து அர்ச்சித்துக் கொண்ட பின்பு பிரம்மா விஷ்ணு ருத்திரர் மகேசுரர் தேவேந்திரன் தேவர்கள் அகத்திய முனியுடனே மற்ற முனிவர்களும் அந்த ஆகாசலிங்கத்தைக் கண்டு தரிசித்துக் கொண்டு எல்லோரும் இதுஎங்களுக்குக் கார்த்திகை ஐந்தாம் சோமவாரம் எங்களுககுக் காக்ஷிச் சோமவாரம் என்று தேவரும் முனிவரும் தங்களைச் சூரன் படுத்தின நிந்தனை யெல்லாம் சொல்லிச் சதாசிவனுக்கு முறை செய்தார்கள். அவர்கள் செய்த முறை கேட்டு சதாசிவன் சித்தமிரங்கித் திருமுகம் பார்த்துத் தேவருக்கும் முனிவருக்கும் அந்தப் பஞ்சதீப வீட்டில் தரிசனை காட்டிக் கொடுத்தார். அவர் சிவதரிசனைக் காக்ஷி கொடுத்தபடிக்குத் தேவரும் முனிவரும் சதாசிவன் பாதத்தைக் கண்டு தரிசித்துக கொண்ட பின்பு சதாசிவன் பிரம்மா விஷ்ணு ருத்திரர் மகேசுரர் தேவேந்திரன் முதலாகிய தேவர்கள் அகத்திய மாமுனியுடனே மற்ற முனிவர்களையும் வரவழைத்துக்கொண்டு அந்தப் பஞ்சதீப வீடு விட்டுக் குகைவழியே மகேசுரமுகமாகிய நாலாம்பாதகிரி முடிவாசத்தில் மாணிக்கப் பச்சை வைடூர்யத்தினாலே விசாரணைக் குகை சோதித்து அந்தக் குகையிலும் ஆறுகால் பொற்பீடம் சோதித்து அதன்மேல் வெண்புலி யாசனம் சேரவிரித்து அந்த ஆசனத்தின் மேல் ஐந்துமுகமாகிய சதாசிவனிருந்து கொண்டு தேவரையும் முனிவரையும் அழைக்கவிட்டுச் சூரன் செய்த துர்ச்சினங்களையெல்லாம் சொல்லுங்களென்று விசாரித்தாராம். அவர் விசாரித்தபடிக்குத் தேவேந்திரனும் இந்திராணியும் தேவர்களும் அகத்திய முனியுடனே மற்ற முனிவர்களும் சூரன் செய்த துன்மார்க்கங்களெல்லாம் சிவனுக்கு முறைசெய்தார்கள்.

அவர்கள் செய்தபடிக்குச் சதாசிவன் தம்முடைய திருச்செவியில் கேட்டு சித்தமிரங்கித் தேவர்கள் மேல் தயவு வைத்துச் சூரன்மேல் கோபம்வைத்து அந்தச் சூர ராக்ஷஸனுக்கு இத்தனை துஷ்ட துன்மார்க்கங்கள் என்னவென்று சதாசிவன் திருவுள்ளத்தில் கோபம் பிறந்து சூரராக்ஷதரைச் சுட்டும் பஸ்மாங்கத்தூளிதம் செய்ய வேணுமென்று யோசித்துச் சதாசிவன் ஆறுதாரக் காட்டிலிருக்கின்ற பராபர மூர்த்தியைச் சடாட்சரத் திருமந்திர முகாந்திரத்தினாலே தியானித்துப் பிரணவக் குடிலாகிய நெற்றிக்கண் திறந்து அந்த நெற்றிக்கண் வழியால் அக்கினிப்பொறியைத் தருவித்தார். அவர்

தருவித்த பொறியைக் கண்டு தேவரும் முனிவரும் பயந்து வெருண்டோடி வில்வவனத்தில் புக்கொளிந்தார். ஒளிந்தபடிக்கு இடப் பாகத்திலிருந்த பரமேச்வரியும் அந்தச் சுப்ரதீப அக்னி அனல் கண்டபடிக்கு அம்மனும் அலறி எழுந்திடவே அம்மன் கால்சிலம்பு இரண்டும் ஒன்றோடு ஒன்று தட்டி ஒன்பதுவகை ரத்தினமும் உதிர்ந்திட உதிர்ந்த ரத்தினுதிகளை ஒன்பதும் சதாசிவன் பிருமமுகத்தில் பார்க்க அது ஒன்பது பெண்ணுக அந்த ஒன்பது பெண்களையும் சதாசிவன் இரண்டாவது பிருமமுகத்தில் பார்க்க அந்த ஒன்பது பெண்களுக்கும் கர்ப்பமுண்டாக அந்த ஒன்பது பெண்களையும் பரமேச்வரி பார்த்து ஒன்பது பெண்கள் வயித்திலிருக்கிற கர்ப்பம் திரேதாயுக ஆண்டில் இன்னுள் முதல்கொண்டு முப்பத்திரண்டு ஆண்டு பிறவாதிருக்க கர்ப்பத்தில் வாழக்கடவதாகவும் ஆகவுலும் என்று அம்மன் சபிக்க அந்த ஒன்பது பெண்களும் அம்மனிடத்தில் சாபம் ஏற்றுக்கொண்டபின்பு சதாசிவன் தமதுடைய திருவுளத்திலே வருணவாயு மந்திரமுகாந் திரத்திலே வருணவாயுவை வரவழித்து அந்தச் சுப்ரதீபத்தை மண்ணியாய் என்று வருணவாயுவிற்குத் திருவுளம் பற்ற அவர்களும் அப்படியே வருணவாயுவும் கூடி களபகஸ்தூரி பரிமள பன்னீர் மழை துளித்து வீசின் குளிர்காற்றுத் தென்னல் வீசி சுப்பிரத்தை அவர்கள் மன்னித்தார்கள். அவர்கள் மன்னித்தபின்பு சதாசிவன் சித்தமிரங்கித் திருவுளம் மகிழ்ந்து அமிருதவாக்காகி நாரத மாமுனியே அண்டர்களையுமென்றூர். நாரத மாமுனியும் சதாசிவன் அப்பணைப் படிக்கு வில்வவனத்திற்குப் போய் வில்வவனத்தில் புக்கொள்ளிருந்த அண்டரெல்லாவரையும் அழைத்துவந்து சிவனிருக்கிற விசாரணைக் குகை வாசலில் விட்டார். அவர் விட்டபடிக்குத் தேவேந்திரன் முதலாகிய அண்டரும் அகத்திய முனியுடனே மற்ற முனிவரும் சதாசிவன் பாதத்தைக் கண்டு தரிசித்துக்கொண்டு நிற்கும்போது அன்னுளில் சதாசிவன் வருணவாயுவை வரவழித்துச் சுப்பிரதீபத்தையெடுத்துப் போய்ச் சரவணப்பொய்கை வாசலில் போட்டுப் போட்டபின்பு அவ்விடத்தில் நடந்த கார்யங்கள் கண்டறிந்துவந்து அறிக்கை செய்யுங்கள் என்று வருணவாயுவிற்குத் திருவுளம்பற்ற அவர்களும் அப்படியே சுப்பிரதீபத்தை வாரி எடுத்துச் சரவணப் பொய்கை வழியால் போடப்பட்டபின்பு அன்னுளில் தெய்வலோக கன்னிகள் சப்தகன்னிகளும் வந்து அந்தப் பொய்கையுள் குதித்து மூழ்க அப்பொழுது அந்தச் சத்தக்கன்னிகள் துகிலையும் வாயு வாரி எடுத்து மாய்கையாய்ப் போக அந்தக் கன்னிகள் வந்து தங்கள் துகிலைக் காணுமல் தேடி மயங்க அப்ப அந்த சுப்பிரதீபமென்கிறதை அந்த ஆறுகன்னிகையும் கண்டு சுற்றுமிருந்து குளிரது காய அதில் சிவ

கன்னி அந்தப் பொய்கையுள் மறைந்துபோக அந்த ஆறு கன்னிக்கு அனல் காய்ந்த உடனே அவரவருக்குக் கர்ப்பம் உற்பத்தியாக உற்பத்தியானவுடனே அந்த சுப்பிரதீபம் மாய்கையாய் மறைந்து போகவே ஆறு கன்னியும் ஆறு குழந்தைகளையும் பெற்றெடுத்து அந்தக் கன்னி ஆறுபேருகளும் மெத்த துக்கித்து நாமிவ்வுலகில் இந்தப் புத்திரரை வளர்த்தினல் சத்தரிஷிளுக்கும் பொல்லா தென்று வேள்வியாகம் வளராது. வேதமுறைமை நீதியொழுக்கம் தவறி இப் புவனமும் யுகாந்தமாய்ப் போகுமென்று அந்த ஆறு கன்னிகளும் ஆலோசித்துக்கொண்டு அவரவர் பெற்ற பாலகரைச் சரவணப் பொய்கையில் போட்டு அவர்களுமந்தப் பொய்கையுள் குதித்துப் பாதாள நரலோகத்திற்குப் போய் நரலோக கன்னியானவர்கள் போட்டெறிந்துபோன குழந்தைகளை அந்தப் பொய்கைதனிலுள்ள தாமரையிலை தாங்கித் தாவரித்து இந்தக் கார்த்திகைப் பெண்கள் வந்து அந்த ஆறு குழந்தைகளுக்கும் முலைப்பாலமிருதம் கொடுத்து வளர்த்தினார்கள்.

அந்தக் குழந்தைகளுக்கும் அந்தப் பெண்கள் அறுவர் முலைப் பாலமிருதமுண்டு முப்பத்திரண்டாண்டு அந்தப்பொய்கையுள் திருவிளையாடல் புரிந்து வளந்துவரும் நாளில் அன்னாளில் வருணவாயுவும் அந்த அதிசயமானதெல்லாம் கண்டிருந்து பூலோக கயிலாசத்திற்கு வந்து பூலோககயிலாசத்தில் அண்டர்கள் குகையில் முப்பது முக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் கோடி ரிஷிகளும் அஷ்டமுனிவரும் அஷ்டபாலகரும் அஷ்டவசுக்களும் அஷ்டகெச(கஜ)ங்களும் சூழ்ந்து நிற்கப் பூலோக கைலாச நாலாம்பதமாகிய மகேசுரகிரியில் அண்டர்கள் குகையில் வெண்புலி யாசனத்தின் மீதில் சதாசிவன் சிவயோகம் சாதித்து இருக்கும்போது அந்த முகத்தில் வருணவாயு சதாசிவன் பாதத்தில் வீழ்ந்து சரணம் செய்து தாங்கள் சுப்பிர தீபத்தைப் பூலோக கைலாசத்திலிருந்து சரவணப் பொய்கைக்கு எடுத்துப்போய் அந்தப் பொய்கையுள் கன்னியர் வந்து மூழ்க அப் போது அந்தச் சத்தகன்னியர் அவற்றில் கர்ப உற்பத்தியாகி புத்திரரைப் பெற்று அந்தப் பொய்கையுள் போட்டெறிந்து போக அவர் போட்டெறிந்துபோன புத்திரர்கள் அறுவருக்கும் கார்த்திகைப் பெண்கள் அறுவரும் வந்து முலைப்பாலமிருதம் கொடுத்து வளர்த்தி வாரும். இந்தப்படி வருணவாயுவும் தாங்கள் கண்டறிந்துவந்த அதிசயமுள்ளதெல்லாம் சதாசிவன் பாதத்தில் அறிக்கை செய்தார்கள். அவர்கள் அறிக்கைசெய்தபடிக்குச் சதாசிவன் கேட்டுச் சித்தமிரங்கித் திருவுளம் மகிழ்ந்து இடப்பக்கத்திலிருக்கின்ற உமையாளாகிய பர

மேசுவரியையும் வரவழைத்துக்கொண்டு பிரம்மா விஷ்ணு ருத்திரர் மயேசுரருடனே தேவேந்திரன் முதலாகிய முப்பத்துமுக்கோடி தேவர்களையும் தக்க முனியுடனே அகத்திய மாமுனி மற்ற முனிவர்களை யும் வரவழைத்துக்கொண்டு பூலோக கைலாச நாலாம்பதமாகிய மகேசுவரகிரி விட்டெழுந்தருளி நந்தி விடைமீதேறி முனிவர்கள் தேவ தைகள் சூழ்ந்துவரச் சரவணப் பொய்கை வாசத்திற்குப் போனார் கள். போனபின்பு சதாசிவனும் பரமேசுவரியும் அந்தப் பொய்கை தனில் வாழ்ந்திருக்கும் புத்திரரைக் கண்டு மெத்தச் சந்தோஷித்துக் கொண்டு இருக்கும்போது அந்த முகத்தில் உமையாளாகிய பரமேசு வரியு மிந்தப் புத்திரர் அறுவரில் ஒருவனை யெடுத்து யான் வளர்ப்பேன் என்று சதாசிவனையப்பனைக் கேட்க அவள் கேட்டபடிக்குச் சதாசி வனும் உமையவளைப் பார்த்து இந்த ஆறுகுழந்தையுள் உன் மனதுக் குச் சரிவந்த குழந்தை யொரு குழந்தை யெடுத்து வளர்ப்பாயென்று இறையவர் சொல்ல உமையவள் கேட்டு அந்தப் பொய்கையுள்ளே இறங்கிப் பார்த்து அந்தக் குழந்தைகள் ஆறும் உங்காயுங்கா வென்று அலறிக் கூக உமையவள் கேட்டு இந்த ஆறு குழந்தைகளும் ஒன்றி லொன்று தாழ்விலாததென்று கண்டு மகிழ்ந்து அன்பு களிகூர்ந்து குழந்தைகளை நீங்கள் அறுவரும் என் அருகாக வாரீரென்று உமை யாள் அழைகக அந்தக் குழந்தைகள் ஆறும் வந்து உமையவள் மலரடி பணிய பணிந்த பாலர் ஆறு பேரையும் உமையவள் வாரியெடுத்து மார்போடணைத்து உச்சி முகர்ந்து உடம்பிறுக இறுத்திக் கண்ணால் பார்த்துத் தன் மனது களிகூர்ந்து உண்ணுமுலைப் பாலமுதங் கொடுத் துக் கொடுத்தபடிக்கு ஆறுமுகமும் பன்னிருபுயமும் பன்னிருநயன மும் பன்னிருசெவியும் காலிரெண்டும் உடலொன்றுமா யிருக்கக் கண்டு உமையவள் சந்தோஷப்பட்டுக்கொண்டு அண்ணலாகிய சதா சிவன்கையில் தாமெடுத்த குழந்தையை இந்தாவென்று கொடுக்க அவரும் கந்தா வென்று இரு கைகளேந்தி வாங்கி மடிமீதில் வைத்து எந்தன் குரு வென்றும் இவ்வுலகைக் காத்து ரக்ஷிக்க வேண்டிவந்த துரை என்றும் சொல்லிச் சதாசிவன் தண்டிகைமீதிலிருந்து கொண்டு மைந்தனையும் மடிமீதிலிருத்திக் கொண்டு உமையாளையும் தமது இடப் பாகத்தில் வரவழைத்துக் கொண்டு சரவணப்பொய்கை விட்டெழுந் தருளி தேவரும் முனிவரும் சூழ்ந்து பொன்மாரி புஷ்பமாரி பொழிந்து போற்றி வாழ்த்தத் தக்கதாக சதாசிவனும் சிவலோக கைலாசம் போனார். போனபின்பு சிவலோக கைலாசத்திலிருந்துகொண்டு உமை யைப் பார்த்து உமையே நம் மகனுக்குத் துணையாக உந்தன் கால் சிலம்பினாலவதரித்த நவஸ்ரீ(ஸ்த்ரீ)கள் வைத்திருந்த நவவீரரத்தி

னத்தையும் அழைத்தருள வேண்டு மென்று இறையவரப்பணை செய்ய அவரப்பணை செய்தபடிக்கு உமையவளுமப்படி நவஸ்ரீகள் வயிற்றிலவள் தரித்து முப்பத்திரண்டாண்டு வளர்ந்திருந்த நவவீரரே நீங்கள் உந்திவழியாக ஓடிவாருங்கள் என்று உமையவள் அழைக்க நவவீரரும் ஆயி யழைத்தபடிக்குப் போகவேண்டுமென்று குந்தம் பரிசைக் கேடயத்துடனே ரணவீரமாலை இட்டு மென்மிசையுடனே வீர சூலவையிட்டு நவவீரரும் உந்திவழியாக நடந்துவந்து உமையாள் பாதத்தில் சரணம் செய்தார். செய்தபடிக்கு உமையாள் நமது கந்தனுக்குத் துணையாக இந்த நவவீரரும் இந்த நவவீரனுக்கும் நானுதவியாக நவஸ்ரீகள் சரீர வேர்வையுற்பத்தியாகி லக்ஷம் தளவீரரும் வாருங்களென்று உமையாள் திருவுள்ளம் பற்ற பற்றும்படிக்கு நவஸ்ரீகள் வேர்வை வழியாக லக்ஷம் தளவீரரும் வீரமுகமாகத் திரண்டுவந்து உமையாள் பாதத்தில் சரணம் செய்ய சரணம் செய்த லக்ஷம் தள வீரரையும் அவர்களுக்கு முன்வந்த நவவீரருக்கும் உமையாகிய பரமேசுவரி பார்த்து அவர்களுக்கு நெற்றியில் வீபூதியிட்டு நீங்களென்னுடைய கொலுக்காவலும் கந்தனுக்குத் துணையும் பூவுலகும் நாவுலகும் தேவுலகும் இம்மூவுலகும் கைக்கொள்வரென்று அவர்களுக்கெல்லாம் நவவீரருடனே லக்ஷம் தளவீரருக்கும் திருவெண்ணீற்றுக் காப்புமிட்டுத் திருவாக்கும் கொடுத்தாள்.

கொடுத்தபின்பு நந்திதேவரை வலமாணிக்கவல்லி கெர்ப்பத்தில் அவதரித்து உத்பத்தியாய் வந்த பாலகருக்குத் தோரணவீரமாலையிட்டுப் பிறந்தபடியினாலே இது பத்மாசுர சங்காரப்போர் செருக்களம் செயிக்கவந்த ரணவீரபாகு வென்று பேரும்கொண்டு அந்த ரணவீரபாகுக்குள்பட்ட அஷ்டபாலகருக்கும் பேர் வீரமயப்பேர் கொடுத்து அஷ்டவசுக்களாக வந்த அஷ்டபாலகருக்கும் பேர் அஷ்டவீரரென்று பேரும் கண்டபின்பு வீரபாகு முதலாக அஷ்டவீரரும் வரும் வழியால் நவஸ்ரீகள் சரீர சோபதாணித வேர்வையால் பிறந்த லக்ஷம் பாலகருக்கும் பேர் வீரசமத்தரென்று பேரும்கண்டு கண்டபின்பு லக்ஷம் தள வீரரையும் சுப்பிரமணிய தேவர் வசத்திலே ஒப்பித்து சுப்பிரமணிய தேவருக்கு வீரபாகு முதலாக லக்ஷம் தளவீரரும் அடிமைத் தொண்டு படவேண்டியதாக நடந்து நவவீரருடனே லக்ஷம் தளவீரருக்கும் கட்டுச்

செய்து செய்தபின்பு சுப்பிரமண்ணிய தேவருக்கும் வீரவாகு முதலாக லக்ஷம் தளவீரரையும் இன்று கொண்டடிமை சக்கிரவாள கிரியுள்ள வரைக்கும் சந்திராதித்தனுள்ள வரைக்கும் சத்திசிவ முள்ளளவும் இப்புவனமுள்ள வரைக்கும் இவர்களை யடிமை கொண்டு அவர்கள் வம்சத்தில் பாரம்பரிக்கையாய் நடத்திவா வென்று பரமேசுவரி தேவி சுப்பிரமணிய தேவருக்குக் கட்டுச் செய்த பின்பு சுப்பிரமணிய தேவருக்குப் பரமேசுவரியானவள் தம்முடைய நவகோடி சக்தியையும் ஒரு வேலாகச் சமைத்து அந்த நவகோடி சத்திவேலாயுதத்தைச் சுப்பிரமணிய தேவர் கையில் கொடுத்துப் பத்மாசுர சங்காரம் செய்து தேவர்சிறைமீட்டு தேவேந்திரனுக் கரசளித்து இந்திராணிக்கும் மங்கல்யப் பிச்சை தந்து ரக்ஷிப்பாய் என்று சுப்பிரமணிய தேவருக்கு உமையாள் திருவுளம் பற்ற அவரும் உமையாளிடத்தில் அது வேவரமாக நவகோடி சக்திவேலாயுதத்தை வாங்கிச் சந்தோஷ பரிமள புளகிதத்துடன் சிவசக்திசமூகத்தில் சுப்பிரமணிய தேவரும் அவருக்குள்பட்ட வீரபாகு முதலாக லக்ஷம் தளவீரரும் தேவேந்திரன் முதலாக முப்பத்து முக்கோடி தேவர்களும் தக்கமுனி அகத்திய முனியுடனே மற்ற முனிவர்களும் சிவசக்தி சமூ(க)த்தில் தரிசித்து நிற்கின்ற வேளையில் அன்னளில் பத்மாசுரனென்றவன் சுப்பிரமணியதேவர் ஆறுமுகத்துடனே பிறந்து வளர்ந்து பிரபலமாகி வீரபாகுதேவர் முதலாக லக்ஷம் தளவீரரையும் சுற்றிக்கொண்டு போரு செய்வார்களென்று சேதி கேட்டறிந்துகொண்டு ஆனல் நாமவரைக் கயிலாச வாசலிலே போர்செய்து செயிக்க வேண்டும்; மகாமேருவிற்கு வடபாரிசத்தில் கிரியடிவாரத்தில் அரிய திருக்குகையில் அரிய தபசுசெய்து இருக்கின்ற உவற்ப நாரத ரிஷியைக் கொண்டுதகர வேள்வியாகம் வளர்ப்பிக்க வளர்ந்த யாகத்தில் தகர சண்டமாருத யமன் பகடுபோலே பிறந்து மின்ன(ல்)விசை போல கோடையிடி இடித்தாப்போல ஆயிரத்தெட்டு அண்டமும் அடுக்குகிலே குலையத்தக்கதாக நாரதரிஷியிடத்திற்குப் போய் என்னையழைத்த பணிவிடை யென்ன? எனக்கெதிர் யாரென்று கேட்க அப்பொழுது நாரதர் அவரைப் பார்த்து உனக்கெதிர் சுப்பிரமணிய தேவர் சிவகைலாசத்தில் நவவீரருடனே லக்ஷம் தளவீரரையும் தேவேந்திரன் முதலாக முப்பத்து முக்கோடி தேவர்களைத் தக்கமுனி அகத்திய முனியுடனே மற்ற முனிவர்களும் சிவ

சத்தி சமூகத்தில் தரிசித்து நிற்கின்ற வேளையில் (அன்னுளில் பத்மாசுர னுகிறவன் சுப்பிரமணிய தேவர் ஆறுமுகத்துடனே)ரையும் இவர்கள் பேராகிய பேர்களையெல்லாம் ஒன்ருகச் சேர்த்துக்கொண்டு மயேந்திர புரத்திற்குப் போய் பத்மாசுர சங்காரம் முடித்துத் தேவர்சிறை மீட்டுக் கொண்டு தேவேந்திரனுக் கரசளிக்க வேண்டுமென்று பரமேசுவரி யிடத்தில் வாக்குவரம் வாங்கிக்கொண்டு (ரணவீரபாச பந்தயங் கூறி ரணமுக சங்காரமுக்ம்)சிவசத்தி சமூகத்தில் சந்தோஷமாயிருக்கிருர் ; நீ அந்த வேளையில் போய் சுப்பிரமணியத் தேவரையும் நவவீரருடனே லக்ஷம் தளவீரரையும் தேவேந்திரன் முதலாகிய முப்பத்து முக்கோடி தேவர்களையும் தக்கமுனி அகத்திய முனியுடனே மற்ற முனிவரையும் செயித்துச் சீக்கிரம் சங்காரம் முடித்து வெற்றிவாகைமாலைசூடி வீர முகத்துடனே வாவென்று நாரதரிஷி தக்கரையேவ அவர் ஏவும்படி தக்கரும் அப்படி செயித்து வாரேனென்று நாரதரிஷி யிடத்தில் வாக்கு வரம் வாங்கிக்கொண்டு ரணவீர பாசபந்தையம் கூறி ரணமுக சங்கார மாகப் புறப்பட்டு மகாமேரு பர்வதத்தை முட்டி அசைத்து முழக்கிக் கோடியிடி இடித்தாப்போல தக்ஷிண வாசலில் தக்ஷிண கைலரச சிவ சத்தி சமூகத்திசை நோக்கிக்கொண்டு வரும் போது ஆயிரத்தெட் டண்டமும் அடுக்குநிலை குலையச் சக்கிரவாளகிரியும் கிடுகிடென்றசைய சத்த சமுத்திரமும் அலைசுழல் சந்திராதித்யர் செந்தூளில் மறைய அப் படித் தகரும் முனைக்கு வரும்போது அப்ப அந்தத்த காவரும் ஆர்ப் பாரத்தைக் கண்டு இதே சூரபத்மர் நம்மை வழை(ளை)ந்து படுக்க வாரா ரென்று தேவேந்திரன் முதலாகிய தேவேர்களும் தக்கமுனி அகத்திய முனியுடனே மற்ற முனிவர்களும் (மிரண்டு கலைந்து) வலசுவாங்கி சிவ சத்தி கைலாசம் விட்டு ருத்திர கிரிக்கும் தென்பால் விஷ்ணு கிரிக்கும் கிழ்ப்பால் சத்திகிரி யடிவார வடபாரிசத்தில் படு பாறைமேல்கூடி யிருந்து கொண்டு அந்தப் பாறைக்குத் தேவர் கூட்டர் திருப்பாறை என்று பேரும் கண்டு அந்தப் பாறையின் மேலிருந்து கொண்டு சர்வ தேவதையும் தாங்கள் மிரண்டு வந்த கார்ய மென்ன மகிமையோ வென்று மகத்தாகிய முனிவர் தேவர் வொன்றும் மற்ற மற்ற ரிஷியாதிகளெல்லாம் சிவனுடைய மகிமையோ தெ(ரி)யவராது என்று தேவேந்திரனுடனே மற்ற தேவர்களும் தக்க முனி அகத்திய முனி யுடனே மற்ற முனிவர்களும் அந்தப் பாறையின்மேல் கூடி யாலோ சித்து இருந்தார்கள். அவர்களிருக்கும்போது அப்பொழுது சத்தி சிவ கயிலாசத்திற்கு சுப்பிரமணிய தேவருடனே சமர சங்காரப் போர் செய்ய வந்த தகரை ஆதி சதாசிவன் கிருபையாலே வீரபாகுதேவர் வாது செய்ய வந்த நகரைப் பிடித்துச் சத்தியும் சிவனுமிருக்கின்ற சமூகத்தில் விட அவர் விட்டபடிக்குச் சதாசிவன் வீரபாகுதேவர் மேல் அதிகப் பிரியப்பட்டு வீரபாகுக்கு விருது வரிசை கொடுத்தபடி சரிகை வெண்சாமரம் லவண்டை மல்லாரி வீரசேகணம் வலம்புரிச்சங்கு

வெற்றித்தாரை ரணவீரவரி வேங்கைப்புலிக்கொடி நிசானியும் கொடுத்து இவ்வுலகில் மூவருக்கும் தேவருக்கும் யாவருக்கும் நீயென்று பேரும் கொடுத்துத் திருவெண்ணீற்றுக் காப்பு மிட்டுத் திருவாக்கும் கொடுத்து வீரவாகு குருதேவருக்கும் நிகுதி செய்தபின்பு சுப்பிரமணிய தேவருக்கும் வீரபாகு பிடித்த தகரைச் சுப்பிர மணிய தேவருக்கு வாகனமாகக் கொடுத்துக் கடம்பமாலையும் சங்குசக்கிரமும் திரிசூலமும் கொக்கறும் கொடுத்து தேவர் சேனு ப்திக் தலைவரென்று பேரும் கொடுத்து திருவெண்ணீற்றுக் காப்பு மிட்டுத் திருவிளக்கும் கொடுத்து சுப்பிரமணிய தேவருக்கு நிகுதி செய்தபின்பு சதாசிவன் சுப்பிரமணிய தேவருக்கு விஷ்ணுவையும் வீரபாகுவையும் துணையாகச் சேர்த்து உவப்ப நாரதரிஷி ஏவலால் வந்தத்தகர் முனைக்குமேல் இரண்டு கலந்து வலசுவாங்கிப்போன தேவர் களையெல்லாம் அழைத்துவரக் கட்டுச்செய்ய அவர் செய்தபடிக்குச் சுப்பிரமணிய தேவரும் தேவர்களை யழைத்துவரச் சிவனிடத்தில் வாக்கு அப்பணை வாங்கிக்கொண்டு விஷ்ணுவையும் அழைத்து முன் விட்டுக்கொண்டு வீரபாகு தேவரையும் துணை சேர்த்துக்கொண்டு சத்தி சிவன் கைலாசம் விட்டெழுந்தருளி சுப்பிரமணியதேவர் ருத்ர கிரிக்குத் தென்பால் விஷ்ணுகிரிக்குக் கீழ்ப்பாலிருக்கின்ற முத்திகிரி சத்திகிரி யடிவாரத்தில் தேவர்கூட்டம் திருப்பாறையின்மேல் கூடி யிருக்கின்ற தேவேந்திரனுடனே தேவர்களையும் தக்கமுனி அகத்திய முனியுடனே மற்ற முனிவரையும் கண்டார். அவர் கண்டபடிக்குத் தேவரும் முனிவரும் சிவசுப்பிரமணிய தேவரையும் விஷ்ணுவையும் வீர பாகு தேவரையும் கண்டு தரிசித்துக்கொண்டார்கள். அவர்கள் தரிசித் துக்கொண்டபடிக்குச் சிவசுப்பிரமணியதேவரும் தேவருக்கும் முனிவ ருக்கும் தேருதல் சொல்லி அவரவர் மனதைக் கவலையைத் தேற்றி நம்பிக்கை பிடிபாடு வார்த்தைகள் சொல்லி அபயஹஸ்தம் கொடுத்து தேவரையும் முனிவரையும் உள்படுத்தி யோர் முகஞ் செய்து வரவழைத் துக்கொண்டு அந்தப் பாறை விட்டெழுந்தருளி அந்தப் பாறைக்குத் தேவர்கூட்டத் திருப்பாறையென்று பேரும் கண்டு அந்தப் பாறையின் மேல் தேவரும் முனிவரும் விஷ்ணுவும் தாமும் வீரபாகுவும் வந்து கூடி யிருந்ததுக்கு இப்புவனத்தில் இருந்து வாழும் பேர்கள் சதுர்யுகத்திற் கும் கண்டறிந்து வரத்தக்கதாக அடையாளம் சாச்சியாக விஷ்ணு பாதம் தாவித்துத் தாபித்த பாதத்தைத் தேவரும் முனிவரும் தாமும் கண்டு கண்டபின்பு அந்தப் பாறையின்மேல் தேவேந்திரன் வந்த திற்கு ஐராபதக் கல்வெட்டுக் கற்பித்து ஐராவதப் பொய்கையும் உண்டுசெய்து அதனுள்பட்ட தேவர்கள் வந்ததற்குத் தேவர் பொய்கை யும் உண்டுசெய்து முனி வந்ததற்கு அகத்தியர் பொய்கை யுண்டு செய்து கந்தர்ப்பஸ்ரீகள் வந்ததற்கு நாகதேவ கன்னிகள் பொய்கை யும் உண்டுசெய்து விஷ்ணு வந்ததற்கு சங்கசக்கிரப் பொய்கை

உண்டுசெய்து வீரபாகு வந்ததற்கு ரிஷபநதி யுண்டுசெய்து சுப்பிர மணியதேவர் வந்ததற்கு மகாநதி சரவணப்பொய்கையாறு நதியு முண்டுசெய்து பிரம்மதேவன் வந்ததற்கு பிருமதீர்த்தம் கர்ப்பநதி யுண்டுசெய்து ஆக அந்த ஏழுநதியும் அவரவர் வந்ததற்கு அடையாள சாக்ஷியாக உண்டுசெய்து செய்தபின்பு அந்த ஏழு நதியிலும் சுப்பிர மணியதேவர் பிருமா விஷ்ணு வீரபாகுதேவர் தேவேந்திரன் தேவர் முனிவர் இந்திராணி கெந்தருவஸ்ரீகள் யாவரும் தீர்த்தமாடி வந்து அந்தப் பாறையின்மேல் தாபித்த விஷ்ணு பாதத்தைப் பூசித்து அர்ச்சித்துத் தரிசித்துக்கொண்டு அந்த தேவர் திருக்கூட்டத் திருப் பாறையை அவர்கள் எல்லோரும் வலம்வந்து அந்தப் பாறையையும் அந்த ஐராவத பதத்தையும் தரிசித்துக்கொண்டு கொண்டபின்பு தேவர்கூட்டத் திருப்பாறைக்குத் தென்பாலிருக்கின்ற சத்திகிரிக்குப் போனார்கள். போனபின்பு சத்திகிரியில் சிவசுப்பிரமணிய தேவரையும் அதனுடைய கை நவகோடிசத்தி வேலையேவ அவர் ஏவும்படிக்கு அந்தக் கயிலாச வடகாசிக்குப் போய் வடகாசி பாதாளகுகையிலிருக்கின்ற வட வாலையும் சிவகங்கையும் பளிங்குலிங்கமும் கொண்டுவந்த இந்தமூன்றதி சயமும் சுப்பிரமணிய தேவரும் தேவேந்திரருடனே தேவரும் முனிவரும் கண்டு அதிசயப்பட்டுக்கொண்டு அந்தச் சிவகங்கைக்குப் பேர்வேல ழைத்துவந்தபடியினாலே வேல்வாவிநதியென்று பேரும்கண்டு அந்தநதி களுக்குப் பேர் வடகாசியிலிருந்து வந்தபடியினாலே வடகாசியாலென்று பேருங்கண்டு இந்த லிங்கத்துக்குப் பேர் வடகாசியிலிருந்து வந்தபடி யினாலே வடகாசிகுமரலிங்கரென்று பேரும்கண்டு கண்டபின்பு சிவ சுப்பிரமணிய தேவரும் தேவரனைவரும் அந்த வேல்வாவி நதியுள் தீர்த்தமாடி வந்து அந்த லிங்கத்திற்கும் அந்த வாவிக்கும் வடபாரிசத் தில் மாணிக்கப் பச்சை வைடூர்யத்தினால் மாடமாளிகை சிகர கோபுர குகையொன்று அந்த குகையுள் அந்த லிங்கத்தைப் பிருமதேவனைக் கொண்டு தாபித்துத் தேவரும்முனிவரும் பூசித்து அர்ச்சித்துக்கொண்டு அந்த லிங்கத்திற்குப் பேர் வடகாசிக் குமரலிங்கரென்று பேரும்கண்டு அஷ்டமாவினதரு...........அஷ்டகூவிளமும் அஷ்டகேசகலதாவிதமும் உண்டுசெய்து சிவசுப்பிரமணிய தேவர் முதலாக பிரும்மா விஷ்ணு வீரபாகு தேவேந்திரன் இந்திராணி தக்கமுனி அகத்தியமுனி மற்ற முனிவருமாகச் சத்திகிரிவிட்டு எழுந்தருளி சிவசக்தி கைலாசத்திற்குப் போனார்கள். போனபின்பு சிவசக்தி கைலாசத்திலிருக்கின்ற சதா சிவனை சுப்பிரமணியதேவர் முதலாக தேவரனைவரும் கண்டு தரிசித் தார்கள்.

அவர்கள் தரிசித்தபடிக்குச் சிவன் சுப்பிரமணிய தேவருக்கு தேவர் சேனாதிபதிப் பட்டங்கட்டி பிரும்மா விஷ்ணு ருத்திரர் மயேசு வரர் இந்த நாலு முகத்தையும் துணைசேர்த்து நவ வீரருடனே லக்ஷம்

தளவீரரையும்சேர்த்து தேவேந்திரருடனே முப்பத்துமுக்கோடிதேவர் களையும் தக்கமுனி அகத்தியமுனி மற்ற முனிவரையும் ஆள்படுத்தி ஆயி ரங்கோடி வெள்ளபூதகணங்களையும் சதுரங்கபலமாகச்சேர்த்துஉவப்ப நாரதரிஷி ஏவலால்வந்த தகரையும்வாகனமாகக் கொடுத்துச் சுப்பிர மணியதேவருக்கு வீரமயேந்திரபுரத்துப் பத்மாசுரனைச் சங்காரமுடித் துத்தேவர் சிறைமீட்டுத்தேவேந்திரருக் கரசளித்து வெற்றிவாகமாலை சூடி வாவென்று சதாசிவன் சுப்பிரமணிய தேவருக்குத் திருவாக்குக் கட்டளையிட்டார். அவர் கட்டளையிட்டபடி சுப்பிரமணியதேவர் கையேற் றிக்கொண்டு சுப்பிரமணிய தேவர் வீரபாகு தேவருக்கு சிவசக்தி சமூகத்தில் தள வீரசேனுபதிப் பட்டமும் கட்டி தேவேந்திரன் முதலாகிய தேவரையும் முனிவரையும் ஆயிரம் கோடி பூதவெள்ளப் படையும் வீரபாகு தேவர் வசத்தில் ஒப்பித்துச் சுப்பிரமணிய தேவர் பத்மாசுர சங்காரமும் முடிக்க வெண்ணி தகர் வாகனமீதேறி பிரும்மா விஷ்ணு ருத்திரர் மயேசுரருடனே வீரபாகு லக்ஷம் தள வீரரும் தேவேந்திரன் முதலாகிய தேவர் தக்கமுனி அகத்தியமுனியு டனே மற்றமுனிவரையும் பூதகணங்கள் இவர்கள் முதலாகிய யாவரை யும் வரவழைத்துக்கொண்டு சிவசக்தி கைலாசம் விட்டெழுந்தருளி வீர மேள வாத்தியத்துடனே புறப்பட்டுக் காசிக்குப் போய் காசியில் விசுவலிங்கத்தையும் வி[ஜயா]சாலாக்ஷியையும் தரிசித்துக் கொண்டு காசி விட்டெழுந்தருளி காஞ்சிக்குப் போய் காஞ்சியில் கச்சி ஏகாம்பரர் காமாக்ஷியம்மனையும் தரிசித்துக் கொண்டு கொண்டபின்பு அந்தக் காஞ்சியில் தவசிருந்த துர்க்கை ரணவீர மாரியையும் சமர்களத்துக்கு வரவழைத்துக்கொண்டு காஞ்சி விட்டெழுந்தருளி சர்பகிரித் திருவா வினன்குடி திருப்பரங்குன்று இது முதலாகிய தலங்களையெல்லாம் மனிசானி கட்டிவித்து நடந்தும் மதுரைக்கு(திரைக்கு)ப் போய் மதுரை யில் சொக்கர் மீனுட்சியையும் தரிசித்துக் கொண்டு மதுரைவிட்டெ ழுந்தருளி பழமுதிறு(ர்) சோலையங் திருவேர்கத்திலும்(ம)னிசானி கட்டி நடந்து சீரலைவாக்கரை திருச்செந்தூர்ப் பதியில் (ம)னிசானி நாட்டிப் படை வீடிறங்கியிருந்து கொண்டு நாரத மாமுனியையும் வீரபாகுதேவரையும் வீரமகேந்திரபுரத்திற்கு பத்மாசுரனிடத்திற்குத் தானும் பதியாக அனுப்பிவித்து அவர்கள் போய் வந்த பின்பு சிவ சுப்பிரமணிய தேவருக்கு வெகு கோபமாகி வீரமகேந்திரபுரத்திற்கு பத்மாசுரனை சங்காரம் முடித்துத் தேவர் சிறை மீட்டுத் திருச் செந்தில்பதி விட்டெழுந்தருளி மதுரைக்குப் போய் மதுரையில் மீனுக்ஷி சமூகத்தில் சுப்பிரமணியதேவர் வீரபாகுதேவரைக் கொண்டு இப்புவனத்தில் ஈரேழுபதினுலுலகுக்கும் தேவேந்திரனுக்கு அரசளிப் பித்துச் சுப்பிரமணியதேவர் மதுரை விட்டெழுந்தருளி திருப்பரங் குன்றுக்குப் போய் தேவேந்திரன் மகள் தெய்வயானையை விவாகம் முடித்துக்கொண்டு சுப்பிரமணியதேவர் திருப்பரங்குன்று விட்டெழுந்

தருளி காஞ்சி வழியே நடந்து திருத்தணிக்குப் போய் குறமகள் வள்ளியை கன்னமிட்டு மணமாலையிட்டுக் கொண்டு சுப்பிரமணிய தேவர் திருத்தணி விட்டெழுந்தருளி காசி வழியே நடந்து சிவகயிலா சத்திற்குப் போனார்.

சுப்பிரமணியதேவர் வீரவாகுதேவர் முதலாக லக்ஷம் தளவீரரை யும் தேவேந்திரன் முதலாகிய தேவரையும் தக்கமுனி அகத்தியமுனி யுடனே மற்ற முனிவரையும் வரவழைத்துக் கொண்டு சுப்பிரமணிய தேவர் சிவசத்தி கயிலாசத்திற்குப் போய் சதாசிவன் பாதத்திலும் பரமேசுமரி பாதத்திலும் பணிந்து தரிசித்துக் கொண்டிருந்தார்.

அவர் இருந்தபடிக்குச் சிவன் சுப்பிரமணியதேவரைச் சந்தோ ஷப்பட்டுக்கொண்டிருந்த பின்பு சதாசிவன் தாம் ஆதிகைலாசவெற் பிலிருந்துகொண்டு அகத்தியமுனியைப் பொதியவெற்பிலிருக்கக் கட் டுச்செய்து பிருமாவிற்கு பிரமலோகமளித்து விஷ்ணுவிற்கு விஷ்ணு லோகமளித்து தேவேந்திரனுக்கு தெய்வலோகமளித்து தேவர்களை யெல்லாம் தேவஉலகில் குடியேற்றி ரிஷியாதிகளெல்லாம் முனீசுரரெல் லாம் அவரவர் எப்பொழுதுமிருந்த தாவுதலங்களில் இருக்கக் கட்டுச் செய்து எமனுக்கு எமலோகமளித்துச் சதாசிவன் தேவர் முனிவருக் கெல்லாம் அவரவர் எப்பொழுது மிருந்த தாவுதலங்களில் இருக்கச் கட்டுச்செய்து அவரவருக்குத் தாவுநிலையும் தலமும் சிரஞ்சீவியான வாழ்(வு)வாழ அவரவர்க்களித்துச் சதாசிவன் தாமும் சிவலோக கைலாசத்தி லிருந்தார். தாமுன் திரேதாயுகத்தில் அந்தப் பூர்வீக வர வெல்லாம் நடந்தபடியினலே இந்த கிரிக்கு பூர்வ கைலாசகிரி யென்று இப்புவனத்தில் பேராயிற்று என்று சமய முதலி சோழன் சேரனுக்குப் பட்டி வாசித்துக் கொடுத்துப் பின்னும் அந்த கிரியிலுள்ள அதிசயத் திற்கு விவரம் காண்பித்துக் கொடுத்தபடிக்கு விவரம் காண்க.

கிரி அதிசயங்கள்

முன் திரேதாயுகத்தில் அந்தநாளில் முப்பத்திரெண்டாண்டு தேவரும் முனிவரும் பூலோக கைலாசத்தில் சிவசமூகக் கொலுக் காத்துக் கொண்டிருந்த நாளில் அவரவர் பூசித்த சிவலிங்கத்திடறும், பிருமலிங்கமும் விஷ்ணுலிங்கமும் ருத்திர லிங்கமும் மகேசுவரலிங்கமும் சதாசிவலிங்கமும் சத்திலிங்கமும் கண பதிலிங்கமும் கன்னிலிங்கமும் குமரலிங்கமும் கருடலிங்கமும் ரிஷப லிங்கமும் அன்னலிங்கமும் ஐராவதலிங்கமும் சேஷ லிங்கமும் அனுமார்லிங்கமும் கஜலிங்கமும் வசுக்கள்லிங்கமும் வாயு லிங்கமும் வருணலிங்கமும் இப்படி யவரவர் மதத்திற்குத் தக்கதாகத் தேவரும் முனிவரும் தாபித்துப் பூசித்து அர்ச்சித்த லிங்க அதிசய மெல்லாம் காண்பித்துக் கொடுத்து பின்பு தேவரும் முனிவரும் அந்த கிரிவாசத்திலிருந்து தபசு செய்த குகைவாசமும் காண்பித்துக்

கொடுத்து பின்பு சதாசிவனிருந்து தேவர்களை முறைவிசாரித்த குகைக்கு ஆண்டான்குகை என்று பெயரும் காண்பித்துப் பின்பு அந்த கிரிவாசத்திலுள்ள நதிக்குப் பேர் விவரம் காண பிருமநதி விஷ்ணு நதி ருத்திரநதி மகேசுரநதி சதாசிவநதி சத்திநதி கணபதிநதி கன்னிநதி குமரநதி ரிஷபநதி அன்னநதி கருடநதி சிங்க நதி ஐராபதநதி தேவேந்திரநதி தேவர்நதி இந்திராணிநதி கந்தர்வநதி வசுக்கள்நதி அகத்தியர்நதி பச்சைநதி பொன்னிநதி செம்பொன்னதி வெள்ளிநதி கல்லுநதி காஞ்சிநதி ரசநதி முத்திநதி வெண்சங்கு நதி இது முதலாகிய நதியும் இதனுள்பட்ட பலநதியும் அதிசய விவர மும் காண்பித்துக் கொடுத்துப் பின்னும் அந்த கிரிவாசத்திலுள்ள ஏக முக இரண்டுமுக மூன்றுமுக சதுர்வேதமுக பஞ்சமுக ஷண்முக சத்தமுக அஷ்டமுக நவமுக ருத்திராக்ஷ விருக்ஷமும் சோதி விருக்ஷமும் முண்டகவிருக்ஷமும் பஞ்சவண்ணசித்தேசவிருக்ஷமும் பஞ்சதீபவிருக்ஷமும் தேன்மாவின்தருவும் சண்பகதருவும் மந்தார தருவும் பாரிசாததருவும் பஞ்சகூவிளவிருக்ஷமும் அனவரத காலம் புஷ்பம் சொரியும் செங்கழுநீர்ப்பூவும் சோதிபில்லு நச்சுப்பில்லு திருவெண்ணீற்றுக் குகையும் சிவலிங்கஞழிவிருதும் சீலாரச்சுரபி மேய்க்கின்ற இடையருக்குப் பால்கறக்கப் பாலண்டைவிருதும் முடி மன்னருக்குத் தண்டிகை விருதும் வேடருக்குத் தனுவிருதும் ஆரிய டோமபருக்கு அரிய திருக்கழை விருதும் வேளாளருக்கு உழவுகொல விருதும் இது முதலாகிய லக்ஷணமுடைய அதிசய முளவதெல்லாம் பூலோக கைலாசத்தில் இருந்த தாவுநிலை சமய முதலி சோழன் சேர னுக்கு வாசித்துக்கொடுக்க சோழன் சேரனும் கேட்டுச் சந்தோஷப் பட்டுச் சமய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் வர வழைத்துக்கொண்டு அந்தப் பேரையென்கிற இருளனையும் வரவ ழைத்து முன்விட்டுக் கொண்டு அந்த கிரிவாசத்திலுள்ள அதிசயமும் பிரம்மகிரி வாசத்திலுள்ள அதிசயமுமாகிய பிருமலிங்கமும் சரசோதி (சரசுவதி)பீடமும் வேதப்பாறையும் பிருமநதியும் சதுர்வேதநதியும் சரசுவதிநதியும் அன்னநதியும் கன்னிநதியும் கன்னியாலவிருக்ஷமும் களபவாசவிருக்ஷமும் கூத்தாடித் திடரும் குளுந்ததென்றல் திடரும் சங்கார வேட்டையாடும் வேட்டைத் திடரும் வேடவிருக்ஷமும் அனவரத காலமும் புட்பஞ் சொரியும் செந்தாமரை நதியும் இது முதலாகிய அதிசயமுளதெல்லாம் பிருமகிரி வாசத்தில் கண்டு அறிந்து கொண்டு சமய முதலி கையொழுகின்படிக்கு விஷ்ணுகிரிக்குப் போய் விஷ்ணுகிரி வாசத்தில் உள்ள குகையில் விஷ்ணுலிங்கமும் லட்சுமி சோபன பள்ளியறை மாளிகையும் உலகளந்த குளகு முத்திரியும் அனுமந்த முத்திரியும் ராமபாண முத்திரியும் இதுமுதலாகியதெல்லாம் அந்தக் குகையில் தாபித்து இருந்ததைக் கண்டு பின்னும் அவ்விடத்தி லுள்ள நதி விஷ்ணுநதி லட்சுமிநதி தாளநதி வெண்சங்குநதி கருடநதி

அனுமந்நதியும் கண்டு கண்டபின்.பு கனுவில்லாப் பிரப்பங்கொடியும் லங்காபுரித் துங்கபத்திரமும் வாசமருவும் பஞ்சவித நாமமும் வசந்தப் பாறையும் காத்தடிக் குகையும் பஞ்சக்கூவிளமும் பாம்பணைப்பாறை யும் பள்ளிகொண்ட திடரும் இதுமுதலாகிய அதிசயமுள்ளதெல்லாம் விஷ்ணுகிரியில் கண்டறிந்துகொண்டு சமைய முதலி கையொழுகின் படிக்கு ருத்திரகிரிக்குப் போய் ருத்திரகிரிக் குகையில் ருத்திரலிங்கமும் சித்தர்குகையும் சித்தலிங்கமும் சித்திவிருக்ஷமும் சித்தர்நதியும் அகத்தியர்நதியும் அகத்தியர்குகையும் அகத்தியவிருக்ஷமும் கன்னிமார் குகையும் கன்னிலிங்கமும் கன்னிபூவனச்சோலையும் கன்னிபூஞ் சோலை விருக்ஷமும் கிதைப்பாறையும் இதுமுதலாகிய அதிசயமும் உள்ளதெல்லாம் கண்டறிந்துகொண்டு சமய முதலி கையொழுகின் படிக்கு நீலகிரிக்குப் போய் நீலகிரி வாசத்திலுள்ள குகையும் அந்தக் குகையிலுள்ள பஞ்சதீப லிங்கமுங் கண்டு கண்டபின்பு அந்தக் கிரி வாசத்திலுள்ள குகையும் அந்தக் குகையிலுள்ள பஞ்சதீப லிங்கமும் கண்டு கண்டபின்பு அந்த கிரிவாசத்திலுள்ள ஆயிரமுகப்பற்றும் நீல சோதி விருக்ஷமும் ஏறுசிங்கை இறங்குசிங்கையும் நல்ல விபூதி நீல நாமம் விளைவு திடரும் நீலச்சுனையும் தாளச்சுனையும் மகாச்சுனையும் வசவச்சுனையும் மாணிக்கச்சுனையும் ரத்தச்சுனையும் கல்சுனையும் உப்புச்சுனையும் பாம்புச்சுனையும் குங்குமச்சுனையும் வெள்ளைச் சுனையும் வெள்ளைச்சிங்கையும் வெண்புலி விருக்ஷமும் சந்தணச் சோலையும் அந்தித்தளகூவிளவிருக்ஷமும் மனமேவுசோலையும் வசந்தத் திடரும் இதுமுதலாகிய அதிசயமுள்ளது எல்லாம் நீலகிரி வாசத்தில் கண்டு பின்னும் நீலகிரி வரலாறு தேவராலும் முனிவராலும் சித்த ராலும் காண்கப்போகாதென்று கண்டறிந்துகொண்டு பூலோக கைலாச வெள்ளியங்கிரிக்கு வந்து வெள்ளியங் கிரிக் குகையிலுள்ள சிவலிங்கத்தையும் கண்டு தரிசித் துக்கொண்டு சோழன் சேரன் சமயமுதலி சடை யப்பன் கத்தூரி ரங்கப்பச்செட்டியும் மற்றுள்ள பேருமாக வெள்ளி யங்கிரி விட்டிறங்கித் திருமுட்ட நல்லூருக்குப் போனார். போய் அந்தத் திருமுட்ட நல்லூரில் எல்லோருமிருந்துகொண்டு சேர கொங்கு நாட்டி லுள்ள பதினெண்சாதிப் பல்குடியும் அடைக்கவிட்டு ராச்சிய நிருதி செய்தார். செய்த விவரம் காண்க.

மன்னர்கள் வெள்ளியங் கிரி சென்றது

முட்டத்தில் இருந்து கொண்டு திட்டம் போட்டது

கரிகாலச்சோழன் சேரகொங்கு நாட்டில் கட்டி வைத்த ஆலயமும் ஆதிகருவூர் முதல்கொண்டு திருப் பேரையூர் வரைக்கும் கட்டிவைத்த கொங்கேழு சிவாலயத்திற்கும் அதனுள்பட்ட முன்னூற்றறுபது சிவாலயத்திற்கும் அதனுள்பட்ட விஷ்ணு ஆலயம் சுப்ரமண்யத் திரு வாலயமும் மடவாலயமும் குருவாலயம் அதனடுத்த துர்க்கை ஆலயம்

பிராமணர் அக்கிரகாரம் மாவடி சங்கரவணம் தண்ணீர்ப்பந்தல் சாலைத்தோப்பு அன்னசத்திரம் பண்டிதர் மருத்துவர் வைத்தியர் சாஸ்திரி புரோஹிதர் கவிவாணர் கூத்தாடி பட்டர் கூனர் குருடர் குறைகால் முடவர் அனுதி பரதேசி யாருமற்றவர் இவர்கள் முதலாகிய பேருக்கு எல்லாம் சேரகொங்கு நாட்டில் கரிகாலச் சோழன் சேரமாம்பெருமாள் என்னும் சேரனிடத்தில் கைக்கிரய பூமிகொண்டு இது முதலாகியதுக்கெல்லாம் கரிகாலச்சோழன் வரிசைமான்யம் விடுவித்து சேரன் கையில் கைக்கிரயம் திருவை யாற்று நகரம் அறுபத்தாறு லட்சம் பொன் கிரயம் கட்டிக் கொடுத்துத் தீர்ந்தபின்பு பின்னும் கரிகாலச்சோழன் சேரகொங்கு நாட்டில் தான் கட்டிவைத்த ஊர் கிராமம் கோட்டை பேட்டை பட்டிணம் அங்காடி நகரம் கோவில் குளம் அணை வாய்க்கால் இதுமுதலாகியதெல்லாம் சேரன் வசத்தில் ஒப்பித்தார். அவரொப்பித்தபடிக்கு சேரன் கையேற்றுக்கொண்டு சேரகொங்கு நாட்டில் கரிகாலச்சோழனும் தாமும் கட்டிவைத்த கோவில் குளம் ஊர் கிராமவழியிலுள்ளதற்கெல்லாம் சேரன் தன்னதிகார நிருதி செய்தார். செய்த விவரம் காண்க.

கொங்கு நாட்டு எல்லை

24 வட்டம்

70 பாளையப் பட்டு

கிழக்கு காவேரி குளித்தண்டலை தெற்கு வையாவூர் மேற்கு வெள்ளியங்கிரி வடக்குப் பெரும்பாழி இதனுள்பட்டது இருபத்திநான்கு வட்டங்கொண்ட சேரகொங்குராச்சி யத்திற்கு எழுபது பாளையப்பட்டுத் துரைகளுக்கு அதி காரம் கட்டுச்செய்து இவர்களுக்கு வரிசையும் பிளித்தம் அந்தந்த ஊர் கிராமத்தில் கண்ட க்டமைக் கந்தாயம் பணத்தில் ஊர்க்காணியாளர் முதலாகக் கையேட்டுக் கணக்கன் பணந்தாண்டி பூரவாரியன் இவர்களுக்குக் கண்ட பணத்தில் பத்திலொன்றென்று போக நீக்கி யுண்டான பணம் சடையப்பன் வசத்தில் சேர சடையப்பனும் தன்னுடைய கொங்கு ராச்யத்தில் பிறந்த உட்டு வழிப்பணத்தில் பத்திலொன்று போக நீக்கி உண்டான பணமும் சத்திமங்கலத்து சின்னப்ப மண்ணுடி வசத்தில் சேர்.

அரமணைத் தலைநகர் தாராபுரம்

சின்னப்ப மண்ணுடி தம்முடைய தாராபுரத்து அரமணை ஆசாரவாசலில் செலுத்துவது. இதன் மீறி ஊர் கிராமத்தவரானாலும் சடையப்பனானாலும் சின்னப்ப மண்ணுடியாகிலும் தம்முடைய கொங்கு ராச்யத்தில் பிறந்து உட்டு

அதிகாரம் வசூல் முதலிய திட்டம் வகுத்தது

வளிப்பணத்தில் செலவழித்தால் செலவழித்த வரை யொன்றுக்(கி)குரண்டு தடை மறியிருந்து அடி ஆக்கி னைப்பட்டு மெய் கொள் குடுக்க உள்ளவர்களென்று சேரமான் பெருமாள் தம்முடைய அரமணை யூர்க்கிரா மங்களுக்கு நிருதி செய்து பின்னும் தம்முடைய தேசத்தில் உழவு

குடியான பல குடிக்கும் நிகுதி உட்மூத குடிக்கும் பத்திலொன்று கடமைக் கந்தாயம் கொடுத்து வரவும். பின்னும் குடிரிசைக்கு

வரிகள் ஏர்வரி ஆள்வரி மனைவரி தரிசினைவரி பட்டிவரி புல்வரி அவர்களுக்கில்லை.

பசு விற்றால் கொண்டால் ஆடு விற்றால் கொண்டால் கோழி விற்றால் கொண்டால் சுங்கமில்லை இது முதலாகிய வரியொன்று மில்லை.

உழவு குடிக்கென்று பின்னும் அந்தந்தக் கிராமத்தவர் அந்தந்த அரமனை வாசலுக்கு (145-A) வெட்டியும் வட்டிப்பாலும் நடத்திவர உள்ளவர்களென்று உழவு குடிக்கெல்லாம் நிகுதி செய்த பின்பு அவனுக்குள்பட்ட கூலிகொடுத்துக் காற்றுகிய ஊரிருளர் காட்டிருளர் புனவேடர் புனக்குரவர் ஊர்வலையர் இவாகளெல்லாம் புனம் வெட்டிப் பயிரிட்டால் அவர்களுக்குக் கடைமைக் கந்தாய மில்லை. அந்தந்த ஊர் அரமனை வாசல் வெட்டி யூதியம் சாதித்துக்கொண்டு அந்தந்த ஊர் பாடிகாவல் கா(த்து)வர உள்ளவர்களென்று அவர்களுக்கு நிகுதி செய்த பின்பு தம்முடைய கொங்கு ராஜ்யத்தில் கட்டிய பட்டிணம் அங்காடி நகரத்தில் வியாபார வர்த்தகருக்கு சிப்பகட்டு மகாக் கட்டுனிச்சபொதிக்கு அரண்மனைக்குச் சுங்கத் தீருவைக் கொள்ள விக்கத் திருவையாற்று நகரம் நேச பொதிக்கு ஒருபணம் கிமை நிச பொதிக்குக் கத்தூரி ரங்கப்பச் செட்டிக்கு அரைக்கால் பணம் சமய முதலிக்கு அரைக்கால் பணம் இடங்கை வலங்கை மகிமை இந்த இரண்டு மகிமையும் கொடுத்து வரவுள்ளவர்கள் என்று நிகுதி செய்து பின்னும் அந்தச் சுங்கத்தில் தீர்ந்த தீர்வைப்பணத்தில் கெடியானகை கொண்டு கணக்கன் யுளக்கெடியான கொலைக்காரராயிரவர்களுக் கெல்லாம் தம்முடைய கொங்கு ராஜ்யத்தில் பிறந்த உட்டு வளிப் பணத்தில் (கத்தூரி ரங்கப்பச் செட்டிக்குப் பத்தில்) ஒன்றுபோக நீக்கியுண்டான பணம் கத்தூரி ரங்கப்பச் செட்டிவசம் சேருவது சொந்த உட்டு வளிப்பணத்தில் கத்தூரி ரங்கப்பச் செட்டிக்குப் பத்தில் ஒன்று போக நீக்கி உண்டான பணம் சத்தி மங்கலத்துச் சின்னப்ப மண்ணுடி முகாந்தரத்தில் தாராபுரத்து அரமனைக்குச் செல்லுவது என்று நிகுதி செய்த பின்பு பின்னும் கொங்கு ராச்யத்தில் கட்டிய பட்டிணம் நகரம் அங்காடியில் வியாபாரம் கவரை வலைஞரில் வலையல் முதல்கொண்டு வென்முத்து வரைக்கும் மு(கா)ளிமேல் போட்டு வியாபா ரஞ்செய்தால் அவர்களுக்கு அரண்மனைச் சுங்கமும் இடங்கை வலங்கை மகிமையுமில்லை என்று நிகுதி செய்தபின்பு தம்முடைய கொங்கு ராஜ்யத்தில் கட்டிய பட்டிணம் பேட்டை நகரம் அங்காடியில்

கைக்கொள்வர் வெள்ளை வஸ்திரம் முதல்கொண்டு வீரவாளிப்பட்டு வரைக்கும் காளைமேல்போட்டு வியாபாரஞ் செய்தால் அவர்களுக்கு அரமணைக்குச் சுங்கத்தீர்வையு மில்லை. இடங்கை வலங்கை மகிமைத் தீர்வையுமில்லை யென்று கண்டு நிகுதி செய்து பின்னுமிந்த இடங்கை வலங்கை யிருவருக்கும் பொதுவராகிய வேளாளர் அந்த வேளாளருக்குள்பட்ட வேளாளஞ்செட்டியாருக்கு வியாபாரம் கம்பு முதல்கொண்டு காணம் வரைக்கும் தான்னியம் சுமந்து வியாபாரம் செய்தால் அவர்களுக்கு நிச்சிமிட்டுக்கு ஒரு காசு நம்முடைய அரமணைக்குச் சுங்கத்தீர்வை எடங்கை மகிமைக்கு அரைக்கால் காசு வலங்கை மகிமைக்கு அரைக்கால் காசும் தீர்ந்து கொடுத்து வரவுள்ளவர்களென்று நிகுதி செய்தபின்பு இன்னும் நகர வியாபாரிகளுக்கு உப்பு முதல்கொண்டு கற்பூரம் வரைக்கும் அவர்கள் கொண்டுவந்து அங்காடி நகரத்தில் கடைகட்டி வைத்து அந்தக் கடையிலிருந்து வியாபாரம் செய்தால் அவர்களுக்கு நெசக்கடையொன்றுக்குச் சுங்கத் தீர்வை திருவையாற்று நகரம் ஒரு பணமும் எடங்கை மகிமை சமைய முதலிக்கு அரைக்கால் பணமும் வலங்கை மகிமை ரங்கப்பச்செட்டிக்கு அரைக்கால் பணமும் தீர்ந்துகொடுத்து வரவுள்ளவர்க ளென்று நிகுதி செய்து சேரமாம் பெருமாளென்னும் சேரன் தம்முடைய கொங்கு ராச்சியத்தில் அரமணை ஆதாய பூமிக்கு நிகுதி கண்டபின்பு தேவதாய பூமிக்கு நிகுதி கண்ட விவரம் காண்க.

தேவதாய திட்டம் வகுத்தது

ஆதி கருவூர் முதல்கொண்டு மேலைச் சிதம்பரம் திருப்பேரூர் வரைக்கும் இதில் உள்பட்ட கொங்கேழு சிவாலயத்திற்கும் அதிலுள்பட்ட முன்னூற்றறுபது சிவாலயத்திற்கும் அதனுள்பட்ட விஷ்ணு ஆலயம் சுப்ரமண்யத்திருவாலயம் மடவாலயம் குருவாலயம் அதனடுத்த துர்க்கை ஆலயத்திற்கு விட்ட வருஷ மான்யம் கிராமத்திற்கு அந்தந்த ஊர் கிராமக் காணியாளர்கள் கணக்கன் ஊர் வாரியா இவருக்கெல்லாம் அந்தக் கிராமத்தில் உட்டு வெளிக்கடமைக் கந்தாயம் பணத்தில் பத்திலொன்று போக நீக்கி உண்டான பணம் சமய முதலிவசம் அவரவர் செலுத்திக்கொண்டு வர இந்தப்படி நம்முடைய கொங்கு ராச்யத்தில் உள்பட்ட அந்தக் கிராமத்தவருக்கெல்லாம் கட்டுச் செய்தபடிக்கு அவரவரும் நிகுதி முறைக்குத் தள்ளிக் கொண்டு நீக்கு யுண்டான பணம் சமய முதலி வசம் செலுத்த அவர்கள் செலுத்தினல் சமய முதலி தேவதாய-பூமியில் பிறந்த உட்டு வழிப் பணத்தில் சமய முதலிக்குப் பத்திலொன்றுபோக சமயமுதலி நீக்கி உண்டான பணத்தை எல்லாம் அந்த ஆலய ஊழியங்களுக்குக் கொடுத்த படித்திரம் தீபாராதனை நடத்திக்கொண்டு வரச்சொல்லி அந்தந்த ஆலயத்தை மங்காமல் விசாரித்து நடத்திவர உள்ளவர்களென்று நிகுதி செய்து

சேரமாம் பெருமாளென்னும் சேரன் சமய முதலி வசம் இனிமேல் என்னைக் கொண்டு காரியமில்லை யென்று சபை அறிய ஒப்பிக்கச் சேரன் ஒப்பித்தபடிக்குச் சமய முதலியும் கை யேற்றுக் கொண்ட பின்பு கரிகாலச் சோழன் சேரமாம் பெருமாளென்னும் சேரன் சமய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் மற்றுமுள்ள பேரும் இனிமேல் திருப்பேரையூர் நகருக்குப் போய்த் திருப்பேரையூரில் பட்டீசுரர் பச்சை மரகத வல்லி அம்மனுக்கு மற்றுமுள்ள தேவதைகளுக்கும் அபிஷேக தூப தீபாராதனை முடிப்பித்து எல்லாரும் தரிசித்துக்கொண்டு போகவேண்டுமென்று கரிகாலச் சோழன் சேரமாம் பெருமாளென்னும் சேரன் சமய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி மற்றுள்ள பேரும் திருப்பேரையூர் நகருக்கு வந்து திருப்பேரையூரில் பட்டீசுரர் பச்சைமரகதவல்லி அம்மனுக்கும் மற்றுள்ள தேவதைகளுக்கும் அபிஷேக தூப தீபாராதனை முடிப்பித்து கரிகாலச் சோழன் சேரமாம்பெருமாளென்னும் சேரன் சமயமுதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி மற்றுள்ளபேரும் அவரைத் தரிசித்துக்கொண்ட பின்பு கரிகாலச் சோழன் சேரமாம் பெருமாளென்னும் சேரன் சமய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் எல்லோரும் இனி நாம் அறுமுகவர் தக்ஷிணகாசித் திருவவிநாசித் திருமுருகன் பூண்டித்தலத்திற்குப்போய் முருகநாத சாமியும் முயங்கு பூண்முலை அம்மனையும் அவிநாசிலிங்கரையும் பெருங் கருணை அம்மனையும் தக்ஷிண காசி விநாயகரையும் சிவலிங்கமும் மற்றுள்ள தேவதைகளும் தரிசித்துக்கொண்டு அவரவர் தலத்திற்குப் போக வேண்டுமென்று எல்லோரும் பேரையூர் நகர் விட்டுத் தக்ஷிணகாசித் திருவவிநாசி நகரத்துக்கு வந்தார். அதன் பின்பு எல்லாரும் சாமிதரிசனம் செய்துகொண்டு கரிகாலச் சோழன் சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் மற்றுள்ள சேரமாம் பெருமாளென்னும் சேரனிடத்திலும் சமய முதலி கையிலும் அனுப்பி வைத்துக்கொண்டு அவர்கள் ராணுவப்படையுடனே திருவாரூருக்குப் போனார். அவர்கள் போனபின்பு சேரமாம் பெருமாளென்னும் சேரன் அந்த ஏழு பொய்கை நதிப் பாறைக்குக் கீழ்பால் வடபுறத்தில் செம்பொன் விழவுக்குச் சேரன் சமய முதலியும் உத்தமலிங்கரையும் கூட்டிக்கொண்டு தன் ராணுவம் வந்து அந்தச் செம்பொன் விழவைக் கண்டு [1]அரிப்பித்து நாகதாம்பிரம் புடமிட்டு வடி கொண்டு நிறுத்திப் பார்க்க நாக தாம்பிரச் செம்பு ஆயிரம் துலாம் செம்பு சேர்ந்தது. அதன் பின்பு சேரமான்

திட்டம் செய்த பிறகு எல்லாரும் திரும்புதல்

பேரையூர்

அவிநாசித் திருமுருகன் பூண்டி

---

[1] அழிப்பித்து.

பெருமாளென்னும் சேரன் 'சமய முதலி உத்தமலிங்காசாரர் மற்றுள்ள பேர்களையும் கூட்டிக்கொண்டு தன் ராணுவத்துடனே புறப்பட்டுக் கொச்சி நகர்த் திசை நோக்கி நாக தேவகன்யகாபுரி நகர் கடந்து கொச்சிக்குப் போக வேணுமென்று புறப்பட்டுப் போம் பொழுது இடைக்காட்டில் பொழுதிறங்கி யிருண்டு போனபடியினாலே அந்தராத்திரி யிடைகளட்டுக் கண்டியில் பாளைய மிறங்கியிருந்து

வானியாறு

மறுநாள் பாளையம் எழுப்பி வானி ஆற்றங் கரையில் பாளையம் பொடிவித்து இறங்கி இருந்துகொண்டு அந்த வானித்தண்ணீரனயங்கண்டு அந்தச்செம்பு ஆயிரம் துலாம் செம்பையும் அந்தத்தண்ணீரில் கரைய உருக்குப்புட மிடிவித்து நிறைகட்டித் தூக்கிப் பார்க்க நாக தாம்பிரச் செம்பாக ஆயிரத் தெட்டும் மாற்றேறி நாக தாம்பிரச்செம்பாய் ஐந்நூறு துலாம் செம்பாயிற்று. இந்த நாக தாம்பிரச் செம்பு ஆனசேதி திருவாரூரி லிருக்கின்ற கரிகாலச் சோழன் கேட்டு கரிகாலச் சோழன் மேலச் சிதம்பரம் திருப்பேரை நகர் கோவிலுக்குத் தாம்பிர விக்கிரகமி . . . 'னக்குச் செய்து வைக்க வேண்டுமென்று வானிக் கரையில் சேரமாம் பெருமாளென்னும் சேரன் நாகதாம்பிரம் கொண்ட சேதிக்குத் தன் வகை ஆளுகள் கையில் இரண்டாயிரம் பொன் திருவையாற்று நகரம் கொடுத்து அனுப்பித்தார். அவர் அனுப்பித்த படிக்குச் சேரனும் இரண்டாயிரம் பொன்னையும் வாங்கிக் கொண்டு வடி தாம்பிரச்செம்பு நூறு துலாம் செம்பு கொடுத்து அனுப்பித்தார். அனுப்பித்த பின்பு நீக்கு நின்றவடி தாம்பிரச்செம்பு நானூறு துலாம் செம்பும் கழிவு நின்ற செம்பும்

கொச்சி

எடுப்பித்துக்கொண்டு வானிக்கரை கடந்து கொச்சிக் குப் போனார். கொச்சிக்குப் போய் கொச்சி நகரி லிருந்துகொண்டு அதன் பின்பு சேரமான் பெருமாளென்னும் சேரன் இடைக்காட்டுக் கண்டியில் இருந்துகொண்டு நாகதாம்பிரம் கரைப் பிக்க வானிக்கரைக்குப் போகிறதாக ஒருநாள் பாளையம் ராத்தங்கின படியினாலே சேரமாங்கண்டி யென்னும் பேரமாயிற்று.

சேரமாங் கண்டி

அதன்பின்பு வானிக்கரைக்குப் போய் பாளையமிறங்கிக் கொண்டு வானிக்கரையில் நாகதாம்பிரம் புடம் போட்டு நிறுத்திக் கட்டித் தூக்கி கரிகாலச் சோழனுக்குக் கைக்கிரய பணத்திற்கு துலாம் இருபது பொன் [1]மேறை முறையில் நிறுத்திக்கட்டி இரண்டாயிரம் பொன் திருவையாற்று நகரத்து இரு நூறு துலாம் வடிதாம்பரச் செம்பு கொடுத்தனுப்பின

செம்புகட்டி
சங்கரநாராய ணர் கோயில்

படியினாலே அந்தத் தலத்திற்குச் செம்புகட்டியென்னும் பெயராயிற்று. அதன்பின்பு சங்கரநாராயணருக்குக் கோவிலும் கட்டிவைத்து நகரமும் கட்டிவைத்துச்

---

1 மேறை என்ற வழக்குச்சொல் விதம் விழுக்காடு என்ற பொருளில் வழங்குகின்றது.

சேரன் சமய முதலியை அழைத்து அந்த நகர்க்குடியும் வைத்து அந்தக் கோவிலுக்குப் புண்ணியாங்கப் பிரதிஷ்டையும் செய்விக்கச் சொல்லிச் சொன்னார். அவர் சொன்னபடிக்குச் சமய முதலியும் பதினெண்சாதிப் பலகுடியும் அழைத்து அந்த நகரில் குடி வைத்து நிகுதி செய்த பின்பு உத்தமபண்டிதரை அழைத்து அந்தச் சங்கரநாராயண லிங்கருக்குப் புண்யாங்க அஷ்டமந்திரப்ரதிஷ்டையும் செய்வித்து அந்தக் கோவிலூழியம் செய்தவர் நம்பி நாகபாடத்தவரும் வைத்து திருவாடு தண்டிகைச் சீர்பாத ஊழியத்திற்குக் கைக்கொள்வரில் ஐம்பது குடியும் வைத்து அந்த ஐம்பது குடி கைக்கொள்வருக்கும் நம்பி நாக பாசத்தவருக்கும் முதன்மை நாட்டாண்மைக்கு குமர சுப்பிரமண்ய முதலி யென்கிறவனை வைத்து அவர்களுக்கெல்லாம் பாக்கு வெற்றிலை கொடுத்து நிகுதி செய்து நாட்டாண்மைக்காரனுக்கும் நம்பி நாகபாசத்தவருக்கும் கோவிலூழி யுதா(ழ்)ச்சி வராதபடிக்கு நடந்து கொள்ளச் சொல்லி சமய முதலி நிகுதி செய்த பின்பு சேரமாம் பெருமாளென்னும் சேரன் அந்தச் சங்கர நாராயண லிங்கர் கோயில் படித்திர தீபாராதனைக்கு விட்ட வரிசை மான்யம் ஆயிரம் பொன் கிராமமும் நூறு மிடா விரைப்பு வயல் பூமியும் நூறு பொன் சுங்கமும் விட்டு விட்ட மான்ய பூமி கிராமத்திற்குச் சங்கு சக்கிர திரிசூலக் கல்வெட்டுப் பொடிவித்து அந்தச் சங்கர நாராயண லிங்கர் கோயில் ஆலயத்திற்கு விட்ட வரிசை மான்யத்தில் சமய முதலிக்குப் பத்தில் ஒன்று வரிசை மான்யமென்று அந்தச் சங்கர நாராயணர் திருக்கோவில் முன் பந்தி கனக சபைத் தூணில் கல்வெட்டுப் பொடிவித்த பின்பு சேரன் வானியாற்றங் கரையில் வடி வடி கொண்டு பொன்னுகத் தாம்பிரச்செம்பு நானூறு துலாம் செம்பும் கனிவு செம்பு இருக்கிறதையும் அந்த நானூறு துலாம் செம்பையும் விக்கிரகங்கள் உண்டு செய்து சங்கர நாராயணத்திலும் சுப்பிரமண்யத்திலும் மோகாமபுரியிலும் திருநஞ்சுண்ட கூடலிலும் வைத்து அந்தக்கழிவு செம்பானதெல்லாம் தட்டோடு சேர்த்துச் சங்கர நாராயணர் கோயிலும் மேய்வித்துக் குமர சுப்பிரமண்யத்திலும் சுப்பராயர் திருக்கோவிலிலும் மேய்வித்து அதன்பின்பு சேரன் நாகதாம்பிரவடி செம்பில் ஆறு கோணத்தேவ பூசைப் பொட்டியும் அதில் ஆறு விக்கிரகமும் உண்டு செய்வித்து ஒரு தாம்பிர வேலாயுதமும் உண்டு செய்வித்துக் குகன் சக்கிரமும் தேவ பூசை செம்பு ஆறு கட்டியும் கவண்டலமும் கும்பாவும் மோதிரமும் சத்தும் ருத்திராக்ஷமாலைக்கு மிடைமணியும் இது முதலாகியதெல்லாம் வானியாற்றுங்கரையில் வடிகொண்ட நாக தாம்பிரச்செம்பில் உண்டு செய்வித்து அதன்பின்பு ஏகமுக ருத்திராக்ஷமும் வலம்புரிச்சங்கும் நாகவாத்தியமும் இதுமுதலாகியதெல்லாம் தருவித்து அதன்பின்பு நாக தாம்பிரச் செம்பில் மயில்வாகனச் சேவை விக்கிரகமும் உண்டு

செய்வித்துச் சங்கர நாராயணலிங்கர் திருக்கோவில் சன்னிதியில் ஆறுகோணப் பெட்டியில் வைத்த ஆறு விக்கிரகமும் ஆலவாய்த் திரு னீற்றுப்பழமும் ஏகருத்திராட்சமும் வலம்புரிச் சங்கும் நாகதேவ தாம்பரச் செம்பில் உண்டுசெய்த மயில் வாகனச்சேவை விக்கிரக மும் தாம்பரக் குழந்தைவேலும் இதுமுதலாகியதெல்லாம் சேரன் உத்தமலிங்காசாரரைக் கொண்டு புண்யாங்கப் பிரதிஷ்டையும் செய் வித்துக் கந்த புஷ்ப தூப தீபாராதனையும் முடிப்பித்துச் சேரனும் சமய முதலியும் தரிசித்துக்கொண்டு அதன்பின்பு சேரன் உத்தம லிங்காசாரரைக்கொண்டு அந்த ஆறு கோணப்பெட்டித் தேவ பூசைக்கு முஸ்த்தேத்தி ஆனதெல்லாம் சமய முதலிக்குக் கொடுப்பித் தார். அதன்பின்பு சேரன் சமைய முதலிக்கு இருந்து தெய்வபூசை செய்துவர வெண்டாமரைப் பட்டுங் கொடுத்துச் சேரன் சமய முதலியை அந்தப் பட்டாசனத்தைத் தண்ணி மேலே விரித்து அதன் மேலிருந்து தெய்வபூசை முடித்து வரச்சொன்னர். சேரன் சொன்ன படிக்குச் சமய முதலியும் அப்படியே மேற்கு சமுத்திரத்தில் சங்கர நாராயணர் கோவிலுக்கும் முன்னகச் சமுத்திரத்தில் வெண்டாமரைப் பட்டாசனம் விரித்து அதின் மேலிருந்து கொண்டு ஆறுதரத் தெய்வ பூசையை சடாக்ஷரத் திருமந்திர முகாந்திரமாக முடித்துச் சதாசிவனை அர்ச்சித்துக்கொண்டு எழுந்திருந்து வந்தார். வந்தபின்பு உத்தம லிங்காசாரர் பாதத்தில் பணிந்து நமஸ்கரித்துக் கொண்டு நிற்கும் போது உத்தமலிங்காசாரரும் சேரனுமாகச் சந்தோஷப்பட்டுக் கொண்டு இந்தத் தெய்வபூசை முஸ்த்தேத்தி சமய முதலி அமர்ந்த தென்று அந்தத் தெய்வபூசை ஆலய முஸ்த்தேத்தி ஆனதெல்லாம் சமய முதலி வசம் ஒப்புவித்தார்கள். அவர்கள் ஒப்புவித்தபடிக்குச் சமய முதலியும் அதே முறைக்கு வாங்கிக் கொண்ட பின்பு சேரன் சமய முதலிக்கு உடுகறை பாக்கு வெற்றிலைகொடுத்துச் சந்தோஷம் செய்து அந்தத் தெய்வபூசை ஆலயத்தைப் பூசித்துக்கொண்டு உங்கள் வம்ச பாரம்பரிக்கையில் நடந்து வாருங்களென்று சேரனும் உத்தம லிங்காசாரரும் வாக்குக் கொடுத்துப் பூசித்து வந்தவருக்கு ஆறுதாரச் சுப்பிரமணிய தேவர் அதிக பவுஷும் பாக்யமும் தந்து தேவுலகும் மூவுலகும் ஆள அருள் கொடுத்து அவர் பாதாரவிந்தமே கதியும் தந்து ரட்சிப்பா ரென்று உத்தமலிங்காசாரரும் சேரமாம் பெருமாள் என்னும் சொல்லும் வாக்கு வரமும் கொடுத்துச் சமய முதலிக்கு அந்த ஆறுதாரத் தெய்வபூசை ஆலயத்தைப் பூசித்து வரக் கட்டுச்

கப்பல் மகிமை போட்டது

செய்து சமய முதலிக்குக் கொச்சி தேசத்தில் கப்பல் மகிமையும் உண்டு செய்து சேரன் கொச்சி புகுந்து போகிற கப்பலுக்கு அஞ்சு பொன்னும் வருகிற கப்ப

போகிற கப்பலுக்கு அஞ்சு பொன்னும் வருகிற கப்பலுக்குப் பத்துப்

பொன்னு மென்று கண்டு சமய முதலிக்குச் சேரன் செப்புப் பட்டையம் எழுதிச் செப்பேட்டுப் பட்டயமும் பாக்கு வெற்றிலை யும் சமய முதலி கையில் சேரன் கொடுத்து நிகுதி செய்தபின்பு சங்கர நாராயணலிங்கர் திருக்கோவில் முன்பந்தி கனகசபைத் தூணில் சமய முதலிக்குக் கப்பல் மகிமை கண்டு கல்வெட்டும் பொடிவித்து நிகுதி செய்தபின்பு சேரன் சமய முதலியும் உத்தமலிங்காசாரரையும் மற் றுள்ள பேர்களையும் கூட்டிக்கொண்டு சங்கரநாராயணபுரிநகர் கடந்து கோவிலுக்குக் கொச்சியிலிருந்துகொண்டு சேரமாம் பெருமாளென் னும் சேரன் தங்கள் வம்சத்தவர் முன்னளில் சிவாலயங்களுக்கு விட்ட வரிசை மான்யங்களுக்கு விவரங் கண்டபடி கொச்சித் தேவஸ்தானத் தலத்திற்கு ஆயிரம் பொன் கிராமமும் நூறுபொன் சுங்கமும் நூறுமிடா விரைப்பாடு வயல் பூமியும் அதில் சமய முதலிக்கு விட்ட மானியம் பத்திலொன் றென்று கண்டு அதற்கு மணியங் கணக்கு வைத்தது சமய முதலி வைத்த முத்துத்தாண்டவ முதலியென்று கண்டு அந்தக் கோவிலுக்கு விட்ட கிராம மான்ய வயல் பூமிக்கு சங்கு சக்கிர திரிசூலக் கல்வெட்டும் பொடிவித்து அந்த விவரமும் கண்டு குமரசுப்பிரமண்யர் கோவிலுக்கு விட்ட வரிசை மான்யம் ஆயிரம்பொன் கிராமமும் நூறுபொன் சுங் கமும் நூறுமிடா விரைப்பாடு வயல்பூமியும் கண்டு அதில் சமயமுதலிக்கு விட்ட வரிசை மான்யம் பத்திலொன்றென்று கண்டு அப்படி விட்ட மான்யங்களுக்குச் சூலக்கல் பொடிவித்துச் சமய முதலிக்குக் கோயில் தூணில் கல்வெட்டுப் பொடிவித்து அந்தக் கோயில் மானியத்திற்கும் மணியங் கணக்கிற்கும் நாகப்ப முதலிக்குச் சமய முதலி கட்டுச் செய்தபின்பு சேரன் மோகாம்புரிக் கோயிலுக்கு ஆயிரம்பொன் கிராமமும் நூறுபொன் சுங்கமும் நூறுமிடா விரைப் பாடு வயல் பூமியும் கண்டு அதில் சமய முதலிக்கு விட்ட வரிசை மானி யம் பத்திலொன்றென்று கண்டு அப்படி விட்ட மானியங்களுக்குச் சூலக்கல் பொடிவித்துச் சமய முதலிக்கு அந்தக் கோயில் தூணில் கல்வெட்டும் பொடிவித்து அந்தக் கோவிலுக்கும் கோவில் மான்யத்திற்கும் மணியங் கணக்குக்கும் அம்பிகை முதலிக்குச் சமய முதலி கட்டுச்செய்து பின்பு சேரன் திரு நஞ்சுண்ட கூடல் தேவதாயத் தலத்திற்கு விட்ட மான்யம் ஆயிரம் (பொன்)கிராமமும் நூறுபொன் சுங்கமும் இருநூறுமிடா நெல் விரைப்பாடு வயல் பூமியும் விடுவித்ததில் சமய முதலிக்கு வரிசை மான்யம் பத்திலொன்றென்று கண்டு அப்படி விட்ட மான்யங்களுக்குச் சூலக்கல் பொடிவித்துச் சமய முதலிக்குக் கோவில் தூணில் கல்வெட் டும் பொடிவித்து அந்தக் கல்வெட்டு தேவகிரி அம்மன் திருக்கோவில் முன்பந்திக் கனகசபைக் கல்தூணில் சமய முதலிக்குக் கல்வெட்டும் போட்டிருக்கிறதென்று விவரங்கண்டு அந்தக் கோவிலுக்கும் கோவில்

கொச்சி தேவஸ்தானம்

மோகாம்புரி

நஞ்சுண்ட கூடல்

மானியத்திற்கும் மணியங் கணக்குக்கும் வசவலிங்க முதலியைச் சமய முதலி நிருதிசெய்து அதன்பின்பு இதனுள்பட்ட சிவாலயமும் விஷ்ணு ஆலயமும் சுப்பிரமண்யத் திருவாலயமும் மடவாலயமும் குருவாலயமும் இந்தப் பஞ்சாலயங்களுக்கும் சேரன் விட்ட மான்யங்களுக்குச் சூலக்கல் வெட்டும் பொடிவித்து இந்த ஆலய மான்யத்தில் சமய முதலிக்குப் பத்திலொன்று என்று அந்தக் கோவிலில் கல் வெட்டும் பொடிவித்துச் சேரன் நிருதி செய்த பின்பு சேரன் சமய முதலியும் உத்தமலிங்காசாரரையும் கூட்டிக்கொண்டு மற்றுள்ள கார்யப்பேரும் தன் 'ராணுவப் படையுடனே கொச்சி நகர் கடந்து மன்னியூர் நகருக்கு வந்தார். வந்த பின்பு சேரன் மன்னியூர் நகரிலிருந்துகொண்டு முன் வம்சத்தவர் கொங்கு தேசத்தில் கட்டி வைத்த கோவில் தேவஸ் தலங்களுக்கு விட்ட மான்யம் விவரம் தண்டபடி கொங்கு தாராபுரத்துக் கோவிலுக்கு விட்டது ஆயிரம் பொன் கிராமமும் நூறு பொன் சுங்கமும் நூறு மிடா விரைப்புப் புஞ்செய்யும் நூறுமிடா விரைப்பாடு நஞ்செய்யுங் கண்டு அதில் சமய முதலிக்குப் பத்திலொன்று வரிசை மான்ய மென்று கண்டு அந்தக் கோவிலுக்கு விட்ட வரிசைமான்யத்திற்குச் சூலக்கல் நாட்டும் பொடிவித்துச் சமய முதலிக்கு விட்ட வரிசை மான் யத்திற்கு அந்தக் கோயில் கல் தூணில் கல்வெட்டும் பொடிவித்துச் சேரன் நிருதி செய்த பின்பு சமய முதலி அந்தக் கோவிலுக்கும் கோவில் மானியத்திற்கும் மணியங் கணக்குக்கு அத்தப்ப முதலியென் கிறவனை வைத்து நிருதி செய்த பின்பு சேரன் பூந்துறைக்கு விட்டது ஆயிரம் பொன் கிராமமும் நூறு பொன் சுங்கமும் நூறு மிடா விரைப்பாடு நஞ்செய்யும் நூறுமிடா விரைப்பாடு புஞ்செய்யும் கண்டு இந்த ஆலயத்திற்கு விட்ட மான்யத் தில் சமய முதலிக்குப் பத்திலொன்று வரிசை மான்யமென்று கண்டு கோவிலுக்கு விட்ட மான்யம் பூமி கண்டு சூலக்கல் பொடிவித்து சமய முதலி மான்யத்துக்கு அந்தக் கோவில் கல்தூணில் கல்வெட்டும் பொடி வித்துச் சேரன் நிருதி செய்தபின்பு சமய முதலியும் அந்தக் கோவி லுக்கும் கோவில் மான்யத்திற்கும் மணியங்கணக்குக்கும் சிவலிங்க முதலி யென்கிறவனை வைத்து நிருதி செய்தபின்பு சேரன் ஆவினங் குடித் தலத்திற்கு விட்ட மான்யம் ஆயிரம் பொன் கிராமமும் நூறுபொன் சுங்கமும் நூறுமிடா விரைப் பாடு புஞ்செய்யும் நூறுமிடா விரைப்பாடு நஞ்செய்யும் கண்டு விட்ட மான்யத்தில் சமய முதலிக்குப் பத்திலொன்றென்று வரிசை மான்யங் கண்டு அதின் பின்பு ஆனைமலை தேவஸ்தலத்திற்கு ஆயிரம்பொன் கிராமமும் நூறுபொன் சுங்கமும் நூறுமிடா விரைப்பு நஞ்செய்யும் நூறுமிடா விரைப்புப் புஞ்செய்யும்

மனனியூர் வருதல்; அங்கிருந்து கொண்டு மான்யங்கள் விட்டது

கொங்கு தாராபுரம் கோயில்

சேரன் பூந்துறை

ஆவினன்குடி

ஆனைமலை

கண்டு அதில் சமய முதலிக்குப் பத்திலொன்றென்று வரிசை மான்ய மென்று கண்டு அதன்பின்பு சேரன் பூம்பரைக்கோயி லுக்கு விட்டது ஆயிரம்பொன் கிராமமும் நூறு பொன் சுங்கமும் நூறுமிடா விரைப்பாடு நஞ்செய்யும் நூறுமிடா விரைப்பாடு புஞ்செய்யும் கண்டு அதில் சமய முதலிக்குப் பத்தில் ஒன்றென்று வரிசை மான்யம் கண்டு அந்தக் கோயில் கல் தூணில் கல்வெட்டும் பொடிவித்து அந்தக் கோவிலுக்கு விட்ட மான்யத்திற்குச் சூலக்கல் பொடிவித்துக் கோயில் மணியங் கணக்குக்குச் சமய முதலி வேலப்ப முதலியை நிகுதிசெய்து அதன் பின்பு சேரன் சிவகிரிக் கோவிலுக்கு விட்ட மான்யம் ஆயிரம்பொன் கிராமமும் நூறுபொன் சுங்கமும் நூறு மிடா நெல்விரைப்பாடும் நூறுமிடா விரைப்பு புஞ்செய்யும் கண்டு அதில் சமய முதலிக்குப் பத்திலொன்றென்று வரிசை மானியம் கண்டு அந்தக் கோயில் கல்தூணில் கல்வெட்டும் போட்டு அந்தக் கோவிலுக்கு விட்ட மான்யத்திற்கும் சூலக்கல் போட்டு நிகுதி செய்தபின்பு அந்தக் கோவிலுக்கும் கோவில் மான்யத்திற்கும் மணியங்கணக்குக்கும் மயிலப்ப முதலியைச் சமய முதலி வைத்து நிகுதி செய்த பின்பு சேரன் திருமுருகன் பூண்டிக் கோவிலுக்கு விட்ட மான்யம் ஆயிரம்பொன் கிராமமும் நூறுபொன் சுங்க மும் நூறுமிடா விரைப்புப் புஞ்செய்யும் நூறுமிடா விரைப்பு நஞ் செய்யும் விடுவித்து விட்ட மான்யத்திற்குச் சூலக்கல் நாட்டுப் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மான்யத்தில் சமய முதலிக்குப் பத்திலொன்றென்று வரிசை மான்யம் கண்டு அந்தக் கோவில் கல் வெட்டும் பொடிவித்துச் சேரன் நிகுதி செய்தபின்பு சமய முதலி அந்தக் கோவிலுக்கும் கோவில் மான்யத்திற்கும் மணியங்கணக் குக்கும் காஞ்சீபுரத்துச் சமயசங்கோதி சோலையங்கிரி முதலி மகன் வாரணவாசி இவன் மகன் முத்துக்குமார முதலியை வைத்து நிகுதி செய்தபின்பு மன்னியூர்க் கோயிலுக்கு விட்ட மான்யம் ஆயிரம்பொன் கிராமமும் நூறுபொன் சுங்கமும் நூறு மிடா விரைப்பு நஞ்செய்யும் நூறுமிடா விரைப்புப் புஞ்செய்யும் விடு வித்து விட்ட மான்யத்திற்குச் சூலக்கல் நாட்டுப் பொடிவித்து அந்த ஆலயத்திற்கு விட்ட மான்யத்தில் சமய முதலிக்குப் பத்திலொன் றென்று வரிசைமான்யம் கண்டு அந்தக் கோயிலில் கல்வெட்டும் பொடி வித்துச் சேரன் நிகுதி செய்தபின்பு சமய முதலி அந்த ஆலயத்திற்கும் ஆலயத்திற்கு விட்ட மான்யத்திற்கும் மணியங்கணக்குக்குக் காஞ்சீ புரத்துச் சாதி சமய தள விசாரணைப் பட்டத்துநாட்டுக் கர்ணிகக் கச் சித் திருவேங்கட முதலி மகன் கச்சி வடமலையப்ப முதலி இவன் மகன் அமராபதி முதலி இவன் மகன் வினைதீர்த்த முதலி. இந்த வினை தீர்த்த

சேரன் பூம்பறை

சிவகிரி

திருமுருகன் பூண்டி

மன்னியூர்

முதலி மகன். அருந்தா முதலியை வைத்து நிகுதி செய்த பின்பு சேரமாம் பெருமாளென்னும் சேரன் தன் வம்சத்தவர் முன்னளில் சிவாலயங்கட்கு விட்ட வரிசை மான்யம் தவருதபடிக்கு விடுவித்து விட்ட மான்யம் விவரம் கண்டு அதன் பின்பு சேரன் கொங்கு தாராபுர முதல் கொண்டு கொச்சி சங்கரநாராயண வரைக்கும் இதனுள்பட்ட சிவால யங்களும் விஷ்ணு ஆலயங்களும் சுப்பிரமண்யத் திருவயலயங்களும், மட வாலயமும் குருவாலயமும் அதனடுத்த துர்க்கை யாலயத்திற்கும் இந்த ஆலயங்களுக்கெல்லாம் விட்ட வரிசை மான்யங்களுக்கு ஆலயத்திற்கு மணியங்கணக்குக்கு நம்பி முதல் திருவலகு கடைவரைக்கும் சமய முதலியே விசாரணைக் கர்த்தரென்று சமய முதலிக்கு ஒப்புவித்துக் கட்டுச்செய்து உடுகரை பாகரு வெற்றிலையும் கொடுத்து நிகுதிசெய்து அதன் பின்பு சேரமாம் பெருமாளென்னும் சேரன் சமய முதலி கையில் அனுப்பித்துக் கொண்டு தன் ராணுவப்படையுடனே கொங்கு தாராபுர நகருக்குப் போனர். சேரன் போன பின்பு சமய முதலி மன்னியூர் நகர் சமய மண்டபத்தில் இருந்துகொண்டு தன் சகோதர(மா)கிய கச்சிக் கச்சாலையப்ப முதலி இவன் மகன் கச்சிக்கச்சாலைக் கந்தப்ப முதலியும் தன்னு சாரத்திலிருந்துகொண்டு சாதி சமய தள விசாரணைக் குக் கச்சிக்கச்சாலைக் கந்தப்ப முதலிக்கு மைத்துன

மன்னியூர் சமய மண்ட பத்தில் திட்டம் வகுத்தது

ஞகிய சூர்யமூர்த்தி முதலி மகன் கொங்கமட்டுகிற முதலியும் சாதிசம யப் பட்டத்துத் தளவிசாரணை நாட்டுக் கர்ணிகத்திற்குக் கச்சிச்சாலைக் கந்தப்ப முதலிக்கும் கொங்கமட்டுகிற முதலிக்கும் மைத்துனராகிய காஞ்சீபுரத்துச் சாதி சமய தள விசாரணைப்பட்டத்து நாட்டுக் கர்ணி கத்திற்குக் கச்சித் திருவேங்கட முதலி மகன் கச்சி வடமலையப்ப முதலி இவன் மகன் வெள்ளாதிக் கோவிலுக்கும் கோவில் மான்யத். திற்கும் மணியங்கணக்குக்கும் வைத்த கச்சி வினைதீர்த்த முதலி இவன் மகன் கச்சி அருந்தாமுதலியும் சமய சங்கோதி விசாரணைக்குக் கச்சிக் கச்சாலைக் கந்தப்ப முதலிக்கும் கொங்கமுட்டுகிற முதலிக்கும் கச்சி அருந்தா முதலிக்கும் இவர்கள் மூவருக்கும் மைத்துனனுகிய கச்சிச் சோலையங்கிரி முதலி மகன் வாரணவாசி முதலி இவன் மகன் காசி வேல் முதலியும் சமய இழந்தாரி தனுக்கோடி முதலி மகன் ராமலிங்க முதலியும் சாதி சமய நாட்டுச் சோடிளந்தாருக்கு நாக பாச சொக்க லிங்கன் மகன் சுந்திர லிங்கத்தையும் இவர்களை யெல்லாம் மன்னியூர்ச் சமய மண்டபத்தில் வைத்துக் கொண்டு கொங்கு இருபத்தி நாலு நாட்டு உறவின முறையும் அழைப்பித்து மன்னியூர்ச் சமய மண்டபத்தில் வைத்துக்கொண்டு நாட்டுக் கொருவனைக் கொத்துப்பண்ணி நாடு காண்க. ஆறு நாட்டுக்குப் பெரிய வீடு கேவூரென்று கண்டு கேவூருக்கு முத்துக்குழந்தை முதலியை வைத்து வராக நாட்டுக்கு குமார வேலப்ப

முதலியும் ஒரு வங்கத்திற்குச் செங்கோட முதலியும் பூந்துறை நாட்டிற்குப் பண்ண முதலியும் முண்டா நாட்டுக்குச் சடையப்ப முதலியும் வெங்கல நாட்டிற்கு நல்லதம்பி முதலியும் காங்கேய நாட்டிற்கு அந்தப்ப முதலியும் பருத்திப் பொறி நாட்டிற்குப் பொன்னுதம்பி முதலியும் பொன்குலுக்கி நாட்டுக்குக் கந்தப்ப முதலியும் வைய்காவூர் நாட்டுக்குச் சரவண முதலியும் குருப்ப நாட்டுக்கு மோகம்புரி முதலியும் கோசல நாட்டிற்குக் கந்த முதலியும் ஏழுகரை நாட்டுக்குத் தில்லை கோவிந்த முதலியும் அப்படி அதனுள்பட்ட இருபத்துநாலு நாட்டுக்கும் நாட்டாண்மைக்கும் வைத்து சமய முதலியின் தம்பி மகன் கச்சிக் கச்சாலைக் கந்தப்ப முதலியைக் கொண்டு நிருதி செய்து பாக்கு வெற்றிலை கொடுப்பித்து அவரவர் ஊரிலுள்ள வாய்க் குற்றம் கைக்குற்றம் அவரவர் தீர்ந்துகொண்டு வரச்சொல்லியும் அதற்கு மீறின குற்றம் ஒரு நாடு கூடி ஒரு நாட்டுக்குருப்பான நாட்டாண்மைக்காரன் வந்து தீரும்போது மன்னியூருக்கு வந்து நம்முடைய கச்சிக்கச்சாலைக் கந்தப்ப முதலியும் சாதி சமய தள விசாரணைக் கொங்கமட்டுகிற முதலியும் சாதி சமய தள விசாரணைப் பட்டத்து நாட்டுக்கர்ணிகம் கச்சி அருந்தா முதலியும் சமய முதலியும் சமய சங்கதி விசாரணைக்குக் காசிவேல் முதலியும் சமய இழுந்தாரி ராமலிங்க முதலியும் சாதி சமய நாட்டுச் சோடிளந்தாரி நாகபாச சுந்திரலிங்கத்தையும் இவர்களை எல்லாம் வந்தழைத்துக்கொண்டு போய் இவர்கள் முன்பட்டத்தீர்த்துக்கொண்டு வரவும். கனகுற்றங் களானல் நாலு நாடும் கூடித் திரும்போது மன்னியூர்ச் சமய மண்டபத்திற்கு வந்து நாலு நாட்டு உறவின் முறையும் கூடிக்கொண்டு நமது தம்பி மகன் கச்சிக்கச்சாலை கந்தப்ப முதலியும் கொங்க மட்டுகிற முதலியும் நாட்டுச் சமய கர்ணிகம் அருந்தா முதலியும் சமயசங்கதி காசிவேல் முதலியும் சமய இழுந்தாரி ராமலிங்க முதலியும் சோடிள தாரி நாகபாச சுந்தரலிங்கத்தையும் இவர்கள் ஆறுபேரும் இவர்கள் முன்படத் தீர்த்துக்கொண்டு போகவேண்டுமென்று அவரவர்க்கும் கட்டுச்செய்து அதன்பின்பு அந்தந்த ஊரிலேயும் நாட்டிலேயும் அந்தந்த நாட்டாண்மைக்காரர் வாய்க்குற்றம் கைக்குற்றம் தீர்ந்து அபசாரம் வாங்கி நல்லது செய்யும்போது முந்தின பாக்கு வெற்றிலை இரட்டை வேழையம் நாட்டுச் சமய முதலி போக்கு எடுத்து வைத்து அதன் பின்பு சமய நாட்டாண்மைக்காரனுக்கு அதன் பின்பு நாட்டுத் தளபதிக்கும் அதன்பின்பு நாட்டுக் கர்ணிகருக்கும் அதன் பின்பு நாட்டுச் சங்கதிக்கும் அதன் பின்பு இழுந்தாரிக்கும் இப்படி இந்த ஆறு சேசை வரிசைக்காரருக்கு முந்தின பாக்கு வெற்றிலை எடுத்து வைத்து அவரவர்க்கும் கட்டுச்செய்து அதன் பின்பு சோடிளந்தாரிக்கு வெற்றிலை பாக்கு எடுத்துவைத்து அவரவரும் சிரப்படிக் குற்றந் தீர்ந்து

கொண்டு வாருங்களென்றும் அவ்வரவர்க்கும் கட்டுச் செய்து அதன் பின்பு அந்தந்த ஊர்க்கோவில் வாசலில் வரிசை வந்தால் முந்தின பங்கு பால் சமய முதலி பேர்ப்பட எடுத்து வைத்து அதனுள்பட்ட ஐந்து பேருக்கும் எடுத்து வைத்து அதன் பின்பு அவர்கள் பகிர்ந்துகொள்ளவும். தலங்களில் வரிசை வேழையம் வந்தால் சத்தாவரண முதல் பத்து நாளைக்கும் வந்த வரிசையில் ஒன்பது நாள் வந்த வரிசை வேழைய மழுங்களுக்கும் ஒரு நாள் வந்த வரிசை நம்பி நாகபாசத்தவருக்குக் கொடுத்து நடத்தி வரவும். இப்படித் திருநாள் வீதியில் வந்த வரிசை வெளையம் இந்தப்படி நடத்தி வாருங்கள். என்று கட்டுச் செய்து நம்பி தானிகர் கோயில் முந்தின தளிகை தீர்த்தப்பிரசாதம் அந்த நாட்டாமைக்காரனுக்குக் கொடுத்து நடத்தி வரவும். நாக பாசத்தவற்குப் பிந்தின தளிகைப் பிரசாதம் என்று கண்டு அவரவர்களுக்கும் கட்டுச்செய்து இந்த முறைக்கு நாட்டு உறவின் முறையாருக்கும் நம்பி நாகபாசத்தவருக்கும் மற்றுள்ள பேருக்கும் அவரவர்க்கும் கட்டுச்செய்து சமய முதலி அவர்களை உள்படுத்தி அதன் பின்பு சமய முதலி தன் தம்பி கச்சிக் கச்சாலையப்ப முதலி மகன் கச்சிக்கச்சாலைக் கந்தப்ப முதலியைக் கொண்டு சமயமண்டபத்தில் நாட்டுறவின் முறையாருக்கும் நாகபாசத்தவருக்கும் உத்தமலிங்காசாரியாருக்கும் மற்றுள்ள பேருக்கும் விருந்துபடி அரிசி பாக்கு வெற்றிலை கொடுப்பித்துக் களபக் கஸ்தூரிகள் பூசிவைத்து நாட்டுக்கொரு நாட்டாமைக்காரனுக்குக் கச்சிக்கச்சாலை கந்தப்ப முதலியைக் கொண்டு பச்சவடம் பாக்கு வெற்றிலை கொடுப்பித்து நாட்டுக்கொரு நம்பித்தானிகருக்கும் கச்சிக்கச்சாலைக் கந்தப்ப முதலியைக் கொண்டு பச்சவடம் பாக்கு வெற்றிலை கொடுப்பித்து நாட்டுக்கொரு நட்டுவனுக்குக் கச்சிக்கச்சாலை கந்தப்ப முதலிகைக்கொண்டு பச்சவடம் பாக்கு வெற்றிலையும் கொடுப்பித்து நாட்டுக்கொரு தேவதாசிக்குக் கச்சிக் கச்சாலை கந்தப்ப முதலியைக் கொண்டு கண்டாங்கிச்சேலையும் பாக்கு வெற்றிலையும் கொடுப்பித்து எல்லோரையும் சந்தோஷப் படுத்தி இந்த முறைக்கு அணிமுறமை தப்பாமல் நடந்து அவர வரவர்க்கும் சமய முதலி கட்டுச்செய்ய சமய முதலி கட்டுச்செய்தபடிக்கு அவரவர்களும் உள்பட்டுக்கொண்டு அவரவர்களும் சமய முதலி கையிலும் கச்சிக் கச்சாலை கந்தப்ப முதலி கையிலும் அப்பணை வாங்கிக்கொண்டு அவ ரவ ர்களும் அவரவர் நாட்டுக்குப் போனார்கள். அதன் பின்பு சமய முதலி தன் தம்பி மகன் கச்சிக்கச்சாலைக் கந்தப்ப முதலிக்கு உத்தமலிங்காசாரரும் மற்றுள்ள கார்யப்பேரு மறியச் சொல்லும் விவரம். நாம் கச்சி சமய மண்டபத்திலிருந்து ஐம்பத்தாறு தேசத்திலுள்ள தேவஸ்தானம் மணியங்கணக்கு கோயில்விசாரணை நாட்டாமை நம்பி

நாகபாசத்தவர் முதல் நந்தி. கோத்திர வீரபாகு தேவர் சந்ததி விசாரணை விசாரித்துக் கொண்டு மான்ய வரிசையில் பத்திலொன்றும் இடங்கை மகிமை கேரளதேசக் கொச்சிக்கப்பல் மகிமை மானியமும் நமக்கு நடக்கிற வரிசை மான்ய மெல்லாம் உனக்கும் உண்டென்று சபை அறியத் திருவாக்குங் கொடுத்து அதன் பின்பு உத்தமலிங்கா சாரருக்கு சமய முதலி குருமடமும் கட்டி வைத்து தேவபூசை மண்டப மும் கட்டிவைத்துக் கொடுத்து அவர்கள் குடும்ப மிருக்கின்ற திருவை யாற்று நகருக்கு ஆளனுப்பிவைத்துக் குடும்பமும் மன்னியூருக்குத் தருவித்து குருமடமும் தேவபூசை மண்டபமும் உத்தமலிங்காசாரிய ரைக் கொண்டு புண்ணியாங்கமும் செய்வித்துத் தாரையும் கொடுத்து அதில் அவர்கள் குடும்ப சகிதமாய் உத்தமலிங்காசாரருக்குச் சகல சோடு சமஸ்த தேதியும் கொடுத்துக் குடியும் வைத்து தேவபூசை மண்டபத்தில் தேவபூசையும் செய்வித்து உத்தமலிங்காசாரருக்குச் சாலுவை சரம் பாக்கு வெற்றிலையும் குடுப்பிவித்துச் சாமி தரிசனமும் குரு தரிசனமும் செய்து கொண்டு வாக்கு வரம் கேட்டுக் கொண்டு அதன் பின்பு சமய முதலி உத்தமலிங்காசாரருக்கு உங்கள் பெரிய முந்தின ஆதியணம் திருவையாறு அந்தத் தலத்திலுள்ள கோவில் குருத்துவம் மான்யம் மற்றுள்ள கோவில் சகல விசாரணைக் கும் உங்கள் வகை ஆள்போட்டு விசாரித்துக் கொள்ளச் சொல்லியும் காவேரி கருவூர் அவ்வானிகூடல் முதல் கொண்டு முட்டங்கடை அளவிற்கும் அதனுள்பட்ட கொங்குகேழு சிவாலயத்திற்கும் அதற் குண்டான இந்திர விமானங்களுக்கும் புண்யாங்க ப்ரதிஷ்டை பண்ணிக் கொண்டு ஆலயத்தை விளக்கஞ் செய்து நடத்தி வாருங்க ளென்று சமய முதலி உத்தமலிங்காசாரியருக்குக் கட்டுச் செய்து அதன் பின்பு ஆதி காஞ்சீபுரம் மதுரை ஆதீன சமஸ்தானத்திற்குள் பட்ட ஐம்பத்தாறு தேசங்களில் உள்பட்ட சிவலாயத்திற்கும் இந்திர விமானத்திற்கும் புண்ணியாங்கப்ரதிஷ்டை பண்ணி விளக்கஞ் செய்து கொண்டு வாருங்களென்று சமய முதலி உத்தமலிங்காசாரருக் குக் கட்டுச் செய்து உடுகரை பாக்கு வெற்றிலையும் கொடுத்து நிகுதி செய்த படிக்கு உத்தமலிங்காசாரரும் அதேமுறைக்குச் சம்மதித்து சமய முதலி கையில் உடுகரை பாக்கு வெற்றிலையும் வாங்கிக்கொண்டு எல்லாரும் சந்தோஷித்துக் [1]கச்சிதமாயிருக்கும் போது அன்னளில் திருவாலூரிலிருக்கின்ற கரிகாலச் சோழன் சேரனிடத்தில் கைக்கிரயத்திற்கு வாங்கின நாகதாம்பிரத்தைத் தில்லைச் சிதம்பரத்தில் சிதம்பர ஆசாரி கையில் பண்ணி வைத்த விக்கிரகம். அதற்கு விவரம்.

சிதம்பரேசுவரர் சிவகாமிஅம்மன் விக்கினேசுரர் சுப்பிர மண்யர் வள்ளியம்மன் தெய்வயானை சூலதேவர் சுந்திரப்

[1] கச்சிதம்-ஒழுங்கு

பெருமாள் இந்த எட்டு விக்கிரகமும் சோடிசத்துடனே உண்டு செய்து அதை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு மேலச் சிதம்பரத்திற்குக் கொண்டுபோய் அவ்விடத்திலே ப்ரதிஷ்டையும் பண்ணிவைக்க வேண்டுமென்று கரிகாலச் சோழன் சமய முதலிக்கு எழுதி அனுப்பி வைத்தார். எழுதி அனுப்பித்த விவரம். இந்த விக்கிரகம் மேலைச் சிதம்பரத்திற்கும் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு போகுவதற்குக் கைக்கொள்வரில் எழுநூறு ஆளனுப்பி வைக்கச்சொல்லி வந்தபடியினலே சமய முதலியும் மெத்தச் சந்தோஷப்பட்டுக்கொண்டு குடிக்கொரு ஆள் கூட்டிக்கொண்டு வரச்சொல்லி மேலைச்சிதம்பரம் பேரூர் நாட்டாண்மைக்காரன் தில்லைச் சிதம்பர முதலிக்கும் அவினசி நாட்டாண்மைக் காரன் காசிலிங்க முதலிக்கும் வரவோலை எழுதியனுப்பித்தார். சமய முதலி எழுதியனுப்பியபடிக்குத் தில்லைச்சிதம்பர முதலியும் தன்னூரிலிருக்கின்ற நூறுகுடி கைக்கொள்வரில் நூருளும் காசிலிங்க முதலியும் தன்கையிலிருக்கின்ற நூறு குடிக்கு நூருளும் இவர்கள் இருவரும் இரு நூறு ஆளும் தாங்களும் மன்னியூருக்கு வந்தார்கள். வந்து சமய முதலியைக் கண்டபின்பு சமைய முதலி தன் தம்பி மகன் கச்சிக்கச்சாசாலைப்பெருமாள் முதலியை அழைத்து இந்த மன்னியூரிலிருக்கிற கைக்கொள்வர் ஐந்நூறு குடிக்கும் குடிக்கு ஓராள் முறைக்கு ஐந்நூறு ஆள் தருவிக்கச் சொல்லிக் கட்டுச் செய்தார். சமய முதலி கட்டுச் செய்தபின்பு கச்சிக் கச்சாலைப்பெருமாள் முதலியும் தன்னூர்க் கைக்கொள்வர் ஐந்நூறு குடிக்கும் ஐந்நூறு ஆள் சேர்த்து சமய முதலிக்கு எதிரே கொண்டுவிட்டான். அதன் பின்பு சமயமுதலியும் ஆக எழுநூறு ஆளும் சேர்த்து இந்த எழுநூறு ஆளுக்கும் இந்த மூன்று நாட்டாண்மைக்காரரையும் கூட்டி சமய முதலி திருவாரூருககு அனுப்பி வைத்தார். சமய முதலியும் அனுப்பிவைத்தபடிக்குக் கச்சிக் கச்சாலைப்பெருமாள் முதலியும் தில்லைச்சிதம்பர முதலியும் காசிலிங்க முதலியும் இவர்கள் மூன்று நாட்டாண்மைக்காரரும் எழுநூறு ஆளும் திருவாரூருக்குப் போய்க் கரிகாலச் சோழனைக் கண்டார்கள். அதன் பின்பு கரிகாலச் சோழனும் சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் அழைக்கவிட்டு அவர்களையும் கூட்டிக்கொண்டு கொங்குதாராபுரத்திலிருக்கின்ற சேரனையு மழைத்துக்கொண்டு இந்த எழுநூறு ஆளுடைய கையில் அந்த விக்கிரகங்களையும் எடுப்பிவித்துக் கொண்டு கரிகாலச் சோழன் சேரமாம் பெருமாளென்னும் சேரன் சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி இவர்கள் எல்லோரும் பேரையூர் நகருக்கு வந்தார்கள். வந்து பேரையூர் நகரிலிருந்து கொண்டு கரிகாலச் சோழன் மன்னியூருக்குச் சமய முதலியை உத்தமலிங்காசாரியரை அழைத்துக் கொண்டு வரச்சொல்லி பேரையூரிலிருந்து வரவோலை எழுதி அனுப்பி வைத்தார். அந்த வரவோலை சமய முதலி இருக்கிற மன்னியூருக்கு

வார்த்த விக்கிரகங்கள் விவரம்

வரவும் சமய முதலியும் உத்தமலிங்காசாரியரையும் அழைத்துக் கொண்டு கச்சிக்கச்சாலைக்கந்தப்ப முதலியும் கொங்கமட்டுகிற முதலியும் கர்ணிக அருந்தா முதலியும் காசிவேல் முதலியும் மற்றுள்ள கார்யப் பேரையும் கூட்டிக்கொண்டு மன்னியூர்நகர் கடந்து திருப்பேரையூர் நகருக்குப் போனார். போய் கரிகாலச் சோழன் சேரன் சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டியும் மற்றுள்ள கார்யத்தாரையும் கண்டார்கள். அதன்பின்பு கரிகாலச் சோழன் சமய முதலியை அழைத்து இந்த எட்டு விக்கிரகமும் பிரதிஷ்டைபண்ணி வைக்கச் சொல்லி கரிகாலச் சோழன் சமய முதலிக்குக் கட்டுச் செய்ய சமய முதலியும் அப்படியே உத்தமலிங்காசாரியரைக் கொண்டு சிதம்பரேசுரர் சிவகாமியம்மன் விக்கினேசுரர் சுப்பிரமண்யர் வள்ளியம்மை தேவயானை சூலதேவர் சுந்திரப்பெருமாள் இந்த எட்டுவித விக்கிரகத்தையும் பிரதிஷ்டை பண்ணிவைத்து அபிஷேக தூப தீபாருதனை முடிப்பித்து எல்லோரும் தரிசித்துக்கொண்டு அதன்பின்பு சமய முதலியும் புட்டவிமானம் சோடித்து அதன் மேல் சிதம்பரேசுரரையும் சிவகாமிஅம்மனையும் பதினெண் மேளவாத்தியத்துடன் பெரிய கடைவீதி மிறைவணை வருவித்துத் திருக்கோவில் புகுந்தபின்பு கற்பூர தூப தீபாருதனை பரிமாறிச் சிதம்பரேசுவரரையும் சிவகாமி அம்மனையும் அதினுள்பட்ட ஆறு தேவதையும் நிலை நிறுத்தி அபிஷேக தூப தீபாராதனையும் முடிப்பித்து எல்லோரும் தரிசித்துக்கொண்டு எல்லோரும் தீர்த்தப்பிரசாதம் வாங்கிக்கொண்டபின்பு கரிகாலச்சோழன் சகல சனத்திற்கும் விருந்து விசாரித்து பாக்கு வெற்றிலை கொடுப்பித்து அதன்பின்பு கரிகாலச்சோழன் பேரூரிலுள்ள நூறு குடி கைக்கொள்வருக்கும் நாட்டாண்மைக்காரனுக்கும் அரமனைச் சுங்க மில்லையென்று நிகுதிசெய்து அவர்களுக்குக் கோயில் வரிசை தட்டைச் சாக்கிரதை திருவாடுதண்டிகைச் சேர்வை செய்த நாளில் நாளொன்றுக்கு முத்திரைப்படியில் இரண்டுபடி அரிசியும் அதற்குள்பட்ட சிலவும் மண்டபத்திற்கு ஐந்து பணமும் திருவிழாக் கட்டளைக்கு நாட்டாண்மைக்காரனுக்கு ஒரு உடுகரையும் கோவில் முந்தின தளிகை பிரசாதமும் கொடுத்து நடத்தி வாவென்று அந்தப் பேரூர் திருவாடுதண்டிகைச் சேர்வைக் கைக்கொள்வருக்கும் இந்தப் படி நடத்திவர அதிகாரக்காரருக்கும் கட்டுச்செய்து இந்தப் பேரூருக் கேற்ற முறைக்கு முன்னூற்றறுபது சிவாலயத்திற்கும் கட்டுச்செய்து அதன்பின்பு பட்டீசுரர் பச்சை மரகதவல்லிக்கும் மற்றுள்ள தேவர்களுக்கும் அபிஷேக தூப தீபாருதனை முடிப்பித்துக் கரிகாலச்சோழன் சேரமாம்பெருமாள் என்னும் சேரன் சமய முதலி சடையப்பன் கத்தூரி ரங்கப்பச் செட்டி எல்லோரும் தரிசித்துக் கொண்டு பேரையூர் நகர் கடந்து சேரமாம்பெருமாளென்னும் சேரன் கொங்கு தாராபுரத்திற்குப் போனார். அவர் போனபின்பு சடையப்பன்

பேரூரில் விக்கிரகப் பிரதிஷ்டை

கத்தூரி ரங்கப்பச் செட்டியும் கரிகாலச்சோழன் கையிலும் சமய முதலி கையிலும் அனுப்பிவைத்துக்கொண்டு அவர்கள் ஊருக்குப் போனார்கள். அவர்கள் போனபின்பு கரிகாலச்சோழனும் சமய முதலியும் மற்றுள்ள பேரும் பேரையூர் நகர் கடந்து மன்னியூருக்கு

மன்னியூர் சென்றது

வந்து மன்னிநாதர் அருந்தவச்செல்வி அம்மன் மற்றுள்ள தேவதைகளுக்கும் அபிஷேக தூப தீபாராதனை முடிப்பித்து எல்லோரும் தரிசித்துக்கொண்டு சமய முதலி தன் தம்பி கச்சிக்கச்சாலையப்ப முதலி இவன் மகன் கச்சிக் கச்சாலைக் கந்தப்ப முதலி இவன் தம்பி கச்சிக்கச்சாலைப் பெருமாள் முதலி மற்றும் வளைவிலுண்டாகிய சகல ஜனங்களுக்கும் சொல்லிக் கொண்டு தளபதிக் கொங்கமட்டுகிற முதலி வளைவு சகல ஜனங்களுக்கும் சொல்லிக்கொண்டு நாட்டுக்கர்ணிகம் அருந்தா முதலி வளைவு சகல ஜனங்களுக்கும் சொல்லிக்கொண்டு சமயசங்கதி காசி வேல் முதலி வளைவு சகல ஜனங்களுக்கும் சொல்லிக்கொண்டு மற்றும் அவ்விடத்திலுண்டாகிய உறவின முறையாருக்கெல்லாம் சொல்லி அனுப்பிவைத்துக்கொண்டு உத்தமலிங்காசாரியர் பாதம் பணிந்து அனுப்பிவைத்துக்கொண்டு சகல ஜனங்களும் சுகமாயிருக்க வேண்டுமென்று வாக்கும் கொடுத்து சமய முதலியும் கரிகாலச்சோழ

அருணபுரி

னும் அவர்களுக்குட்பட்ட ராணுவப்படையுடனே மன்னியூர்நகர் கடந்து அருணபுரிக்குப் போனார்கள். அருணபுரியி லிருந்துகொண்டுகரிகாலச்சோழன் தன் வம்சத்தவர் முன்னாளில் சோள தேசத்திலுள்பட்ட சிவாலயங்களுக்கு விட்ட வரிசை மான்யம் கண்டு சூலக்கல் பொடிவித்த விவரம். திருவண்ணாமலை தேவஸ்தலத்திற்குப் பதினாயிரம்பொன் கிராமமும் ஆயிரம்பொன் சுங்கமும் இரண்டாயிரம் சலகை நெல் விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் பொடிவித்து இப்படி விட்ட மான்யத்தில் சமய முதலிக்குப் பத்திலொன்று வரிசை மான்யமென்று கண்டு அண்ணாமலையார் கோவில் கல்தூணில் கல் வெட்டுப் பொடிவித்து அதின் பின்பு சமய முதலி அந்தக் கோயில் மணியங் கணக்குக்குக் கைக்கொள்வரில் அருணாசல முதலியை

தஞ்சாவூர்

வைத்து அதன்பின்பு தஞ்சாவூர்க் கோவிலுக்குப் பதினாயிரம்பொன் கிராமமும் ஆயிரம்பொன் சுங்கமும் இரண்டாயிரம் சலகை நெல் விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் பொடிவித்து தஞ்சாவூர்க் கோவிலுக்கு விட்ட மாணியத்தில் சமய முதலிக்குப் பத்திலொன்றென்று வரிசை மான்யம் கண்டு அந்தக் கோயில் கல்தூணில் கல்வெட்டுப் பொடிவித்து அதன் பின்பு சமய முதலி அந்தக் கோயில் மணியங்கணக்குக்குக் கைக்கொள்வரில் ராம

சிவலிங்க முடையார்

லிங்க முதலியை வைத்து அதன் பின்பு கரிகாலச் சோழன் லிங்கத்திற்கு விட்டமான்யம் பதினாயிரம்பொன் கிராமமும் ஆயிரம்பொன் சுங்கமும் இரண்டாயிரம் சலகை நெல்விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் பொடிவித்து

அதில் பத்தில்ஒன்று சமய முதலிக்கு வரிசை மான்யமென்று சிவ லிங்கருடையார் கோவிலில் கல்வெட்டுப் பொடிவித்து அதன் பின்பு சமய முதலி அந்தக்கோயில் மணியங்கணக்குக்குக் கைக்கொள்வரில் ஆனை முதலியை வைத்து அதன் பின்பு கரிகாலச் சோழன்

திருச்சிராப் பள்ளி

திருச்சிராப்பள்ளிக் கோவிலுக்குப் பதினாயிரம் பொன் கிராமமும் ஆயிரம் பொன் சுங்கமும் இரண்டாயிரம் சலகை நெல்விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் பொடிவித்து அதில் பத்தில் ஒன்று சமய முதலிக்கு வரிசை மான்யமென்று அந்தக் கோயிலில் கல் வெட்டுப் பொடிவித்து அதன் பின்பு சமய முதலி அந்தக் கோயில் மான்யத்திற்கும் மணியங் கணக்குக்கும் சிராமுதலியவை வைத்து அதன் பின்பு கருவூர்

கருவூர்

கோவிலுக்கு விட்ட மான்யம் ஆயிரம் பொன் கிராமமும் நூறு பொன் சுங்கமும் நூறு சலகை நெல் விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அதன் பின்பு சமய முதலிக்குப் பத்திலொன்று வரிசை மான்ய மென்று அந்தக் கோவில் ஆலயத்தில் கல்வெட்டுப் பொடிவித்து அதன் பின்பு சமய முதலி அந்தக் கோயில் மணியங்கணக்குக்குக் கைக்கொள்வரில்

கொடுமுடி

கோபால முதலியை வைத்து அதன் பின்பு கொடு முடிக்கு ஆயிரம் பொன் கிராமமும் நூறு பொன் சுங்கமும் எண்ணூறு சலகை நெல் விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அதில் சமய முதலிக்குப் பத்திலொன்று வரிசை மான்யமென்று அந்த ஆலயத்தில் கல் வெட்டுப்பொடிவித்து அதன் பின்பு சமய முதலியும் அந்த மணியம் கணக்குக்குக் கோபால முதலியை வைத்து அதன் பின்பு வெஞ்சமாக் கூடலுக்கு ஆயிரம்

வெஞ்சமாக் கூடல்

பொன் கிராமமும் நூறு பொன் சுங்கமும் நூறு சலகை விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அதில் பத்திலொன்று சமய முதலிக்கு வரிசை மான்யம் என்று வெஞ்சமாக் கூடல் ஆலயத்தில் கல் வெட்டுப் பொடிவித்து அதன் பின்பு சமய முதலி கோயில் மணியங்

பவானி கூடல்

கணக்குக்கு வேங்கடபதி முதலியை வைத்து அதன் பின்பு பவானிக்கூடலுக்கு ஆயிரம் பொன் கிராமமும் நூறு பொன் சுங்கமும் நூறு சலகை விரைப்பாடு வயல் பூமியுங்கண்டு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அதில் சமைய முதலிக்குப் பத்தில் ஒரு பங்கு வரிசை மான்யம் என்று பவானிக் கூடல் கோயிலில் கலச்சாகரம் பொடிவித்து அதன் பின்பு சமைய முதலி மணியங்கணக்குக்குக் குன்று விடை முதலியை வைத்து அதன் பின்பு இப்படிக் கரிகாலச் சோழன் தன் வம்சத் தவர்கள் வம்ச பாரம்பரிக்கையாய் சோளதேசத்தில் ஆலயங்களுக்கு விட்ட வரிசை மான்யம் கண்டு விட்ட மான்யபூமி கிராமங்களில் கல்

வெட்டுப் பொடிவித்து அந்தந்த ஆலயங்களுக்கு விட்ட மான்யபூமி கிராமங்களில் சமய முதலிக்குப் பத்திலொன்றென்று முன்னாளில் சோழவம்சத்தவர் நிருதிபண்ணின முறைக்குக் கரிகாலச்சோழன் சமய முதலி மான்யங்கண்டு அந்தந்தக் கோயில் தூணில் கல்வெட்டும் போட்டு சமய முதலி வசம் அந்தந்தக் கோயில் மணியங்கணக்குக்கு நம்பிமுதல் திருவலகு கடைவரைக்கும் சகல விசாரணையும் கரிகாலச் சோழன் சமய முதலி வசம் ஒப்பித்துக்கொடுத்து அதன்பின்பு சமய முதலிக்குள்பட்ட பந்துஜனம் கைக்கொள்வருக்குச் சமய முதலி மணியங்கணக்குக் கொடுத்துச் சோளதேசத்திலுள்பட்ட சிவாலயத் திற்கெல்லாம் கரிகாலச் சோழனும் சமயமுதலியும் நிருதி செய்தபின்பு சமயமுதலி என்கிற கச்சிவீர காமாச்சிராய சிங்காதனக் கர்த்தராகிய சஷ்ஷமய முதலியும் அவர்களுக்குள்பட்ட காரியப்பேர் நடந்துவருவ தற்குச் சாதிசமயபட்டனுக்கும் முதல் நாட்டாமைக்குக் கச்சிமுத்து வீர காமாச்சிராயச் சீரச்சிங்காசனக் கர்த்தராகிய சஷ்ஷமய வெங்கடா சல முதலிக்குச் சகோதரமாகிய கச்சிக் கச்சாலையப்ப முதலி சாதி சமய தளவிசாரணைக்குக் கச்சிவீர காமாச்சிராய சீரச்சிங்காசனக் கர்த்தராகிய சஷ்ஷமய கச்சிவீர வெங்கடாசல முதலிக்கும் இவர்கள் தம்பி கச்சிக் கச்சாலையப்ப முதலிக்கும் மைத்துனராகிய சூர்யமூர்த்தி முதலியும் சாதிசமய பட்டத்துத் தளவிசாரணை நாட்டுக் கர்ணிகத்திற்குக் கச்சிமுத்து வீரகாமாச்சிராயச் சீர சிங்காசனக் கர்த்தராகிய சஷ்ஷமயக் கச்சிவீர வெங்கடாசல முதலிக்கும் இவர் களுக்குச் சகோதரமாகிய கச்சிக்கச்சாலையப்ப முதலிக்கும் இவர் களுக்கு மைத்துனனாகிய சுந்தரமூர்த்தி முதலிக்கும் இவர்கள் மூவருக் கும் மைத்துனனாகிய நாட்டுக்கர்ணிகம் அமராபதி முதலியும் சமய சங்கோதி விசாரணைக்கும் சஷ்ஷமய முதலிக்கும் இவர்கள் தம்பி கச்சிக்கச்சாலையப்ப முதலிக்கும் இவர்களுடைய மைத்துனராகிய சுந்திரமூர்த்தி முதலிக்கும் இவர்கள் மூவருக்கும் மைத்துனராகிய நாட்டுக்கர்ணிக அமராபதி முதலிக்குமிவர் நால்வருக்கும் மைத்துன ராகிய வாரணவாசி முதலியும் சமைய நாடிளந்தாரி தனுக்கோடி முதலியும் சாதி சமய நாட்டுச் சோடிளந்தாரி நாகபாச சொக்க லிங்கத்தையும் இவர்களை எல்லாம் வரச்சொல்லி வரவோலை எழுதி மன்னியூருக்கு ஆள் அனுப்பிவைத்துத் தருவித்துச் சமயமுதலியும் இந்தக் காரியப் பேரும் கரிகாலச் சோழனுமாகச் சமய மண்டபத்தி லிருந்துகொண்டு இந்த அருணைபுரிச் சமய மண்டபத்திற் குச் சோணைபுரியிலுண்டாகிய கைக்கொள்வரையும் நம்பி நாகபாசத்தவரையும் அழைப்பித்து அவர்களுக்கும் சமய முதலி நிருதி செய்த பின்பு சோள தேசத்தி லுண்டாகிய கைக்கொள்வருக்கு ஊருக்கொரு நாட்டாமையும் நாட்டொருக்கொரு நாட்டாண்மையும் கண்டு நிருதி

அருணைபுரி மண்டபத்தில் இருந்து திட்டம் செய்தல்

செய்து பாக்கு வெற்றிலையும் கொடுத்து அவரவர் ஊரிலுள்ள வாய்க்குற்றம் கைக்குற்றம் அவரவர் தீர்ந்து கொண்டு வரச் சொல்லியும் அதற்கு மீறின குற்றம் ஒரு நாடு கூடி ஒரு நாட்டுக்குக் குருப்பான நாட்டாமைக்காரன் வந்து தீரும்போது காஞ்சீபுரத்திற்கு ஆளனுப்பி வைத்து நம்முடைய தம்பி கச்சிக்கச்சாலையப்ப முதலியும் தளபதி சூர்யமூர்த்தி முதலியும் நாட்டுக்கர்ணிகம் அமராபதி முதலியும் சமய சங்கதி வாரணவாசி முதலியும் சமய இழுந்தாரி தனுக்கோடி முதலியும் சமய நாட்டுக்கோடிளந்தாரி நாக பாச சொக்கலிங் கத்தையும் இவர்களையும் அழைத்து வந்து இவர்கள் முன்படத் தீர்த்துக் கொண்டு வரவும். கனகுற்றங்கள் ஆனால் நாலுநாடுங் கூடித்தீரும்போது காஞ்சீபுரத்திற்குத் தமது சமய மண்டபத்திற்கு வந்து நாலு நாட்டு உறவின் முறையும் கூடி நமது முன்னிலையாகத் தீரவும் என்று அவரவர்க்கும் கட்டுச்செய்து அதன் பின்பு அந்தந்த ஊரிலும் நாட்டிலும் அந்தந்த நாட்டாண்மைக்காரர் வாய்க்குற்றம் கைக்குற்றம் தீர்ந்து அபசாரம் வாங்கி நல்லது செய்யும்போது முந்தின பாக்கு வெற்றிலை ரட்டை வேளையும் நாட்டுச் சமய முதலி பேருக்கு எடுத்துவைத்து அதன் பின்பு சமய நாட்டாண்மைக் காரனுக்கும் அதன் பின்பு நாட்டுத் தளபதிக்கும் அதன் பின்பு நாட்டுக்கர்ணிகருக்கும் அதன் பின்பு நாட்டுச்சங்கோதிக்கும் அதன் பின்பு இழுந்தாரிக்கும் இப்படி இந்த ஆறுபேர் கெசைவரிசைக் காரருக்கும் முந்தின பாக்கு வெற்றிலை எடுத்து வைத்து அதன் பின்பு அவரவர்க்கும் வெற்றிலை பாக்குக் கொடுத்து அதன் பின்பு கோடிளந்தாரிக்கும் வெற்றிலை பாக்கு எடுத்து வைத்து அவரவரும் இப்படிக் குற்றம் தீர்த்துக்கொண்டு வாருங்களென்று அவரவர்க்கும் கட்டுச்செய்து அதன் பின்பு அந்தந்த ஊர் கோவில் வாசலில் வரிசை வந்தால் முந்தினபங்கு பால சமய முதலிபேர்படஎடுத்து வைத்து அதனுள்பட்ட ஐந்து பேருக்கும் கெச வரிசையாய் எடுத்து வைத்து அதன் பின்பு அவர்கள் பகிர்ந்து கொள்ளவும். தலங்களில் வரிசை வேழுயம் வந்தால் சத்தாபரணம் முதல் பத்து நாளைக்கு வந்த வரிசையில் ஒன்பதுநாள் வந்த வரிசை வேழைய முங்களுக்கும் ஒருநாள் வந்த வரிசை நம்பி நாகபசத்தவருக்கும் கொடுத்து நடத்தி வரவும். இப்படி திருநாள் உள்ள வீதியில் வந்த வரிசை வேளையம் இந்தப்படி நடத்தி வாருங்களென்று கட்டுச்செய்து நம்பி தானீகர் கோயிலில் முந்தின தளிகை தீர்த்தப் பிரசாதம் நாட்டாமையகாரனுக்குக் கொடுத்து நடத்திவரவும். நாகபாசத்தவருக்குப் பிந்தின தளிகை தீர்த்தப்பிரசாதம் என்று கண்டு அவரவர்களுக்கும் கட்டுச் செய்து விருந்து விசாரித்துப் பாக்கு வெற்றிலை கொடுத்து களப கஸ்தூரிகள் பூசிவித்து நாட்டுக்கொரு நாட்டாமைக்காரனுக்குப் பச்சவடம் பாக்கு வெற்றிலை கொடுப்பித்து நாட்டுக்கொரு நம்பித்தானீகருக்குப்

பச்சவடம் பாக்கு வெற்றிலை கொடுப்பித்து நாட்டுக்கொரு நட்டு வனுக்குப் பச்சவடம் பாக்கு வெற்றிலை கொடுப்பித்து நாட்டுக்கொரு தேவதாசிக்குக் கண்டாங்கிச் சேலையும் பாக்கு வெற்றிலையும் கொடுப் பித்து எல்லோரையும் சந்தோஷப்படுத்தி இந்த முறைக்கு அணி முறமை தப்பாமல் நடந்துவர அவரவர்க்கும் சமய முதலி கட்டுச் செய்து கட்டுச் செய்தபடிக்கு அவரவர்களும் உள்பட்டுக் கொண்டு அவரவர்களும் சமய முதலி கையிலேயும் கரிகாலச் சோழன் கையிலும் அப்பணை வாங்கிக் கொண்டு அவரவர்களும் அவரவர் நாட்டுக்குப் போனார்கள். அதன் பின்பு கரிகாலச் சோழன் இந்த கைக்கொள்வ ருக்கு அரண்மனைச் சுங்கமில்லையென்று நிகுதி செய்து அவர்களுக்குக் கோயில்வரிசைத்தட்டைச்சாக்குராதி திருவாடு தண்டிகைச் சேர்வை செய்தநாளில் நாளொன்றுக்கு முத்திரைப்படியில் இரண்டுபடி அரிசியும் அதற்குள்பட்ட சிலவும் மண்டபத்திற்கு ஐந்து பணமும் திருவிழாக் கட்டளைக்கு நாட்டாமைக்காரனுக்கு ஒரு உடுகரையும் கோவில் முந்தின தளிகைப் பிரசாதமும் கொடுத்து நடத்திவாவென்று அந்த அருணாபுரி நகரத் திருவாடுதண்டிகைச் சேர்வைக் கைக்கொள் வருக்கு மிந்தப்படி நடத்திவர அதிகாரக்காரருக்கும் கட்டுச் .செய்து இந்த சோள தேசத்துக்கெல்லாம் என்று கரிகாலச் சோழன் நிகுதி செய்து அதன் பின்பு கார்த்திகை மீ சாமியை எழுந்தருளப் பண்ணி அன்னாளில் கைக்கொள்வர் நாட்டாமைக்காரனுக்குள்பட்ட இருபத் தேழு நாட்டுக்கு அந்த வரிசை கொடுத்து அதன் பின்பு நம்பிக்கு ஒரு பச்சவடமும் நட்டுவனுக்கு ஒரு பச்சவடமும் தாசிக்கொரு கண்டாங்கிச் சேலையும் இந்த முறைக்கு நடப்பிவித்துக்கொண்டு வர அதிகாரக்காரருக்குக் கட்டுச்செய்து கரிகாலச்சோழன் நிகுதி செய்த பின்பு அந்த அருணாபுரித்தலத்தில் சாமி தரிசனம் செய்து கொண்டு கரிகாலச்சோழன் சமய முதலி சமய முதலிகளுள்பட்ட

அருணாபுரியில் நரபலி

காரியப் பேரும் சகலரும் ராணுவப்படையுடனே அருணா புரிநகர் கடந்து காஞ்சிக்குப் போகும் போது அந்த அருணாபுரி நகரிலிருக்கின்ற மஹிஷமாகாளி வந்து சமய முதலியைத் தடுத்து வழக்குச்செய்து தனக்கொரு நரபலி கேட்டது. அது கேட்டபடிக்குச் சமய முதலியும் அந்த நாளில் வந்த மஹிஷமாகாளிக்குத் தன் மகனைப் பலி யூட்டிப் பலி ஒப்பித்து மகனைப் போல் சாவார்க்கோலமாய்ச் சிலை அடிபித்து அண்ணாமலையார் கோயில் முன்னாக் கோபுரமுகத்து வாசலில் நிறுத்திப் புண்யாங்க அஷ்டமந் திரப் பிரதிஷ்டையும் பண்ணிவைத்து கந்த புஷ்பம் தூபதீபம் பரிமாறி சமய முதலியும் சமய முதலிக்குள்பட்ட காரியப் பேரும் கரிகாலச் சோழனும் தரிசித்துக்கொண்டு அதன் பின்பு மஹிஷமாகாளி பலிக்கு நின்ற சாவார்பலிச்சிலைக்கு அண்ணாமலையாருக்கு முந்தின பூசை நைவேத்தியமென்று அந்தக் கோவிலுக்குள்பட்ட ஜனங்களுக்குக்

கட்டுச் செய்து அதன் பின்பு சமயமுதலியும் அவருக்குள்பட்ட பேரும் கரிகாலச்சோழனும் அந்தமஹிஷமாகாளிகு இனிமேல் நரபலி கொடுக்கவேண்டாம். வருஷ மொருதரம் நீங்கள் இந்தக் கிராமத்தாரும் பொங்கல் விளக்கு ஆடு கோழி பண்ணி (பன்றி) எருமைக்கடா பலியும் ஒப்பித்துக்கொண்டு வாருங்க ளென்று அந்தக் கிராமத்தாருக்குக் கட்டுச்செய்து துர்க்கைக்கும் இவர் களிடத்தில் இந்த மேரை இந்த முறைக்குப் பூசைகொண்டு வரச் சொல்லி சமய முதலி கட்டுச்செய்ய அந்த மஹிஷமாகாளியும் சம் மதித்து அடங்கின பின்பு கரிகாலச்சோழன் சமய முதலி சமயமுதலிக் குள்பட்ட காரியப்போரும் சகலரும் அருணபுரி நகர்கடந்து காஞ்சீ புரத்திற்குப் போனார்கள். காஞ்சீபுரத்திலிருந்து கொண்டு முன்னாளில் கரிகாலச் சோழன் தங்கள் வம்சத்தவர் தொண்ட மண்டலமாகிய தொண்டை வள நாட்டில் கோயில் கட்டி வைத்து அந்தக் கோயி லுக்கு விட்டவரிசை மான்யம் விவரம் கண்டு சூலக்கல் பொடிவித்த விவரமும் கண்டு இந்தப்படி விவரம் கண்டவிவரம் காண்க.

நரபலி நிறுத்தினது

காஞ்சி சென்று மானிய திட்டங்களை வகுத்தது

காஞ்சீபுரக கச்சி ஏகாம்பரர் காமாட்சி அம்மன் கோவி லுக்கு விட்டவரிசை மான்யம் லட்சம் பொன் கிராமமும் பதினாயிரம் பொன் சுங்கமும் பதினாயிரம் சலகை நெல் விரைப்பாடு பூமியும் கண்டு சூலக்கல் பொடிவித்து அதில் சமயமுதலிக்குப் பத்திலொன்று வரிசை மன்ய மென்று காமாட்சி அம்மன் கோயில்முன் பந்தி கனக சபைத் தூணில் கல் வெட்டுப் பொடிவித்து அதன் பின்பு சமயமுதலி அந்தக் கோயிலுக்கும் கோயிலுக்கு விட்ட மான்யத்திற்கும் மணியங் கணக்குக்கும் சாதி சமயதளவிசாரணைப்பட்டத்து நாட்டுக்கர்ணிகர் கச்சித் திருவேங்கட முதலியை வைத்து அதன்பின்பு கச்சி வரதராயப் பெருமாள் கோவிலுக்கு லட்சம் பொன் கிராமமும் பதினாயிரம் பொன் சுங்கமும் பதினாயிரம் நெல் விரைப்பாடு பூமியும் கண்டு கரிகாலச் சோழன் சூலக்கல் நாட்டுப் பொடிவித்து அதில் சமயமுதலிக்குப் பத்திலொன்று வரிசை மான்ய மென்று கச்சி வரதராயர் கோவிலில் கல்வெட்டுப் பொடிவித்து கரிகாலச் சோழன் பொடிவித்த பின்பு சமயமுதலி அந்தக்கோவிலு கும் கோவில் மான்யத்திற்கும் மணியங் கணக்குக்குக் கச்சி ஏகாம் பரநாத முதலியை வைத்து அதன்பின்பு கரிகாலச் சோழன் கைச் சாலைக் கந்தப்பெருமாள் கோயிலுக்குப் பதினாயிரம் பொன் கிராமமும் ஆயிரம் பொன் சுங்கமும் ஆயிரம் சலகை நெல் விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அதில் சமயமுதலிக்குப் பத்திலொன்று வரிசை மான்ய

ஏகாம்பரர் காமாட்சி கோயில் திட்டம்

வரதராயப் பெருமாள்

கந்தகோட்டம்

மென்று கைச்சாலைக் கந்தப்பெருமாள் கோயிலில் கல் வெட்டுப் பொடிவித்து அதன் பின்பு சமயமுதலியும் அந்தக் கோயி லுக்கும் கோயில் மான்யத்திற்கும் மணியங் கணக்குக்குக் கச்சி வேலப்பமுதலியை வைத்து அதன் பின்பு சோழன் கருமாரி அம் மனுக்கு ஆயிரம் பொன் கிராமமும் நூறு பொன் சுங் கமும் நூறு சலகை நெல் விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் பொடிவித்து அதில் சமயமுதலிக்குப் பத்திலொன்று வரிசை மான்யமென்று அந்தக் கருமாரி கோயிலில் கல் வெட்டுப் பொடிவித்து அதன் பின்பு சமயமுதலியும் அந்தக் கோவி லுக்கும் கோவில் மான்யத்திற்கும் மணியங்கணக்குக்குச் சமயசங்கதி யென்கிற சோலையங்கிரி முதலியை வைத்து அதன் பின்பு கரிகாலச் சோழன் ஆர்க்காட்டுக் கோவிலுக்குப் பதினாயிரம் பொன் கிராமமும் ஆயிரம்பொன் சுங்கமும் ஆயிரம் சலகை நெல் விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அதில் சமயமுதலிக்குப் பத்தில் ஒன்று வரிசை மான்யமென்று அந்தக கோயிலில் கல் வெட்டுப்பொடி வித்து அதன் பின்பு சமய முதலி அந்தக் கோவிலுக்கும் கோவில் மான்யத்திற்கும் மணியங்கணக்குக்குச் சிராமலை முதலியை வைத்து அதன் பின்பு விருஞ்சை மூதூர்க் கோவிலுக்குப் பதினாயிரம் பொன் கிராமமும் ஆயிரம் பொன் சுங்கமும் ஆயிரம் சலகை நெல் விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அதில் சமய முதலிக்குப் பத்திலொன்று வரிசை மான்யமென்று அந்தக் கோவில் தூணில் கலச்சாகரம் பொடிவித்து அதன் பின்பு சமய முதலி அந்தக் கோயிலுக்கும் கோயில் மான்யத்திற்கும் மணியங்கணக்குக்கு மோகாம்புரி முதலியை வைத்து அதன் பின்பு சிதம்பரம் சீர்காளிக் கோவிலுக்குப் பதினாயிரம் பொன் கிராமமும் ஆயிரம் பொன் சுங்கமும் ஆயிரம் சலகை நெல் விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் பொடிவித்து அதில் சமய முதலிக்குப் பத்திலொன்று வரிசை மான்யமென்று அந்தச் சீர்காளிக் கோவிலில் கல் வெட்டும் பொடிவித்து அதன் பின்பு சமயமுதலியும் அந்தக் கோவிலுக்கும் அந்தக் கோவில் மான்யத்திற்கும் மணியங் கணக்குக்கு ஆனந்த முதலியை வைத்து அதன் பின்பு கரிகாலச் சோழன் தில்லைச்சிதம்பரத்துக் கோவிலுக்குப் பதினா யிரம் பொன் கிராமமும் ஆயிரம் பொன் சுங்கமும் ஆயிரம் சலகை நெல் விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் பொடிவித்து அதில் சமய முதலிக்குப் பத்திலொன்று வரிசை மான்யமென்று அந்தக் கோயில் முன்பந்தித் தூணில் கல் வெட்டுப் பொடிவித்து அதன் பின்பு சமய முதலி அந்தக்

கருமாரி யம்மன்

ஆர்க்காட்டுக் கோயில்

விரிஞ்சிபுரம்

சிதம்பரம் சீர்காளிக் கோயில்

தில்லைச் சிதம்பரம்

கோவிலுக்கும் கோவில் மான்யத்திற்கும் மணியங் கணக்குக்குச் சிவகாமி முதலியை வைத்து அதன் பின்பு கரிகாலச் சோழன் திருப்பதிக்குப் பதினாயிரம்பொன் கிராமமும் ஆயிரம் பொன் சுங்கமும் ஆயிரம் சலகை நெல்விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் பொடிவித்து அதில் சமய முதலிக்குப் பத்திலொன்று வரிசைமான்யமென்று திருப்பதி வெங்கடாசலப் பெருமாள் கோவிலில் கல்வெட்டுப் பொடிவித்து அதின்பின்பு சமயமுதலி அந்த கோயிலுக்கும் கோயில் மானியத்திற்கும் மணியங் கணக்குக்குக் காஞ்சீபுரத்துச் சாதிசமய தளவிசாரணைப் பட்டத்து நாட்டுக் கர்ணிகர் காஞ்சீபுரத்தின் கச்சி ஏகாம்பரர் காமாட்சி அம்மன் கோயில் மணியங் கணக்குக்கு நின்ற கச்சித் திருவேங்கிட முதலி கச்சி வடம் மலையப்பமுதலியை வைத்து அதன் பின்பு கரிகாலச்சோழன் திருத்தணிக் கோயிலுக்குப் பதினாயிரம்பொன் கிராமமும் ஆயிரம்பொன் சுங்கமும் ஆயிரம் சலகை நெல்விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அதில் சமய முதலிக்குப் பத்திலொன்று வரிசை மான்யமென்று அந்தக கோயில் தூணில் கல்வெட்டுப் பொடிவித்து அதன் பின்பு சமய முதலி அந்தக் கோவிலுக்கும் கோயில் மான்யத்திற்கும் மணியங்கணக்குக்குக் குருநாத முதலியை வைத்து அதன்பின்பு கரிகாலச் சோழன் காசிக்கு லட்சம் பொன் கிராமமும் பதினாயிரம் பொன் சுங்கமும் இருபதினாயிரம் சலகை நெல் விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் நாட்டும் பொடிவித்து அதில் சமய முதலிக்குப் பத்திலொன்று வரிசை மான்யம் கண்டு காசி விச்வநாதன் கோயில் தூணில் கல்வெட்டுப் பொடிவித்து அதன் பின்பு அந்தக் கோவிலுக்கும் கோயில் மான்யத்திற்கும் மணியங் கணக்குக்குச் சமய சங்கதி சோலையங்கிரி முதலி மகன் வாரணவாசி முதலியை வைத்து அதன் பின்பு கரிகாலச் சோழன் கதிர் காமத்திற்குப் பதினாயிரம் பொன் கிராமமும் ஆயிரம் பொன் சுங்கமும் இரண்டாயிரம் சலகை நெல் விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் பொடிவித்து அதில் சமய முதலிக்குப் பத்திலொன்று வரிசை மான்யம் என்று அந்தக் கோயில் கல்தூணில் கல்வெட்டும் பொடிவித்து அதன் பின்பு சமய முதலி அந்தக் கோயிலுக்கும் கோயில் மண்டபத்திற்கும் மணியங்கணக்குக்குச் சரவண முதலியை வைத்து அதன் பின்பு ஊஞ்சலூர்க் கோயிலுக்குப் பதினாயிரம் பொன் கிராமமும் ஆயிரம் பொன் சுங்கமும் இரண்டாயிரம் சலகை நெல் விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் பொடிவித்து அதில் சமய முதலிக்குப் பத்திலொன்று வரிசை மான்யமென்று அந்தக் கோயில் கல்தூணில் கல்வெட்டும் பொடிவித்து அதன்

திருப்பதி

திருத்தணி

காசி

காசி விசுவநாதர் கோயில்

கதிர்காமம்

ஊஞ்சலூர்

பின்பு சமய முதலி அந்தக் கோவிலுக்கும் கோயில் மான்யத்திற்கும் மணியங்கணக்குக்கு ஆறுமுக முதலியை வைத்து அதன் பின்பு கரிகாலச் சோழன் இப்படித் தொண்ட மண்டலமாகிய தொண்டவள

பொதுவாகத் தொண்டை வளநாட்டுத் திட்ட விவரம்

நாட்டுக்கு உள்பட்ட தேச ராஜ்யத்தில் சோழன் வம்சத்தவர் கட்டிவைத்த விவரமெல்லாம் கண்டு கரிகாலச் சோழன் அந்தந்த மான்யம் விட்ட இடத்தில் சூலக்கல் பொடிவித்து அதில் சமய முதலிக்குப் பத்திலொன்றென்று வரிசை மான்யங் கண்டு அந்தக் கோயில் கல் தூணில் கல்வெட்டும் பொடிவித்து சமய முதலியைக் கொண்டு அந்தக் கோவிலுக்கும் கோவில் மான்யத்திற்கும் மணியங்கணக்குக்குச் சமய முதலிக்குள்பட்ட கைக்கொள்வரைப் பொடிவித்து அதன் பின்பு கரிகாலச் சோழன் தொண்டமண்டலம் சோழமண்டலத்திற்குள்பட்ட தேசங்களில் முன் தங்கள் வம்சத்தவர் கட்டிவைத்த கோவிலும் அந்தக் கோவிலுக்கு விட்ட மான்யமும் விசாரித்து வருகிறவர் சமயமுதலி யென்று கைதட்டிப் பளிசாறிச் சமயமுதலி வம்சத்தில் ஒப்புவித்துக் கரிகாலச் சோழன் தீர்த்தபின்பு சமயமுதலியும் கையேற்றுக்கொண்ட பின்பு சமயமுதலி கரிகாலச் சோழனையும் தனக்குள்பட்ட கார்யப்பேர் சாதிசமயப் பட்டத்து முதல் நாட்டாமைக்குத் தம்பிக் கச்சிக் கச்சாலை யப்பமுதலியும் சாதிசமய மதவிசாரணைச் சூர்யமூர்த்தி முதலியும் சாதி சமய பட்டத்துத் தள விசாரணை நாட்டுக்கர்ணிகத் திருவேங்கட முதலியும் இவன் மகன் வடமலையப்ப முதலியும் இவன் மகன் அமரா பதி முதலியும் சமயசங்கதி வாரணவாசி முதலியும் சமய இழந்தாரி தனுக்கோடி முதலியும் சமயநாட்டுச் சொடிளந்தாரி நாகபாச சொக்க லிங்கத்தையும் சகல ஜனங்களையும் அழைத்துக்கொண்டு சமய மண்டபத்திற்குப் போய்ச் சமய மண்டபத்திலிருந்து கொண்டு சமய முதலி தொண்டை வளநாடு காஞ்சீபுரத்துக்குள்பட்ட ஐம்பத்தாறு நாட்டு உறவின முறையும் அதின் உள்பட்ட நம்பி நாகபாசத்தவ ரையும் அழைப்பித்துச் சமய மண்டபத்தில் கூட்டம் கூட்டிச்

56 நாட்டிற்கும் ஆட்சி வகுத்தல்

சமயமுதலியும் ஐம்பத்தொரு நாட்டாண்மை அதனுள் பட்ட ஊருக்கு ஊருக்கு ஒரு நாட்டாண்மை வைத்து ஊருக்கொரு குறிப்பானவர்களாய்க் கொண்டு ஒரு நம்பியும் கோவிலுக்கொரு நாகபாசம் நட்டுவனும் கோவிலுக்கொரு தாசியும் வைத்து அவர்களுக்கெல்லாம் சமயமுதலி கட்டுச் செய்து அந்த ஐம்பத்தாறு நாட்டாண்மைக்காரனுக்கும் அதனுள்பட்ட நாட்டண்மைக்காரனுக்கும் நம்முடைய சாதியில் ஊரிலுள்பட்ட குற்றம் வாய்க்குற்றம் கைக்குற்றம் அந்தந்த ஊரில் தீர்க்கத்....இருக்கவும். அது மீறி நாடறியத் தீரும்போது காஞ்சீ புரத்துச் சமய மண்டபத்திற்கு வந்து நமது முன் பட்டிலிருக்க

வேண்டுமென்று அவரவர்க்கும் கட்டுச்செய்து அதன் பின்பு ஊரூரில் குற்ற சுற்றம் தீர்த்து அபசாரமென்று காதுக்குப் பச்சவடம் பாக்கு வெற்றிலை வாங்கும்போது சமயமுதலிக்கு முந்தின பாக்கு வெற்றிலை இரட்டைவேழையம் அதின் பச்சவடமுமெடுத்து வைத்து அதன் பின்பு நாட்டு நாட்டாண்மைக்காரருக்கும் அதன் பின்பு நாட்டுத் தளபதிக்கும் அதன் பின்பு நாட்டுக்கர்ணிகருக்கும் அதன் பின்பு நாட்டுச்சங்கதிக்கும் அதன் பின்பு [1]சோடிளந்தாரிக்கும் பாக்கு வெற்றிலை எடுத்துவைத்து இந்த முறைக்கு நடத்திக்கொண்டு வரவும். அதன் பின்பு அந்தத் தொண்ட மண்டலத்திற்குள்பட்ட கோயில் வாசலில் வரிசை வேளையம் வந்தால் முந்தின பங்கு பால சமயமுதலிக்கு எடுத்துவைத்து அதன் பின்பு அந்த ஐந்து பேருக்கும் எடுத்து வைத்து அதன் பின்பு அவரவர்கள் பங்கிக்கொள்ளவும். அதன் பின்பு கோவிலூழியம் திருவிழாப் படிக்கு வந்தால் பத்து நாளைக் கொரு நாள் நம்பி நாகபாசத்தவருக்குக் கொடுத்து நடத்தி வரவும் என்று சமயமுதலி கைக்கொள்வருக்குக் கட்டுச்செய்த பின்பு சமயமுதலி நம்பி தானீகருக்குக் கட்டுச்செய்த விவரம். கோவிலில் முந்தின மாலைத்தண்டி தளிகைப் பிரசாதம் நாட்டாண்மைக்காரனுக்குக் கொடுத்து அதன் பின்பு பாவில் வழங்கி வரவு மென்று சொல்லிக் கட்டுச்செய்து நாகபாசத்தவருக்குப் பிந்தின உலகச்சேவுகம் கொடுமென்று கட்டுச் செய்து நாட்டாண் மைக்காரனுக்கு ஓலக்கம் செய்து வரவுமென்று நாகபாசத்தவருக்கும் சமயமுதலி கட்டுச்செய்து இந்தப்படிக்குக் காஞ்சிபுரத்திற் குள்பட்ட ஐம்பத்நாறு நாட்டு நாட்டாண்மைக்கும் அதனுள்பட்ட ஊரூர் நாட்டாண்மைக்குள்பட்ட உறவினமுறைக்கும் அதனுள் பட்ட நம்பி நாகபாசத்தவருக்கும் இந்தப்படி கட்டுச்செய்து அவர்களை உள்படுத்தி அவர்களுக்கு விருந்து விசாரித்து உடுகறை பாக்கு வெற்றிலை கொடுத்து நிகுதி செய்து அதன் பின்பு நம்பி நாக பாசத்தவருக்கும் உடுகரை பாக்கு வெற்றிலையும் கொடுத்து அவருக்கு மிந்தப்படி கட்டுச்செய்து அதன்பின்பு அவரவரும் அண்ணிமுறமை தப்பா மல் நடந்துவரச்சொல்லிச் சமயமுதலி கட்டுச்செய்து கட்டுச்செய்த படிக்கு அவரவரும் சம்மதித்துக்கொண்டு உடுகரை பாக்கு வெற்றிலை வாங்கிக்கொண்டபின்பு கரிகால்சோழன் தொண்டைமண்டலமாகிய காஞ்சிபுரத்திற்குள்பட்ட தொண்டமண்டல வளநாட்டில் சேர்ந்த கோவிலூழியம் செய்துவரும் நம்பி நாகபாசத்தவருக்கும் திருவாடு தண்டிகைச் சேர்வைக் கைக்கொள்வருக்கும் அவர்களுக்கும் அதிகார ராகிய நாட்டாண்மைக்காரருக்கும் அரண்மனைக்குச் சுங்கமில்லை யென்று அவர்களுக்குத் தண்டிகைத் தட்டை சேர்த்து சுவாமி

---

[1]சோடு-இரண்டு இளந்தாரி - ஒரு இளமைப்பட்டம்

சமர்ப்பணை பண்ணி வைத்த நாளில் அவர்களுக்கு நாளொன்றுக்கு முத்திரைப் படியில் இரண்டு படி அரிசியும் அதற்குள்பட்ட சிலவும் திருவிழாக் கட்டளைக்கு மண்டபத்திற்கு ஐந்து பணமும் அதிலொரு விருந்தும் நாட்டாண்மைக்காரனுக்குத் திருவிழாவுக்குக் கோயிலில் ஒரு பச்சவடமும் நம்பிக்கொரு பச்சவடமும் நட்டுவனுக்கொரு பச்சவடமும் தேவதாசிக்கொரு கண்டாங்கிச்சேலையும் நடத்தி வரவுமென்று கரிகால் சோழன் அவர்களுக்குக் கட்டுச்செய்து பாக்கு வெற்றிலை கொடுத்து நிருதி செய்து அதன் பின்பு கரிகால் சோழன் சமய முதலிக்கு நாகூர் நாகப்பட்டினத்தில் கப்பல் மகிமை உண்டு செய்து அந்தக் கப்பல் மகிமை நடந்து வரப் பட்டயம் கொடுத்த விவரம்—

நாகப் பட்டினம் கப்பல்வரி

[1]பொற்கப்பலுக்கு நாகரம் ஐந்து பொன்னும் போய் வருகிற கப்பலுக்கு நாகரம் பத்துப் பொன்னும் என்று நிருதி செய்து செப்பேட்டுப் பட்டயம் கொடுத்துச் சமய முதலிக்கு உடுகரை பாக்கு வெற்றிலையும் கொடுத்து நிருதி செய்த பின்பு கரிகால் சோழன் சமய முதலி கையில் அனுப்பிவைத் துக்கொண்டு திருவாரூருக்குப் போனார். போன பின்பு சமய முதலியும் நாட்டுறவின் முறையும் நம்பி நாகபாசத்தவரையும் அவரவருக்கு அனுப்பி வைத்து காஞ்சீபுரத்திலிருக்கும்போது அன்னாளில் தென்மதுரை மீனாக்ஷி சௌந்தரபாண்டியன் பாபநாச நகரம் கட்டி வைத்து அதில் குடியேற வேண்டுமென்று காஞ்சீபுரத் திலிருக்கும் கச்சிவீர மார்த்தாண்டராய்ச் சீரச் சிங்கா சனக் கர்த்தராகிய அறுசமய முதலிக்கு எழுதியனுப்பி வைக்க மீனாக்ஷி சௌந்தர பாண்டியன் எழுதியனுப்பி வைத்தபடிக்குச் சமய முதலியும் மன்னியூருக்கு ஆள னுப்பி வைத்து உத்தமலிங்காசாரியரையும் அழைத்துக்கொண்டு பாப நாச நகருக்குப் போய்ப் பாண்டியனைக் கண்டார்கள். கண்டபடிக்குப் பாண்டியன் சமய முதலியை அழைத்துப் பாபநாச நகரில் பல்குடியும் அழைத்து வைத்து நிருதி செய்யென்று கட்டுச் செய்யக் கட்டுச்செய்த படிக்குச் சமய முதலியும் அப்படியே அந்தப் பாபநாச நகரில் பல்குடி யும் அழைத்து வைத்து நிருதி செய்து பின்பு சமய முதலி மீனாக்ஷி சௌந்திர பாண்டியனைக் கொண்டு அந்தப் பாபநாச நகரிலுள்ள சிவாலயங்களுக்குக் கோவில் கட்டிவைத்து உத்தமலிங்கரைக்கொண்டு அந்தக்கோயில் சிவாலயங்களுக்கும் புண்யாஙகப் பிரதிஷ்டையும் பண்ணிவைத்து அந்தக்கோவிலூழியம் செய்துவர நம்பி நாகபாசத்

சோழன் திருவாரூர் சென்றது

சமய முதலி காஞ்சி சென்றது

பாண்டியன் பாபநாசம் கட்டினது

சமயமுதலிக்கு அழைப்பு

---

[1] பொற்கப்பல்-போகும் கப்பல்

தவரும் திருவாடுதண்டிகைச் சேர்வைக்குக் கைக்கொள்வரும் ஐம்பது அடியும் வைத்து அந்த ஐம்பது அடிக்கைக்கொள்வருக்கும் நம்பி நாக தவருக்கும் முதன்மை நாட்டாண்மைக்கு வேத மூர்த்தி முதலி என்கிறவனை வைத்து அவனுக்குச் சமய முதலி கைக்கொண்டு பாக்கு வெற்றிலை கொடுத்து அந்தக் கோவிலூழியந்தாழ்ச்சி வாராதபடிக்கு விசாரித்து நடத்தி வர அவனுக்குக் கட்டுச்செய்து அவனுக்குள்பட்ட கைக்கொள்வருக்கும் நம்பி நாகபாசத்தவருக்கும் சமய முதலி பாக்கு வெற்றிலை கொடுத்து அவர்களையும் அந்த நாட்டாண்மைக் காரனுக்குள்பட்டு நடந்துவரக் கட்டுச் செய்து அதன் பின்பு சமய முதலி மீனாக்ஷி சௌந்திர பாண்டியனைக் கொண்டு அந்தக்கோவி லுக்கும் கோவிலூழியத்தவருக்கும் வரிசைமான்யம் விடுவித்த விவரம்—

பாபநாசம் கோயில் திட்டம்

பாபநாசம் கோவிலுக்குப் பதினாயிரம் பொன் கிராமமும் ஆயிரம் பொன் தங்கமும் ஆயிரம் சலகை நெல் விரைப்பாடு வயல் பூமியும் விடுவித்து விட்ட மான்யத்தில் சமய முதலிக்குப் பத்திலொன்றென்று வரிசை மான்ய மென்று கண்டு பாபநாசர் கோயில் கல்தூணில் கல் வெட்டும் பொடிவித்து விட்ட மான்யத்திற்கு மான்யக் கிராமம் வயல் பூமியில் சூலக்கல் பொடிவித்து நிகுதி செய்த பின்பு சமய முதலியும் அந்தக் கோயில் மணியங் கணக்குக்கு ஞான மூர்த்தி முதலி யென்கிறவனை வைத்து நிகுதி செய்த பின்பு மீனாக்ஷி சௌந்திர பாண்டியன் சமய முதலிக்குத் தென் சமுத்திரக் கரைப் பற்றுக் கப்பல் மகிமை சமய முதலிக்கு உண்டு செய்து பட்டையங் கொடுத்த விவரம்—

பொறக் கப்பலுக்கு மதுரை வெள்ளைப் பணம் ஐந்து பொன் னும் போய் வருகிற கப்பலுக்கு பத்துப் பொன்னுமென்று நிகுதி செய்து பாண்டியன் கச்சி வீர மார்த்தாண்ட ராயர் அறு சமய முதலிக்கு கப்பலொன்றுக்கு இந்தப்படி மகிமை கொடுத்து வரத் தன் தேசம் திருவிடதேசத்திலுள்ள கப்பல் வர்த்தகருக்குக் கட்டுச் செய்து சமய முதலிக்குச் செப்புப் பட்டயமும் பாக்கு வெற்றிலையும் கொடுத்துப் பாண்டியன் நிகுதி செய்து அதன் பின்பு

மதுரைக் கோயிலிலிருந்துகொண்டு திருவிடதேசத்திற்குப் பாண்டிய நாடு திட்டம் வகுத்தது

பாண்டியன் சமய முதலியையும் அவர்களுக்குள்பட்ட கார்யப்பேர்களையும் உத்தமலிங்காசாரியரையும் அழைத்துக்கொண்டு பாபநாச நகர் கடந்து மதுரை மீனாக்ஷி கோயில் கனகசபையில் இருந்து கொண்டு மீனாக்ஷி சௌந்தர பாண்டியன் தங்கள் வம்சத்தில் திருவிட தேசமண்டலத்தில் உள்ள சிவாலயம் கட்டிவைத்து வரிசை மான்யம் விடுவித்தது கண்டு மீனாக்ஷி சௌந்தர பாண்டியன் சூலக்கல் பொடிவித்த விபரம்—

மதுரை மீனாக்ஷி சொக்கர் கோவிலுக்கு விட்ட மான்யம் லட்சம் பொன் கிராமமும் பதினாயிரம் பொன் சுங்கமும் இருபதினாயிரம் சலகை நெல்விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் பொடிவித்து அதில் சமய முதலிக்குப் பத்திலொன்று வரிசை மான்யமென்று மீனாக்ஷி திருக்கோயில் கனக சபை முன்பந்தித் தூணில் கல்வெட்டுப் பொடிவித்து அதன் பின்பு சமய முதலி மீனாக்ஷி சொக்கர் கோவிலுக்கும் கோவிலுக்கு விட்ட வரிசை மான்யத்திற்கும் மணியங்கணக்குக்குச் சமய சங்கதி சோலை யங்கிரி முதலி யென்கிறவனைச் சமய முதலி வைத்து நிகுதி செய்த

மதுரைக் கோயில் திட்டம்

பின்பு பாண்டியன் ராமேசுரம் கோயிலுக்குப் பதினாயிரம் பொன் கிராமமும் ஆயிரம் பொன் சுங்கமும் இரண்டாயிரம் சலகை நெல்விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் பொடிவித்து அதில் சமய முதலிககுப் பத்திலொன்றென்று வரிசை மான்யம் கண்டு இராமலிங்கர் கோயில் தூணில் கல் வெட்டுப் பொடிவித்து அதன் பின்பு சமய முதலி அந்தக் கோயில் மணியங்கணக்குக்குத் தானப்ப முதலியை வைத்து நிகுதி செய்த

இராமேசுரம் திட்டம்

பின்பு பாண்டியன் சீராலவாயன்கிரிக்கோவிலுக்குப் பதினாயிரம் பொன் கிராமமும் ஆயிரம் பொன் சுங்கமும் இரண்டாயிரம் சலகை நெல் விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் பொடிவித்து அதன் பின்பு சமயமுதலி அந்தக் கோயில் மணியங்கணக்குக்குக் கந்தப்ப முதலியை வைத்து நிகுதி செய்த பின்பு பாண்டியன் திருப்பரங்குன்றக் கோவிலுக்குப் பதினாயிரம் பொன் கிராமமும் ஆயிரம் பொன் சுங்கமும் இரண்டாயிரம் பொன் சலகை நெல் விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் பொடிவித்து அதில் சமய முதலிக்குப் பத்திலொன்று வரிசை மான்யம் கண்டு திருப்பரங்குன்றங் கோயில் தூணில் கல்வெட்டுப் பொடிவித்து அதன் பின்பு சமய முதலி அந்தக் கோவில் மணியங்கணக்குக்குச் சொக்கலிங்க முதலியை வைத்து நிகுதி செய்த பின்பு பாண்டியன் திருவேரகத்திற்குப் பதினாயிரம்பொன் கிராமமும் ஆயிரம்பொன் சுங்கமும் இரண்டாயிரம் சலகை நெல் விரைப்பாடு வயல் பூமியும் கண்டு அதில் சமய முதலிக்குப் பத்திலொன்று வரிசைமான்யமென்று திருவேரகத்துக்கோவில் தூணில் கல்வெட்டுப் பொடிவித்து அதன் பின்பு சமயமுதலி அந்தக் கோயில் மணியங்கணக்குக்குத் திருமுருக முதலியை வைத்து அதன் பின்பு பழமுதிர் சோலையங்கிரிக்குப் பதினாயிரம்பொன் கிராமமும் ஆயிரம்பொன் சுங்கமும் இரண்டாயிரம் சலகை நெல் விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் பொடிவித்து அதில் சமயமுதலிக்குப் பத்திலொன்று வரிசை மான்யமென்று

சீராலவாயன் கிரிக்கோயில்

திருப்பரங் குன்றம்

திருவேரகம்

பழமுதிர் சோலை

பழமுதிர்சோலையங்கிரி ஆலயத்தில் கல்வெட்டுப் பொடிவித்து அதன் பின்பு சமய முதலியும் அந்தக் கோயில் கணக்குக்குக் கோபால முதலியை வைத்து அதன்பின்பு பாண்டியன் சீரலைவாய்க்

சீரலைவாய்க் கரைத் திருச் செந்தூர்

கரைத் திருச்செந்தூர் கோவிலுக்குப் பதினாயிரம் பொன் கிராமமும் ஆயிரம் பொன் சுங்கமும் ஆயிரம் பொன் [1]முத்துக்கொளிப்புத் தீர்வையும் இரண்டாயிரம் சலகை நெல் விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் பொடிவித்து அதில் சமய முதலிகுப் பத்திலொன்று வரிசை மான்யமென்று சீரலைவாய்க் கரைத் திருச்செந்தூர் கோயில் கல்தூணில் கல்வெட்டுப் பொடிவித்து அதன்பின்பு சமய முதலி அந்தக் கோயில் மணியங்கணக்குக்கு அர்த்தபாக முதலியை வைத்து அதன் பின்பு

கன்னியாகுமரி

பாண்டியன் கன்யாகுமரிக் கோவிலுக்குப் பதினாயிரம் பொன் கிராமமும் ஆயிரம் பொன் சுங்கமும் இரண்டாயிரம் சலகை நெல் விரைப்பாடு வயல் பூமியும் கண்டு சூலக்கல் பொடிவித்து அதில் சமய முதலிக்குப் பத்திலொன்று வரிசை மான்யமென்று கன்யாகுமரிக் கோயில் கல்தூணில் கல்வெட்டுப் பொடிவித்து அதன்பின்பு சமயமுதலி அந்தக் கோயில் மணியங்கணக்குக்கு முத்துவேலப்ப முதலியை வைத்து

படுக்கல் கோயில்

அதன்பின்பு படுககல்கோயிலுக்கு ஆயிரம் பொன் கிராமமும் நூறு பொன் சுங்கமும் இருநூறு சலகை நெல் விரைப்பாடு வயல் பூமியுங் கண்டு சூலக்கல் பொடிவித்து அதில் சமய முதலிக்குப் பத்திலொன்று வரிசை மான்யம் என்று அந்தக் கோயில் தூணில் கல்வெட்டுப் பொடிவித்து அதன் பின்பு சமய முதலி அந்தக் கோயில் மணியங்கணக்குக்குத் தாண்டவ முதலியை வைத்து அதன் பின்பு பாண்டியன் கம்பர் கூடலூர்க்கோவிலுக்கு ஆயிரம்

கம்பம் கூடலூர்

பொன் கிராமமும் நூறு பொன் சுங்கமும் அறுநூறு சலகை நெல் விரைப்பாடு வயல் பூமியும் கண்டு அதில் பத்திலொன்று சமயமுதலிக்கு மான்யமென்று அந்தக் கோயில் கல்தூணில் கல்வெட்டுப் பொடிவித்து அதன்பின்பு சமயமுதலி அந்தக் கோயில் மணியங் கணக்குக்குக் கோபால முதலியை வைத்து அதன்பின்பு பாண்டியன் சேரகொங்குக் கோவிலுக்குச் சேரன்

சேரர் கொங்குக் கோயில்

கையில் கைக்கிரயத்திற்குக் கொண்டு விட்ட மான்யம் ஆயிரம் பொன் கிராமமும் நூறுபொன் சுங்கமும் நூறுமிடா விரைப்பு நஞ்செய்யும் நூறுமிடா விரைப்புப் புஞ்செய்யும் விடுவித்து விட்டமான்யத்திற்குச் சூலக்கல் பொடிவித்து அதில் சமய முதலிக்குப் பத்திலொன்றென்று வரிசை மான்யமென்று

---

[1] முத்துக் குளிப்பு

அந்தக் கோயில் கல்தூணில் கல்வெட்டுப் பொடிவித்து அதன் பின்பு அந்த ஊதியூர்ப் பொன்னுதி மலை வேலர் கோயிலுக்கும் கோயில்மான்யத்திற்கும் மணியங்கணக்குக்குச் சாமினுத முதலியை வைத்து இப்படி பாண்டியன் தன்னதிகாரத் திற்குள்பட்ட திருவிடதேசத்தில் தங்கள் வம்சத்தவர் கோயில் கட்டி வைத்துக் கோயிலுக்கு மான்யம் விட்டதெல்லாம் அதே முறைக்குக் கோவில்களுக்கு மான்யம் விடுவித்து அந்தந்தக் கோயில் தூண்களில் சமய முதலிக்குப் பத்திலொன்று மான்யங் கண்டு கல்வெட்டும் பொடிவித்து அந்தக் கோவிலுக்கு விட்ட மான்யங்களுக்கும் சூலக்கல் பொடிவித்துப் பாண்டியன் கச்சி வீர மார்த்தாண்டராய சிரச்சிங்காசனக் கர்த்தராகிய அறுசமய முதலி வசம் தன் தேசத்தில் சிவாலய விஷ்ணுவாலய சுப்பிர மண்யத்திருவாலய மடவாலய குருவாலயம் இதனுள் பட்ட ஆலயங்களெல்லாம் இந்த ஆலயங்களுக்கு விட்ட மான்யமும் சமய முதலி வசம் ஒப்புவித்துப் பாண்டியன் தென்மதுரை மீனாக்ஷி அம்மன் திருக் கோயிலிலிருந்து கொண்டு மீனாட்சியம்மன் சாட்சியாக சமய முதலி யுண்டு பாண்டி மண்டலத் திற்குள்பட்ட கோவிலுக்கும் கோவிலுக்கு விட்ட மான்யங்களுக்கும் இனி மேல் எங்களுக்குக் காரியமில்லை யென்று பாண்டியன் பளிசாறிக் [1]கய்தட்டிச் சமய முதலி வசம் ஒப்பிவைக்க பாண்டியன் ஒப்புவித்த படிக்குச் சமய முதலியும் மினாக்ஷி அம்மன் சாக்ஷியாகக் கையொத்துக் கொண்ட பின்பு சமய முதலிக்குப் பாண்டியன் உடுகரை பாக்கு வெற்றிலை கொடுத்து நிகுதி செய்த பின்பு சமய முதலி பாண்டி யனையும் உத்தமலிங்காசாரியரையும் மற்றுள்ள பேரையும் அழைத்துக்கொண்டு சமய மண்டபத்திற்கு வந்து மதுரைச் சமய மண்டபத்திலிருந்து கொண்டு சமய முதலி திருவிடதேசம் பாண்டி மண்டலத்திலுள்பட்ட பதினெட்டு நாட்டிலுள்ள உறவினமுறையும் அதனுள்பட்ட நம்பி நாகபாசத்தவரையும் அழைப் பித்து மதுரைச் சமய மண்டபத்தில் சமய முதலி அந்தப் பாண்டி வளநாடு பதினெட்டு நாட்டுக்கும் பதினெட்டு நாட்டாண்மை வைத்து அந்தப் பதினெட்டு நாட்டிற்குள் பட்ட ஊரூருக்கு ஒரு நாட்டாண்மை வைத்து அந்தப் பதினுலு சிவாலயத்திற்கும் ஒரு குறிப்பான நம்பியும் வைத்து நாகபாச முதன்மைக்குக் குறிப்பான நட்டுவனை வைத்து தேவதாசி முதன் மைக்கு ஒரு குறிப்பான ஒரு தேவதாசியையும் வைத்து அதன் பின்பு தம்முடைய சாதி கைக்கொள்வருக்கு அவரவரூரில் வாய்க குற்றம் கைய்க்குற்றம் அந்தந்த நாட்டாண்மைக்காரன் முன்படத் தீர்த்துக்கொள்ளவும். தீர்த்துக்கொண்டால் அபசாரம் வாங்கிப்

ஊதியூர்—ஊதி மலை வேலர் கோயில்

பாண்டிய நாட்டுப் பொது ஆட்சி

அதற்கு முறை வகுத்தல்

---

1 கய் - கை

பாக்கு வெற்றிலை பச்சைவடம் பங்கும் போது முந்தின பாக்கு வெற்றிலை பச்சவடம் இரட்டை வேளையும் காஞ்சீபுரத்துக் கச்சி வீர காமாக்ஷி ராயர் சீரச் சிங்காதனக் கர்த்தராகிய அறு சமய முதலி பேருக்கு எடுத்து வைத்து அதன் பின்பு சமய நாட்டாண்மைக் காரனுக்கு எடுத்து வைத்து அதன்பின்பு சமய தளவராய் பேருக்கு எடுத்து வைத்து அதன் பின்பு . சமய கர்ணிகருக்கு எடுத்து வைத்து அதன் பின்பு சமய சங்கோதி இழுந்தாரி பேருக்கும் இப்படி அந்த ஆறு பேருக்கும் முந்தின பாக்கு வெற்றிலை....வேழையும் சேசைவரிசையாய் எடுத்துவைத்து அதன் பின்பு பங்கிக்கொள்ளவும். அப்படி ஊருருக் குற்றம் ஊருரிலே தீர்ந்ததாஞல் இந்த முறைக்கு நடந்துகொள்ள வும். ஊரை மீறி நாடு கூடிஞல் காஞ்சீபுர நாட்டுச் சமய முதலியும் அவருக்குள்பட்ட ஐந்துபேர் கார்யக்காரரையும் அழைத்து வந்து தீர்த்துக்கொள்ளவும் என்று அந்தப் பதினெட்டு நாட்டாண் மைக்காரனுக்கும் அதனுள்பட்ட ஊருரு நாட்டாண்மைக்கார னுக்கும் அதனுள்பட்ட உறவினமுறைக்கும் அதனுள்பட்ட நம்பி நாகபாசத்தவருக்கும் சமயமுதலி கட்டுச்செய்து பின்பு சமய முதலி பதிஞறு சிவாலயத்தில் காத்துத் திருவாடுதண்டிகைக்கு கோயில்வாசலில் தெருவீதியில் உங்களுக்கு வரிசை வேளையும் வந்தால் அதைப் பங்கும் போது இரட்டைவேளையும் சமயமுதலி பேருக்கும் எடுத்து வைத்து அதன்பின்பு அவர்களுக்குள்பட்ட ஐந்து பேருக்கும் எடுத்து வைத்து அதன் பின்பு ஊர்நாட்டாண்மைக்கு மதன் பின்பு ஊரிலுள்ள உறவின்முறைக்கும் விளங்கவும் கலியாணவாசலில் முந் தின பேருக்கு வெற்றிலை வேழையும் வீர செங்குந்த விஞயக ருக்கும் அதன்பின்பு கச்சி ஏகாம்பரர் காமாச்சி அம்மன் கச்சி வரதராயப் பெருமாள் கச்சாலை கந்தப்பெருமாள் கருமாரி அம்மன் இந்த தேவதைகளுக்கு முந்தின பாக்கு வெற்றிலை எடுத்து வைத்து அதன்பின்பு குருவாகிய மெய்ஞான சைவாசாரியருக் கும் உத்தமலிங்காசாரியருக்கும் எடுத்து வைத்து அதன்பின்பு காஞ்சீ புரத்துக் கச்சிவீர காமாக்ஷிராயர் சீரச்சிங்காசனக் கர்த்தராகிய அறு சமய முதலிக்கும் சமய நாட்டாண்மைக்கும் சமய தளபதிக்கும் சமய கர்ணிகருக்கும் சமய சங்கோதிக்கும் சமய இழுந்தாரிக்கும் எடுத்து வைத்து அதன்பின்பு ஊர் நாட்டாண்மை ஊரிழுந்தாரிக்கும் எடுத்து அதன்பின்புஉறவினமுறையாருக்குக் கொடுக்கவும் என்று இந்தப்படி கல்யாண வாசலிலேயும் சாதி வாசலிலேயும் இந்தப்படி நடந்துவரச் சொல்லி அவரவர்க்குக் கட்டுச் செய்து அதன்பின்பு கோவில் வீதியில் [1]மிரவணை வந்து வரிசை வேளையும் திருவிழாக் கட்டளைக்கு வந்தால் பத்து நாளைக்கொரு நாள் நம்பி நாகபாசத்தவருக்குக் கொடுத்து

---

[1] இறவணை - பவனி.

நடத்தி வரவும். மற்ற விடுநாளில் புத்திலொரு பங்கு நாகபாசத்தவருக்குக் கொடுத்து நடத்தி வருகிறோமென்று சமயமுதலி தமக்குள்பட்ட கைக்கொள்வருக்குக் கட்டுச்செய்த பின்பு நம்பி நாகபாசத்தவருக்கும் கட்டுச் செய்து அதன்பின்பு நம்பிக்கும் கோவில் வாசலில் முந்தின மாலைச் சந்தனம் தளிகைப் பிரசாதம் ஊர் நாட்டாண்மைக்காரனுக்குக் கொடுத்து அதன் பின்பு ஊரதிகாரிக்கும் அதன்பின்பு ஊர் உறவின் முறைக்கும் அதன்பின்பு மற்ற பேருக்கும் வழங்கவுமென்று நம்பிக்குக் கட்டுச்செய்து அதன்பின்பு நாகபாச நட்டுவனுக்கும் தேவதாசிக்கும் முந்தின உலகம் கோவில் வாசலுக்கு நாட்டாண்மைக்காரன் இழந்தாரி உறவினமுறையார் வந்தால் முந்தின உலகம் நாட்டாண்மைக்காரனுக்கும் அதன்பின்பு ஊரிழந்தாரிக்கும் அதன்பின்பு உறவின முறைக்கும் முந்தின உலகச்சேவகம் சேவித்து அதன் பின்பு கோவில் சேவகம் செய்து வரவுமென்று சமயமுதலி நாகபாசநட்டுவனுக்கும் தாசிக்கும் கட்டுச் செய்த பின்பு சமய முதலி எல்லோருக்கும் விருந்து விசாரித்துப் பதினெட்டு நாட்டாண்மைக்கும் பதினெட்டுப்பச்சவடம் போர்த்திஊரொரு நாட்டாண்மைக்காரருக்கும் பச்சவடம் போர்த்தி ஊருக்கொரு கோயில் நம்பிக்கும் பச்சவடம் போர்த்தி ஊருக்கொரு கோவில் நட்டுவனுக்கும் பச்சவடம் போர்த்தி ஊருக்கொரு தேவதாசிக்கும் கண்டாங்கிச்சேலையும் கொடுத்து நாட்டுறவினமுறையும் அவரவாக்கும் நம்பி நாகபாசத்தவருக்கும் பாக்கு வெற்றிலை கொடுத்துப் பரிமள களப கஸ்தூரிகள் பூசி எல்லோரையும் மனது சந்தோஷப்படுத்தி நிகுதி செய்த பின்பு அவர்களுக்கும் அந்த அணிமுறமை தப்பாமல் நடந்து வரச் சமய முதலி கட்டுச் செய்ய அவர்கள் அனைவரும் சம்மதித்துக் கொண்டு உடுகரை பாக்கு வெற்றிலை வாங்கிக் கொண்டு இருக்கும் போது மீனாக்ஷி சௌந்தர பாண்டியன் கைக் கொள்வருக்கும் நம்பி நாகபாசத்தவருக்கும் தேவஸ்தானத்தில் குடியிருந்து திருவாடுதண்டிகைச்சீர்பாத ஊழியம் செய்து வருவதுக்குத் தம்முடைய திருவிடதேசமாகிய பாண்டி மண்டலத்திலுள்பட்ட சீர்மையில் அவர்களுக்கு அரண்மனைச் சுங்கமில்லை. அவர்களுக்குக் கோவில் வரிசை [1]அம்மாசை மாதப்பிறப்பு ஆடிக் கார்த்திகைக் கட்டளைக்கு சுவாமி எழுந்தருளச் செய்கிறவர்களுக்கு நாளொன்றுக்கு முத்திரைப்படியில் இரண்டு படி அரிசியும் அதற்குள்பட்ட பருப்பு உப்பு புளி மிளகு பாக்கு வெற்றிலைக்கு நாலு காசும் திருவிழாக் கட்டளைக்கு துவிஜாரோகண விருந்தும் சத்தாவரண நாள் விருந்தும் மண்டப காணிக்கை மண்டப மொன்றுக்கு மதுரை வெள்ளை ஏழு பணமும் மண்டபத்தித்திற்கொரு விருந்தும் கோவில் வாசலில் நாட்டாண்மைக்காரனுக்குச் சத்தாவரணநாள்

---

[1] அமாவாசை.

ஒரு பச்சவடமும் நட்டுவனுக்கு ஒரு துப்பட்டியும் தேவதாசிக்கு ஒரு கண்டாங்கிச் சேலையும் என்று நிருதி செய்து இப்படி ஆலயங்களில் இன்னார்க்கின்ன வரிசை என்று சமய முதலி தன்கைப் பெட்டியில் எழுதிவைத்துப் பாண்டியன் சமய முதலிக்கும் அவர்களுக் குள்பட்ட கார்யப்பேருக்கும் உத்தமலிங்காசாரியருக்கும் பதினெட்டு நாட்டு நாட்டாண்மைக்காரருக்கும் அதனுள்பட்ட கைக்கொள்வர் நம்பி நாகபாசத்தவருக்கும் விருந்துப்படி அரிசி பாக்கு வெற்றிலை உடுகரையகள் கொடுத்து அவரவர்களை அவரவர் ஊருக்கு அனுப்பி வைத்து அதன் பின்பு சமய முதலியையும் காஞ்சிபுரத்திற்கு அனுப் பும்போது முன் கடம்பவனம் காத்திருந்த [1]குலைக் களத்து அதிமதுர மாகாளி வந்து சமய முதலியை வழி மறித்துத் திருவண்ணமலை மகிஷமாகாளிக்கு நரபலி கொடுத்தை[2]........ அந்த முறைக்கு எனக்கும் காணிப்பலி உன் மகனைக் கொடுக்கச்சொல்லி அதிமதுரமாகாளி கேட்கக் கேட்டபடிக்குச் சமய முதலியும் சம்மதித்துத் தன் மகனைச் சாவாரக் கோலமுஸ்தேதி செய்து பாலசனமிடுவித்து பரிமள களப கஸ்தூரிகள் பூசி ஆடை ஆபரணதிகள் பூட்டி அலங் கரித்து ஆனையேற்றி மதுரை வீதி மிரவணை வருவித்து வீரகொம்பு வீர காஹளம் வீரமேளவாத்யத்துடன் வீரகோலவையிடுவித்துச் சமய முதலி தன் மகனை அழைத்துப்போய்க் கொலைக்களத்து அதிமதுர மாகாளி முன்னே விட்டு மாகாளியம்மே உன் பலி வந்த தென்று சமய முதலி தன் மகனைப் பலியூட்டி மதுரமாகாளிக் குப் பலி யூட்டி ஒப்பித்துச் சமய முதலியும் மதுரைமாகாளிக்கு இனிமேல் இந்த ராச்சியத்தில் நரபலி கேட்கவேண்டாம் உனக்கு இந்த கிராமத்தவர் வருஷமொரு தடவை பொங்கலு(க்கு)ம் விளக்கும் ஆடு கோழி எருமைக்கிடா பலியும் கொடுப்பார்கள். கொடுத் தால் நீ வாங்கிக்கொண்டு இந்த மதுரை மாநகரத்தைக் காத்து ரக்ஷித் துக்கொண்டு இருமென்று அந்த மதுரை மாகாளிக்கு ஒப்புச் சொல்லி அமைத்துச் சமய முதலி சொல்லி அமைத்தபடிக்கு அந்த அதிமதுர காளியும் அதே முறைக்குப் பெற்றுத்து அடங்கின பின்பு சமய முதலியும் தன் மகனைச் சாவாரப் பலியூட்டின மகனைப் போல் சாவார முத்தேதிக் கோலமாய்ச் சிலை முடிப்பித்து மீனாக்ஷி அம்மன் திருக் கோவில் சன்னிதி வாசலில் திருக்கோபுர முகவாசலில் நிலைநிறுத்தி உத்தமலிங்காசாரியரைக் கொண்டு புண்யாங்கப் பிரதிஷ் டையும் பண்ணி வைத்து அந்தச் சிலைக்கு அனுக்கிரகமும் உண்டு செய்து அபிஷேக முடித்து ஆலத்தி தீபம் பரிமாறிச் சமய முதலியும் பாண்டியனும் மற்றுள்ள பேரும் அந்தக் கொலைக்களத்து அதிமதுர

வேலைமுடிந்து ஊர் திரும்பும் போது கொலைக் களத்து அதி மதுரமாகாளி நரபலி கேட்டது

அதுமுதல் நரபலி நிறுத்தினது

சாவாரக்கல் நாட்டல்

[1] குலை – கொலை. [2] முன்னிட்டு.

மாகாளி பலிக்கு நின்ற சாவாரப் பலிச்சிலையைப் பணிந்து தரிசித்துக் கொண்டபின்பு சமய முதலியும் பாண்டியனும் மீனாக்ஷி சொக்கருக்கு முந்தின பூசை நிவேத்ய மிந்தச் சிலைக்குப் பண்ணிவரக் கட்டுச்செய்து சமய முதலியும் பாண்டியனும் மீனாக்ஷி சொக்கர் சன்னிதிக்குப் போய் மீனாக்ஷி சொக்கரைப் பணிந்து தரிசித்துக்கொண்டு சமய முதலியும் பாண்டியன் கையில் அனுப்பித்துக் கொண்டு சமய முதலி நாட்டுற வின் முறையும் நம்பி நாகபாசத்தவரையும் அவரவர் ஊருக்கு அனுப் பித்துப் போட்டு உத்தமலிங்காசாரியரையும் மன்னியூருக்கு அனுப் பித்துச் சமய முதலியும் அவர்களுக்குள்பட்ட கார்யப்பேருமாகப் புறப்பட்டுத் தென்மதுரை மாநகர் கடந்து காஞ்சீபுரத்துக்குப் போனார்கள்.

சமய முதலி காஞ்சி திரும்பியது

காஞ்சீபுரத்திலிருந்து கொண்டு கச்சி வீர மார்த்தாண்டராயர் சீரச்சிங்காதனக் கர்த்தராகிய அறுசமயமுதலியும் அவருக்குள்பட்ட கார்யப்பேருமாகக் காஞ்சீபுரநகர விருந்து கொண்டு அவர்களும் முன்னடந்தபடியாய்க் கச்சி ஏகாம்பரர் காமாட்சியம்மன் கோவிலூழியம் தாட்சி வராத படிக்கு விசாரித்துக் கொண்டு ஆதி காஞ்சீபுரம் மதுரை ஆதீனச் சமஸ்தானத்திற்குள்பட்ட ஐம்பத்தாறு தேசம் புவனங்களிலுண்டான சிவாலயம் விஷ்ணுஆலயம் சுப்பிரமண்யத்திருவாலயம் மடவாலயம் குருவாலயமும் இந்த ஐந்து ஆலய முதலாகியதும் தன் சாதி முதல் கொண்டு தொண்ணூற்றெட்டுப் பல சாதி நியாயமும் அவரவர் சாதியில் அவரவருக்கு ஒத்துப்பண்ணி அவரவர்சாதியை மட்டுப்பண்ணிச் சாதி மரபு காத்து மற்ற சாதியையும் தான் மட்டுப்பண்ணி மரபு காத்தும் அரண்மனை வியவகாரத்திசை வந்து குடிக்கு லயகாலம் வராமல் ராச்சி யத்துகுடியை [1]ஓம்முகஞ்செய்து கச்சி வீர வேளாளராயனைக் கொண்டு ராஜ்யத்துக் குடியை மரபு காத்தும் ராஜ்யத்துச்செட்டி பலருக்கும் ராஜ விபதசையினாலே லய காலம் வராமல் ராஜ்யத்துச் செட்டி பலரை எல்லாம் ஒம்முகஞ்செய்து கச்சி வீர வரதராய செட் டிக்கு உள்ளடக்கி கச்சி வீர வரதராய செட்டியைக் கொண்டு ராஜ் யத்துச் செட்டி பலர் மரபு காத்தும் கோயில் சிவாலயங்களுக்கு லயம் வராமல் மூவராசாக்களைக் கொண்டு நடத்தி வைத்தும் அப்படிச் சாலிவாகன நாள் போன பின்பு மனுநீதிசோழன் நீதிபண்டியன் நீதிசேரன் கச்சிவீரகாமாட்சிராயன் மெய்ஞ்ஞானசைவாசாரியர் கச்சிவீரவரதராயர் கச்சிவீரவேளாளராயர் இவர்கள் முதல்

27 தலைமுறை ஆட்சி நடத்தியது

கொண்டு இருபத்தேழு தலைமுறைக்கும் கச்சிவீர மார்த்தாண்டராயர் வரைக்கும் கரிகால்சோழன் மீனாக்ஷி சௌந்தரபாண்டியன் சேரமாம் பெருமாளென்னும் சேரன் இப்படி மூவராசாக்கள் வம்சம் இருபத்தேழு தலைமுறைக்

[1] ஆம் என்று ஒப்புதல் செய்து.

கும் அந்தபடிக் கச்சிவீரகாமாச்சிராயர் வம்சத்தவர் ஆதி காஞ்சீபுரம் மதுரை ஆதீனத்திற்குள்பட்ட ஐம்பத்தாறு தேசபுவனங்களில் சட்சமயமும் விசாரித்து நடந்து வரும்போது அன்னாளில் மூவராசாக்கள் நடந்தபடி சோழ மண்டலம் தொண்டமண்டலத் திற்குள்பட்ட திருவாரூர்க் கரிகால் சோழன் அவனும் முன் னடந்தபடியாய் ஆறிலொன்று கடமை கந்தாயம் வாங்கி நடத்தி வந்தும் தென்மதுரை மண்டலம் திராவிடதேசம் பாண்டி மண்டலத்தில் மீனாக்ஷி சௌந்தரபாண்டியன் அவனும் முன்னடந்தபடியாய் எட்டிலொன்று கடமைக் கந்தாயம் வாங்கியும் கொங்கு தேசத்தில் கொங்கு தாராபுர நகரில் சேரமான் பெருமாளென்னும் சேரன் தன்னதிகாரத்திற்குள்பட்ட தேச ராஜ்யத்தில் பத்திலொன்றும் சேரன் கடமைக் கந்தாயம் வாங்கி யும் அப்படி மூவராஜாக்கள் அவரவர்கள் ராஜநீதி முறமை ஒழுக்கம் தவறாமல் அவரவர்கள் தேச ராஜ்யத்தில் குடிவரிசை சேர்த்துப் பட்ட ணம் பாரியாள் உண்டு செய்து சிவாலய விஷ்ணுவாலய சுப்பிரமண்யர் திருவாலய மடவாலய குருவாலயங்கள் கட்டிவைத்து அந்த ஐந்தாலய முதலாகியதற்கும் வரிசை மான்யங்கள் விடுவித்துத் தேர்த்தெருவுகள் தண்ணீர்ப்பந்தல் சாலைமரங்கள் பொடிவித்து மடங்கள் கட்டி மான் யங்கள் விடுவித்துத் தடங்கள் வெட்டி ஒதுக்கிவைத்து மடங்கள் கட்டி வைத்து நந்தவனங்கள் பொடிவித்து மாவடி மரவடி பூங்காவனங்க ளுண்டுசெய்து கன்யாதானம் கோதானம் வஸ்திரதானம் அன்ன தானம் பூமிதானங்கள் விடுவித்து யாவரையும் தன்னுயிர்போல் ரக்ஷித் துக்காப்பாரு மூவராஜாக்களும் அவரவர்தேசராஜ்யங்களில் [1]அகரங் கள்கட்டிப் பிராமணதாரை விடுவித்தும் அணைகள் குளங்கள் கிணறு கள் கட்டிவைத்தும் அப்படி மூவராஜாக்கள் வம்சபாரம்பரிக்கை யாய்ச் சாலிவாகன நாள் போனபின்பு மனுநீதிசோழன் நீதிசேரன் நீதிபாண்டியன் அந்த மூன்று ராஜாக்கள் முதல்கொண்டு கரிகால் சோழன் சேரமான் பெருமாளென்னும் சேரன் மீனாக்ஷி சௌந்தர பாண்டியன் இவர்கள் நால்வரையும் இருபத்தேழு தலை முறைக்கும் முப்பத்தாறு பட்டத்திற்கும் அபிஷேகம் மூன்றுக்கும் வருஷம் இரண்டாயிரத்து நூற்றறுவதற்கும் அப்படி மூவராஜாக்களுக்கும் அவரவர்கள் வம்சபாரம்பரிக்கையாய் ராஜநீதி முறை ஒழுக்கம் தவறாமல் அவரவர் தேசராஜ்யத்தில் விசாரித்து நடந்து வரும்போது அன்னாளில் மூன்று ராஜாக்களுக்கும் அவரவர் அனுபோக பாரபத்தியாலே அவர்களுக்கு அபிஷேகமுடிவு நாள் கண்டு அவரவர்கள் அதிகார முத்திரை மீனாக்ஷி சபையில் ஒப்பித்து பாமாயுகம் ஆகு நாள் கண்டு மூன்று ராஜாக்களும் அவரவர்கள் தேசத்துக்குடி

மூவேந்தர் கடமை கட்டுப்பாடு

---

[1] அக்கிரகாரம்.

வரிசைச் செட்டி வர்த்தகர் அவரவர்கள் தேசத்திலுண்டாகிய பல சாதியும் கூட்டிக்கொண்டு திருமுக்கூடலுக்கு வந்து திருமுக்கூடலிலே மூன்று ராஜாக்களும் அவரவர்கள் தேசக்குடிவரிசையுடனே கூட்டங் கூடியிருந்து மூன்று ராஜாக்களும் அவரவர் அதிகாரச் சோடிசம் ஆனை குதிரை சதுரங்கபலத்தையும் ஒன்றாகச் சேர்த்தித் திருமுக்கூடல் நகர் கடந்து திருக்காஞ்சீபுர நகருக்குப் போய் திருக்காஞ்சீபுரத்தில் மூன்று ராஜாக்களும் மற்றுமுள்ள பேருமாகத் திருபுரக் காமாட்சி திருக்கோவில் கனகசபை வாசலிலிருந்துகொண்டு திருக்காஞ்சீபுர நகரிலிருக்கின்ற கச்சிவீரமார்த்தாண்டராயச் சீரசிங்காதனக் கர்த்தராகிய அறுசமய முதலியை அழைக்கவிட அழைக்கவிட்டபடிக்குச் சமய முதலியும் அவர் பெண்சாதி சோலையங்கிரி அம்மாளும் அவர் மகன் கச்சிவீரகாமாட்சிராயனையும் அவருக்குள்பட்ட காரியப்பேர்களையும் வரவழைத்துக்கொண்டு சமய முதலி காமாட்சி சன்னிதி வாசலில் கனகசபையிலிருக்கின்ற மூன்று ராஜாக்களையும் வந்து கண்டபின்பு மூன்று ராசாக்களும் சமய முதலியை அழைத்துக் காமாட்சியம்மன் தவசிலிருக்கின்ற ஆதிபூர்வீகச் செப்பேட்டுப் பட்டையம் எடுத்துவரச் சொன்னார்கள். சொன்னபடிக்குச் சமய முதலியும் அதே முறைக்குச் சம்மதித்துக்கொண்டு மன்னியூரிலிருக்கின்ற உத்தமலிங்காசாரியரையும் அழைக்கவிட்டு உத்தமலிங்காசாரியர் வந்தபின்பு சமய முதலியும் சுப்பிரமண்ய தேவருக்குத் திருக்கல்யாணத் திருநாள் சோடித்து அறு சமய மண்டபத்தை முஸ்த்தேதி பண்ணிவைத்து சுப்பிரமண்ய தேவரைச் சமயமண்டபத்திற்கு எழுந்தருளப் பண்ணிப் போய் வைத்துச் சமயமண்டபத்தில் யாகசாலை கட்டி யாகசாலை யாகம் முடித்துச் சமயமண்டபத்து வீர செங்குந்த விநாயகன் திருக்கம்பத்தில் வீர சேவல் கொடிவிருது கட்டிச் சமய முதலிக்கு உத்தமலிங்காசாரியர் பொன்காப்பும் பொற்புர முன்னூலும் போட்டு வீரவாள் கையில் கொடுத்து வீரமுஸ்தேதி செய்தபின்பு சமய முதலியும் அவர் பெண் சாதி சோலையங்கிரி அம்மாளும் நடைபாவாடைமேல் நடந்துபோகப் பதினெண் மேளவாத்தியமும் முழங்கப் பதினெட்டு விருதும் சூழ்ந்துவர நடபாவாடைமேல் நடந்து திருக்கம்பை மாநதிக்குப் போய் நவமணிக் குடத்தில் சத்திகும்பம் சிவகும்பம் உத்தமலிங்காசாரியார் தா(பி)வித்துச் சத்திகும்பத்தைச் சமய முதலி தலைமேல் வைத்துச் சிவகும்பத்தை அவன் பெண்சாதி சோலையங்கிரி அம்மாள் தலைமேல் வைத்துத் திருக்கம்பை மாநதியிலிருந்து வீரமேளவாத்யத்துடனே நடபாவாடைமேல் நடந்துவந்து காமாட்சிஅம்மன் திருக்கோவிலுள் புகுந்து மூன்று

திருமுக் கூடலில் மூவேந்தர் கூடியது

காஞ்சி சென்றது

ஆதி செப்பேடு எடுத்தது

ராஜாக்களிடத்தில் அம்மனுக்கு அபிஷேகத்திற்கு நூறாயிரம் பொன்னும் அதனுள்பட்ட சிலவும் வாங்கிக்கொண்டு திருக்கோவில் சன்னிதியில் புகுந்து சமய முதலியும் அவர் மனையாளுமாகக் கோவிலுக்குள் நின்றுகொண்டு கதவு சாத்தித் தாள்பூட்டிக்கொண்டு அம்மனைத் தாபித்துக்கொண்டு பொன்கும்பத்தை அபிஷேகமாடி வைத்து ஆடை துகிலுடுத்தி அயந்தருவின் மாலை சாத்தித் தாபித்துக்கொண்டு பொன்சத்தி கும்பத்தில் வீரகட்டாரிமுனை அலகு நிறுத்தி வைத்த பின்பு சமய முதலி தன் மனையாளைச் சிவசத்தியாய் பாவித்து அந்தக் கும்பத்தில் நிற்கின்ற அலகு முன்னே நிறுத்தி காமாட்சிக்கு ஆராதனைச் சோடித்து ஆராதனை முடித்து சமய முதலியும் அவர் மனையாளும் அம்மனைப் பணிந்து தரிசித்துக்கொண்டு கந்தபுஷ்ப தூபதீபம் பரிமாறி அம்மனை அர்ச்சித்துக்கொண்டு பின்பு சமய முதலி பாதாள தளவசுவீக முத்திரிக் கோலுனாலே பாதாள தளவசுககதவைத் தாள் திறந்து கதவை வாங்கிப் பாதாள குகையினுள்ளே பஞ்சமுகத் தீவட்டிகை வீரசேகண்டியுடனே வீரவாளுங் கையுமாகப் போய் வீர முகத்துடனே குகையினுள்ளே இறங்கிப்போய் அந்தப் பாதாளத் திருக்கம்ப மாநதியில் தீர்த்தமாடி வந்து பாதாள குகை ஏகாம்பரரையும் காமாட்சி அம்மனையும் கந்த புஷ்ப தூப தீபாராதனையுடனே அர்ச்சித்துக்கொண்டு அந்த ஆதிபூர்வீகச் செப்பேட்டுப் பட்டயமிருக்கின்ற பொற் பொட்டகத்தையும் எடுத்துக்கொண்டு குகை விட்டு மேலே வந்து திருக்கோவில் புகுந்து காமாக்ஷி பாதத்தில் பொட்டகத்தை வைத்து அம்மனுக்குக் கந்த புஷ்ப தூப தீபம் பறமாறி அம்மனைச் சமய முதலியும் அவர்மனையாளும் பணிந்து தரிசித்துக் கொண்ட பின்பு சமய முதலி அந்தப் பொட்டகத்தைத் தான் வாங்கித் திறந்து செப்பேட்டுப் பட்டயமும் எடுத்துக் கோவில் கதவும் திறந்து கோவில் வாசலுக்கு வந்து மூன்று ராஜாக்கள் முன்னடந்த பழமொழி பூருவம் வாசித்துக் காண்பிக்க மூவராசாக்களும் சந்தோஷப்பட்டுக் கொண்டு சமய முதலி இனி நம்முடைய வம்சத்தவர் சாலிவாகனனைச் சங்கரித்து ராஜ்யம் அதிகாரம் செய்த நாள் முதலாக எங்கள் நாள்வரைக்கும் எங்கள் தலைமுறை இருபத்தேழுக்குப் பட்டம் முப்பத்தாறுக்கும் நாளித்துணையென்னும் சென்ற நாளிவ்வளவென்றும் அவரவர் நடந்து வந்த விவரமெல்லாம் கரிகால் சோழனும் சேரமான் பெருமாளென்னும் சேரனும் மினாக்ஷி சௌந்திர பாண்டியனும் சொன்னார்கள். அவர்கள் சொன்னபடிக்குச் சமய முதலியும் சாலி வாகனனுக்குப் பின்பு மனுநீதிசோழன் நீதிசேரன் நீதிபாண்டியன் முதலாகக் கரிகால்சோழன் மீனாக்ஷி சௌந்திர பாண்டியன் சேரமான் பெருமாளென்னும் சேரன் இவர்கள் வரைக்கும் அவர்கள் வம்சத்தில் அதிகாரம் செய்யும் நாளில் ராச்யம் விசாரித்த ஒழுக்க

முறைமையும் நூற்றெட்டுச் சிவாலயமும் ஆறு திருப்பதியும் ஆறு படைவீடும் அதனுள்பட்ட சிவாலயமும் விஷ்ணு ஆலயமும் சுப்பிரமண்யத் திருவாலயமும் மடவாலயமும் குருவாலயமும் இது முதலாகிய தெல்லாம் கட்டிவைத்து அதற்கு வரிசை மான்யம் விடுவித்து நடத்தி வந்ததும் அவரவர் ராஜ்யத்தில் குலநீதி குடிநீதி துரைநீதி குருநீதி தேவநீதி கண்டு நடத்தி வந்ததும் இது முதலாகியதெல்லாம் மூன்று ராஜாக்களும் சொல்லச் சமய முதலி ஆதி பூர்வீகச் செப் பேட்டுப் பட்டியிலெழுதிச் சேர்க்கச் சேர்த்த பின்பு

108 சிவாலயம் 6 திருப்பதி 6 படைவீடு பஞ்சாலயம் முதலிய விவரங்கள் கண்டது

மூன்று ராஜாக்களும் சமய முதலியைக் கோயில் தேவஸ்தலமாகிய தொண்டமண்டலம் பாண்டிமண்டலம் சோழமண்டலம் கொங்கு மண்டலம் அதனுள்பட்ட எண்மண்டலமும் அசுவபதி கஜபதி நரபதி தனபதி இதனுள்பட்ட ஐம்பத்தாறு புவனங்களில் காசி முதல் கன்யாகுமாரி வரைக்கும் ஏழுதலமும் தில்லை முதலாக மேலைச் சிதம்பரப்பேரூர் வரைக்கும் நூற்றெட்டுச் சிவாலயத்திற்கும் கீழத் திருப்பதி முதலாக மேலத்திருப்பதி வரைக்கும் இந்த அறு திருப்பதிக்கும் திருப்பரங்குன்று முதலாகத் திருச்செந்தூர் வரைக்கும் ஆறு படை வீட்டுக்கும் அதனுள்பட்ட சிவாலயம் விஷ்ணுஆலயம் சுப்பிரமண்யத்திருவாலயம் மடவாலயம் குருவாலய மிது முதலாகிய தற்கும் விட்ட மான்யத்திற்கும் சமய முதலி முதல்வனென்றும் அந்த ஆலயங்களுக்கு விட்ட மான்யத்தில் சமய முதலிக்குப் பத்திலொன்று மான்யமென்றும் சமய முதலி நாளது வரைக்கும் பின்முன்னரசர்கள் வந்த பேருக்கும் மூன்று ராஜாக்களுக்குச் சொன்ன பழமொழி வாசகம் வாசித்துக் காண்பித்துக் கொடுத்து நாங்கள் நடத்தி வந்த முறைக்கு அந்த வகை ஆலயமெல்லாம் மங்காமல் நடத்தி வரச் சமய முதலி உள்ளவன். சமய முதலி சொல்படிக்கு வந்த துரைகள் நடத்தாத போனல் அந்தப் பாப தோஷம் அவர்களுக்கு. வந்த துரைகளுக்குச் சொல்லி நடப்பிவையாதிருந்தால் அந்தப் பாப தோஷம் சமய முதலிக் கென்றும் மூன்று ராஜாக்கள் இந்த விவரம் சொல்லிச் சமய முதலியை ஆதி பூர்வீகச் செப்பேட்டுப் பட்டயத்தில் எழுதிச் சேர்க்கச் சொன்னர்கள். அவர்கள் சொன்னபடிக்குச் சமய முதலியும் எழுதிச் சேர்த்த பின்பு மூன்று ராஜாக்களும் சமய முதலியை உன் சாதிபோல தொண்ணூற்றெட்டு சாதிக்கும் சாதி மரபு கெடாதபடிக்கு அவரவர்கள் சாதிக்கும் அவரவரைக் கொத்து பண்ணி அவரவரைக் கொண்டு அவர் சாதிமரபும் அவரவர் காத்து வரக் கட்டுச்செய்து கொண்டு அவரவர்களுக்கு விருந்து மேளம் முஸ்தேத்தி அவரவர்களுக்குப் பட்டயத்திலுள்ள

கோயில் சன்னிதி வாயில் வகுப்பு
சோழன்— கிழக்கு
பாண்டியன்— தெற்கு
சேரன்— மேற்கு

படிக்கு நடப்பித்து வரக் கட்டுச் செய்து அதன் பின்பு மூவ ராஜாக்கள் கட்டி வைத்த கோவிலுக்கு வாசல் வகுப்புக் கண்டபடி சோழன் கிழக்கு வாசலும் சேரன் மேற்கு வாசலும் பாண்டியன் தெற்கு வாசலும் வாசல் வகுப்புக் கண்டு அம்மூன்று ராஜாக்கள் கட்டிவைத்த சிவாலயம் நூற்றெட்டு விஷ்ணு ஆலயம் ஆறு திருப்பதிக்கும் ஆறு படை வீட்டுக்கும் அதனுள்பட்ட கோடி சிவாலயமும் பத்துக் கோடி விஷ்ணுவாலயமும் நூறு கோடி சுப்பிரமண்யத் திருவாலயமும் அதனுள்பட்ட மடவாலயமும் குரு வாலயத்திற்கும் மூன்று ராஜாக்கள் வாசல் வகுப்புக் கண்டு பிரித்ததும் அம் மூன்று ராஜாக்கள் ஆதி காஞ்சீபுரம் மதுரைச் சமஸ்தானத்திற்குள்பட்ட ஐம்பத்தாறு தேச புவனங்களில் கட்டிவித்த ஆலயத்திற்கும் ஆலயத்திற்கு விட்ட மான்யத்திற்கும் காஞ்சீபுரத்துக் கச்சி வீர காமாச்சி ராயச்சீரச்சிங்காதனக் கர்த்ராகிய அறு சமய முதலி காணியாளனென்று மூன்று ராஜாக்களும் சொல்லித் தீர்த்துப் பின்பு சமய முதலிக்குள்பட்ட கைகொள்வருக்கு அந்தந்தக் கோயில் வாசலில் மூன்று ராஜாககள் வரிவிட்டு நடத்தி வந்தது அந்தந்தக் கோயில் தேவஸ்தலங்களில் குடியிருந்து அந்தக் கோயிலில் திருவாடு ஊழியச்சேவை செய்துவந்தவருக்கு அரண்மனைச் சுங்கத்திற்குக் காரியமில்லையென்றும் சொல்லிப் பின்பு அந்தந்தக் கோவில் வாசலில் வரிசை திருவாடு ஊழியம் செய்து வந்த நாளில் அவருக்கு நாளொன்றுக்கு முத்திரைப்படியில் இரண்டுபடி அரிசியும் அரைப்படி பருப்பும் உப்பு புளி மிளகும் பாக்கு வெற்றிலைக்கு நாலு காசும் திருவிழாக்கட்டளைக்குக் கம்பமேறித் துஜங்கட்டின ஊரிழந்தாரிக்கு ஒரு துப்பட்டியும் அந்தக் கைக்கொள்வருக்கு ஒரு விருந்தும் மண்டபக் கட்டளைக் கொரு விருந்தும் ஐந்து - பணம் நகரமும். துஜம் இறக்கும்போது கோயில் வாசலில் ஒரு விருந்தும் அந்த நாட்டாண்மைக்காரனுக் கொரு பச்சவடமும் நம்பிக் கொரு பச்சவடவம் நட்டுவனுக்கொரு பச்சவடமும் தேவதாசிக்கொரு கண்டாங்கிச்சேலையும் என்று நிகுதி செய்து கைக்கொள்வருக்கும் நம்பி நாகபாசத்தவருக்கும் காணி ஆதி காஞ்சீபுரம் சமய முதலிக்குள்பட்ட காணி அவர்களுக்கென்று ஆதி காஞ்சீபுரத்தில் ஜனம் மிகுத்துக் கைக்கொள்வர் நம்பி நாகபாசத்தவர் புவனம் எல்லாம் பரந்தது. பரந்தபடிக்கு இப்புபனத்தில் கட்டிய கோவிலெல்லாம் அவர்களுக்குச் சமய முதலிக்குள்பட்ட காணியென்று அந்தக் காணியாகிய கோவில் வாசலில் அவர்களுக்கு முன் சொன்ன வரலாறென்று மூவராஜாக்களும் சமய முதலி பூர்வீகச் செப்புப் பட்டயத்தில் எழுதிச் சேர்க்கச் சொன்னார்கள்.

பட்டயத்தில் பின் வரலாறு எழுதிச் சேர்த்தது

அவர்கள் சொன்னபடிக்குச் சமய முதலியும் ஆதி பூர்வச் செப்பேட்டுப் பட்டயத்தில் எழுதிச் சேர்த்தார் அவர் சேர்த்த பின்பு மூன்று ராஜாக்களும் கவறை வலேஞ்சியருக்குக் காணி ஆதி காஞ்சீபுரம் அந்தக் காஞ்சீபுரத்தில் சனமிகுத்து ஐம்பத்தாறு • தேச புவனமும் பரந்தது. பரந்தபடிக்கு ஐம்பத்தாறு தேச புவனங்களில் மூன்று ராஜாக்கள் கட்டிவைத்த பட்டிணங்களில் கவறை வலேஞ்சியருக்குச் சுங்கமில்லேயென்றும் அவர்களுக்கு அரண்மனே வாசல் தோட்டம் பட்டிணத்தில் செட்டிமையுமென்று செட்டுக்காரரென்று பெயருங்கொடுத்து நிருதிசெய்தபின்பு வேளாளருக்கு ஐம்பத்தாறு தேச புவனத்திலுள்பட்ட குடி உழவு குடியானதெல்லாம் உழவுமியும் இதுவெல்லாம் கச்சிவீர வேளாளராயனுக்குக் காணி வேளாளர் உழுதுமிகுக் கடமைக் கந்தாயம் சோழனீதி ஆறிலொன்றும் பாண்டியன்னீதி எட்டிலொன்றும் சேரன்னீதி பத்திலொன்றும் என்று அவர்களுக்கு நிருதி செய்து அவர்களுக்குப் பேர் நடாக்களென்று பேரும் கண்டு நிருதிசெய்த பின்பு கைக்கொள்வருக்குப் பேர்வரிசை முதலியென்றும் அவர்களுக்கு முதல்வன் கச்சிவீர காமாக்ஷிராய முதலியென்று கண்டபின்பு கவறை வலேஞ்சியருக்குச் செட்டுக்காரரென்று வரிசைப்பெயரும் அவர்களுக்கு முதல்வன் கச்சிவீர வரதராயரென்றும் கண்டபின்பு வேளாளருக்கு வரிசைப்பெயர் [1]நாடார்களென்றும் அவர்களுக்கு முதல்வன் கச்சிவீர ஏகாம்பராயனென்றும் கண்டு அந்த மூன்று பெயரும் ஆதிகாஞ்சீபுரம் மதுரை சமஸ்தானத்துக்குள்பட்ட ஐம்பத்தாறு தேசத்துக்கும் ஐம்பத்தாறு தேசப்பலருக்கும் முதல்வரென்று கண்டு இந்தப் புவனித்திலுள்ள பலருக்கும் விவரம் காண்க.

சாதிக் கட்டுப்பாடு

காளத்தி வேடர் 5 வகை

வேடன் வேட்டுவனுக்குக் காணி காளத்திபுரம். அந்தக் காளத்திபுரத்தில் வேடர் வெட்டுவர் பூவிலுவர் காவிலுவர் மாவிலுவர் இந்த ஐந்துவகைச் சாதி வேடர் கம்பளத்தவரும் காளத்திபுர நகரில் மிகுந்து தேசமெல்லாம் பரந்து கொடுவேறு பூமிகண்டு செடிவெட்டி ஊர் கட்டி வைத்தார்கள். ஊர் கட்டின இடம் அவர்களுக்குக் காணியென்றும் அவர்களுக்குப் பட்டயம் கொடுத்து அவர்களுக்கு வருகை பேர் வேடனுயக்களென்றும் வெட்டுவர் பூவிலுவர் காவிலுவர் மாவிலுவர் இவர்களுக்கு மண்ணடியாரென்று பெயரும் கொடுத்து வொக்கிலியர் கம்பளத்தவருக்குக் கோவர்த்தனகிரி நகரம் காணி அதிலவர்கள் சனமிகுத்துத் தேசமெல்லாம் பரந்து....லாச்சாபிக்குமேவு தண்ணீர் உள்ள வனத்தில் பசுபாசத் தாவுதலம் பார்த்துப் பட்டிபோட்டு

[1] நாட்டார்

ஊர் கட்டினவிடமே அவர்களுக்குக் காணியென்று பட்டயங்கொடுத்து அவர்களுக்கு வரிசைப்பேர் வொக்கிலியருக்கும் காப்பிலியருக்கும் கொல்லருக்கும் கொண்டி குமாட்டியருக்கும் உப்பிலியருக்கும் நாயக்கனென்று பேர் கொடுத்து அதிலுள்பட்ட யிடையருக்குக் கோனுனென்று வரிசைப்பேர் கொடுத்து அப்படிக் கம்பளத்தவருக்கு நிருதி செய்தபின்பு கண்மாளர் ஐந்து சாதிப் பஞ்சாளருக்கு மாந்தபுரி நகரமே காணி அதில் மிகுத்துத் தேசமெல்லாம் பரந்து பரந்தபடிக்கு இப்புவனத்தில் அவர்கள் கையில் 80 மூனைத்தொழில் கொழுமூனை வாள்மூனை உளிமூனை கொட்டுமூனை கொறடுமூனை இந்த 80 மூனைத் தொழிலுண்டாகிய விடமெல்லாம் விசுவபிரம்பஞ்சாக்ஷர ஐந்து சாதிக்கும் காணியென்று அவர்களுக்குப் பட்டயம் கொடுத்து அவர்களுக்கு வரிசைப் பெயர் ஆசாரியென்று பேரும் கொடுத்த பின்பு திருக்கணக்கருக்குத் திருவிடமருதூர் காணியென்றும் அவர்களும் அதில் மிகுந்து தேசமெல்லாம் பரந்தது. பரந்ததற்கு அவர்களுக்கு அரண்மனைவாசல் கணக்கு மணியம் பாரபத்தியம் அவர்களுக்கு என்றும் இவர்கள் தேசத்திலிருந்து தொழில் நடந்து வந்தால் அந்த ஊர் காணி யென்றும் இவர்களில்லாத ஊருக்கு அரண்மனை வாசல் கணகரு மணியம் பாரபத்தியம் அவர்கள் தொழில் செய்து நடத்தி வரச் சமய முதலிக்குள்பட்ட கைய்க்கொள்வருக்கு அவர் காணியென்றும் திருக்கணக்கருத்த ஊருக்குத் திருக்கணக்கருக்குக் காணி யென்றும் கண்டு அவர்களுக்கும் பட்டயங்கொடுத்து அவர்களுக்கு வரிசைப்பேர் திருக்கணக்குப் பிள்ளை யென்று பெயரும் கொடுத்து நிருதி செய்த பின்பு இப்படித் தொண்ணூற்றெட்டுச் சாதிக்கும் தேசத்தில் அவரவர் தொழில் முறமைக்கு அவரவருக்குக் காணியென்று அவரவர்களுக்குப் பட்டயமும் அவரவர் குலவரிசைப் பெயரும் கொடுத்து நிருதி செய்து மூவராஜாக்களும் இந்த விவரமெல்லாம் பூர்வீகச்செப்பேட்டிலே எழுதச் சொல்லி எழுதிச் சேர்த்த பின்பு மூன்று ராஜாக்களும் ஐம்பத்தாறு புவனத்திலுள்பட்ட தேவஸ்தலமும் தேவஸ்தலத்திற்கு விட்ட மான்யமும் சமய முதலி வசம் ஒப்பிவித்து சமய முதலிக்குள்பட்ட கைகொள்வரைத் தேவஸ்தானத்தின் கோயில் மணியங்கணக்குக் கச்சி ஏகாம்பர காமாட்சி முன்னிலையாக்க கைய்தட்டிப் பளிசாறி சமய முதலி வசம் கோவிலும் கோவிலுக்கு விட்ட மாண்யமும் ஒப்பிவைக்க ஒப்பித்த படிக்குச் சமய முதலியும் காமாட்சியம்மன் முன்னிலையாகக் கையேற்றுக் கொண்ட பின்பு மூவர்ராஜாக்களுமிந்தப் பூர்வீகமும் பட்டியி லெழுதிச் சேர்த்துப் பெட்டகத்தில் போட்டு மூடி முத்திரித்துத் தளவசில் போட்டு முத்திரிக்கச் சொன்னுர்கள். சொன்னபடிக்குச் சமய முதலியும் அப்படியே சாலி வாகன நாள் போன பின்பு மனுநீதி

ஒலிக்கியர் முதலியார்

பஞ்சாளர்

98 சாதி

சோழன் சேரன் பாண்டியன் இவர்கள் நாள் வரைக்கும் நடந்த விவரமெல்லாம் மூன்று ராசாக்கள் சொல்லக் கச்சிவீர மார்த்தாண்டராயச் சீரச்சிங்காதனக் கர்த்தராகிய அறுசமய முதலி ஆதி பூர்விகச் செப்பேட்டுப் பட்டயத்தில் எழுதிச் சேர்த்துப் பொற்பெட்டகத்தில் போட்டு முத்திரித்துக் காமாக்ஷி பாதத்தில் வைத்து மறு அபிஷேகம் நூறுயிரம் பொன் கனக அபிஷேகமாடிக் கந்த புஷ்ப தூப தீபம் பறமாறி சமய முதலி மனையாள் சோலையங்கிரியம்மாளைக் காமாட்சியம்மன் முன்னிறுத்திக் காமாட்சிக்கு ஆராதனை முடித்துச் சமய முதலியும் அவர் மனையாளும் காமாட்சி பாதத்தில் பணிந்து நமஸ்கரித்துக் கொண்டபின்பு சமய முதலி செப்பேட்டுப் பட்டயம் போட்டு முத்திரித்த பொற்பெட்டகத்தை எடுத்துககொண்டு பஞ்சமுகத் தீவட்டிகை வீரசிகண்டியும் வீரவாளும் கையுமாகப் பாதாள குகை புகுந்து பாதாள குகை ஏகாம்பர காமாட்சி பாதத்தில் பொட்டகத்தை வைத்துப் பாதாளகுகை ஏகாம்பரரையும் காமாட்சி அம்மனையும் கந்தபுஷ்ப தூப தீபத்துடன் அர்ச்சித்துக்கொண்டு பாதாளகுகை காமாட்சி அம்மனுக்கு உபசாரார்ச்சனை செய்து "தாயே காமாட்சியம்மே நாளது வரைக்கும் எந்நாளுமிந்நாள் போல என்வம்சத்தவர் வந்து உம்மைப் பணிந்து ஆதி பூர்வ செப்பேட்டுப் பட்டையம் கொடுவென்று கேட்டால் இன்றைக்கு அடியேனுக்குக் கொடுத்து ரட்சித்தாப்போலே கொடுத்து ரட்சித்து வரவேணுமென்று அம்மனுக்கு உபசாரார்ச்சனை செய்து அம்மனைப் பணிந்து நமஸ்கரித்துக் கொண்டு பாதாளகுகை விட்டு மேலே வந்து பாதாள தளவரிசுக் கதவு சாத்திவிகமுத்திரிக் கோளிஞலே தாளப் பூட்டி முந்திரித்துப் போட்டுக் காமாட்சி திருக்கோவிலுக்கு வந்து காமாட்சி அம்மனுக்குக் கந்த புட்ப தூப தீபம் பரிமாறி அம்மனைப் பணிந்து அந்தக் கட்டாரி வீரமுனை அலகிறக்கி வைத்துத் திருக்கோவில் கதவு தாளறைந்து சமய முதலியும் அவர் மனையாள் சோலையங்கிரி அம்மாளையும் கூட்டிக்கொண்டு முன்பந்திக் கனகசபை வாசலுக்கு வந்து நின்றுகொண்டு காமாட்சியம்மனுக்கும் கச்சியேகாம்பரருக்கும் அபிஷேகச் சிலவு முஸ்தேதிவகை எல்லாம் அழைப்பித்து உத்தமலிங்காசாரியர் கையில் கச்சி ஏகாம்பரர் காமாட்சி அம்மனுக்குப் புண்யாங்கம் பண்ணிவைத்து அபிஷேக தூப தீபாராதனை பூசை செய்வித்துச் சமய முதலியும் மூன்று இராசாக்களும் மற்றுள்ள பேருமாகக் கச்சி ஏகாம்பரரையும் காமாட்சி அம்மனையும் தரிசித்துக்கொண்டு உத்தமலிங்காசாரியர் கையில் தீர்த்தப்பிரசாதம் வாங்கிக்கொண்டு பின்பு முன்பு சமய முதலியைக் கொண்டு காமாட்சியம்மனுக்குக் கனகாபிஷேகம் ஆடிவித்து....ஆயிரம் பொன்னில் சமய முதலிக்கு நூறுயிரம் பொன்னும் அதில் நீக்கி நூறுயிரம் பொன்னில் உத்தமலிங்காசாரியருக்கு ஐம்பதினுயிரம் பொன்னும் நம்பி நாகபாசத்

பட்டயம் சேமித்து வைத்தது

தவருக்கு ஐம்பதினாயிரம் பொன்னுமாகப் பங்கிட்டுக்கொண்டு சமய முதலி தனக்கு வந்த நூறாயிரம் பொன்னும் எடுப்பித்துக்கொண்டு தன் மனையாள் சோலையங்கிரி அம்மாளும் தன் மகன் கச்சிவீர காமாட்சி முதலியையும் தனக்குள்பட்ட கார்யப்பேர்களையும் உத்தம லிங்காசாரியரையும் மூன்று ராஜாக்களையும் மற்றுள்ள பேர்களையும் வரவழைத்துக்கொண்டு தங்கள் சமயமண்டபத்திற்கு வந்தார்கள். வந்து சமய மண்டபத்தில் எல்லோருமிருந்துகொண்டு சமய முதலியும்

திருநாள் நடத்தியது

சுப்பிரமண்ய தேவருக்குத் திருநாள் கட்டளை முடிக்க வேண்டுமென்று திருநாள் கட்டளைச் சோடித்தபடி புஷ்பவிமானம் உண்டுசெய்து புஷ்பவிமானத்தின்மேல் சுப்பிரமண்ய சுவாமியை வைத்துக் காஞ்சீபுர வீதி மிறவணை வந்து வந்தபின்பு பார் (பரி) வேட்டையாக மண்டபத்தில் பின்பு இந்திர விமானம் உண்டுசெய்து அதன்மேல் சுவாமியை வைத்து வீதி மிரவணை வந்தபின்பு அலங்கார தரிசனமாக மண்டபத்தில் சாந்து சாத்தி [1]சத்தாவரணம் முடித்துச் சமய முதலிக்குத் தூதுனிற்கும் விடுவித்து வெற்றிச்சங்கு ஒற்றை மல்லாரி வெற்றிவீர மேளவாத்தியத்துடனே காஞ்சீபுர வீதி மிறவணை வந்தபின்பு சுவாமியை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு திருக்கம்ப மாநதிக்குப் போய் உத்தமலிங்காசாரியர் கைகொண்டு சுப்பிரமண்ய சுவாமிக்குத் திருக்காப்புக் கங்கணம் நெகிழ்த்து வைத்துச் சமய முதலி கைக்காப்புக கங்கணமும் திருக்கம்பை மாநதியில் விட்டுத் தீர்த்தமாடி வந்து உத்தமலிங்காசாரியர் ஸ்வாமிக்குத் திருமஞ்சனமாடிச் சமய முதலியையும் ஸ்நாநம் செய்து வரச் சொல்லிச் சமய முதலிக்குத் திருநீற்றுக் காப்புமிட்டுச் சுவாமிக்கு அபிஷேகம் முடித்து உத்தமலிங்காசாரியர் கந்தபுஷ்ப தூபதீபம் பரிமாறினபின்பு சமய முதலியும் மூன்று ராஜாக்களு(க்கு)ம் மற்றுள்ள பேரும் சுப்பிரமண்ய சுவாமியைத் தரிசித்துக்கொண்டார். கொண்டபின்பு சுவாமிக்குத் திருக்கம்ப மாநதியில் கதம்பத் திருமஞ்சனநீர் விளையாடிச் சுவாமியை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு காஞ்சீபுர வீதி மிறவணை வரும்போது சமய முதலிக்கு வீரசந்தனம் இட்டு வீரதண்டமாலை கழுத்தில் போட்டு முன் வீரவாகு தேவாபாவகமாக வீரமுஸ்தேதிசெய்து சுவாமிக்கு முன்விட்டுச் சுவாமியை நாலுவீதியும் சுற்றி மிறவணை வரும்போது பதினெண் மேளவாத்தியத்துடனே நாலு வீதியிலும் சுற்றி மிறவணை வரப் பலபேரும் திருமஞ்சன நீர் விளையாட அப்படி அலங்காரப் பாவகஞ்செய்து எல்லோரும் விளையாடி மிறவணை பண்ணிச் சமய மண்டபத்தில் சுவாமியை யிறக்கி வைத்து வைத்த பின்பு சமய முதலி உத்தமலிங்காசாரியரைக் கொண்டு சமயமண்டபத்திலிருக்கின்ற விகட சக்கர வீர செங்குந்த விநாயகருக்கும் சுப்பிரமண்ய சுவாமிக்கும் அபிஷேகம் முடிப்பித்து கந்தபுஷ்ப தூபதீபம் பரிமாறிச் சமய முதலி

[1] சமு சற்று

யும் மூன்று ராஜாக்களும் மற்றுள்ள பேரும் சுப்பிரமண்ய சுவாமியும் விக்கினேசுரரையும் தரிசித்துக்கொண்டார். கொண்ட பின்பு சமய முதலியும் மூன்று ராஜாக்களும் மற்றுள்ள பேரும் உத்தமலிங்காசாரிய கையில் தீர்த்தப்பிரசாதம் வாங்கிக் கொண்டார். அவர் வாங்கிக் கொண்ட பின்பு சமய முதலியும் சுப்பிரமண்ய சுவாமியை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு கச்சி ஏகாம்பரர் காமாட்சி அம்மன் சுற்றாலயத்திலிருக்கின்ற சுப்பிரமண்யர் திருக்கோயிலில் வைத்துச் சுப்பிரமண்ய சுவாமியைச் சமய முதலியும் மற்றுமுள்ள பேரும் தரிசித்துக் கொண்டு அதன் பின்பு சமய முதலியும் அவர்களுக்குள்பட்ட காரியப்பேருமாகச் சமய மண்டபத்திற்கு வந்து சமய மண்டபத்திலிருந்து கொண்டு சமய முதலியும் மூன்று ராஜாக்களுக்கும் உத்தமலிங்காசாரியருக்கும் நம்பி நாகபாசத்தவருக்கும் நாட்டுறவின் முறைக்கும் மற்றுள்ள பேருக்கும் சமய மண்டபத்தில் விருந்து படி அரிசி பாக்கு வெற்றிலை விசாரித்து அவரவர்க்கும் உடுகரை பச்சவடம் பாக்கு வெற்றிலை கொடுத்துப் பரிமள களப கஸ்தூரிகள் பூசிச் சமய முதலியும் காமாட்சி அம்மனுக்குக் கனகாபிஷேகம் ஆடிவைத்த நூறாயிரம் பொன் சமய முதலிக்கு வந்த அந்த நூறாயிரம் பொன்னும் தர்மதானம் கோதானம் வஸ்திரதானம் கன்யகாதானம் அன்னதானம் இப்படியாகிய தானதர்ம சிலவு வந்த நூறாயிரம் பொன்னையும் சிலவழித்துச் சமய முதலி எல்லோருக்கும் ஒப்புச்சொல்லி நிகுதிசெய்து மூன்று ராஜாக்களையும் மற்றுள்ள பேர்களையும் உத்தமலிங்காசாரியரையும் நம்பிநாசபாசத்தவரையும் நாட்டுறவின் முறைக் கைக்கொள்வரையும் கச்சி வரதராயனையும் கச்சிவீர வேளாளராயனையும் பதினெண்குடி வரிசையும் அழைத்துக் கொண்டு தன் மனையாள் சோலையங்கிரி அம்மாளும் தன்மகன் கச்சிவீர காமாட்சிவீர காமாட்சிராயனையும் தனக்குள்பட்ட கார்யப்பேர்களையும் வரவழைத்துக்கொண்டு காமாட்சியம்மன் கோயிலுக்குப்போய்க் கச்சி ஏகாம்பரர் காமாட்சி தரிசனமும் செய்து

எல்லாரும் தென்மதுரை விஜயம்

கொண்டு காமாட்சி துணையென்று காஞ்சீபுரநகர் கடந்து தென்மதுரைக்குப் போய் மீனாக்ஷி கனகசபையில் சமய முதலியும் மூன்று ராஜாக்களும் மற்றுள்ள பேருமாக மீனாக்ஷி கனகசபையில் சமய முதலியும் மூன்று ராஜாக்களும் மற்றுமுள்ள பேருமாக மீனாட்சி கனக சபை வாசலில் பாளைய மிறங்கி யிருக்கும்போது மூன்று ராஜாக்களும் சமய முதலியை அழைத்துச் "சமயமுதலீ இனிமேல் நீயும் மீனாக்ஷி தவசிலிருக்கின்ற ஆறுகால பொற்புடமும் செங்கோல் முத்திரியும் அழைப்பித்து எங்களுக்கு அதிகாரப்பட்ட மிறக்கி அதிகார முத்தேத்தி வகையெல்லாம் மீனாக்ஷி தளவசில் ஒப்பித்து எங்களைப் பரமாயுதவழிக்கு அனுப்பிவைக்க வேண்டும்"

என்று மூன்று ராஜாக்கள் சொல்ல அவர்கள் சொன்னபடிக்குச் சமய முதலியும் சம்மதித்துக்கொண்டுச் சமயமண்டபத்தை அலங்கார முஸ்தேத்தி செய்வித்து மீனாட்சி சொக்கர் சுற்றாலயத் திருக்கோவிலிருக்கின்ற சுப்பிரமண்ய சுவாமியை எடுத்தருளப்பண்ணி : சமயமண்டபத்தில் வைத்துக் காஞ்சீபுரத்தில் நடந்தபடியாய்ச் சுப்பிரமணிய சுவாமிக்குத் திருக்கல்யாணத் திருநாள் சோடித்து உத்தமலிங்காசாரியரைக் கொண்டு யாகசாலைக் கட்டளை ஆக....................நடப்பித்துச் சுவாமிக்குப் பொன் காப்புந் தரிப்பித்துச் சமய

சுப்பிரமணிய ருக்குத் திருநாள் நடத்தியது

முதலிக்குங் காப்புக்கங்கணம் கட்டிச் சமய முதலியை வீரபாகு தேவர் முகமாக வீரபராக்கிரம முகஞ்செய்து சமய முதலியும் அவர் மனையாள் சோலையங்கிரியம்மாளுமாக நடபாவாடை மேல் நடந்து வைகைநதிக்குப் போய்த் தீர்த்தமாடித் தேவபூசை அனுஷ்டானம் முடித்து உத்தமலிங்காசாரியரைக் கொண்டு நவமணிக்குடத்தில் சத்தி கும்பம் சிவகும்பம் தாபித்துக் கந்தபுஷ்பம் தூபதீபம் பரிமாறிச் சிவகளை வருத்தி சத்திகும்பத்தைச் சமய முதலி தலைமேல் வைத்துச் சிவகும்பத்தைச் சோலையங்கிரியம்மாள் தலைமேல் வைத்து உத்தமலிங்காசாரியர் அப்படி அணிமுறைப்படியாய்த் தாபித்த கும்பத்தையவர் தலைமேல் இரண்டு கும்பக்கலசத்தையும் எடுத்துவைத்தபின்பு சமய முதலியும் அவர் மனையாள் சோலையங்கிரியம்மாளும் நடபாவாடை மேல் நடந்துவரப் பதினெட்டு விருதும் முன்னே பிடித்துவரப் பதினெண் மேளவாத்திய முழக்கி வரச் சமய முதலியும் வீரவாளும் வீர கட்டாரி முனை அலகும் கையில் பிடித்து வீர முகமாக நடைபாவாடைமேல் நடந்துவர பதினெட்டு விருதும் முன்னேபிடித்துவரப் பதினெண் மேளவாத்தியம் முழக்கிவரச் சமய முதலியும் வீரவாளும் வீரகட்டாரி முனையலகும் கையில் பிடித்து வீர முகமாக நடைபாவாடை மேல் நடந்து மீனாக்ஷி சொக்கர் சுற்றாலயம் வலமாக வந்து மீனாக்ஷி திருக்கோயிலில் புகுந்து சமய முதலியும் அவர் மனையாள் சோலையங்கிரி அம்மாளுமாகச் சத்தி கும்ப சிவ கும்பத்தையிறக்கி மீனாக்ஷி பாதத்தில் வைத்துச் சமய முதலி மீனாக்ஷி அம்மனுக்குக் கனகாபிஷேகம் ஆராதனைக்கு நூறாயிரம் பொன்னும், அதனுள் பட்ட சிலவும் மூன்று ராஜாக்கள் கையில் வாங்கிக்கொண்டபின்பு சமய முதலியுமவர் மனைவி சோலையங்கிரியம்மாளுமாகக் கோவில் கதவு சாத்தித் தாள்பூட்டிக் கொண்டபின்பு சமய முதலி மனையாள் கொண்டு வந்த சிவகும்பத்தை மீனாக்ஷியம்மனுக்கு அபிஷேகமாடிவைத்து அதன்பின்பு நூறாயிரம் பொன்னையும் அம்மனுக்குக் கனகாபிஷேகமாடிவைத்து ஆடை துகிலும் அயந்தருவின் மாலையும் சாத்தித் தாபித்துக்கொண்டு பெண்சாதிக்கும் பத்தில் வீரகட்டாரி முனை அலகு நிறுத்தி நிறுத்தின பின்பு சமய முதலி மனையாளைச் சிவசத்தியாய்ப்

பாவித்து அந்த சிவசத்திக்கும் பத்தில் நிற்கின்ற கட்டாரி முனை அலகு முன்னே அவனை நிறுத்தி மீனாக்ஷி அம்மனுக்கு ஆராதனை சோடித்து அலகுக்கு ஆராதனைப்பூசை நிவேத்தியம் செய்து கந்த புஷ்ப தூபதீபம் பரிமாறிச் சமய முதலியும் அவர் மனையாளும் அம் மனைப் பணிந்து நமஸ்கரித்துக்கொண்டபின்பு சமய முதலியு மப்பப் போது பாதாளதளவசுவீக முத்திரைக்கோலினாலே பாதாள தளவசுத் தாள்திறந்து கதவை வாங்கிப் பாதாள குகையினுள்ளே பஞ்சமுகத் தீவட்டிகை வீரசேகண்டி வீரவாளும் கையுமாகப் போய் வீரமுகத்துடனே குகையினுள்ளே இறங்கிப்போய் இந்தப் பாதாள குகை வைகை மாநதியில் தீர்த்தமாடிவந்து பாதாள குகைச் சொக்கரையும் மீனாக்ஷி அம்மனுக்கும் கந்தபுஷ்பம் தூபதீபம் பரிமாறி அர்ச்சித்துக்கொண்டு அந்த ஆதி பூர்வீக ஆறுகால் பொற் பீடமும் அறுசமய முத்திரைச் செங்கோலுமிருக்கின்ற பொற் பொட்டகத்தையுமெடுத்துக்கொண்டு குகைவிட்டு மேலே வந்து திருக் கோயில் புகுந்து மீனாக்ஷியம்மன் பாதத்தில் பொற்பொட்டகத்தை வைத்து அம்மனுக்கு கந்தபுஷ்ப தூபதீபம் பரிமாறிச் சமய முதலியும் அவர் மனையாளும் மீனாக்ஷி அம்மனைப் பணிந்து நமஸ்கரித்துக்கொண்ட பின்பு சமய முதலியும் அந்தப் பொட்டகத்தைத் தாள்திறந்து கதவை வாங்கி ஆறுகால் பொற்பீடமும் அறுசமய முத்திரைச் செங்கோலும் எடுத்துக்கொண்டு கதவு தாள் திறந்து கதவை வாங்கிக் கோவில் முன் பந்திக் கனகசபை வாசலுக்கு வந்து முன்பந்தில் கனகசபையில் ஆறுகால் பீடம் சோடித்து அதன்மே லரியாசனம் விரித்து அதன் மேல் மூன்று ராஜாக்கள் அதிகார முஸ்தேத்தியாகிய துரை முத்திர மோதிரமும் துரைச்சரமும் மந்திரவாளும் ரத்தினமணிமுடியும் சூரிய காந்தப் பொற்படாகப் பச்சவடமும் அவர்கள் அதிகார முஸ்தேத்தி வகையாகியதெல்லாம் வாங்கி ஆறுகால் பீடத்தில் விரித்திருக்கின்ற அரியாசனத்தின் மேல் வைத்து வைத்த முஸ்த்தேதியுடனே சமய முதலி அந்த ஆறுகால் பொற்பீடத்தை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு போய் மீனாக்ஷியம்மன் பாதத்தில் வைத்து அம்மனுக்கு அபிஷேகம் முடித்துத் தூபதீபம் பரிமாறி அம்மன் பாதத்தில் ராஜாககள் அதிகாரம் ஒப்பித்தபடிக்கு மூன்று ராஜாக்களும் அவர்அவரதிகாரமும் சமயமுதலி வசம் ஒப்பிக்கச் சமய முதலியும் மீனாக்ஷியம்மன் பாதத்தில் ஒப்பிக்க மூன்று ராஜாக்கள் வெள்ளையானையும் பச்சைக்கல்யாணிபுரவியும் அம்மன் கனகசபை வாசலில் நிறுத்திச் சமய முதலி வசம் வெள்ளையானையும் பஞ்சகல்யா ணிப் புரவியும் ஒப்பிக்க ஒப்பித்தபடிக்குச் சமய முதலியும் வெள்ளை யானை பஞ்சகல்யாணிப்புரவியும் மீனாக்ஷியம்மன் வசம் ஒப்பித்துச் சமய முதலியும் கரிகால்சோழனுக்கும் சேரமாம்பெருமாளென்னும் சேரனுக்கும் மீனாக்ஷி சௌந்திர பாண்டியருக்கும் மீனாக்ஷி கனக

சபையில் பட்டமிறக்கி மீனாக்ஷி அம்மனுக்குக் கனக அபிஷேக முடித்து அம்மனுக்குப் பட்டாபிஷேகம் முடிசூட்டிச் சாம்பிராணி தூப கர்ப்பூர தீபமுடன் மாணிக்க தீபம் பரமாறிச் சமய முதலியும் மூன்று ராஜாக்களும் அம்மன் பாதத்தில் பணிந்து தரிசித்துக் கை கட்டி நின்றுகொண்டு அம்மனுக்கு உபசார அர்ச்சனை செய்தபின்பு மீனாக்ஷி அம்மே நீ கொடுத்த அதிகாரமும் செங்கோல் முத்திரை ஒப்பமும் வெள்ளையானை பஞ்சகல்யாணிப்புரவியும் உன் பாதத்தில் ஒப்பித்தோம். இனிமேல் எங்களுக்குப் பரமாயுத வழிக்குத் தடம் விட்டு உன் பாதாரவிந்தந் தந்து ரக்ஷிக்கவேண்டுமென்று கரிகால் சோழனும் சேரமான்பெருமாளென்னும் சேரனும் மீனாக்ஷி சௌந்திர பாண்டியனும் மீனாக்ஷி அம்மனுக்கு உபசார அர்ச்சனை செய்துகொண்டு அவரவர்கள் மூன்று ராஜாக்களும் அவரவர்கள் அதிகாரம் மீனாக்ஷி அம்மன் பாதத்தில் ஒப்பித்து இப்புறம் வந்தார். வந்தபின்பு மூன்று ராஜாக்களும் சமய முதலியை அழைத்து இனிமேல் நீ அரண்மனை அதிகார முஸ்தேதி எல்லாம் அம்மன் பாதத்தில் நாம் ஒப்பித்த அதிகாரம் முஸ்தேதி வகையெல்லாம் எடுத்துப் பொற்பட்டகத்தில் சேர்த்து சேர்த்த பின்பு உன்மகன் கச்சிவீர காமாட்சிராய முதலிக்கு அறுசமய முடிசூட்டி நீதிசெய்யென்று மூன்று ராஜாக்கள் சொன்னார்கள். மூன்று ராஜாக்கள் சொன்னபடிக்குச் சமய முதலியும் அப்படி மீனாக்ஷி அம்மன் பாதத்தில் இருக்கின்ற துரை மோதிரமும் துரைச்சரமும் மந்திர வாளும் அரியாசனமும் ரத்தினமுடியும் சூரியகாந்தப்பொற்படாகப் பச்சவடமும் இதுமுதலாகியதெல்லாம் எடுத்துப் பொற்பொட்டகத்தில் போட்டு மூடி ஒரு தாவில் வைத்து வைத்தபின்பு தன்னிடத்தில் இருக்கின்ற அறுசமய முத்திரை மோதிரமும் அறுசமயசரமும் வீரவாளும் வெண்டாமரைநூல் பட்டாசனமும் வெண்முத்து மணிகிரீடமும் மீனாட்சி பாதத்தில் ஒப்பித்து மீனாட்சி அம்மனைப் பணிந்துகொண்டு அதன்பின்பு சமய முதலி தன் மகன் கச்சிவீர காமாட்சிராயனுக்கு முடிசூட்டவேண்டுமென்று உத்தமலிங்காசாரரும் சமய முதலியும் வைகைமாநதிக்குப்போய் வெள்ளையானைமேல் திருமஞ்சனம்கொண்டு வந்து கச்சிவீர காமாக்ஷிராயனுக்குத் திருமஞ்சனமாடிவைத்துத் திருநீற்றுக் காப்புமிட்டு ஆடை ஆபரணதிகள் பூட்டி அலங்கரித்துச் சமய முதலி தன்மகனை வரவழைத்துப் போய் மீனாக்ஷி கனக சபையில் நிறுத்தி மீனாக்ஷி பாதத்தில் ஒப்பித்த ஆறு கால் பீடமெடுத்து வந்து அதன்மேல் வெண்டாமரை நூல் பட்டாசனம் விரித்துப் பட்டாசனத்தின்மேல் தன்மகன் கச்சிவீர காமாட்சிராயனை வந்திருக்கச் சொல்லி மீனாக்ஷி பாதத்தில் ஒப்பித்த சமய முஸ்தேதி வகை எல்லாம் எடுத்து வந்து வந்தபின்பு வெண்முத்து மணிக்கிரீடந் தரித்து வீரவாளுங் கையில் கொடுத்து அறுசமய சரமும் கழுத்தில் போட்டு அறுசமய

முத்திரை மோதிரமும் கையிலிட்டு மீனாட்சி கழுத்து அயர்தருவின் திரு மாலை வாங்கிக் காமாட்சிராயன் கையில் கொடுத்துப் பட்டாபிஷேகம் முடிசூட்டி கந்த புஷ்ப தூப தீபம் பரிமாறி மூன்று ராஜாக்களும் மற்றுள்ள பேரும் கச்சிவீர காமாட்சிராயனைத் தெரிசித்துக் கொண்டு மூன்று ராஜாக்களும் சமய முதலியும் உத்தமலிங்காசாரரும் அவரவருக்குள்பட்ட பேர்முன் மீனாக்ஷி சபையில் பேர் கொடுத்தபடி கச்சி

உரிமைகளும் பட்டமும் தந்தது

வீர காமாட்சிராயச் சீரச்சிங்காசனக் கர்த்தராகிய அறு சமய முதலியென்று அவருக்குப் பட்டத்துப்பேர் கொடுத்தார்கள். கொடுத்தபடிக்கு அவரும் அறுசமய அதிகாரமும் பேரும் வாங்கிக்கொண்டு பட்டாசனம் விட்டெழுந்திருந்து மீனாக்ஷி பாதத்தில் சமய முஸ்தேதி அதிகார வகை எல்லாம் வைத்துப் பணிந்து தரிசித்துக் கொண்டு எல்லாருக்கும் பாக்கு வெற்றிலை கொடுத்து எல்லாரையும் நமஸ்கரித்துக் கொண்டு நிற்கும்போது மூன்று ராஜாக்களும் கச்சிவீர காமாட்சிராயச் சீரச்சிங்காசனக் கர்த்தராகிய கச்சிவீரகாமாட்சிராய முதலியை அழைத்து நீ இனிமேல் உன்னுடைய அறுசமய அதிகார முஸ்தேதி எல்லாம் எடுத்துக்கொண்டு உன் கைக்கொண்டு உத்தமலிங்காசாரர் மகன் சிவஞான சைவாசாரருக்கு முடிசூட்டிக் குரு சமய முத்திரை கொடுத்து நிருதி செய்யென்று மூன்று ராஜாக்கள் சொல்ல சொன்னபடிக்குக் கச்சிவீர காமாட்சிவீர காமாட்சிராய அறு சமய முதலியும் அப்படியே உத்தமலிங்காசாரர் குருமுத்திரை வகையாகியதெல்லாம் வாங்கி மீனாக்ஷி பாதத்தில் ஒப்பித்து அவரும் தாமுமாக மீனாக்ஷி பாதத்தைப் பணிந்து தரிசித்துக்கொண்டு தரிசித்துக்கொண்ட பின்பு சமய முதலி வைகைமாநதிக்குப்போய் வெள்ளையானைமேல் திருமஞ்சனம் கொண்டுவந்து உத்தமலிங்காசாரியர் மகன் சிவஞான சைவாசாரருக்குத் திருமஞ்சனமாடிவித்துத் திருநீற்றுக் காப்புமிட்டு ஆடை ஆபரணாதிகள் அலங்கரித்துச் சமயமுதலி சிவஞான சைவாசாரியரை வரவழைத்துக் கொண்டுபோய் மீனாக்ஷி கனக சபையில் நிறுத்தி மீனாக்ஷி பாதத்தில் குருமுத்திரை யொப்பித்த முஸ்தேதி வகை எல்லாம் எடுத்துவந்து ஆறுகால் பொற்பீடத்தின் மேல் வெண்புலித்தோலாசனம் விரித்து அதன்மேல் சிவஞான சைவாசாரரை இருத்தி அவர் சிரசில் ருத்திராக்ஷ கிரீடந் தரித்துச் சிவமாலை கழுத்தில் போட்டுக் கேடய வாளும் கையில் கொடுத்துக் குருமுத்திரை மோதிரமும் கையிலிட்டு மீனாக்ஷி கழுத்தில் தரித்து அயர்ந்தருவின் திருமாலை வாங்கி அவர் கழுத்தில் போட்டு மீனாக்ஷி பாதத்தில் ஒப்பித்த குருசமய முத்திரைச் செங்கோல் முத்திரை ஒப்பமும் கொடுத்துச் சமய முதலி அவருக்குப் பேர் கொடுத்தபடி பட்டத்துப்பேர் உத்தமலிங்காசாரரென்று பேரும்

கொடுத்துக் கந்த புஷ்ப தூப தீபத்துடனே உத்தமலிங்காசாரரைத் தரிசித்துக்கொண்ட பின்பு மூன்று ராஜாக்களும் மற்றுள்ளபேருமாக வந்து உத்தமலிங்காசாரரைத் தரிசித்துக்கொண்டபின்பு சமய முதலி யும் மூன்று ராஜாக்களும் மற்றுள்ளபேருமாக உத்தமலிங்காசார் கையில் குருப்பிரசாதம் வாங்கிக்கொண்ட பின்பு உத்தமலிங்காசாரிய

மதுரையில் பெட்டகம் வைத்தது

ரும் வெண்புலியாசனம் விட்டெழுந்திருந்து தனமுஸ் தேதி வகை எல்லாம் மீனாக்ஷி பாதத்தில் வைத்துப் பணிந்து எழுந்த பின்பு சமய முதலி தன் மகன் கச்சி வீர காமாட்சிராயனுக்கு முடிசூட்டி உத்தமலிங்காசார் மகனுக்கு முடிசூட்டி நிருதி செய்தபின்பு ராஜாக்கள் அதிகார முஸ் தேதி வகையள் வாங்கிப் பொற்பொட்டகத்தில் போட்ட பொட்டகத் தில் ஆறுகால் பீடமும் அறுசமய முத்திரிச்செங்கோலும் வெண்டா மரைநூல்பட்டாசனமும் வெண்முத்து மணிக்கிரீடமும் வெண்புலித் தோலாசனமும் ருத்திராட்சகிரீடமும் இது முதலாகியதெல்லாம் பொற்பெட்டகத்தில் போட்டு மூடிமுத்திரித்து மீனாக்ஷி அம்மன் பாதத் தில் வைத்து முன்னடந்தபடியாய் மீனாக்ஷியம்மனுக்குக் கனகாபிஷே கம் முடிக்கவேணுமென்று மூன்று ராஜாககள் கையில் நூறாயிரம் பொன்னும் ஆராதனைச்சிலவும் வாங்கிக்கொண்டு சமய முதலி யும் அவர் மனையாளுமாகக் கோவிலுக்குள் புகுந்து கோவில் கதவு சாத்தித் தாள் பூட்டிக்கொண்டு அம்மனுக்குக் கனக அபிஷேக முடித்து ஆராதனை முடித்துத் தன் மனையாள் சோலையங்கிரியம்மாளைத் தேவி ஆராதனை முகத்துக்கு எதிர்நிறுத்தி மீனாக்ஷி அம்ம னுக்கும் வீரமுனை கட்டாரி அலகுக்கும் பூசை நைவேத்தியம் பண்ணிக் கந்த புஷ்ப தூப தீபத்துடன் சமய முதலியும் அவர் மனை யாளும் அம்மனைப் பணிந்து தரிசித்துக்கொண்டு தரிசித்துக்கொண்ட பின்பு சமய முதலி அறுசமய முத்திரைச் செங்கோல் போட்டு முத்தி ரித்துப் பொற் பொட்டகத்தையும் எடுத்துக்கொண்டு பஞ்சமுகத் தீவெட்டிகை வீரசேகண்டி வீரவாளும் கையுமாகப் பாதாள குகை புகுந்து பாதாள குகையினுள்ளே இருக்கின்ற பாதாளகுகை புகுந்து சொக்கர் மீனாக்ஷி பாதத்தில் பொற் பெட்டகத்தை வைத்து அந்தப் பாதாள குகைச் சொக்கநாதர் மீனாட்சிக்கும் கந்த புஷ்ப தூப தீபம் பரமாறி பாதாளகுகைச் சொக்கர் மீனாக்ஷி அம்மனைப் பணிந்து தரி சித்துக் கொண்ட பின்பு சமய முதலி பாதாளகுகைச் சொக்கர் மீனாக்ஷி பாதத்தில் பொற் பெட்டகம் ஒப்பித்து உபசாரார்ச்சனை செய்தபடி. மீனாக்ஷி அம்மே நாளது வரைக்கும் என் குலத்தில் இன்னுமொரு நாளினும் இன்னுமொருவர் வந்து என்னைப்போல உம்மைப் பணிந்து அர்ச்சனை செய்து அறுசமய முத்திரைச் செங்கோல் பெட்டகம் கொடுவென்று கேட்டால் நீயுமன்றைக்கு அடியேனுக்குக் கொடுத்

தாப் போலே கொடுத்து ரக்ஷிக்கவேண்டுமென்று அம்மனைப் பணிந்து கொண்டு சமய முதலி குகைவிட்டு மேலே வந்து பாதாள தளவிசுக் கதவை சாத்திவிக முத்திரைக் கோலினாலே திருகணித்தாள் பூட்டி முத்திரித்துப் போட்டுத் திருக்கோவிலுக்கு வந்து மீனாக்ஷி அம்மனுக்கு கந்த புஷ்ப தூப தீபம் பரமாறி அம்மனைப் பணிந்து நமஸ்கரித்துக் கொண்டு அந்தக் கட்டாரி வீரமுனை அலகை இறக்கி அம்மன் பாதத் தில் வைத்து நமஸ்கரித்து எடுத்துக்கொண்டு வீரவாளும் வீரமுத்திரைக் கோலும் எடுத்துக்கொண்டு திருக்கோவில் கதவுதாள் திறந்து கதவை வாங்கிச் சமய முதலியும் அவர் மனையாளுமாக முன்பந்திக் கனகசபை வாசலுக்கு வந்தார். கனகசபை வாசலுக்கு வந்தபின்பு சமய முதலி கனகசபை வாசலில் இருந்துகொண்டு மீனாக்ஷி சொக்கருக்கு அபி ஷேக சோடிச்சு முஸ்த்தேதி வகை எல்லாம் தருவித்து உத்தம லிங்காசார் கையில் கொடுத்து உத்தமலிங்காசாரைக் கொண்டு மீனாக்ஷி சொகருக்கு புண்யாங்கம் பண்ணி வைத்து அபிஷேக தீபாராதனை முடிப்பித்துச் சமய முதலியும் மூன்று ராஜாக்களும் மற்றுள்ள பேரும் மீனாக்ஷியம்மனைப் பணிந்து கொண்டு மீனாக்ஷி சொக்கர் தீர்த்தப் பிரசாதம் உத்தமலிங்காசார் கையில் வாங்கிக் கொண்டு அதன் பின்பு முன் சமய முதலி கைக்கொண்டு மீனாக்ஷி அம்மனுக்கு கனகாபிஷேகமாடி வைத்த இருநூறுயிரம் பொன்னில் சமய முதலிக்கு நூறுயிரம் பொன்னும் அதில் நீக்கு நூறுயிரம் பொன்னில் உத்தமலிங்காசாரி யருக்கு ஐம்பதினாயிரம் பொன்னுமாகத் தீர்த்துப் பங்கு கொடுத்துச் சமய முதலி கடமை ஐம்பதினாயிரம் பொன்னும் நம்பி நாகபாசத்தவருக்கு என்று தீர்த்துக் கொடுத்துச் சமய முதலி தன் பங்குக்கு வந்த நூறுயிரம் பொன்னும் சமய மண்டபத்திற்கு எடுத்துக் கொண்டு மூன்று ராஜாக்களையும் மற்றுமுள்ள பேர்களையும் உத்தமலிங்காசாரியரையும் சமய முதலி மனையாள் சோலையங்கிரியம் மாளையும் அவர்மகன் கச்சி வீர காமாட்சிராயச் சீரசிங்காசனக் கர்த்த ராகிய அறுசமய முதலியையும் மற்றுள்ள பேர்களையும் வரவழைத்துக் கொண்டு தங்கள் சமய மண்டபத்திற்கு வந்தார். வந்து சமயமண்ட பத்தில் எல்லோருமிருக்கும் போது சமய முதலியும் சுப்பிரமண்ய தேவருக்கு திருநாள் கட்டளை சோடித்துப் புஷ்ப விமானம் உண்டு செய்து அந்தப் புஷ்ப விமானத்தின் மேல் சுப்பிரமண்ய சுவாமியை வைத்து தென் மதுரை வீதி மிரவணை வந்த பின்பு பாரிவேட்டையாகமம் நடத்தி நடத்தின பின்பு இந்திர விமானம் உண்டு செய்து அதன் மேல் சுவாமியை வைத்து மதுரை வீதி மிறவணை வந்து வந்த பின்பு அலங்காரத் தரிசனம் ஆகமம் நடத்திச் சாந்து சாத்தி சத்தாபரண முடித்துச் சமய முதலிக்குத் தூது நிறத்தம் விடுவித்து வெற்றிச்சங்கு ஒற்றைமல்லாரி வெற்றி

காணிக்கை பகிர்ந்து கொடுத்தது

திருவிழா

வீரமேளவாத்தியத்துடனே தென்மதுரை வீதி மிரவணை வந்து வந்த பின்பு சுப்பிரமண்ய சுவாமியை எழுந்தருளப்பண்ணிக்கொண்டு வைகைமாநதிக்குப்போய் உத்தமலிங்காசாரரைக் கொண்டு சுப்பிரமண்ய ஸ்வாமிக்கும் சமய முதலிக்கும் திருக்காப்புக் கங்கணம் விளப்பிவைத்து திருக்காப்புக் கங்கணமும் வைகைமாநதியில் விட்டுச் சமய முதலி தீர்த்த மாடி வந்த பின்பு உத்தமலிங்காசார் சுவாமிக்குத் திருமஞ்சனமாடித் திருமாலை அந்தருவின் மாலை சூட்டிச் சமய முதலிக்கும் திருநீற்றுக்காப்பு மிட்டு வீர சந்தண மிடுவித்து வீர தண்டைமாலை சூட்டிச் சுப்பிரமண்ய சுவாமிக்கு உத்தமலிங்காசாரர் அபிஷேகமும்'முடித்துக் கந்த புஷ்ப தூப தீபம் பரிமாறின பின்பு சமய முதலியும் மூன்று ராஜாக்களும் மற்றுள்ள பேரும் சுப்பிரமண்ய சுவாமியைத் தரிசித்துக் கொண்டார். தரிசித்துக் கொண்ட பின்பு சுவாமிக்கு வைகைமா நதியில் .கதம்பத்திருமஞ்சனம் நீர் விளையாடி எழுந்தருளப் பண்ணிக் கொண்டு மதுரை வீதி மிரவணை வரும்போது சமய முதலிக்கு வீரசந்தணமிட்டு வீர தண்டைமாலை கழுத்தில் போட்டு வீரவாளும் கையில் கொடுத்து 'வீரபாகு தேவர் பாவகமாக வீரமுஸ்த் தேதி செய்து (பின்பு) சுவாமிக்கு முன்னே நடந்து வரச் சுவாமியை நாலு வீதியும் சுற்றி மிறவணை வரும்போது பதினெட்டு மேள வாத்தியமும் முழங்க நாகபாசத்தவர் நடன சங்கீத ராகம் பாடி யாடி வர நம்பி தானீகர் சாம்பிராணி தூபமுடன் கற்பூர தீபம் பரிமாறிப் பொன்மாரி புஷ்பமாறி பொழிந்து வரப் பலபேரும் திருமஞ்சன நீர் விளையாடி வர அப்படி அலங்காரப் பாவகமாக எல்லோரும் விளையாடி மிரவணை பண்ணிச் சமயமண்டபத்திற்கு வந்தார். சமயமண்டபத்திற்கு வந்து சுவாமியை இறக்கி வைத்து வைத்த பின்பு சமய முதலியும் உத்தமலிங்காசாரர் கைய்கொண்டு சமய மண்டபத்தில் இருக்கின்ற அசுரர் சங்கார வீரசெங்குந்த வினயகருக்கும் சுப்பிரமண்ய சுவாமிக்கும் அபிஷேக தூப தீபாராதனை முடிப்பித்துச் சமய முதலியும் மூன்று ராஜாக்களும் மற்றுள்ள பேருமாகச் சுப்பிரமண்ய சுவாமியும் விக்கினேசுரரையும் தரிசித்துக் கொண்டார். தரிசித்துக் கொண்ட பின்பு சமய முதலியும் மூன்று ராஜாக்களும் உத்தம லிங்காசார் கையில் தீர்த்தப் பிரசாதம் வாங்கிக் கொண்டார். வாங்கிக் கொண்ட பின்பு சமய முதலியும் சுப்பிரமண்ய சுவாமியை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு மீனாக்ஷி சொக்கர் சுற்றாலயத்தி லிருக்கின்ற சுப்பிரமண்யத் திருக்கோயில் சுப்பிரமண்ய சுவாமியை வைத்துச் சுப்பிரமண்ய சுவாமியைச் சமய முதலியும் மூன்று ராஜாக்களும் மற்றுள்ள பேரும் தரிசித்து நமஸ்கரித்துக் கொண்டு சமய முதலியும் மூன்று ராஜாக்களும் மற்றுள்ள பேருமாகச் சமய மண்டபத்திற்கு வந்து சமய மண்டபத்திலிருந்து கொண்டு இருக்கும்போது சமய முதலி மூன்று ராஜாக்களுக்கும் உத்தம

லிங்காசாரருக்கும் நம்பி நாகபாசத்தவருக்கும் நாட்டுறவின் முறைக் கைக்கொள்வருக்கும் மற்றுள்ள பேருக்கும் சமய மண்டபத்தில் விருந்து படி அரிசி விசாரித்து மூவரவர்க்கும் உடுகரைப் பச்சவடம் பாக்கு வெற்றிலை கொடுத்துப் பரிமள களபகஸ்தூரிகள் பூசி சமய முதலியும் மீனாக்ஷி அம்மனுக்குக் கனக அபிஷேகமாடி வைத்து அதில் வந்த நூறாயிரம் பொன் சமய முதலிக்கு வந்த நூறாயிரம் பொன்னும் தர்ம தானம் கோதானம் வஸ்திரதானம் கன்னிகாதானம் அன்னதானம் இப்படியாகிய தானதர்மச் சிலவு வந்த நூறாயிரம் பொன்னையும் செலவழித்துச் சமய முதலி எல்லோ ருக்கும் ஒப்புச் சொல்லி நிருதி செய்து மூன்று ராஜாக்களையும் மற்றுள்ள பேர்களையும் உத்தமலிங்காசாரியரையும் நம்பி நாகபாசத் தவரையும் நாட்டுறவின் முறைக்கைக்கொள்வரையும் கச்சி வரத ராயனையும் கச்சி வீரவேளாளராயனையும் பதினெண்சாதிக் குடிவரி சையும் அழைத்துக்கொண்டு தன் மனையாள் சோலையங்கிரி அம்மா ளும் தன்மகன் கச்சி வீர காமாட்சிராய முதலியையும் தனக்குள் பட்ட காரியப்பேர்களையும் வரவழைத்துக் கொண்டு மீனாக்ஷி அம்மன் கோவிலுக்குப் போய் மீனாக்ஷிஅம்மன் சொக்கநாதரையும் மற்றுள்ள தேவதைகளையும் எல்லோரும் தரிசனம் செய்து கொண்டு காஞ்சீபுரத் திற்கு வந்து கச்சி ஏகாம்பரர் கமாட்சி அம்மனுக்கும் மற்றுள்ள தேவதைகளுக்கும் அபிஷேக தூபதீபாரா தனை முடிப்பித்து எல்லோரும் தரிசித்துக்கொண்டு கச்சி ஏகாம்பர காமாட்சி ஸன்னிதிவாசலில் மூன்று ராஜாக்களும் கச்சி வீர காமாட்சிராயச் சீரச்சிங்காதனக் கர்த் தராகிய சமய முதலியும் சடையப்பன் கஸ்தூரிரங்கப்ப செட்டியும் மற்றுள்ள கார்யப்பேர் சகலரும் இருந்து கொண்டு இருக்கும்போது

காஞ்சி திரும்பிச் செல்லல்

மூன்று ராஜாக்களில் சேரமான் பெருமாளென்னும் சேரன் தன் முன்னறிவினாலே தெளியப் பார்த்து "இனிமேல் துலுக்கான் மாமூது ராஜ்யத்திற் கெல்லாம் துலுக்க ராட்சதர் அதிகாரத்திற்கு வருவாரென்றும் கச்சிக் காமாட்சி காசியில் விசாலாட்சி மதுரை மீனாக்ஷி இந்த மூவராட்சியாகிய ஆட்சி தேவதைகளும் அவரவரிருந்த திருக்கோயில் திரு மாளிகை விட்டெழுந்தருளி வலசுபோய் விடுவார்கள். அதுவுமல்லாமல் அறுபத்தாறு தேசத்தில் அரிய தலந்தோறும் திருக்கோயில் திருமாளிகையிலிருக்கின்ற விக்கிரகங்களெல்லாம் எழுந்தருளிக் காடுதோறும் வலசு போய் விடுவார்கள். மும்மு சமய முதலி சடையப்பன் கஸ்தூரி ரங்கப்பன் இந்த வகைப் பேர்களெல்லாம் அவர்களெப்பொழுதும் இருந்த நாடு தேசம் விட்டுப் பிறநாடு பிறதேசத்தில் வலசு போய் விடுவார்கள். தேசமெல்லாம்

பின் வருவதைச் சேரன்முன் அறிவித்தல்

துருக்கர் வருகை: அதனால் நிலைமை மாறுவது

அவரவர்களிருந்த தாவில் அவரவர்களிருக்க மாட்டாமல் அரண்டு கலேந்து அமளி குமளியாய் மெத்த அவதிப்பட்டுப்போய்விடும். அப்படி ராஜ்யமெல்லாம் அவதிப்பட்டுத் தத்தளித்துக் கரை காணுக் கப்பல் போல் நட்டாற்றில் கோரை போல தத்தளித்து அலேந்து போகும். இந்தத் துலுக்காளும் வருகிற நாள் உப வருஷம் முதலாக ராஜ்ய பரிபாரத்திற்கு அதிகார கர்த்தாவாக வருவார்கள். அவர்கள் வந்து அவன் வம்சபாரம்பரிக்கையாய் ஐந்து தலேமுறை அவன் வந்த நாள் முதலாக முன்னூற்றறுபது வருஷம் ராஜ்ய பரிபாரம் செய்வார்கள். அவர்கள் செய்வதற்குள் ராஜ்யமெல்லாம் ஒரு குடையில் கட்டி மட்டடக்குவார்கள். தேசத்திலுள்ள ஜனுகளுக்கெல்லாம் ஆண் பெண் இரண்டு சாதிக்கும் ஒரு சீலே உடுக்கக் கொடுப்பார்கள். அதுவுமல்லாமல் தேசமெல்லாம் சமண மதம் முக்யமாகும். சிவமதம் விஷ்ணுமதம் ஒடுங்கும். பஞ்சாலயமும் பூசை முட்டித் தீபமற்று இருளடைந்து போகும். தேசத்திலுள்ள ஆலயந்தோறும் திருக் கோபுர வாசலில் குதிரைக் கட்டிவைப்பான். தேசமெல்லாம் துலுக்கருக்கும் புலக்காசு [1]மாலவாருக்கும் பள்ளளருக்கும் பரம் பருக்கும் மறவர் குறவருக்கும் இப்படி இந்த வகை கீழ் சாதி பேருகளுக்கெல்லாம் கீழ்மேல் அறியாமல் அதிகாரம் கொடுப்பான். இந்தப் பஞ்சாலேயம் முப்பத்திரண்டறங்களேயும் பஞ்ச நீதி அணி முறைமையும் அழித்து வல்லடியும் வழியில் பறியும் முட்டுக்கொள் முகவழியும் முத்தண்டம் பிரம்படியும் அடிப்பார்கள். அதுவுமல்லாமல் தேசமெல்லாம் கொள்ளே சூறையிட்டு ஆண் சிறையும் பெண் சிறையும் பிடித்து அவமரியாதை பங்கப் பிழை செய்விப்பார்கள். அதுவுமல்லாமல் பசுவுடனே ஆடு எருமை உள்வதெல்லாம் உத்தண்டக் கொள்ளேக் கொள்ளேயாய்ப். பிடித்து உயிரோடு கழுத்தறுத்துப் பிப்பார்கள். அதுவுமல்லாமல் பதிவ்ரதைப் பெண்களேப் பங்கப் பிழை செய்விப்பார். சதுர் வேதப் பிராமணர்களே மதுமாம்சம் தின்னச் சொல்லி நீசப்புலே வேஷம் செய்விப்பார். இப்படியெல்லாம் இனிமேல்பட்டுத் தேசத்தில் அதர்மமும் ஆங்காரத் துர்மார்க்கமும் செய்து நடப்பார்கள். அவர்களப்படி மனுநீதி இல்லாமல் அவநீதியாய் நடக்கிற படியினுலே தேசமெல்லாம் மழை மறுத்து விளேவு கெட்டு அபகாலமாகி தேசத்திலுள்ள ஜனுகளெல்லாம் பஞ்சக்கேடும் படைக்கேடுனுலே செத்திறந்து தேசமெல்லாம் அழிந்து காடு செடி வனம் மூடி முன் சாலிவாகன நாள் போல தேசமெல்லாம் இருள் மூடிப்போகும்.'' என்று சேரமான் பெருமாளென்னும் சேரன் முன்னறிவினுலே பார்த்துச் சொல்லக் கரிகால் சோழன் மீனுக்ஷி சௌந்தர பாண்டியன் சமய முதலி சடையப்பன் கஸ்தூரி ரங்கப்ப செட்டி மற்றுள்ள காரியப்பேர் குடிவரிசை

[1] மால—பறையர் (தெலுங்கு).

சனங்களும் எல்லோரும் கேட்டு அவரவர்கள் மனதில் வெகு துக்கமாகி கண் கலங்கி அழுது அங்கலாய்ச்சு(த்து) இனிமேல் நாங்கள் இந்த மூன்று ராஜாககள் துரைத்தனமும் மூன்று ராஜாக்கள் நீதியும் மூன்று ராஜாக்கள் பொறுமையும் மூன்று ராஜாக்கள் தான தருமம் பல உபகாரமும் மூன்று ராஜாக்கள் அன்ன மடம் தண்ணீர்ப்பந்தல் சாலைத்தோப்பு மாவடி பூங்காவனங்கள் கோவில் குளங்கள் தேர் தெருவுகள் பிருமணியுள்ள காம் வரிசை மானியம் பட்டண புலவர் கூத்தாடி வைத்தியர் சாஸ்த்திரிகள் தவயோகிகள் சன்னியாசிகள் அதிதி பரதேசிகள் கூனர் . குருடர் குறைக்கால் முடவர் இவர்களுக்கெல்லாம் மூன்று ராஜாக்கள் போல் வரிசை மானியம் விட்டு மனுநீதி கொண்டு முன் வருகிற சங்கதி சொல்லிக் காப்பாற்றுகிற துரையைப் போல நாம் இனிமேல் இந்தப் புவனத்தில் என்றைக்குக் காண்போ மென்று சகல ஜனங்களும் அழுது அங்கலாய்க்கச் சேரமாம் பெருமா ளென்னும் சேரன் ஜனங்கள் துயரத்தைப் பார்த்து இன்னும் முன் னறிவினாலே பார்த்துச் சொல்வார். இந்த துளுக்காணம் உப வருஷம் முதலாக ராஜ்ய பரிபாரத்திற்கு அதிகார கர்த்தாவாக வந்து அவன் வம்ச பாரம்பரிக்கையாய் ஐந்து தலைமுறை அவன் வந்தநாள் முதலாக முன்னூற்றறுபது வருஷம் ராஜ்யபரிபாரம் செய்வார்கள். அவர்கள் இப்படி துஷ்டநிக்கிரகங்கள் நடப்பிப்பார்கள். ஐம்பத் தாறு தேச ராஜ்யமெல்லாம் மெத்த இருளடைந்துபோகும். போன படியினாலே இப்புவனத்திலுள்பட்ட தவயோகிகள் சிவயோகிகள் இப் படி இருக்கும் மகாவிபோகியள் எல்லாம் ராக்ஷஸத் துருக்கன் அறி யாத காடு செடி வனாந்தரங்களில் சேர்ந்து அதில் அரிய திருமலைச் சார்பு குகைவாசங்களிலிருந்துகொண்டு அரிய தபசுகளைச் செய்து விஷ்ணுவிற்கு முறை செய்வார்கள். அவர்கள் செய்த முறையை விஷ்ணுவும் தமது திருச்செவியில் கேட்டுச் சித்தமிரங்கி உலகத்தை ரக்ஷிக்கவேண்டி ஆதிவஸ்துவாகிய ஸதாசிவனுக்கு அவர் முறை செய்வார்கள். அவர்கள் செய்த முறையைச் சதாசிவன் தமது திருச் செவியில் கேட்டுச் சித்தமிரங்கி விஷ்ணுவையும் விஷ்ணு சகாயத்தில் வாழ்ந்திருக்கின்ற உலகத்தையும் ரக்ஷிக்கவேண்டி தமது திரு உளத் தில் நியமித்து இந்த ராக்ஷஸ துருக்கனுக்கு இத்தனை துஷ்டநிக்கிரக மென்னவென்று அவர் சித்தத்தில் வெகு கோபம் பிரவேசித்து அந் தத் துருக்க ராக்ஷதரை முன் சாலிவாகன போசன் கையில் சங்கார வதைப்பட்டு உயிரிறந்துபோய் தேவ உலகில் சேர்ந்திருக்கின்ற விக்ர மார்க்கனையும் அவன் கீழ் ப்ரதானியாயிருந்த பட்டியையும் பூவுலகுக்கு அனுப்பிவைத்து பூவுலகில் அவர்கள் கைக்கொண்டு துலுக்கராக்ஷத ரைச் சங்காரவதை செய்து அவர்களை மட்டடக்கி வைத்து அந்த விக் கிரமார்க்கன் பட்டி முகாந்தரத்தில் ஐம்பத்தாறு தேச ராஜ்யத்தை

யும் ரட்சிக்கவேண்டுமென்று சிவன் சித்தத்தில் நியமித்து நந்தி கணநாதரைத் தேவுலகுக்கு அனுப்பி வைத்து பட்டி விக்ரமார்க்கனையும் தம்மிடத்திற்கழைத்துவரச்சொல்லி நந்தி கின்னுதரையேவ நந்தி கணநாதரும் அதே முறைக்குத் தேவுலகுக்குப் போய் தேவுலகில் தேவேந்திர மகாராயன் சமூக வாசலில் காத்திருக்கின்ற பட்டி விக்கிரமார்க்கனையும் அழைத்துக்கொண்டு வந்து சிவன் சமூக முகவாசலில் விட்டு நந்தி கின்னுதராவர்கள் வந்திருக்கின்ற செய்தி சிவனுக்கு அறிக்கை செய்வார்கள். அவர்கள் அறிக்கை செய்தபடிக்குச் சிவனும் நந்தி கேசுரனை விட்டு அவர்களைத் தம்மிடத்திற்கு அழைப்பிக்க அவரழைப்பித்தபடிக்கு பட்டி விக்ரமார்க்கனும் வந்து சிவனைத் தரிசித்து இரு சரணம் தோளும் சரணம் செய்து கை கட்டி வாய் புதைத்து ஒரு பாகத்தில் ஒதுங்கி நிற்பார்கள். ஒதுங்கி அங்கிசாரப் பயபக்தியாய் நிற்கின்ற விக்கிரமார்க்கனைப் பார்த்து நீ போய் பூவுலகில் ராயவேலூர் க்ஷத்திரியர்பாடியிலே வசிஷ்ட முனி பிந்து வழியால் க்ஷத்திரியப்பெண் வயிற்றில் கர்ப்போத்பத்தியாய் காராம்பசுப்பட்டியில் பிறந்து நீ பிறக்கவே உன்னைப் பெற்றதாய் மரிப்பாள். அவள் மரித்தபடிக்கு காராவின் முலையுண்டு வளர்ந்து வீரவஸந்தராயரென்று பேரும் பிரக்யாதியாய் ஆனபின்பு உன்னை முன் சங்காரவதை செய்த சாலிவாகன போசன் சமணராட்சன் இப்புவனத்தில் நரராட்சதத் துலுக்கமுகில் "பாக்ஷா"வாய் பிறந்து ராஜ்யத்தை நிக்கிரகவதைசெய்கிறான். நீ இந்தப் பாக்ஷாவை சங்காரவதை செய்து உலகத்தை ரக்ஷித்து ராஜநீதி தவறுமல் மனுநீதியுடனே செங்கோல் தழைத்தோங்க உம் வம்சபாரம் பரிக்கையாய்த் தல முறை ஏழுக்கும் வருஷம் 540 வருஷம் செய்திரும். நீரிப்படி ராஜ்யபரிபாரம் செய்திருக்கும் நாளில் முன்னமே யுன்கையில் சங்காரவதை பரமாயுதமாய்ப் போன ராட்சதத்துருக்க [1]முகில் பாக்ஷா வம்சத்தில் லக்கிரிப்பாக்ஷா வென்கிறவன் பிறந்து வளர்ந்து பிரபலமாகி உன்னைப் பூலோக கைலாச வெள்ளியங்கிரியிலடுத்த கீழ் பாரிசத்தில் பொன்னுறு வெள்ளியாற்றின் கரைநடுவாக நீர் நம்மை நோக்கி மானத பூசை மௌனமந்திர தியானத்துடனே அரிய திருப்பூசை செய்து நம்மை ரக்ஷித்திருக்கும் போது அது வேளையில் அந்த முகில் பாக்ஷாவென்கிறவன் தேடி வந்து உன்னைச் சங்காரவதை செய்வான். செய்தாலும் உம்முடைய முண்டமும் சிரசும் பூவுலகில் அது இருந்த தாவெல்லாம் அனுக்கிரக தேவதையாயிருக்கும். உம்முடைய பட்டத்து ஸ்ரீரி உமக்கு எதிராக அக்னியில் மூழ்குவாள். மூழ்கினவளும் பூவுலகில் பட்டத்தலைச்சியென்னும் வீரசத்தியாய் பூவுலகுக்கும் முதல் தேவதையாயிருப்பாள். இருப்பது சரியே. உம்முடைய உயிரும் விமானத்தின் பேரில் எழுந்தருளித் தேவுலகுக்

வீர வசந்தராயர் பிறப்பு

[1] மொகல்.

குள்(வந்து) எழுந்தருளி தேவுலகுக்கு வந்து தேவுலகில் தேவேந்திர மகாராயன் சமூக முகவாசல் காத்திரும்.

நீர் காத்திருக்கும் நாளில் உம்மைச் சங்காரவதை செய்த ரசிகிரிப் பாட்ஷா என்கிறவனும் மைவதை செய்த நாள் முதலாக அவன் வம்சம் பாரம்பரிக்கையாய்த் தலைமுறை ஐந்துக்கும் 360 வருஷம் ராஜ்யபாரம் செய்வான். செய்த நாளில் நீயும் தேவுலகு விட்டெழுந்தருளிப் பூவுலகில் நீர் முன்னமே பிறந்த சூர்யகுலக்ஷத்திரியர் பாடியில் பிறந்து ரண கண்டி வீரர் வசந்தராயரென்று பேரும் பிரபலமாகி அந்த லசிகிரிப் பாட்ஷா வம்சத்தில் ஐந்தாம் தலைமுறையில் முகில் பாக்ஷா வென்கிறவனைச் சங்காரவதை செய்து ராஜ்யபரிபாரம் உன் வம்சபாரம்பரிக்கையாய்த் தலைமுறை ஏழுக்கும் வருஷம் 540-க்கும் மனுநீதியுடனே செங்கோல் தழைத்தோங்க ராஜ்யபரிபாரஞ் செய்திருப்பாய். செய்திருக்கும் நாளில் உம்முடைய கையில் சங்கார வதை பரமாயுதமாய் போன முகில் பாக்ஷா வம்சத்தில் மோகன பாக்ஷா வென்கிறவன் பிறந்து பிரபலமாகி உம்மை வானி உபய காவேரி கூடிய நடுத்துரை அருகில் நீயும் நம்மைப் பூசித்து அர்ச்சித்திருக்கும்போது அது வேளையில் அந்த மோகன் பாக்ஷா வென்கிறவன் வம்சத்தில் கொலக்கலப் பாக்ஷா வென்கிறவன் தேடி வந்து உம்மைச் சங்காரவதைச் செய்வான். செய்த நாளில் உம்முடைய முண்டமும் சிரசும் இருந்த தாவெல்லாம் பூவுலகில் ராஜ தேவதையாகும். உம்முடைய பட்டத்து ஸ்ரீரியும் உம்முடைய பேரில் நிபம் மென்று அக்கினியில் மூழ்குவாள். மூழ்கினவள் தைர்ய வீரமு முயிரும் பூவுலகில் வீர சத்தி ராஜதேவதை துர்க்கையாயிருப்பாள். இருக்கும் நாளில் உம்முடைய ஆருயிரும் நீர் வதைப்பட்ட நாளில் விமானத்தில் எழுந்தருளி தேவுலகுக்கு வந்து தேவந்திர மகாராயர் சமுக வாசல் காத்திரும். இருக்கும் நாளில் உம்மை வதை செய்த கோலாகலப் பாக்ஷா வென்கிறவன் பிறப்பிவித்து அவன் வம்சபாரம்பரிக்கையாய்த் தலைமுறை ஐந்துக்கும் வருஷம் 360 துக்கு ராஜ்யபரிபாரம் செய்வார். செய்த நாளில் நீயும் போய்ப் பூவுலகில் ராயவேலூர் க்ஷத்திரியர் பாடியில் பிறந்து தன்மராயரென்று பேரும் பெறுவாய். பிரபலமாகி முன்னமே உம்மை வதைசெய்த கோலாகலப் பாக்ஷா வம்சத்தில் மேகவாகனப் பாக்ஷாவைச் சங்கார வதைசெய்து ராஜ்யபரிபாரம் மனுநீதியுடனே செங்கோல் தழைத்தோங்க உன் வம்சபாரம்பரிக்கையாய்த் தலைமுறை 27க்கும் நாள் 260 வருஷம் நாளும் செலுத்திச் சென்ற நாளில் மீனாக்ஷி தேவிக்கு மூன்றுவது கனகாபிஷேகம் முடித்து ஆராதனை முப்பூஜையும் முடிப்பித்து அவர்கள் பாத சன்னிதானத்தில் அதிகார ஒப்ப முத்திரையும் ஒப்பித்து அதன் பின்பு நீயும் நாடு நீங்கிப் பூவுலகு விட்டு வரும்போது உமக்கு நாமும் இந்திரவிமானம் அனுப்பிவைக்கிறோம். அதன் பேரில் நீயும் பொநதியுடனே விமானத்திலெழுந்தருளிச் சிவ கைலாசத்திற்கு

துர்க்கை உற்பத்தி

வாரும். வந்தால் நாம் உமக்கு சாயுஜ்யபதவி தந்து சிவகணங்கள் போற்றி அர்ச்சிக்கத்தக்கதாக அறிய பதவி தந்து ரக்ஷிக்கிறோம்'' என்று சிவன் விக்கிரமார்க்கனுக்குத் (திட்டமிட்டு) திருவாக்கிட்டு இந்த முப்பிறப்பிற்கும் வசிஷ்டமுனி விந்து வழியால் பிறப(வு)மென்று வாக்குமிட்டு விக்கிரமார்க்கனை ஆதி சதாசிவன் பூவுலகுக்கு அனுப்புவார்கள். அதன் பின்பு வசிஷ்ட முனியை யழைத்து நீயும் விக்கிரமார்க்கன் முப்பிறப்புக்கும் ராயவயலூர் க்ஷத்திரியப் பெண்களுடனே மோகன திருவிளையாடல் புரிந்து விந்து புளகித பலித்தாவிதஞ்செய்யுமென்று வசிஷ்ட முனிக்கும் கட்டுச்செய்து அதன் பின்பு சிவன் பட்டியை அழைத்து நீயும் போய் பூவுலகில் குச்சிலய தேசத்தில் குச்சிலியர் பாடியில் குச்சிலிப் பெண்கள் வயிற்றில் வேதவியாச முனி விந்து வழியால் முப்பிறப்பும் பிறந்து விக்கிரமார்க்கன் பிறந்த ராயப்பிறவிக்கு நீயும் அப்பாச்சியென்னும் பிறப்பாய்ப் பிறந்து அவனுடனே ஒன்றாய்ச் சுகதுக்க மனுபவித்து அவரவர் வரும் போது நீயுமவருடனே போநதியுடனே விமானத்தில் எழுந்தருளிக் கையிலைக்கு வாரும். வந்தால் நாமும் உம்மையும் அவரை வைத்த தாவில் அவருடனே சரிசமான பக்ஷமாய் அவருடனே பிரியாவுடையாய் வைத்து ரக்ஷிக்கிறோம்'' என்று சிவன் பட்டிக்கும் திருவாக்கிட்டு அனுப்புவார்கள். அதன் பின்பு சிவன் வேதமுனியை அழைத்து "நீயும் பூவுலகில் குச்சிலியர் தேசத்தில் குச்சிலியப் பெண்கள் வயிற்றில் பட்டி முப்பிறப்புப் பிறப்பதற்கும் நீயும் குச்சிலியப் பெண்களுடனே மோகனத் திருவிளையாடல் புரிந்து விந்து புளகித்தாவி பலிதஞ்செய்யும்'' என்று சிவன் வேதமுனிக்கும் கட்டுச்செய்து அதன் பின்பு சிவன் விஷவ முனியை யழைத்து " நீயும் பூவுலகில் துளுக்காண தேசத்தில் துளுக்கர் பாடியில் துளுக்கப் பெண்களுடன் மோகனத் திருவிளையாடல் புரிந்து விந்து புளகித்தாவித பலிதஞ்செய்யும் துலுக்க ராட்சதர் முப்பிறப்புக்கும் பகை சரியாகத் துலுக்கராட்சதர் பிறப்பதற்கு நீருமப்படி செய்து வாரும்'' என்று ஆதி வஸ்துவாகிய சிவன் பிரம்ம முகத்தில் வேதாக்ஷர மென்னும் மந்திர முகாந்தரத்தினாலே தியானித்து 'வேத முனிக்கும் விஷவ முனிக்கும் வதிஷ்ட முனிக்கும் இந்த வகை முனிவருக்கும் இன்னாருக்கின்னபடி என்று வகுத்துக் கட்டிப் பிரிவு செய்து திருவாக்கிட்டுச் சிவன் அனுப்புவார்கள். சிவன் அமைத்தபடிக்கு அவரவரும் பூவுலகில் பிறந்து வளர்ந்து பிரபலமாகி இப்படிக்கு ராஜ்ய பாரம் செய்து கொண்டு வருவார்கள்'' என்று

சேரன் ஆரூட முடிவு

சேரமான் பெருமாளென்னும் சேரன் முன்னறிவினாலே தெளியப் பார்த்து ஏகாம்பரர் காமாட்சி அம்மன் சன்னிதி வாசலில் சகல ஜனங்களுக்கும் கரிகால் சோழன் மீனாக்ஷி சௌந்தரபாண்டியன் சமய முதலி சடையப்பன்

கஸ்தூரி ரங்கப்ப செட்டிக்கும் மற்றுள்ள கார்யப்பேருக்கும் சொல்லச்
சகல பேரும் கேட்டு இனிமேல் இப்படி முன்னடந்த விவரமும் பின்
நடக்கிற துரை விவரமும் இனிமேல் இந்தப் புவனத்தில் ஒரு துரை
பிறந்து ராஜநீதத்துடனேயும் முன்னறிவினுலே பார்த்துச் சொல்லப்
போகிருர்களோவென்று எல்லோரும் கண்கலங்கிச் சந்தோஷப்பட்
டுக்கொண்டு இருக்கும்போது மூன்று ராஜாக்களும் இனிமேல் அவ
ரவர் நாடு தேச ஊருகளுக்குப் போகவேண்டுமென்று கனகசபை
விட்டெழுந்திருந்துக் கச்சி ஏகம்பரர் காமாக்ஷி அம்மனுக்கும் மற்
றுள்ள தேவதைகளுக்கும் அபிஷேக தூபதீபாராதனை முடிப்பித்து
எல்லோரும் தரிசித்துக்கொண்டு மூன்று ராஜாக்களும்||அவர்களுக்
குள்பட்ட காரியப்பேர் சகலரும் கச்சிவீர காமாக்ஷிராயச் சீரச் சிங்கா

ஆருடம் கேட்டு எல்லாரும் ஊர் திரும்புதல்

தன ஷட் சமய முதலி கையில் அனுப்பி வைத்துக்
கொண்டு அவர் அவர் நாடு ஊரு தேசங்களுக்குப்போய்
அவரவர் அரண்மனையில் இருந்துகொண்டு ராஜநீத
முறைமை ஒழுக்கத்தில் குடிவரிசை ஜனங்களுக்கு மற்
றுள்ள கார்யப்பேர் சகல ஜனங்களுக்கு புத்திமதி சொல்லி பாக்கு
வெற்றிலே கொடுத்து அனுப்பிவைத்து காரிகால் சோழன் மீனுக்ஷி

சோழன் பாண்டியன் சிவபதம்

சௌந்திர பாண்டியன் இருவரும் தங்கள் காலங்கள்
சென்று அமரர் ஆனுர்கள். அதன்பின்பு சேரமான்
பெருமாளென்னும் சேரனும் கொங்கு தாராபுர ராஜ்
யத்திற்கு வந்து சகல ஜனங்களுக்கு புத்திமதிசொல்லி
பாக்கு வெற்றிலே கொடுத்து அவரவரையும் அனுப்பித்துச் சேரமான்
பெருமாளென்னும் சேரன் திருப்பேரையூர் நகருக்கு வந்து சாமி

சேரமான் பேரூர் தரிசனம்

தரிசனம் செய்து கொண்டு மற்ற நாள் சேரமான்
பெருமாளென்னும் சேரன் திருப்பேரையூரில் சோழன்
துறையில் அப்பியங்க ஸ்னானம் செய்கின்றதற்குத்
தலையில் எண்ணெயிட்டுக் கொண்டிருக்கும்போது சுந்திர

சுந்தரமூர்த்திகள் வருகை

மூர்த்தியும் திருப்பேரையூர் நகருக்கு வந்து சாமி
தரிசனம் செய்து கொண்டு முன் சதாசிவன் அருளால்
அந்த சோழன் துறை மார்க்கமாய்க் கைலாசத்திற்குப்
போம்போது சேரமான் பெருமாள் என்னும் சேரன் எண்ணெய்த்

சேரமானும் சுந்தரரும் கயிலை சேருதல்

தலையை முடி கட்டிக்கொண்டு சுந்திரமூர்த்தி கூடவே
இருவரும் கயிலாசத்திற்குப் போய்க் கயிலாச வாசலில்
சேரமான் பெருமாளென்னும் சேரனை நிறுத்திப்
போட்டுச் சதாசிவனிடத்திற்குச் சுந்திரமூர்த்தி விழு
சரணம் தொழுசரணம் செய்து கைகட்டி நின்று
கொண்டு சேரமான் பெருமாளென்னும் சேரன் என் கூடவே வந்து
கயிலாச வாசலில் நிற்கிருன். சுவாமி அப்பனை ஆளவேண்டுமென்று
கேட்க அப்படியே சதாசிவன் அப்பணை கொடுக்க சுந்திரமூர்த்தி

வந்து சேரமான் பெருமாளென்னும் சேரனை வரவழைத்துக் கொண்டு இருவருமாகச் சதாசிவனிடத்திற்குப் போய் விழு சரணம் தொழு சரணம் செய்து இருக்கச் சதாசிவனும் இவர்கள் இருவருக்கும் சாயுஜ்யப் பதவி கொடுத்தார்.

இருவரும் சாயுச்சியம் அடைதல்

இவர்களிருவரும் சாயுஜ்ய பதவி பெற்று இருக்கிறார்கள்.

திருச்சிற்றம்பலம்.

## ஆறு நாட்டுக்கு விவரம்

### ஆசிரிய விருத்தம்

ஆறு நாடுகள்

சேவைநகர் மன்னியூர் வெள்ளாதி கோமங்கை
திசையாக வாழமுடு துறைத்
தென்கவசைத் துடிசை நீலம் பேரூர் அரசூர்
தேக்கலூர் கரை வழிகளும்
மேவுபுகழ் அவிஞசிக் கஞ்சை கருவை கானல்
வெண்மதிப்ப கலையதூர்
வெற்றிபுனை இருகாலூர் உழலைக்கோயில் கீர்த்தி
மேவும் வெள்ளைப் பாடியும்
நாவலருக் கினிதான திருமுருகம் பூண்டி
பழனை நல்கி வளைதிற
நம்பி பேரூரிலத்தூர் உக்கிராம புலவ
நாகனுட பாளையம்
கோவைநகர் தொண்டமாம் புத்தூர் முட்டமும்
கூடலூர் சிங்க நகர்
குடகொடு குள்ளந் துறையுடன் வாழ்வணடி
கோட்டை சூழ்ந்தாறு நாடே.

மண்டல விவரங்கள்

கொங்குமண்டலம் சோழமண்டலம் தொண்டமண்டலம் பாண்டிமண்டலம் ஆக மண்டலம் நாலுக்கு விவரம் :—

வடக்கெல்லை பாலமலை வைகாவூர் நாடு
குடக்கு வெள்ளிபொருப்புக் குன்று—கடற்பால்
கோட்டைக் கரையளவும் கொங்கநாட் டெல்லையென
நாட்டிவித்தார் நல்லோர் களே.

கடல்கிழக்குத் தெற்குக் கரைபேறள வெள்ளாறு
குடதிசையிற் கோட்டைக் கரையாம்—வடதிசையில்
எணாட்டும் பெண்ணை யிருபத்தி நாற்காதம்
சோணாட்டு எல்லையெனச் சொல்.

### தொண்டமண்டலத்தெல்லை

கிழக்கெல்லை கீழ்கடல் தெற்கெல்லை பெண்ணையாறு
மேற்கெல்லை சங்கமாகக் கணுவாய்
வடக்கெல்லைத் திருப்பதிமலை.

### பாண்டிமண்டலத்தெல்லை

கிழக்கெல்லை கீழ்கடல் தெற்கெல்லைத் தென்கடல்
மேற்கெல்லை மேல்கடல் வடக்கெல்லை
சூருமலையும் வெள்ளாறும்.

ஆக மண்டலம் 4

### நாடு 148 விவரம்

| | | | |
|---|---|---|---|
| கொங்கு மண்டலம் | 1 | நாடு | 24 |
| சோழ மண்டலம் | 1 | நாடு | 27 |
| தொண்ட மண்டலம் | 1 | நாடு | 79 |
| பாண்டி மண்டலம் | 1 | நாடு | 18 |

ஆக மண்டலம் 4-க்கு நாடு 148
இது நாட்டு விவரம்.

### இருபத்திநாலு (24) நாட்டுக்கு விவரம்

தெங்கரை நாடு
காங்கய நாடு
வயகாவூர் நாடு
வராக்க நாடு
காவேரி நாடு
நல்லூர் நாடு
பொன்குலுக்கி நாடு
ஆறு நாடு
ஒருவங்க நாடு
பூந்துறை நாடு
காஞ்சிக்கோயில் நாடு
குறுப்ப நாடு
கோசல நாடு
ராசீபுர நாடு
மண்ணாடு
வடகரை நாடு
பூவாணி நாடு
வாழ்வந்தி நாடு
அண்ட நாடு
அறைய நாடு
வெங்கல நாடு
கிழங்கு நாடு
தட்டைய நாடு
நறையனூர் நாடு
பருத்திப்பொழி நாடு

ஆக நாடு 24-க்கு விருத்தம்

### விருத்தம்

துங்க தெங்கரைநாடு காங்கயநாடு கீழ துய்ய வய்யார்லூர் நாடு
தோரூத வார்க்கநாடு சொற்கா விடிக்கநாடு நல்லூர்க்க நாடு
பொங்கலூர் நாடு ஆறு நாடு புனிதரோடு வங்கநாடு
பூந்துறை நாடு காஞ்சிக்கோவில் நாடு சீர்போற்றுங் குறுப்பநாடு
மங்காத புகழ்கொண்ட ராசிபுரநாடு மணனூடு வடகரை நாடு
பருத்திப் பொழி நாடு பூவணி நாடு ஆண்ட நாடு அறையநாடு
வெங்கல நாடு [கீழ] கிழங்மத நாடு தட்டைய நாடு [இயல்
நரையனூர் நாடு கொங்கு இருபத்திஞலு நாடே.

### பாண்டி நாடு (18) பதினெட்டுக்கு விவரம்

திருவழுதி நாடு — வெம்பர நாடு
தருவடி நாடு — பொதிய நாடு
மலவிவள நாடு — அறந்தாங்கி நாடு
செம்பிவள நாடு — மறப நாடு
மாஞ....நாடு — தோதக நாடு
ராஞ்சி நாடு — வைகை நாடு
வீசுங்கை நாடு — குன்ற நாடு

### உள்சமயம் (6) ஆறுக்கு விவரம்

பாருபதம் — வயிரவம்
சைவம் — பாசுபதம்
சத்திமதம் — காணபத்தியம்

### பிறசமயம் (6) ஆறுக்கு விவரம்

சுருவேசுரம் — ஜயினம்
பரங்கி — சமணன்
துளுக்கு — லாடன்

### நூற்றெட்டு (108) த் திருப்பதிக்கு விவரம்

சோழமண்டலம் நாற்பத்திரண்டுடன்
துய்ய பாண்டி பதினெட்டும் சொல்லியே
வாழு மாமலையாள மீரேழுடன்
மன்னர் போற்றிய வாழ் தொண்ட மண்டலம்
ஏழு மூன்று மிதை மாறி ரண்டென இதன்
வடக்குப் பதினென்று பால்கடல்
ஆழியான் பதிநூற்றெட்டு மோதுவார்க்
கன்று தீவினை யன்றே அகலுமே.

**கொங்கேழு (7) சிவாலயத்திற்கு விவரம்**

*ஆதி கருவூர் திருவெஞ்ச மாங்கரை சேர்*
*நாதர விஞசி நண்ணு ஊரோது புகட்*
*தஞ்சமாம் பேரைத் தருமுருகன் பூண்டிலிவை*
*நெஞ்சிலே நன்ருய் நினை.*

